# நாலாயிரத் திவ்விய பிரபந்த
# இயற்கைப் புனைவில் பக்திநெறி

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு

**ஆய்வாளர்**

**க.காளீஸ்வரி**
பதிவு எண் : 1264

**நெறியாளர்**

**முனைவர் சு.இராசாராம்**




**தமிழ்த்துறை**
அழகப்பா பல்கலைக்கழகம்
(தேசியத் தரநிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்று மதிப்பீட்டில் 'A+' (CGPA.3.64) தகுதி பெற்றது மற்றும்
மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தரப் பல்கலைக்கழகத் தகுதி மற்றும்
தன்னாட்சித் தகுதி பெற்றது)
காரைக்குடி - 630 003
தமிழ்நாடு, இந்தியா

**மார்ச்சு - 2021**

# நாலாயிரத் திவ்விய பிரபந்த

# இயற்கைப் புனைவில் பக்திநெறி

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு

**ஆய்வாளர்**

**க.காளீஸ்வரி**
பதிவு எண் : 1264

**நெறியாளர்**

**முனைவர் சு.இராசாராம்**




**தமிழ்த்துறை**

அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசியத் தரநிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்று மதிப்பீட்டில் 'A+' (CGPA.3.64) தகுதி பெற்றது மற்றும்
மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தரப் பல்கலைக்கழகத் தகுதி மற்றும்
தன்னாட்சித் தகுதி பெற்றது)

காரைக்குடி - 630 003

தமிழ்நாடு, இந்தியா

**மார்ச்சு - 2021**

**முனைவர் சு.இராசாராம்,**
பேராசிரியர் & தலைவர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி – *630 003*

நாள் :

# நெறியாளர் சான்றிதழ்

**“நாலாயிரத் திவ்விய பிரபந்த இயற்கைப் புனைவில் பக்திநெறி”** என்னும் தலைப்பில் திருமதி க.காளீஸ்வரி அவர்கள் முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு, அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும், இந்த ஆய்விற்காக வேறு எந்த பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

**(முனைவர் சு.இராசாராம்)**

நெறியாளர்

திருமதி **க.காளீஸ்வரி** (பதிவு எண்: 1264)
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி – 630 003.

ஆய்வாளர் உறுதிமொழி

**"நாலாயிரத் திவ்விய பிரபந்த இயற்கைப் புனைவில் பக்திநெறி"** என்னும் தலைப்பில் தமிழ் முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்வாய்வு எனது சொந்த முயற்சியில் உருவானது என்றும் இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கின்றேன்.

ஆய்வாளர்

**(க.காளீஸ்வரி)**

**நன்றியுரை**

**"நாலாயிரத் திவ்விய பிரபந்த இயற்கைப் புனைவில் பக்திநெறி"** என்னும் தலைப்பில் முனைவர் (பிஎச்.டி) பட்ட ஆய்வு மேற்கொள்வதற்கு வாய்ப்பளித்த அழகப்பா பல்கலைக்கழகத்திற்கும், அதன் நிறுவுநர் அழகப்பருக்கும், என் ஆய்விற்கு வழிகாட்டியாக இருந்து இவ்வாய்வேடு சிறப்பாக அமையத் துணைபுரிந்த தமிழ்த்துறைத் தலைவரும் எனது நெறியாளருமான **பேராசிரியர் முனைவர் சு.இராசாராம்** ஐயா அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனது முனைவர் பட்ட ஆய்விற்கு மூலகாரணமாக விளங்கிய **பேராசிரியர் முனைவர் சே.செந்தமிழ்ப்பாவை** அம்மா அவர்களுக்கும், தமிழ்த்துறைப் பேராசிரியப் பெருமக்களுக்கும் உதவிப் பயிற்றுநர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஈன்ற பொழுதிற் பெரிதுவந்து என்னை இவ்வுலகிற்கு அறிமுகம் செய்த எனது பெற்றோருக்கும், எனது சகோதரர்களுக்கும், எனக்கு வாழ்க்கைத் துணையாக மட்டுமல்லாது நல்ல நண்பனாகவும் இருக்கின்ற எனது அன்பு கணவருக்கும், என்னருமை மைந்தர்களுக்கும், ஆய்வுக்கு உதவிபுரிந்த ஆய்வாளர்களுக்கும் தமிழ்த்துறை அலுவலகப் பணியாளர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்வுத்தரவுகளைத் திரட்டுவதற்கு உதவிபுரிந்த அழகப்பா பல்கலைக்கழக மைய நூலகத்தாருக்கும், சிவகங்கை மாவட்ட மைய நூலகத்தாருக்கும், மதுரை மாவட்ட மைய நூலகத்தாருக்கும், மதுரை காமராஜர் பல்கலைக்கழக நூலகம், தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழக நூலகம் மற்றும் புத்தக தாத்தா அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

இவ்வாய்வினைச் செவ்வனே அச்சாக்கம் செய்து தந்த தம்பி செல்வமணி மற்றும் தோழா பிரிண்டர்ஸ் நிறுவனத்தார்க்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| உ.ஆ | — | உரையாசிரியர் |
| குறள் | — | திருக்குறள் |
| நா.தி.பி.பா | — | நாலாயிரத் திவ்விய பிரபந்தப் பாடல் |
| நூ | — | நூற்பா |
| ப | — | பக்கம் |
| ப.ஆ | — | பதிப்பாசிரியர் |
| பா | — | பாடல் |
| பி.வி.இ | — | பிற விவரங்கள் இல்லை |
| மேலது | — | மேற்சுட்டிய ஆசிரியர் / மேற்சுட்டிய நூல் |

# முன்னுரை

சங்க இலக்கிய மரபின் தொடர்ச்சியாகப் பக்தி இலக்கியங்கள் எழுந்தன. மக்கள் வாழ்விற்கு இன்றியமையாதது இறைவழிபாடாகும். குறைகளை நீக்கவும் மனம் பண்படவும் நற்சிந்தனை வளரவும் தேவையானது வழிபாடாகும். நாலாயிரத் திவ்விய பிரபந்தமும் அவற்றுக்கு எழுந்த வியாக்கியானங்களும் தமிழ்மொழி பெற்ற பெரும்பேறு. இதில் பன்னிரு ஆழ்வார்களும் பாமாலை தொடுத்திருக்கின்றனர். அவர்கள் பாடிய பாடல்கள் மொத்தம் 3776. இதனைத் தொகுத்தவர் நாதமுனி. இப்பாடல் தொகுப்பு நாலாயிரத் திவ்விய பிரபந்தம் என்று அழைக்கப்படுகிறது. இதற்கு ஆன்ற தமிழ்மறை, திராவிட சாகரம் என்ற வேறு பெயர்களும் உண்டு. இப்பாடல்கள் பாசுரங்கள் என்றழைக்கப்படுகின்றன. இப்பாசுரங்கள் பதவிக்கும், பணத்திற்கும் அடிமைப்பட்டுக் கிடக்கும் மக்கள் மனதை இறைவழியில் திருப்புவதாக அமைகின்றன. பன்னிரு ஆழ்வார்களும் இறைவனைத் திருக்கோயில்களில் மட்டும் அல்லாது தாம் காண்கின்ற மரம், செடி, கொடி, மலர், நீர்நிலை, சூரியன், சந்திரன் என அனைத்திலும் கண்டு மகிழ்ந்தனர். ஆழ்வார்கள் இயற்கைக் காட்சிகளிலும் நிகழ்வுகளிலும் இணைந்து இயற்கைப் புனைவுகளில் தம் பக்தியின் திறத்தை வெளிப்படுத்தியுள்ளனர். நாலாயிரத் திவ்விய பிரபந்தத்தில் இயற்கைப் புனைவுகளின் வழிப் பக்திநெறியை ஆராய்வது தமிழாய்வுலகிற்கு ஒரு கொடையாக அமையும்.

## ஆய்வுத் தலைப்பு

ஆழ்வார்கள் அருளிய பாசுரங்களை ஆய்வுக்கு உட்படுத்தும் வகையில் **“நாலாயிரத் திவ்விய பிரபந்த இயற்கைப் புனைவில் பக்திநெறி”** என்பது ஆய்வுத் தலைப்பாக அமைகிறது.

## ஆய்வுக்கருதுகோள்

வைணவ மரபில் இறைவனைப் போற்றிப் பாடுதல் மங்களாசாசனம் செய்தல் எனப்படும். இறைவனின் திருவடியில் மனம் செலுத்தி அவனது கல்யாண

குணங்களில் ஆழ்ந்தவர்கள் ஆழ்வார்கள். உலகிலுள்ள அனைத்து உயிர்களிடத்தும் இறைவனைக் கண்டவர்கள். இயற்கை நிகழ்வுகளை இறைவன்மேல் ஏற்றிப் பாடல்கள் பாடியுள்ளனர். பன்னிரு ஆழ்வார்களும் இயற்கைப் புனைவுகளில் வைணவப் பக்திநெறியை வெளிப்படுத்தியுள்ளனர் என்பது ஆய்வுக் கருதுகோளாகும்.

**ஆய்வு நோக்கம்**

ஆழ்வார்கள் இறையன்பில் தோய்ந்தவர்கள். திருமால் மீது கொண்ட அளவில்லாத பக்தியின் காரணமாக இயற்கையிலும் இறைவனைக் கண்டனர். தாவரங்கள், விலங்குகள், பறவைகள், ஐம்பூதங்கள் ஆகியவற்றோடு இறைவனைத் தொடர்புபடுத்திப் புகழ்ந்து பாடுவதன் மூலம் இயற்கை அழகினையும், பக்திநெறியினையும் ஒருசேர வெளிப்படுத்தியுள்ள திறத்தை ஆராய்ந்து கண்டறிவது இவ்வாய்வின் நோக்கமாகும்.

**ஆய்வு முன்னோடிகள்**

இலக்கியங்களில் இயற்கையை ஆராயும் போக்கு தமிழ்த் திறனாய்வுலகில் தொடர்ந்து காணப்படுவதாகும். மு.வரதராசனாரின் பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ஆர். இலட்சாராமனின் பன்னிரு திருமுறைகளில் இயற்கை, சிவச்சந்திரனின் மூவர் தேவாரத்தில் காணும் இயற்கை நலம் ஆகிய ஆய்வுகள் ஆய்வு முன்னோடிகளாக உள்ளன. இத்தகைய ஆய்வுகள் இலக்கியங்களில் அமைந்துள்ள இயற்கை நலத்தை எடுத்துரைப்பனவாக உள்ளனவே தவிர, பக்தி நெறியை வெளிப்படுத்துவதாக அமையவில்லை. அவ்வகையில் நாலாயிரத் திவ்விய பிரபந்தத்தில் காணப்படும் இயற்கைப் புனைவுகளில் பொதிந்திருக்கும் பக்திநெறியை ஆராய்வது புதிய போக்காகும்.

**ஆய்வு எல்லை**

பன்னிரு ஆழ்வார்களுடைய பாசுரங்கள் அனைத்தும் ஆய்வு எல்லையாக அமைகின்றன.

**ஆய்வு அணுகுமுறை**

ஆழ்வார்கள் பாசுரங்களில் உள்ள இயற்கைப் புனைவுகளில் பக்தி நெறியினை விளக்கிக் கூறும் வகையில் விளக்கவியல் அணுகுமுறையும், இயற்கை அழகினை ஆராய்வதில் அழகியல் அணுகுமுறையும், இயற்கை நிகழ்வுகளோடு திருமாலை ஒப்பிட்டுப் பாடுவதை ஆராய்வதில் ஒப்பியல் அணுகுமுறையும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**சான்றாதாரங்கள்**

பன்னிரு ஆழ்வார்கள் பாடிய பாடல்கள் முதன்மைச் சான்றாதாரங்களாகும். நாலாயிரத் திவ்விய பிரபந்தம் தொடர்பான திறனாய்வு நூல்கள், ஆய்வுக் கட்டுரைகள், ஆய்வேடுகள், இதழ்கள் போன்றவை துணைமைச் சான்றாதாரங்களாகும்.

**ஆய்வுப் பகுப்பு**

இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களைக் கொண்டமைந்துள்ளது. அவையாவன,

1. தமிழில் இயற்கைப் புனைவும் நாலாயிரத் திவ்விய பிரபந்தமும்
2. பறவைகள் புனைவில் பக்திநெறி
3. விலங்குகள் புனைவில் பக்திநெறி
4. தாவரங்கள் புனைவில் பக்திநெறி
5. பிற இயற்கைப் பொருட்கள் புனைவில் பக்திநெறி

**இயல்விளக்கங்கள்**

**இயல் ஒன்று**

**“தமிழில் இயற்கைப்புனைவும் நாலாயிரத் திவ்விய பிரபந்தமும்”** என்பது முதல் இயலாகும். இதில் இயற்கை என்பதன் விளக்கம் எடுத்துரைக்கப்பட்டுள்ளது. தொல்காப்பியத்தில் இயற்கை, சங்கஇலக்கியங்களில்

இயற்கை, நீதி நூல்களில் இயற்கை, காப்பியங்களில் இயற்கை, பக்தி இலக்கியங்களில் இயற்கை, சிற்றிலக்கியங்களில் இயற்கை, இருபதாம் நூற்றாண்டுப் படைப்புகளில் இயற்கை எனக் கால அடிப்படையில் சங்க இலக்கியம் முதல் இருபதாம் நூற்றாண்டு இலக்கியங்கள் வரை இயற்கை பற்றிய பதிவுகள் ஆராயப்பட்டுள்ளன. நாலாயிரத் திவ்விய பிரபந்தத்தின் தோற்ற வரலாறும் நாதமுனிகள் நாலாயிரத்தைப் பெற்று, தொகுத்த வரலாற்றுப் பதிவுகளும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. ஆழ்வார்களின் வரலாறுகள் ஆராய்ந்து விளக்கப்பட்டுள்ளன.

## இயல் இரண்டு

**"பறவைகள் புனைவில் பக்திநெறி"** என்பது இரண்டாவது இயலாகும். ஆழ்வார்கள், தாம் திருமாலின் மீது கொண்ட பக்தியினையும் அவனது அருட் குணத்தையும் வெளிப்படுத்தப் பல முறைகளைக் கையாண்டுள்ளனர். அதில் இயற்கையைப் பாடுபொருளாகக் கொண்டதும் ஒன்றாகும். மனிதன் இயற்கையை விரும்பக் கூடியவன். எனவே அதன்வழியே பக்தியினை அவனுள் செலுத்தினர். இயற்கை என்பது இறைவனால் தோற்றுவிக்கப்பட்டவை. இயற்கையின் வழியே இறைவனை அடைய முடியும். இறைவனின் படைப்பாகிய அனைத்து உயிர்களிலும் இறைவன் அடங்கியுள்ளான் என்ற உண்மையினை ஆழ்வார்கள் தம் பாசுரங்கள் மூலமாக மக்கள் மனதில் பதிய வைத்தனர். உயிரினங்களுள் ஒன்றாகிய பறவைகளின் மூலமாகவும் ஆழ்வார்கள் தம் பக்தியினை வெளிப்படுத்தியுள்ளனர். திருமாலிடம் இசை பாடப் பறவையை அழைத்தல், இறைவனிடம் பாடல் பாடப் பறவையை அழைத்தல், இறைவனுக்குத் தொண்டு புரியப் பறவையை அழைத்தல், திருமாலின் திருத்தலப் பெருமையினைப் பறவைகள் வழி விளக்குதல், எம்பெருமானிடம் பறவையைத் தூதாக அனுப்புதல், திருமாலின் நிறத்தோடு பறவைகளின் நிறத்தை ஒப்பிடுதல், திருமாலை வணங்காதவர் நிலையினைப் பறவைகளின் மூலம் விளக்குதல் என்பன ஆராயப்பட்டுள்ளன.

நாலாயிரத் திவ்விய பிரபந்தத்தில் ஆழ்வார்கள் கருடன், கொக்கு, வண்டு அன்னம், குருகு, அன்றில், கிளி, மயில், தாரா, பருந்து, குயில், நாகணவாய்,

தேனீக்கள், புறா, நாரை, செம்போத்து, காக்கை, கரிச்சான், கோழி போன்ற பறவைகள் புனைவின் வாயிலாக இறைவன் மீது கொண்ட பக்தியினை வெளிப்படுத்தியுள்ளனர்.

**இயல் மூன்று**

**“விலங்குகள் புனைவில் பக்திநெறி”** என்பது மூன்றாம் இயலாகும். திருமாலின் திருவருள் பெற்ற ஆழ்வார்கள் தம்முடைய பாசுரங்களில் திருமால் விலங்குகளின் மீது அளப்பரிய பற்றுடையவர் என்பதைப் பாடியுள்ளனர். எம்பிரான் கிருட்டிணவதாரத்தில் பசுக்கள் மேய்க்கும் ஆயர்குலச் சிறுவனாகப் பிறந்து பசுக்கள் மேய்த்ததைச் சுட்டுகின்றனர். மாயோன் உயிர்களிடத்து மிகுந்த அன்பு கொண்டவன். அவற்றிற்குத் துன்பம் நேரும் போது விரைந்து காக்கக் கூடியவன் என்கின்றனர். இதன் வழியாக மக்கள் அனைவரும் எம்பிரானை வழிபடவேண்டும், அவன் திருப்பாதத்தைச் சரணடைய வேண்டும், அவனை வழிபட்டோரை எப்பொழுதும் காக்கக்கூடியவன் என்ற உண்மையினை விலங்குகளின் செயல்களைக் கொண்டு மக்களுக்கு உணர்த்துகின்றனர் ஆழ்வார்கள்.

திருமால் தன் பக்தர்களை என்றும் காக்கக்கூடியவன் என்பதை விலங்குகள் வழி உணர்த்துதல், திருமால் விலங்குகளாக அவதரித்து நன்மைகள் புரிதல், அசுரர் விலங்குகளாக அவதாரம் எடுத்து வரும்போது அவற்றை அழித்தல், திருமால் திருத்தலப் பெருமையை விலங்குகள் வழி உணர்த்தல், திருமால் உருவத்தோடு விலங்குகளை ஒப்பிடுதல், திருமாலை வணங்காதவர் நிலை உணர்த்துதல் என்ற தலைப்புகளின் கீழ் விலங்குகளின் வழியாகப் புனையப்பட்டுள்ள பக்தி நெறி இவ்வியலில் பகுத்தாராயப்பட்டுள்ளது.

**இயல் நான்கு**

**“தாவரங்கள் புனைவில் பக்திநெறி”** என்பது நான்காவது இயலாகும். கடவுளால் உண்டாக்கப்பட்ட இயற்கைப் பொருள்கள் அனைத்திலும் இறைவனைக் காண்கின்றனர் ஆழ்வார்கள். மரங்களில் இறைவனைக் காண

முடியும் என்பதனை ஆழ்வார்கள் தம் பாசுரங்கள் மூலம் பதிவு செய்துள்ளனர். ஆழ்வார்கள் திருமால் மீது கொண்ட பக்தியினைப் புலப்படுத்தும் ஒரு கருவியாகத் தாவரங்களைக் கையாண்டுள்ளனர். மரம், செடி, கொடி, மலர், காய், கனி என அனைத்திலும் ஆழ்வார்கள் இறைவனைக் காண்பதை நாலாயிரத் திவ்விய பிரபந்தப் பாசுரங்களில் ஆழ்வார்கள் பதிவுசெய்துள்ளனர். அது மரங்கள் புனைவில் பக்தி நெறி, மலர்கள் புனைவில் பக்தி நெறி, கனிகள் புனைவில் பக்திநெறி என்ற தலைப்புகளின் கீழ் பகுத்தாராயப்பட்டுள்ளன. ஆழ்வார்களின் பாடல்களில் மூங்கில், மருதம், மராமரம், விளாமரம், குருக்கத்தி, பனை, புன்னை, வேங்கை, சந்தனம், மாமரம், பாக்கு, கொன்றை போன்ற பல மரங்கள் பற்றிய செய்திகள் இவ்வியலில் இடம்பெற்றுள்ளன.

**இயல் ஐந்து**

**“பிற இயற்கைப் பொருட்கள் புனைவில் பக்திநெறி”** என்பது ஐந்தாம் இயலாகும். அவ்வகையில் நிலம், நீர், காற்று, ஆகாயம், நெருப்பு என்ற பஞ்சபூதங்கள் பற்றிய செய்திகளும், மலை, மழை, மேகங்கள், புண்ணிய நதிகள் பற்றிய செய்திகளும் அடங்கும். பஞ்சபூதங்களுக்கு எல்லாம் தலைவனாக விளங்கக்கூடியவன் திருமாலே என்கின்றனர் ஆழ்வார்கள்.

பஞ்சபூதங்களின் அடிப்படையில் அமைந்தது மனித உடல் அமைப்பு. பஞ்சபூதங்களின் தலைவனான எம்பெருமான் ஒவ்வொரு மனித உடலுக்குள்ளும் வீற்றிருக்கின்றார். இவ்வுலக உயிர்களை ஆட்டுவதும், ஆட்டுவிப்பதும் அவனே என்ற உண்மை ஆழ்வார்களின் பாசுரங்களின் வழி இவ்வியலில் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

திருமால், ஐம்பூதங்களாக மட்டும் இல்லாது பெரிய மலைகளும், சஞ்சரிக்கும் சூரியனும், குளிர்ச்சி பொருந்திய சந்திரனும் வானில் உலாவரும் மேகங்களும், எட்டுத் திசைகளும், உயிர்களும், கடல்களும், நட்சத்திரங்களும் பூலோகத்து உயிர்களும் மற்றும் பலவகைப்பட்ட பொருட்களுமாகவும் விளங்கக்கூடியவன்; அவன் தான் உலகம் என்பதை ஆழ்வார்களின் பாசுரங்கள் ஒவ்வொன்றும்

விளக்குகின்றன. இவ்வாறு இயற்கையின் ஒவ்வொரு பொருளோடும் திருமாலை ஒப்பிட்டு ஆழ்வார்கள் பாடிய பக்தி நெறி இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளது.

ஒவ்வொரு இயலிலும் கண்டறிந்த ஆய்வு முடிவுகள் முடிவுரையில் தொகுத்துரைக்கப்பட்டுள்ளன. மேலாய்வுக் களங்கள் சுட்டப்பட்டுள்ளன. ஆய்வுக்குத் துணைநின்ற நூல்கள், துணைநூற்பட்டியலில் அகரவரிசைப்படுத்தப்பட்டுள்ளன. பன்னிரு ஆழ்வார்கள் அட்டவணை, *108* வைணவத் திருத்தலங்கள், ஆழ்வார் பாசுரங்களில் இயற்கைப் பதிவுகள் அட்டவணை ஆகியன பின்னிணைப்பில் இடம்பெற்றுள்ளன.

# பொருளடக்கம்

# இயல் — 1

## தமிழில் இயற்கைப் புனைவும் நாலாயிரத் திவ்விய பிரபந்தமும்

ஆதிகாலம் தொட்டு இன்றுவரை மனித வாழ்வு இயற்கையோடு பின்னிப்பிணைந்த இணக்கமான உறவைக் கொண்டு திகழ்கிறது. மனிதன் இயற்கையைக் கண்டு வியப்பது அதனைப் புரிந்து கொள்வது, அதனோடு இணைந்து வாழ்வது என்ற பல்வேறு நிலைகளில் இயற்கையின் மையமாகக் கொண்டே இயங்கி வருகிறான். இயற்கையின் எல்லை இதுதான் என வரையறைப்படுத்திக் கூற முடியாத அளவிற்குப் பரந்த எல்லையையும், மிகுந்த ஆற்றலையும் கொண்டு விளங்குகிறது. அவ்வகையில் தமிழ் இலக்கியங்களில் இயற்கைப் புனைவு காலந்தோறும் இடம்பெறுவது பற்றியும், நாலாயிரத் திவ்விய பிரபந்த வரலாறு பற்றியும் ஆராய்வதாக இவ்வியல் அமைகிறது.

**இலக்கியமும் இயற்கையும்**

இயற்கையின் எல்லையைப் புரிந்து கொள்வதிலேயே மனிதனுடைய தேடலும் நகர்ந்து கொண்டே இருக்கிறது. எனினும் தேடலுக்கு ஆதாரமாகவும், சான்றாகவும் விளங்குவது இயற்கையே ஆகும். இயற்கை என்பது ஒவ்வொரு நாளும் புதிதாகத் தோன்றக்கூடியது. நாளுக்கு நாள் வியப்பூட்டக் கூடியது. மனிதனுடைய கண்களுக்கு அவை எப்பொழுதும் வியப்பை அளிக்கின்றன.

“இயற்கையிலிருந்து மனிதன் பெற்றுக் கொண்டவற்றுள் கலை, மொழி, தத்துவம் போன்றன இன்றியமையாதனவாகும். கலை என்பது உண்மையில் இயற்கையின் முதல் படைப்புகளின் அழகால் நிரப்பப்பட்ட ஒரு மனிதனின் மனம் வழியாக இயற்கை மீண்டும் செயல்படும் விகிதம்தான் என்ற கூற்றிலிருந்து கலையையும், இயற்கையாகக் காணும் போக்கையும் உணரமுடிகிறது. இவ்வாறு மனித குல வரலாற்றுக்கு ஆதாரமாகவும், அவனுடைய கலை, மொழி, நாகரிகம் போன்றவற்றிற்கு அடிப்படையாகவும் விளங்குவது இயற்கை ஆகும்.”[1]

இயற்கை மனிதனுடைய வாழ்க்கைக்கு இன்றியமையாதது. அது போல ஓர் இலக்கியம் படைப்பதற்கு இயற்கை இன்றியமையாததாக அமைந்துள்ளது. இயற்கை நிகழ்வுகள் மனிதனைச் சிந்திக்கச் செய்கின்றன. அந்தச் சிந்தனையின் வெளிப்பாடே இலக்கியங்களாக அமைகின்றன.

இலக்கியங்கள் பல பொருண்மையின் அடிப்படையில் அமைகின்றன. இயற்கையின் வழி இலக்கியங்களைப் படைக்கும் பொழுது மனிதனின் கருத்து மற்றவர்களுக்கு எளிதில் சென்றடைகின்றது. படிப்பவர்களின் மனதில் இயற்கை நிகழ்வுகள் பதிந்து இன்பத்தை வெளிப்படுத்துகின்றன.

ஒவ்வொரு இலக்கியமும் அந்த இலக்கியத்தின் பொருண்மையை வெளிப்படுத்த இயற்கையைக் கையாண்டுள்ளன. சங்க இலக்கியத்தில் மக்களின் அக, புற வாழ்வினை வெளிப்படுத்த இயற்கையைப் பயன்படுத்தியுள்ளனர். இலக்கணத்தில் இயற்கைக்கு இலக்கணம் வகுத்துள்ளனர். காப்பியத்தில் காப்பிய அழகை மேன்படுத்த இயற்கையைப் பயன்படுத்தியுள்ளனர். பக்தி இலக்கியங்களில் பக்தியின் வெளிப்பாட்டை உணர்வதற்கு இயற்கையைப் பாடுபொருளாகப் பயன்படுத்தியுள்ளனர். எனினும் எல்லா இலக்கியங்களிலும் இயற்கையின்றி இலக்கியம் இல்லை எனக் கூறும் வகையில் இரண்டும் ஒன்றோடு ஒன்று பிணைந்துள்ளதை அறிய முடிகிறது.

**இயற்கை – சொல் விளக்கம்**

“இயற்கை என்ற சொல் இயல்+கை எனப் பிரிந்து புணரும். இயல் என்பது வினைச்சொல்லாக இருந்து அத்துடன் வருமொழியாகிய “கை” என்ற தொழிற்பெயராக்க விகுதி இணையும் போது “இயற்கை” என்ற பெயர்ச்சொல்லாகத் தோன்றும். ஒன்றன் செயலைக் கொண்டு அமைந்து தொழிற்பெயராக அமைந்துள்ளது. எனவே ஐம்பூதங்களின் செயலை விளக்கவும் இயற்கை என்ற பெயர்ச்சொல் கையாளப்படுகிறது எனலாம்.”[2]

“இயற்கை என்பதற்கு ஏது, குணம், சுபாவம், தகுதி, தட்டு முட்டு, திராணி, பாக்கியம், முறைமை, வழக்கம் என விளக்கமளிக்கிறது”[3] இருபதாம் நுற்றாண்டுத் தமிழ் அகராதி. சுபாவம் வழக்கம், இலக்கணம், கொள்கை”[4] என விளக்கம் அளிக்கிறது நர்மதாவின் தமிழ் அகராதி. மேலும் இயற்கை என்பது மனிதனால் உண்டாக்கப்படாமல் தானகாவே காணப்படும். (மலை, நீர் போன்ற) பொருள் அல்லது தானாகவே தோன்றும் (மழை, காற்று, இடி போன்ற) சக்தி என்று பொருள் தருகிறது”[5] க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி. சுபாவம் திராணி, வழக்கம், தன்மை என விளக்கம் தருகிறது”[6] பவானந்தர் தமிழ்ச் சொல் அகராதி.

“ஜே.சி.ஷார்ப் பின்வருமாறு ஓர் இடத்தில் குறிப்பிடுகின்றார். மனிதனுடைய ஆன்மாவைத் தன்வயப் படுத்திக் கொள்ள நினைக்கிறது இயற்கை. அது பலவகையான மாயங்களைச் செய்து மனித இதயத்தை ஈர்க்கப் பார்க்கிறது. விரிந்து கிடக்கும் பரப்பாலும் ஓங்கி வளரும் உயரத்தாலும் இயற்கையானது மனிதனை உயர்த்த முனைகின்றது. தன் எழிலால் அவனை மகிழ்விக்க முயல்கின்றது. துடைத்துத் தொலைக்கும் தன் அழிப்பாற்றலால் அவனை அவலத்தில் மூழ்கடிக்கப் பார்க்கிறது. கொலுவீற்றிருக்கும் தன் அமைதித்திறத்தால் அவனுக்கு மீட்சி தருகின்றது. இவ்வாறான எண்ணற்ற செயல்களின் வாயிலாக இயற்கை மனித இதயத்தைக் கவர்வதற்கு இடையறாமல் முயன்று கொண்டேயிருக்கிறது”[7] என்று கூறுவதாக மு.வ குறிப்பிடுகிறார்.

“ஆபர்க்ராம்பி என்ற ஆராய்ச்சியாளர் இக் கருத்தை விளக்கிய போது கலை யுலகத்து விதிகள் இயற்கையிலிருந்து தேர்ந்து அறியப்பட்டனவேயன்றி செயற்கையாக உருவாக்கப்படவில்லை என்று வரைந்துள்ளார்”[8] என்று மு.வ குறிப்பிடுகின்றார். “இயற்கை அரங்கு, மனித அரங்கு ஆகிய இரண்டு களங்களே கவிஞனின் தொழிற்சாலைகள் என்று ஜே.சி ஷார்ப் என்ற அறிஞர் கூறுவதாக மு.வ.குறிப்பிடுகின்றனார்.”[9]

விண் முதல் புவி வரை இயற்கை, உலகம் முழுவதிலும் பரவிக்கிடக்கின்றன. பண்டையத் தமிழர்கள் இயற்கையைத் தனியொரு பொருளாகக் கருதினார் இல்லை. இயற்கையும் மனிதவாழ்வும் ஒன்று. மனித வாழ்விலிருந்து இயற்கையைப் பிரித்தால் மனிதன் தனித்து இயங்க முடியாது என நம்பினர். இயற்கையை மனிதனின் பண்புகளை உணர்த்தும் களமாகப் பயன்படுத்தினர். இயற்கையோடு இயைந்த வாழ்வை மேற்கொண்டனர். காதல், வீரம் மற்றும் பிற பல கூறுகளையும் தலைமையாகக் கொண்டது மனிதவாழ்க்கை. அத்தகைய மனித வாழ்க்கையின் பல்வேறு கூறுகளையும் வருணித்துத் தெளிவுபடுத்துவதற்காகவே பண்டையத் தமிழர்கள் இயற்கையைப் பயன்படுத்தியுள்ளனர்.

சங்க இலக்கியத்தில் அகப்பாடல்களும், புறப்பாடல்களும் இயற்கையின் காட்சிகளை வர்ணிப்பதோடு மட்டும் அல்லாமல் அதனோடு சேர்ந்த மனிதனின் வாழ்வியல் நெறிமுறைகளையும் புலப்படுத்தியுள்ளன. மனிதன் தன் இல்வாழ்வைப் பற்றி அகப்பாடல்களிலும், தன் நாட்டினைப் பாதுகாத்து வளர்ச்சி அடையச் செய்கின்ற நெறிமுறைகளைப் புறப்பாடல்களிலும் இயற்கையோடு இணைத்துக் காட்டி இருப்பது அக்காலச் சான்றோர்களின் புலமைக்குச் சான்றாகும்.

இயற்கையை வெறும் அழகுக்காகவும், தம்முடைய படைப்பிற்குப் பெருமை சேர்ப்பதற்காகவும் மட்டும் பயன்படுத்தாமல் இயற்கையின் வழி மக்களின் நல்வாழ்வை விளக்குவதாக ஒவ்வோரு இலக்கியமும் விளக்குகின்றன.

சங்க இலக்கியங்கள், இலக்கணங்கள், காப்பியங்கள், பக்தி இலக்கியங்கள், சிற்றிலக்கியங்கள், தற்காலத்தில் தோன்றிய கவிதைகள் வரை அனைத்துப் படைப்புகளிலும் அந்தந்தக் காலச் சூழ்நிலைகளையும், வாழ்க்கை முறைகளையும் சித்திரிக்கும் களமாகவே இயற்கை பயன்பட்டிருக்கின்றது.

**தொல்காப்பியத்தில் இயற்கை**

இயற்கை என்பதற்குத் தொல்காப்பியர் இலக்கணம் வகுத்துள்ளார். இயற்கை பொருள்களுக்குள் அடங்குவனவற்றை முதல், கரு, உரி எனப் பகுத்துள்ளார்.

**“புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்**
**ஊடல் இவற்றின் நிமித்தம் என்றிவை**
**தேருங் காலைத் திணைக்கு உரிப்பொருளே”**[10]

என்பது தொல்காப்பிய நூற்பா. உரிப்பொருளின் துணையாய் இயற்கை வருணனை அமைகின்றது. அந்த இயற்கைக் காட்சியே பாடலின் நாடகப் பண்பினுக்குரிய அரங்காக அமைகிறது.

இடமும் காலமும் குறித்த ஒரு பகுதியைத் தொல்காப்பியர் முதற்பொருள் என்கிறார். சூழ்நிலையை உருவாக்கும் பொருளை இரண்டாம் பகுதி என்கிறார். இதைக் கருப்பொருள் என்கிறார். முதற்பொருள் பற்றி,

**“முதல் எனப்படுவது நிலம் பொழுது இரண்டின்**
**இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே”**[11]

என்றும், கருப்பொருள் பற்றி,

**“தெய்வம் உணாவே மாமரம் புள்பறை**
**செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ**
**அவ்வகை பிறவும் கரு என மொழிப”**[12]

என்றும் விளக்கம் அளிக்கின்றார். இம்மூன்று பொருள்களும் இடம் பெறுவதால்தான் சங்க இலக்கியம் நாடகப் பாங்கினைப் பெற்றுத் திகழ்கிறது.

இம்மூன்றிற்கும் இடையேயுள்ள வரிசை முறையினைத் தொல்காப்பியர் விளக்கியுள்ளார். அவர்தம் கருத்துப்படி முதற்பொருள், கருப்பொருள் இரண்டையும் விட உரிப்பொருள் தான் சிறந்தது என்கிறார்.

**“முதல் கரு உரிப்பொருள் என்ற மூன்றே**
**நுவலுங் காலைமுறை சிறந்தனவே**
**பாடலுட் பயின்றவை நாடுங்காலை”**[13]

என்பது தொல்காப்பியர் விதி.

மானிட உணர்வுகளோடு இயற்கையின் எழிலை இணைத்துக் காட்டியது பண்டைய தமிழர்களின் இலக்கிய மரபு. அதோடு மட்டும் இல்லாது காதல் உணர்வின் பல நிலைகளைக் குறிப்பிட நிலங்களையும், பருவங்களையும் காலத்தையும் வகுத்தனர்.

‘‘நிலங்களை ஐந்து பகுதிகளாகப் பிரித்துள்ளனர். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை எனப் பிரித்தது, அவைகளுக்கு எனத் தனித்தனிப் பயிரினங்களையும், உயிரினங்களையும் பாகுபடுத்தி அது முழுவதும் ஐந்திணைக்குரிய கருப்பொருள்கள் என வகைப்படுத்தியுள்ளனர். குறிஞ்சிக்குரிய அக ஒழுக்கம் தலைவனும், தலைவியும் கண்டு கூடுதலாகும். இது புணர்தலும் புணர்தல் நிமித்தமும் ஆகும். இந்நிலைக்குரிய பெரும்பொழுது. சிறுபொழுது முறையே கூதிர் பருவமும் நள்ளிரவு நேரமும் ஆகும். முல்லை காடும் காடு சார்ந்த இடமும். இதற்குரிய கார்ப்பருவம், மாலை நேரம் பொருத்தமான காலங்களாகும். இது தலைவன் வருகின்ற வழி நீர்வளம் நிறைந்திருப்பதால் நல்ல உணவுப் பொருள்களைப் பெற்றுத் தம் தம் இணையோடு இன்புற்றிருக்கும். அந்தக் காட்சிகளைக் காண்பதற்கு உகந்த காலம் கார்காலம். வயலும் வயல் சார்ந்த இடமும் மருதம். உரிப்பொருள் ஊடல். இதற்கென எந்தக் காலமும் வகுக்கப்படவில்லை. எல்லாக் காலங்களிலும் ஊடல் ஏற்படுவது இயற்கை. இதற்கு வைகறையும் விடியலும் சிறுபொழுதுகளாக வகுக்கப்பட்டுள்ளன. கடலும் கடல் சாந்த இடமும் நெய்தல். இதற்கு மாலையாகிய எற்பாடு உரியகாலம் ஆகும்.’’[14]

மக்களின் இயற்கையோடு இயைந்த வாழ்வும் தொழில்களும் அவர்களது பாடல்களில் பாடப்பட்டன. மலை, கடல், வயல், காடு ஆகியவற்றின் இயற்கை அழகும் பாடப்பட்டன. இயற்கைப் பொருள்களும், தொழில்களுமே இவர்களின் வாழ்வின் ஆதாரமாகக் கொள்ளப்பட்டன. ஆகையால் காதல் வாழ்வே அந்தப் பாடல்களின் உரிப்பொருள் என்றும் அந்த வாழ்வை எடுத்துக் காட்டும் பொருளாக உள்ள மரம், விலங்கு, பறவை தொழில் முதலியவை கருப்பொருள்

என்றும், அந்த வாழ்வுக்குப் பின்புலமாக விளங்கிய நிலமும் காலமும் முதற்பொருள் என்றும் வழங்கப்பட்டன. இத்தகைய பழமையான மரபுகளை விளக்கும் இலக்கண நூல்களுள் ஒன்று தொல்காப்பியம். இயற்கைப் பாகுபாட்டைக் குறிப்பிட தொல்காப்பியர் தமது ஆக்கங்களுக்காகவும், நூற்பாக்களை விளக்க உதவும் சான்றுகளுக்காகவும் இயற்கையைப் பயன்படுத்தியுள்ளார். குறிஞ்சி முதலிய அகன் ஐந்திணைகளுக்கும் புறனாக அமையும் வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகையாகிய புறத்திணைகளுக்குப் பூக்களின் பெயர்களை இட்டுள்ளார். முல்லை வெண்ணிறமுடையது. இது மாலை மலர்வது போல் தலைவன் மாலை வருவான் எனக் காத்திருக்கிறாள் தலைவி.

புறத்திணைகளைப் பாடும்போது ஏழு திணையாகப் பாகுபாடு செய்துள்ளார். பகைநாட்டின் ஆனிரைகளைக் கவர்ந்து அவர்களைப் போருக்கு அழைப்பர். அப்போது வெட்சிப்பூக்களைச் சூடியுள்ளனர். பகைவர் நாட்டின் மீது படையெடுத்துச் செல்லும் போது வஞ்சிப்பூவைச் சூடிச் சென்றனர். பகைவர் மதிலை முற்றுகையிடும் போது உழிஞைப் பூவைச் சூடியுள்ளனர். இரு மன்னரும் எதிர்த்துப் போரிடும் போது தும்பைப்பூவைச் சூட்டியுள்ளனர்.

நால்வகை நிலங்களில் நிலைத்து வாழும் மக்கள் அந்தந்த நிலங்களுக்குரிய ஒழுக்கத்துடன் வாழ்ந்தனர். அவர்களின் தொழில் அடிப்படையில் அவர்களுக்குப் பெயர்கள் வழங்கப்பட்டன. பசுக்களை மேய்ப்பவர்கள் ஆயர்கள் எனப்பட்டனர். குறிஞ்சி நிலத்தவர் குறவர் எனப்பட்டனர். மருதநிலமக்கள் உழவர்கள் எனப்பட்டனர். இவ்வாறு தொல்காப்பியர் இயற்கையோடு இணைத்தே மக்களின் வாழ்க்கைக்கு இலக்கணம் வகுத்துள்ளார்.

**சங்க இலக்கியத்தில் இயற்கை**

சங்க இலக்கியத்தின் மையக்கரு மானிட வாழ்க்கையின் முக்கியத்துவத்தை வெளிப்படுத்துவதாகும். இயற்கை அதற்கு உறுதுணையாய் இரண்டாம் இடமே பெறுகின்றது. ‘‘சங்க இலக்கியத்தில் மனித வாழ்வுக்குப் பின்னிட்ட நிலையில் அமைந்துள்ள இயற்கைக் காட்சிகளும் சிறப்பான தகுதியுடையனவாய் இருக்கக் காணுகின்றோம். சங்க காலப் புலவர்கள் உணர்ச்சிகளையும் உண்மைகளையும்

தெளிவுறுத்துங்கால் இயற்கைக் காட்சிகளை கருத்து வெளிப்பாட்டுக் கருவியாகப் பயன்படுத்தியுள்ளனர். இயற்கைக் காட்சிகளைப் பாடுதலில் எவ்வகைத் தயக்கத்தையும் அப்புலவர்களிடையே காண இயலவில்லை. பாடலில் உட்கோளோடு மிக நெருங்கிக் கலந்த நிலையில் இயற்கை வருணனை வருகின்ற இடங்கள் மிகப்பல உள்ளன. அத்தகைய இடங்களில் இயற்கை வேறு, வாழ்வின்கூறு வேறு என்று பிரித்துணர முடியாத அளவுக்குப் பின்னிப் பிணைப்புண்டு கிடப்பதைக் காணலாம். வாழ்வின் கூறுகளுடன் ஒப்ப வைத்து நோக்குவதோடு தனி நிலையிலிருந்து காணுதற்குரிய முறையிலும் எழில் நிறைந்தனவாய்ச் சங்க இலக்கியத்தில் இனிய இயற்கைக் காட்சிகள் இடம் பெறுகின்றன. சங்க இலக்கியம் பயில்வார் அவற்றுள் வரும் இயற்கைக் காட்சிகளைப் புறக்கணித்து விடுதல் எவ்வாற்றானும் இயலாததொன்றாகும்.”[15]

எட்டுத்தொகை, பத்துப்பாட்டு நூல்களில் இயற்கைக் காட்சிகள் இடம் பெற்றுள்ளன. ஐங்குறுநூற்றுப் பாடல்களில் அதிக அளவு இயற்கைக் காட்சிகள் இடம் பெற்றுள்ளன. ஒவ்வொரு திணைக்கும் நூறு நூறு பாடல்களாக ஐந்நூறு பாடல்கள் உள்ளன. ஒவ்வொரு நூறும் பத்துப் பத்து உட்பிரிவுகளைக் கொண்டதாக உள்ளன. இதில் தாவரங்கள், விலங்குகள், பறவைகள், மலர்கள் போன்றவற்றின் பெயர்கள் தலைப்புகளாக இடம் பெற்றுள்ளன. அவை வேழப்பத்து 2, ஞாழற்பத்து 15, நெய்தற்பத்து 19, கள்(ள)வன்பத்து 3, எருமைப்பத்து 10, வெள்ளாங்குருகுப்பத்து 16, சிறு வெண்காக்கைப் பத்து 17, வள்ளைப்பத்து 29, மஞ்ஞைப்பத்து 30, கருப்பொருட்பெயர் தாங்கி வரும் இப்பத்துக்களில் இயற்கை பற்றி மிகச் சுருக்கமான குறிப்புகள் தரப்படுகின்றன.”[16]

தலைவியைச் சென்றடைந்த தலைவன், தலைவியிடம் வரும் வழியில் உன்னைப்போல் மயில்கள் ஆடின. உன் நெற்றி போல் முல்லை மலர்ந்திருந்தது. மான்கள் மருண்டு நோக்கின. இவற்றையெல்லாம் கண்ட நான் கார்காலத்தில் விரைந்து வந்தேன்.

**“நின்னே போலும் மஞ்ஞை ஆலநின்**
**நன்னுதல் நாறும் முல்லை மலர**

**நின்னே போல மாமருண்டு நோக்க**

**நின்னே உள்ளி வந்தனென்**

**நன்னுதல் அரிவை காரினும் விரைந்தே"**[17]

எனத் தலைவன் கூறும் இப்பாடல் இயற்கையொடு இரண்டறக் கலந்த இனிய வாழ்விற்குச் சான்றாக விளங்குகிறது.

சேர மன்னர்களைப் பற்றிக் குறிப்பிடக்கூடிய பதிற்றுப்பத்துப் பாடல்களுக்குத் தனிச் சிறப்பு உண்டு. "ஒவ்வொரு பாடலிலும் பொருளால் சிறப்புடையதாய்ப் பொலியும் தொடரே அவ்வப்பாடலுக்குப் பெயராக அமைந்திருக்கின்றது. இவ்வாறு பாடற்பெயராக அமைந்துள்ள எண்பது தொடர்களுள் இருபத்தேழு இயற்கையின் பல்வேறு பொருள்களையும் காட்சிகளையும் இனிமையுற விளக்குவனவாயுள்ளன."[18] அவை "பூத்த நெய்தல், நிறைய வெள்ளம், வளனறு பைதிரம், ததைந்த காஞ்சி, சீர்சால் வெள்ளி, கான் உணங்கு கடுநெறி, காடுறுகடுநெறி, தொடர்ந்த குவளை, உருத்துவருமலிர்நிறை, கமழ்குரல் துழாஅய், கழை அமல் கழனி, நாடுகாண் அவிர் சுடர், சுடர்வீ வேங்கை, குண்டு கண் அகழி, மா கூர் திங்கள், மரம் படுதீங்கனி, புதல் சூழ் பறவை, மண்கெழு ஞாலம், பறைக்குரல் அருவி, உருத்தெழு வெள்ளம், வினை நவில் யானை, தொழில் நவில் யானை, நாடுகாண் நெடுவரை, வெண் தலைச் செம்புனல்."[19] பத்துப்பாட்டிலுள்ள நெடுநல்வாடை, மலைபடுகடாம், முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு போன்றவற்றின் தலைப்பிலேயே ஆசிரியர் இயற்கையை வெளிப்படுத்தியுள்ளார்.

நெடுநல்வாடையில் வருகின்ற வருணனையில், நல் வாடையானது முதலில் தலைவியின் மனநிலையினையும், பின்பு தலைவனுடைய மனநிலையினையும் முறையே புலப்படுத்தி நிற்கின்றது. கார்காலம், காதலர்கள் ஒருங்கிருந்து காதற்பயன் நுகர்தற்குச் சிறந்த காலமாகும். இந்நிலையில் போர் முகத்தில் பாசறையில் உள்ள தலைவனின் எண்ணத்தையும், இல்லத்திலே இருக்கின்ற தலைவியின் மனநிலையையும் ஒருங்கே காட்டியதால்தான் இந்நூல் அகம், புறம்

கலந்த நூல் எனப் பெயர் பெற்றது. இவ்வாறு இயற்கை நிகழ்வில் இருவகையான மனப்பான்மையை எடுத்துக் காட்டியுள்ளார் ஆசிரியர்.

“முல்லைக் காட்டில் நுண்மணலில் காயாஞ்செடி வளர்ந்துள்ளது. அதன் இலைகள் மிகச்சிறிது, மை போன்ற கரிய நிறத்தில் மலர்கள் உள்ளன. இளந்தளிரையும் பூங்கொத்துக்களையும் உடைய கொன்றை மரங்களில் பொன்போன்ற மஞ்சள் நிற மலர்கள் சொரிந்துள்ளன. காந்தளின் குவிந்த மொட்டுக்கள் உள்ளங்கைபோல் விரிந்து உள்ளன. இதழ்களை அதிகமாக உடைய தோன்றிச் செடிகள் குருதிபோன்ற சிவந்த பூக்களைக் கொண்டுள்ளன. காட்டில் மழை பெய்ததால் வரகுகள் விளைந்திருந்தன. வள்ளிக்கொடியின் காய்கள் முற்றின. இத்தகைய முல்லைக் காட்டினைக் கடந்து தலைவன் தலைவியை அடைந்தான். இப்பாடலில் இயற்கை நிகழ்வை அழகாக அமைத்துள்ளார் நப்பூதனார்.”[20]

குறிஞ்சிப் பாட்டில் மாலைப் பொழுதின் வருகையினைப் பதிவு செய்துள்ளார் கபிலர். “ஏழு குதிரைகளைப் பூட்டிய தேரைச் செலுத்துகின்ற பல கதிர்களையுடைய ஞாயிறு மேற்கு மலையில் சென்று மறைந்தான். மான் கூட்டம் மரத்தடிகளில் கூடின. ஊதுகின்ற கொம்பு போன்ற குரலையுடைய அன்றில் பறவை. பனையில் உள்ள மடலிலிருந்து தன் பெடையை அழைத்தது. பாம்புகள் தம் மாணிக்கத்தை உமிழ்ந்தன. ஆம்பல் இதழ்கள் விரிந்தன. மகளிர் இல்லம் தோறும் விளக்கேற்றினர். மேகங்கள் பெரிய மலையைச் சூழ்ந்து கறுத்தன. காட்டிலுள்ள விலங்குகள் கலகலவென ஒலி எழுப்பின. பறவை இனங்கள் ஒலித்து ஆரவாரித்தன என்று மாலைப் பொழுதில் உயிர்களின் மயக்க நிலையினைக் கபிலர் படம்பிடித்துக் காட்டுகின்றார்.”[21]

“இயற்கையை வருணித்தது மட்டுமின்றி, இயற்கைப் பொருட்களை விளித்துப் பேசும் இடங்களும் சங்க இலக்கியத்திலே காணப்படுகின்றன. அவை,

நொச்சி மரம் — புறம். 272

தினை — நற். 251

வயலைக்கொடி — அகம்.283

| | | |
|---|---|---|
| முல்லைக்கொடி | — | *புறம்.242, குறுந்.162* |
| கிள்ளை | — | *நற்.376* |
| ஆந்தை | — | *நற்.83* |
| கோழி | — | *குறுந்.107* |
| அன்னம் | — | *புறம்.67* |
| குருகு | — | *நற்.54, 70* |
| காக்கை | — | *ஐங்.391* |
| அலவன் | — | *அகம்.170* |
| தும்பி | — | *குறுந். 2,392, நற்.277* |
| புறவம்(முல்லை நிலம்) | — | *ஐங்.420* |
| மலை | — | *புறம் 113* |
| ஆறு | — | *அகம் 398, பரி 11,12* |
| கடல் | — | *அகம் 163, கலி 129* |
| மழை | — | *குறுந்.158, 270, அகம்.188, நற்.139, 238, 248* |
| வாடை | — | *அகம்.125,163 நற்.193, குறுந்.235* |
| ஞாயிறு | — | *புறம்.8, 374* |
| திங்கள் | — | *குறுந்.47, நற்.196* |
| மாலை | — | *ஐங்.183*''[22] |

சங்க இலக்கியப் பாடல்கள் மனிதனின் உணர்ச்சிக்கும் வேட்கைக்கும் முதன்மையான இடம் தருகின்றன. மனித வாழ்க்கையோடு ஒப்பாக விளங்கக்கூடிய இயற்கையும் சங்க இலக்கியப் பாடல்களில் இடம்பெறுகின்றது. மனிதனுடைய வாழ்க்கை என்பது இயற்கையைப் புறக்கணித்து வாழ இயலாதது. ''மனித வாழ்க்கையை விளக்கும் முறையிலோ வாழ்வினை இயக்கும் இன்ப துன்பங்களின் பாவையாய் மனிதன் ஆடும் ஆட்டத்திற்குரிய பேரரங்கு என்னும் முறையிலோ இயற்கை அமைந்துள்ளது. சங்க இலக்கியத்தில் இயற்கை பெற்றுள்ள இடம் இத்தகையதே.''[23]

சங்க இலக்கியத்தில் மக்கள் இயற்கையோடு உறவுமுறையில் வாழ்ந்ததாகப் பதிவுசெய்துள்ளனர். தலைவியைக் காணவரும் தலைவன் புன்னை மரத்தடியில் அவளைக் காண்கின்றான். அவளிடம் காதல் மொழி பேசுகிறான். அதற்குத் தலைவி இவ்விடம் உகந்தல்ல என்று நாணி ஒதுங்கி நிற்கின்றாள். காரணம் கேட்கின்றான் தலைவன். அதற்குத் தலைவி தனது தமக்கை அருகில் இருப்பதாகக் கூறுகிறாள். இங்கு யாரும் இல்லையே என்றுரைக்கிறான் தலைவன். அருகிலுள்ள புன்னைமரத்தைக் காட்டி இதுவே எனது தமக்கை என்கிறாள். அம்மரத்திற்கும் அவளுக்கும் உள்ள உறவுமுறையை எடுத்துரைக்கின்றாள்.

என் தாய் சிறுமியாக இருக்கும் காலத்தில் கடற்கரை மணலில் தோழியரோடு விளையாடும் பொழுது புன்னை விதைகளை மணலில் புதைத்து வைத்து விளையாடினார்கள். அவ்வாறு புதைத்த விதைகளில் ஒன்று முளைத்து வளர ஆரம்பித்தது. அதற்கு என் தாய் நெய்யும் பாலும் ஊற்றி வளர்த்தாள். பின் என் தாயும் திருமணம் ஆகி என்னையும் ஈன்றாள். தான் அன்புடன் வளர்த்த புன்னை மரத்தை எனக்குத் தமக்கை என அறிமுகப்படுத்தினாள். அன்று முதல் இப்புன்னை மரத்தை நானும் தமக்கையாகவே கருதுகிறேன். எனவே, என் தமக்கை முன்பாக உன்னோடு நகையாடுவதற்கு நாணுகிறேன் என்றாள். இதனை,

**“விளையாடு ஆயமொடு வெண்மணல் அழுத்தி,**
**மறந்தனம் துறந்த காழ்முளை அகைய,**
**நெய்பெய் தீம்பால் பெய்துஇனி வளர்ப்ப**
**நும்மின் சிறந்தது நுவ்வை ஆகும்என்று,**
**அன்னை கூறினள் புன்னையது சிறப்பே**
**அம்ம நாணுதும், நும்மொடு நகையே**
**விருந்தின் பாணர் விளர்இசை கடுப்ப,**
**வலம்புரி வான்கோடு நரலும் இலங்குநீர்த்**
**துறைகெழு கொண்க! நீ நல்கின்,**
**இறைபடு நீழல் பிறவுமார் உளவே!”**[24]

என்னும் இப்பாடல் உணர்த்துகின்றது. இவ்வாறு சங்ககால மக்கள் இயற்கையோடு உறவு கொண்டு வாழ்ந்ததை இலக்கியங்கள் மூலம் அறியமுடிகிறது.

வினைமேற் சென்ற தலைவன் கார்காலம் வந்ததும், தலைவியைக் காணும் ஆவலுடன் தேரேறி வருகிறான். பருவ மழையினால் காடு கவின் பெற்றுத் திகழ்கிறது. கார்காலத்தில் மலரும் கருநீலமணி போன்ற நிறமுடைய காயாம் பூக்கள் கொத்துக் கொத்தாகப் பூத்துக்குலுங்குகின்றன. சிவந்த நிறத்தையுடைய தம்பலப் பூச்சிகள் நிலமெங்கும் விரிந்து கிடக்கின்றன. மணமிக்க மல்லிகை, முல்லை மலர்களும், மாலையில் மலரும் பலவகையான மலர்களும் மலர்ந்து உதிர்ந்து கிடக்கின்றன. இப்படி பல அதிசயங்களும், அழகும் பொருந்திய கானகத்தைக் கடந்து தலைவன் தலைவியைச் சந்திக்கின்றான்.

**“வானம் வாய்ப்பக் கவினிக் கானம்**
**கமஞ்சூல் மாமழை கார்பயந்து இறுத்தென**
**மணிமருள் பூவை அணிமலர் இடையிடைச்**
**செம்புற மூதாய் பரத்தலின் நன்பல**
**முல்லை வீகழல் தாஅய் வல்லோன்**
**செய்கை அன்ன செந்நிலப் புறவின்”** [25]

என இயற்கையின் எழிலை அழகாகப் படம் பிடித்துக் காட்டியுள்ளார் சீத்தலைச்சாத்தனார்.

**நீதி நூல்களில் இயற்கை**

காதல், வீரம், கொடை முதலியவற்றின் உணர்ச்சிகளைப் பாடிய புலவர்கள், கால மாற்றத்தின் காரணமாக நீதி நூல்கள் பாடத் தொடங்கினர். அப்படிப்பட்ட நீதி நூல்களில் இயற்கையின் ஈடுபாடு குறித்தும் பாடப்பட்டது. நீதி நூல்களில் முதன்மையாகக் கருதப்படும் திருக்குறளில் அதிக அளவு இயற்கைப் பற்றிய செய்திகள் பதிவு செய்யப்பட்டுள்ளன. மழையின் சிறப்பினை உணர்த்துவதற்காக வான்சிறப்பு என்ற அதிகாரத்தைத் திருவள்ளுவர் படைத்துள்ளார். மலர்கள்,

விலங்குகள், பறவைகள் போன்ற இயற்கையைப் பயன்படுத்தியுள்ளார். தான் சொல்கின்ற கருத்துக்கு ஆதாரமாக இயற்கையைப் பயன்படுத்தியுள்ளார்.

**“காணின் குவளை கவிழ்ந்து நிலன்நோக்கும்**

**மாண்இழை கண்ஒவ்வேம் என்று”**[26]

குவளைப்பூக்கள் பார்க்கும் ஆற்றலைப் பெற்றிருந்து பார்க்குமானால் இவளுடைய கண்களுக்கு நாம் ஒப்பாகமாட்டேம் என நாணித் தலை கவிழும் எனக் காமத்துப்பாலில் தலைவியின் கண்களுக்குக் குவளை முதலான நீர்ப்பூக்களைக் குறிப்பிடுகின்றார்”[31] வள்ளுவர்.

**“மோப்பக் குழையும் அனிச்சம் முகம்திரிந்து**

**நோக்கக் குழையும் விருந்து”**[27]

மலர்களில் மிக மென்மையானது அனிச்சமலர், மூச்சுக்காற்றின் வெப்பத்தால் வாடிவிடும், அதே போல் விருந்தினரோ விருந்தோம்பும் முகத்தில் மாறுபட்ட உணர்ச்சிகளைப் பார்த்தவுடன் உள்ளம் வாடிவிடுவர் என விருந்தினருக்கு அனிச்சமலர் உவமையாகச் சொல்லப்படுகிறது. மக்களின் வாழ்க்கை நிலையைக் குறிப்பிட இயற்கையைப் பயன்படுத்தியுள்ளார் திருவள்ளுவர்.

**“கால்ஆழ் களரில் நரிஅடும் கண்அஞ்சா**

**வேல்ஆள் முகத்த களிறு”** [28]

மிகப்பெரிய யானையானது பல வீரர்களையும் தன் தந்தத்தால் குத்திக் கொல்லக்கூடிய தகுதியுடையதாக இருந்தாலும் ஒரு சேற்று நிலத்தில் மாட்டிக் கொண்டால் அதனைச் சிறுநரிகள் கூடக் கொன்றுவிடும் எனக் கூறுகின்றார். இவ்வாறான இயற்கை நிகழ்வுகளை வள்ளுவர் பயன்படுத்தியுள்ளதை அறியமுடிகிறது.

**பழமொழி**

நீதி நூல்களில் ஒன்றான பழமொழியிலும் இயற்கை இடம் பெற்றுள்ளது. இந்நூல் கடையெழு வள்ளல்கள் பற்றியும் மூவேந்தர்களைப் பற்றியும் அறிய உதவுகிறது. இயற்கை அதிக அளவு ஆளப்பட்டுள்ளது,

**"முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வையும்**
**தொல்லையளித்தாரைக் கேட்டறிதும் சொல்லின்**
**நெறிமடற் பூந்தாழை நீடுநீர்ச் சேர்ப்ப**
**அறிமடமும் சான்றோர்க்கு அணி"[29]**

என முல்லைக் கொடிக்குத் தன் தங்கத் தேரையே பரிசாகக் கொடுத்த பாரியைப் பற்றியும், குளிரால் வாடிய மயிலுக்குப் போர்வை அளித்த பேகன் பற்றியும் ஆசிரியர் முன்றுறை அரையனார் குறிப்பிட்டுள்ளார்.

அக்காலத்தில் வழங்கப்பட்ட பழமொழிகள் இக்காலத்திலும் வழங்கப்பட்டு வருகின்றன. "இருதலைக் கொள்ளி எறும்பு போல"[30], "குன்றின்மேல் இட்ட விளக்கு"[31], "நிறைகுடம் நீர் தளும்பல் இல்"[32], "பாம்பறியும் பாம்பின்கால்"[33], இவை அக்காலத்திற்கும் ஏற்றுக் கொள்ளப்பட்டவையாக உள்ளன. பழமொழியில் மரங்கள் அறக்கருத்துகளைச் சொல்வதற்கு உவமைகளாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**கார்நாற்பது**

இந்நூலை இயற்றியவர் கண்ணங்கூத்தனார். இவர் இயற்கைப் பொருட்களை உவமையாகக் கையாண்டுள்ளார். "தலைவன் போருக்குச் செல்கின்ற போது கார்காலத்தில் திரும்பி வருவதாகச் சொல்லிச் சென்ற தலைவன், குறித்த காலத்தில் வரவில்லை. அதனால் வருந்துகிறாள் தலைவி. அப்போது தோழி அவளைத் தேற்றுகிறாள். திருமாலின் மார்பில் உள்ள மலர் மாலைபோல் வானத்தின்கண் மின்னல் தோன்றி மழை பொழியும் கார்காலத்தில் வந்துவிடுவார் என இயற்கை நயம்படப் பாடுகிறார்"[34] என சோ.குருசாமி கூறுகிறார்.

‘‘வானத்தில் தோன்றுகின்ற வானவில்லுக்குத் திருமாலின் மார்பில் உள்ள மலர் மாலையை ஒப்பிடுகின்றார். மழைபொழியும் கார்காலத்தில் வருவேன் என்று சொல்லிச் சென்ற தலைவன் சொன்ன சொல் தவறமாட்டான் என்று கூறியும் ஆறுதல் அடையாத தலைவியைத் தோழி மேலும் கூறித் தேற்றுகிறாள். பவளங்களைப் போல் பட்டுப்பூச்சிகள் திகழ்கின்றன. வேள்வித்தீ போல் மின்னல் மின்னுகிறது. கண் மை போல் காயாம் பூக்கள் மலர்ந்துள்ளன. கண்மலர் போல் கருவிளம்பூக்கள் பூத்துள்ளன. பாம்பின் படம் போல் மென்காந்தள் பூக்கள் இதழ் விரிந்துள்ளன. மங்கையரின் முத்துப்பற்கள் போல் முல்லை மலர்ந்துள்ளன என இவையெல்லாம் பார்க்கின்றபோது தலைவன் சொன்ன கார்காலம் வந்து விட்டது. தலைவன் உறுதியாக வந்துவிடுவார் இது உறுதி’’[36] எனக் கார்நாற்பது காட்டும் கார்கால இயற்கை நிகழ்வுகளை சோ.குருசாமி குறிப்பிட்டுள்ளார்.

இவ்வாறே ஏனைய நீதிநூல்களிலும் இயற்கை பற்றிய செய்திகள் பதிவு செய்யப்பட்டுள்ளன. இதன் மூலம் இயற்கையின் உன்னத நிலையினை அறிய முடிகிறது.

**காப்பியங்களில் இயற்கை**

காப்பியங்களை ஐம்பெருங்காப்பியங்கள், ஐஞ்சிறுகாப்பியங்கள் எனப் பகுத்துள்ளனர். அனைத்துக் காப்பியங்களும் இயற்கையின் அழகினைப் படம்பிடித்துக் காட்டுகின்றன. காப்பியங்களைப் படிக்கும்பொழுது அதிலுள்ள இயற்கை வருணனை அந்நிகழ்விற்கு வாசகர்களையும் கொண்டு சேர்த்து விடுகிறது.

‘‘காப்பியங்களுக்கு என்று தனி இலக்கணத்தைத் தொல்காப்பியர் கூறவில்லை. வடமொழியில் அமைந்த காவியதர்சன் என்ற இலக்கண நூலைத் தழுவித் தமிழில் எழுந்த தண்டியலங்காரம் என்னும் நூல்தான் முதலில் பெருங்காப்பியத்திற்கான இலக்கணங்களை வரையறுக்கிறது. வாழ்த்து, வணக்கம், வருபொருள் என்று தொடர்ந்து, காப்பியக்கூறுகளை வரையறுக்கையில்,

**“மலை கடல் நாடு வளநகர் பருவம்**

**இருசுடர் தோற்றமென் றிணையன புனைந்து”**

என்று இயற்கையைப் புனைந்து பாடுதலையும், காப்பியத்தின் இலக்கண மரபாகப் பதிவு செய்கிறது தண்டியலங்காரம். தமிழில் தோன்றிய காப்பியங்கள் அனைத்தும் தண்டியலங்காரம் கூறும் இலக்கணங்களோடு முழுமையாக ஒத்துப்போவதில்லை. எனினும் மேற்கூறிய இயற்கைப்புனைவு என்னும் அமைவைப் பெரும்பாலும் காப்பியங்களில் இடம்பெறச் செய்துள்ளனர்.”[36]

சங்கப்புலவர்கள் இயல்பான முறையில் இயற்கையைப் பயன்படுத்தினர். ஒரு சில இயற்கைக்கு மிகுதி ஏற்றி மிகைப்படப் பாடினர். காப்பியங்களில் உயர்வு நவிற்சிக்காக இயற்கையை மிகைப்படுத்திக் கூறியுள்ளனர்.

**“திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும்**

**சொங்கலர்தார்ச் சென்னி குளிர்வெண்குடை போன்றிவ்**

**அங்கண் உலகளித்தலான்**

**ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்**

**காவிரி நாடன் திகிரிபோல் பொன்கோட்டு**

**மேரு வலந்திரிதலான்**

**மாமழை போற்றுதும் மாமழை போற்றுதும்**

**நாம நீர் வேலி யுலகிற்கு அவன் அளிபோல்**

**மேனின்று தான்சு ரத்தலான்**

**பூம்புகார் போற்றுதும் பூம்புகார் போற்றுதும்”**[37]

என்று மங்கல வாழ்த்துப்பாடலில் அடுத்தடுத்து திங்களையும் ஞாயிற்றையும் மழையையும் போற்றிப் பாடியுள்ளார் இளங்கோவடிகள்.

சீவக சிந்தாமணியில் நாடு, நகர வருணனைகளில் இயற்கை சேர்த்துப் பாடப்பட்டுள்ளது. ஐந்திணையாகப் பிரிக்கப்பட்ட நிலங்களின் இயற்கை அழகை இக்காப்பியம் சிறப்பாக விளக்குகிறது.

நாட்டு வளத்தை விளக்கும் பொழுது சிறந்த கற்பனை நிறைந்த பாடல்களைப் பாடியுள்ளார் திருத்தக்கத் தேவர். வயல்களில் தலை சாய்த்து விளங்கும் நெற்பயிர்களைப் பற்றிக் குறிப்பிடும்போது பல உவமைகளைப் படைத்துத் தம் கற்பனைத் திறனை வெளிப்படுத்தியுள்ளார். பாம்பின் தோற்றம் போல் நாற்றுவளர்ந்து, மேன்மையல்லார் செல்வத்தைப் போல் தலை நிமிர்ந்து சில நாள் நின்று கற்றறிந்த பெரியோர் போலத் தலைகவிழ்ந்து நெற்பயிர்கள் காய்த்தன என்று கூறுகின்றார்.

**"சொல்லரும் சூற்பசும் பாம்பின் தோற்றம்போல்**
**மெல்லவே கருவிருந்து ஈன்று மேலலார்**
**செல்வமே போல்தலை நிறுவித் தேர்ந்தநூற்**
**கல்விசேர் மாந்தரின் இறைஞ்சிக் காய்த்தவே"**[38]

மேலலார் செல்வம் நிலையில்லாதது. அது சில நாள் செல்வாக்குப் பெற்றிருக்கும். அதன் பின் ஒன்றுமில்லாமலாகிவிடும். காய்த்து, முதிர்ந்து, மக்களுக்குப் பயன்படும் நெற்கதிர்கள் போல் கற்றறிந்த பெரியோர் மக்களுக்குப் பயன்படுவர். அவர்கள் பணிந்து அடக்கமாகவே இருப்பர் என்னும் கருத்தை இயற்கை மூலம் கூறியுள்ளார்.

இயற்கையின் வளத்தை வருணிப்பதிலும், திருத்தக்கத் தேவர் சிறப்புடையவர் இயற்கை வளம் நிறைந்த பூம்பொழிலின் அமைப்பினை,

**"விண்புகு வியன்சினை மெலியப் பூத்தன**
**சண்பகத் தணிமலர் குடைந்து தாதுக**
**வண்சிறைக் குயிலோடு மயில்கண் மாறுகூய்க்**
**கண்சிறைப் படுநிழற்காவு சூழ்ந்ததுவே"**[39]

என்ற பாடல் மூலம் வெளிப்படுத்துகின்றார்.

வானளாவிய பெரிய கிளைகள் வளையுமாறு செண்பகம் பூத்தது. அழகிய செண்பக மலர்களை மகரந்தப் பொடிசிந்துமாறு வண்டுகள் குடைந்து

மயில்களுடன் குயில்களும் கூவின. பார்ப்பவர்கள் தங்கள் கண்களைத் திரும்பிப் பெறமுடியாத அழகுடன் விளங்கியது அப்பூம்பொழில்,

**“தேன் நிரைத்துயர் மொய்வரைச் சென்னியின்**
**மேல் நிரைத்து விசும்பற வெள்ளிவெண்**
**கோல் நிரைத்தன போற்கொழுந் தாரைகள்**
**வான் நிரைத்து மணந்து சொரிந்தவே”**[40]

தேன் இறால் நிறைந்த உயர்ந்த மலையின் உச்சியில் முகில்கள் வரிசையாக ஒன்றின்மேல் ஒன்றாகக் கூடி வெள்ளியால் செய்த கோல்களை வரிசையாக நிறுத்தியதைப் போல மழைத்துளிகளைச் சொரிந்தன. தூரத்திலிருந்து பார்க்கும் பொழுது வானத்திலிருந்து பாயும் மழைத்துளிகள் வரிசை வரிசையாக நிறுத்தியிருக்கும் வெள்ளிக் கம்பிகள் போலக் காட்சியளிக்கின்றன என நயம்படக் கூறியுள்ளார்.

காப்பிய இலக்கணத்திற்கு ஏற்ப வளையாபதியில் நாட்டு வருணனைப் பாடல்கள் இயற்கையைப் பாடுவனவாக அமைந்துள்ளன.

**“செந்நெல் அக்கரும்பினோடு இகலும் தீஞ்சுவைக்**
**கன்னலம் கரும்புதான் கமுகைக் காய்த்து எழும்**
**இன்னவை காண்கிலன் என்று புகழும்**
**முன்னிய முகில்களால் முகம் புதைக்குமே”**[41]

இயற்கை எழில் கொண்ட பல பாடல்களைக் கொண்டிருப்பினும் குறிப்பாக இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை பற்றிக் கூறும் போது இயற்கையை இணைத்துக் கூறுகின்றது. நாதகுத்தனார் குண்டலகேசியில் ஒழுக்கம் பற்றிக் குறிப்பிடுகின்ற போது இயற்கையைச் சொல்லுகின்றார்.

**“போர்த்தல் உடை நீக்குதல் பொடித்துகள் மெய்பூசல்**
**கூர்த்த பனி ஆற்றில் குளித்து அழலுள் நிற்றல்”** [42]

ஐம்பெருங்காப்பியங்களைப் போலவே ஐஞ்சிறுகாப்பியங்களிலும் புலவர்கள் இயற்கையைக் கையாண்டுள்ளனர். காப்பிய இலக்கியங்களில் அரசனின் சிறப்பு, கொடை, பெருமை, நாடு, நகர் வருணனைப் புனைவுகளிலும் மக்களின் இன்ப, துன்ப நிலைகளிலும் தலைவன் தலைவியின் நலம் பாராட்டும் போதும், குளிர்ந்த சோலைகள், மரம், செடி முதலியவற்றை உவமையாகக் கையாள்கின்ற போதும் இயற்கையை ஆசிரியர்கள் நன்கு புனைந்து பாடியிருப்பது போற்றத்தக்கதாகும்.

இடைக்காலத்தில் தோன்றிய கம்பராமாயணத்தில் சோலை, காடு, நீர்நிலை, ஆறு, பறவை, விலங்கு, மரம் போன்றவற்றின் இயற்கை நிகழ்வுகளை அழகாகப் பதிவு செய்துள்ளார் கம்பர்.

அழகிய சோலையில் பலவகையான மலர்கள் மலர்ந்து எங்கும் மணம் வீசுகின்றன. தேனீக்கள் அதிகமாகச் சேர்ந்தால் தேன் துளிகள் கீழே சொட்டிக் கொண்டிருக்க அந்தத் தேனடையினை ஆண் யானையானது எடுத்து அதில் மொய்த்துள்ள வண்டுகளை விரட்டி, கோது சிக்காதபடி எடுத்து தன் துதிக்கையால் ஊட்டிவிடுகின்ற நிகழ்வினைக் கம்பர் ‘‘வாயினில் கையினின்று அள்ளிப்’’[43] எனக்கூறுகிறார்.

**‘‘மருவு காதலின் இனிது, உடன் ஆடிய மந்தி**
**அருவி நீர் கொடு வீச தான் அப்புறத்து ஏறிக்**
**கருவி மாமழை உதிப்பது ஓர் கடுவனைக்காணாய்’’[44]**

என ஆண்குரங்கும் பெண்குரங்கும் அருவியில் இணைந்து நீராடுகின்ற அழகினைக் கம்பர் மிக நுட்பமாகப் பதிவுசெய்துள்ளார்.

**சிற்றிலக்கியங்களில் இயற்கை**

பக்தி இலக்கியக் காலத்தோடு எழுந்தவையே சிற்றிலக்கியங்கள். ஒவ்வொரு இலக்கியமும் ஒரு குறிக்கோளுடன் தோன்றுகின்றது. அந்த வகையில் இறைவனைப் பாட எழுந்தவையே சிற்றிலக்கியங்கள். சிற்றிலக்கியங்களில் பல வகைகள் இருந்தாலும் பிள்ளைத்தமிழ், பரணி, கலம்பகம், அந்தாதி, கோவை,

உலா, தூது, மடல், சதகம், குறவஞ்சி, பள்ளு போன்ற இலக்கியங்களே பெரிதும் பேசப்படுகின்றன. இவற்றில் இயற்கைக் காட்சிகளும் இயற்கை நிகழ்வுகளும் பின்னிப் பிணைந்து காணப்படுகின்றன.

## தூது

தூது இலக்கியத்தில் அஃறிணைப் பொருட்களையும் தூதாக அனுப்புவதாகப் பாடும் மரபு உண்டு. அன்னம், நாரை, மேகம், குயில், மயில், மான், வண்டு என அஃறிணைப் பொருட்கள் தூது அனுப்புவதாகப் பாடப்பெறும்.

தலைவி ஒருத்தி பழமுதிர் சோலையில் குடியிருக்கும் அழகராகிய திருமாலின் பேரழகைக் கண்டு காதல் கொண்டாள். தன் காதலை எப்படி வெளிப்படுத்துவது என்று தெரியாது தான் வளர்த்த கிளியைத் தூது அனுப்புவதாகப் பாடல் அமைந்துள்ளது.

“சங்க இலக்கியத்தில் ஔவையார் அதியமான் பொருட்டுத் தொண்டைமானிடம் அரசியல் தூது செல்கிறார். (புறம்.95) அகம் 170 — ல் தலைவி தன் ஆற்றாமையைத் தலைவனிடம் கூறுமாறு நண்டை நோக்கிக் கூறுகின்றாள். நற்றிணை 70, 54 பாடல்களில் வெள்ளாங்குருகையும், நாரையையும் தலைவி தூதாக அனுப்புகிறாள். நற்றிணை 102 — ல் தலைவி கிள்ளையைத் தூதுப் பொருளாகவும் மற்றொரு பாடலில் (207 — ல்) வண்டினையும் தூதாக அனுப்புவதைக் காணலாம். ஆண்டாள் நாச்சியார் திருமொழியில் மேகத்தைத் தூது அனுப்புவதாகப் பாடியுள்ளார்.

குறளில் புறத்தூது, அகத்தூது இரண்டு உள்ளன. காப்பியங்களிலும் பக்தி இலக்கியங்களிலும் அகம் புறம் இருநிலைகளிலும் தூதுக்கள் உள்ளன. ஆழ்வார்களின் பாசுரங்களில் நாரை, குயில், அன்னம், அன்றில், வண்டு,கிளி, நெஞ்சு, மேகம், செம்போத்து, காக்கை, பல்லிக்குட்டி, பைங்கிளி, கோழி போன்றவற்றைத் தூதாக அனுப்புவதைப் பார்க்கிறோம்.”[45]

**குறவஞ்சி**

குறிஞ்சி நிலத்தில் வாழ்பவர் குறவர். குறிஞ்சி நிலத்தில் குறிசொல்லும் பெண் குறத்தி ஆவாள். அவள் தனது மலையின் அழகினையும் சிறப்பினையும் பாடும் போது அங்குள்ள இயற்கை நிகழ்வுகளைச் சுட்டுவதைக் காண இயலும்.

**"வானரங்கள் கனி கொடுத்து மந்தியொடு கொஞ்சும்**
**மந்திசிந்து கனிகளுக்கு வான்கவிகள் கெஞ்சும்**
**கானவர்கள் வழி எறிந்து வானவரை அழைப்பர்**
**கவனசித்தர் வந்து வந்து காயசித்தி விளைப்பர்**
**தேனருவித் திரைஎழுப்பி வானின் வழி ஒழுகும்**
**செங்கதிரோன் பரிகாலும் தேர்காலும் வழுகும்**
**கூனல் இளம் பிறைமுடித்த வேணி அலங்காரர்**
**குற்றாலத் திரிகூட மலை எங்கள் மலையே"**[46]

என மலையின் பெருமையை இப்பாடல் வழி உணர்த்துகின்றார் திரிகூடராசப்ப கவிராயர்.

**பள்ளு**

பள்ளு இலக்கியத்தில் சிறந்ததாகக் கருதப்பெறுவது முக்கூடற்பள்ளு. தாமிரபரணி, சிற்றாறு, ஒரு காட்டாறு ஆகிய மூன்றும் கலக்கும் இடம் முக்கூடல். இதில் பல நெல்வகைகளைக் குறிப்பிட்டுள்ளனர். சித்திரக் காலி, வாலான், சிறை, மீட்டான். மணல் வாரி, பூம்பாளை, கருங்குறுவை, செஞ்சம்பா, கருஞ்சூரை, பொற்பானை, கத்தூரிவாணன், புனுக்குச் சம்பா போன்ற நெல்வகைகளையும், குடைச்செவழியன், கூடுகொம்பன் போன்ற மாட்டு வகைகளையும் பதிவு செய்துள்ளனர்."[47]

பள்ளு இலக்கியத்தில் திருமால் பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன. இதில் வரக்கூடிய மூத்தப்பள்ளி திருமாலை வழிபடக் கூடியவள். இளைய பள்ளி சிவபெருமானை வழிபடக் கூடியவள். எனவே, இருவருக்கும் மோதல் ஏற்படும்

போது எல்லாம் இருவரும் தங்களது குலப் பெருமையினைப் பேசிக் கொள்வர். அப்போது அவரவர் தெய்வத்தின் புகழைப் பாடுவதாக அமைந்துள்ளது. இந்நூல் இயற்கை அழகையும் உழவர்களின் வாழ்க்கையையும் தெளிவாகப் படம்பிடித்துக் காட்டுவதாக அமைந்துள்ளது.

**“ஆற்றுவெள்ளம் நாளை வரத்**
**தோற்று தேகுறி – மலை**
**யாள மின்னல் ஈழ மின்னல்**
**சூழ மின்னுதே**
**நேற்று மின்றுங்கொம்பு சுற்றிக்**
**காற்றடிக்குதே – கேணி**
**நீர்ப்பாடு சொறித்தவளை**
**கூப்பிடுகுதே**
**சேற்று நண்டு சேற்றில் வளை**
**ஏற்றடைக்கு தே – மழை**
**தேடியொரு கோடிவானம்**
**பாடியாடுதே**
**போற்றிதிரு மாலழகர்க்**
**கேற்ற மாம்பண்ணைச் – சேரிப்**
**பள்ளிப் பள்ளர் ஆடிப்பாடித்**
**துள்ளிக் கொள்வோம்”** [48]

உயிர்களுக்கு முக்தி தரவேண்டும் என்ற பெருங்கருணையினால் முக்கூடலில் கோயில் கொண்டிருப்பவன் முக்கூடல் அழகர். அவனுடைய திருப்பாதங்களிலே இருப்பவர்கள் பள்ளர்கள். அவனிடம் மழை வேண்டிப் பள்ளர்கள் வழிபடுகின்றனர். திருமாலின் கருணையினால் மழையின் அறிகுறிகள் தோன்றுகின்றன என மழையின் வரவினை அழகாகப் பதிவுசெய்துள்ளார் ஆசிரியர்.

நாளைக்கு ஆற்றிலே வெள்ளம் வருவதற்கான அறிகுறிகள் தோன்றுகின்றன. தென்மேற்குத் திசையிலே மலையாள மின்னலும், தென்கிழக்குத் திசையிலே ஈழத்து மின்னலும் சூழ வளைந்து மின்னிக் கொண்டிருக்கின்றன. நேற்றும் இன்றும் மரக்கொம்புகளைச் சுற்றியவாறு காற்று அடிக்கிறது. கிணற்று நீரிலே இருக்கின்ற சொறித் தவளைகள் கூப்பிடுகின்றன. சேற்றிலே வாழும் நண்டுகள் தம் வளைகளுள் மழைநீர் புகுந்து விடாதபடி சேற்றினால் வளைவாயில்களை அடைக்கின்றன. மழை நீரைத் தேடி ஒரு கோடி வானம்பாடிப் பறவைகள் அங்குமிங்குமாக வானத்தில் பறந்து ஆடிக் கொண்டிருக்கின்றன. உலகமெல்லாம் போற்றும் திருமாலாகிய முக்கூடலின் அழகருக்கு ஏற்றவரான பெரிய பண்ணையைச் சார்ந்து சேரியிலுள்ள பள்ளர் வகையினரெல்லாம் மழையினை வரவேற்று ஆடிப்பாடித் துள்ளிக் கொண்டாடுகின்றனர் என இயற்கை நிகழ்வினை அழகாகப் பதிவுசெய்துள்ளார் ஆசிரியர்.

**நந்திக்கலம்பகம்**

நந்திக்கலம்பகத்தில் நந்திவர்மனுடைய வீரம், புகழ், கொடை, பெருமை போன்றவற்றை இயற்கையோடு கொண்டு சேர்க்கிறார் ஆசிரியர்.

**‘‘வானுறு மதியை அடைந்ததுன் வதனம்**
**மறி கடல் புகுந்தது உன் கீர்த்தி**
**கானுறு புலியை அடைந்தது உன் வீரம்**
**கற்பகம் அடைந்தது உன் கரங்கள்**
**தேனுறு மலரான் அரியினை அடைந்தான்**
**செந்தழல் அடைந்தது உன் தேகம்**
**யானும் என் கவியும் எங்ஙனே புகுவோம் ’’**[49]

உன் முகத்தின் ஒளி வானத்தின் சந்திரனைச் சென்றடைந்தது, உன் வீரம் காட்டில் வாழும் புலியிடம் சேர்ந்தது. உன் கொடைவளம் மிகுந்த கைகள் கற்பகத் தாதுவைச் சென்றடைந்தன. உன்னிடம் உள்ள திருமகள் திருமாலைச் சென்று சேர்ந்தாள். உன் பெருமை கடலைச் சென்று சேர்ந்தது. உன் உடல்

நெருப்பைச் சென்று சேர்ந்தது; நானும் என் கவியும் எங்கு போவோம் எனக் காடவர் புலம்புவது நெஞ்சுருக்கத்தக்கது.

**பக்தி இலக்கியங்களில் இயற்கை**

சைவர்களும், வைணவர்களும் இயற்கையை இறைவனாகக் கண்டனர். அவர்களுடைய பாடல்களில் இயற்கை வளங்கள் அழகுற எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. ஆழ்வார்கள், நாயன்மார்கள் பாடல்களிலும் இடைக்காலத்தைச் சார்ந்த தலபுராணங்களிலும் நாட்டு வருணனையாகவும் இயற்கை அமைகிறது.

இயற்கையைப் பாடாத கவிஞர்கள் இல்லை. இயற்கையினூடே இயைந்து வாழ்ந்த கவிஞர்கள் தாங்கள் பெற்ற இன்பத்தை மற்றவர்களுக்கும் ஊட்ட வேண்டும் என்ற நோக்கத்தில் இயற்கை அமைப்பைத் தம் பாடல்களில் பதிவு செய்துள்ளனர். இயற்கை அவர்களுடைய முருகியல் உணர்வைத் தெளிவாகக் காட்டுகிறது.

**சம்பந்தர் பாடல்களில் இயற்கை**

பழந்தமிழர் இயற்கையோடு வாழ்ந்தவர்கள். இயற்கையையே இறைவனாகக் கண்டு வணங்கியவர்கள். இயற்கையின் அடிப்படையில் இறைவனைக் கண்டமையை எடுத்துக் கூறியவர்கள். சம்பந்தர், இயற்கையைக் கண்டு போற்றினார். இறைவன் பூவில் வாசமாகவும், புனலில் அழகாகவும் அரைத்த சந்தனத்தில் வாசனையாகவும் திகழ்கிறான்; நாவில் பாடலாக விளக்குகின்றான் என்கிறார்.

**“பூவில் வாசம் புனலிற் பொற்புப்**
**புதுவிரைச் சாந்தினி னாற்றத்தோடு**
**நாவினிற் பாடல்நள் ளாறுடைய நம்பெரு**
**மானிது எவன் கொல் சொல்லாய்”**[50]

எனத் திருநள்ளாறில் எழுந்தருளியுள்ள இறைவன் இயற்கையில் கலந்திருக்கும் பான்மையைக் கூறிய சம்பந்தர், அவன் ஐம்பொறிகளுக்கும் இன்பமாய் விளங்குகின்றான் எனச் சுட்டுகிறார்.

பெரிய பாறைகளில் அந்திப்பிறை வந்து சேர்ந்திருக்கும் காட்சி, பிறையைச் சூடிய பெருமான் போல காட்சி தருகிறது.

**“முந்தியெழுந்த முழ வினோசை முதுகல் வரைகள்மேல**
**அந்திப் பிறைவந்தணையுஞ் சேராலண்ணா மலையாரே”**[51]

என்று சம்பந்தர் இயற்கையில் இறைவனைக் கண்டு பாடியுள்ளார்.

“அண்ணாமலை, ஈங்கோய்மலை, கயிலாயம், கற்குடிமலை, காளத்திமலை, குற்றாலம், கேதாரம், கொங்குன்றம், கோகரணம், சிராப்பள்ளி, பரங்குன்றம், மது குன்றம் முதலிய குறிஞ்சித் தலங்களில் மலை வளத்தைச் சம்பந்தர் சிறப்பாகப் பாடியுள்ளார்.”[52]

மலைகளின் அழகைக் கண்டு ரசிப்பவர்கள் அங்குள்ள குரங்குகளின் செயலைக் கண்டும் மகிழ்கின்றனர். சம்பந்தர் தம் பாடல்களில் குரங்குகளைப் பற்றிய செயல்களை விளக்கியுள்ளார். ஓர் ஆண்குரங்கு கிளையை இழுத்து, தேமாங்கனியைப் பறித்த பிறகு கிளையை விட்டுவிடுகிறது. அக்கிளையானது கரிய மேகத்தைக் குத்தி மழைத்துளிகள் மலைப்பாறைகளின் மேல் சிதறுகின்றன என்பதை,

**“மலையார் சாரல் மகவுடன் வந்த மடமந்தி**
**குலை ஆர் வாழைத் தீங்கனி மாந்தும் கற்றாலம்**
**இலை ஆர் சூலம் ஏந்திய கையான் எயில் வந்த**
**சிலையான் மேய நன்னகர் போலும் சிறு தொண்டீர்”**[53]

என்னும் இப்பாடலில் சுட்டுகின்றார். திருக்கயிலாய மலையில் வாழும் மந்திகள் மணம் பொருந்திய மலர்க்கொத்துக்களைப் பறித்து அருவியில் சிதறுகின்றன என ஞானசம்பந்தர் குறிஞ்சி நில இயற்கை வளத்தினை அழகுறப் புனைந்துள்ளார்.

சம்பந்தர் இயற்கைப் பொருள்களை இறைவனாகக் கண்டு வணங்கினார். இறைவழிபாட்டிற்கு இயற்கை துணையாக அமைகின்றது. அஃறிணை உயிர்களான விலங்குகளும், பறவைகளும் இறைவனை வணங்குவதாகக் கூறுகின்றார். களிறும் பிடியும் வேங்கைப் பூக்களைப் பறித்து வழிபாட்டிற்குரிய முறையறிந்து வழிபடுகின்றன. மந்திகள் கூட்டம் கூட்டமாய் வந்து மலர் கொண்டு தொழுது திருமுதுகுன்றநாதரை வணங்குகின்றன என்று அவர் குறித்துள்ளார்.

**திருநாவுக்கரசர் பாடல்களில் இயற்கை**

திருநாவுக்கரசர் தம் தேவாரத்தில் இயற்கையைப் பதிவு செய்துள்ளார்.

**"மாசில் வீணையும் மாலை மதியமும்**
**வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்**
**மூசு வண்டு அறை பொய்கையும் போன்றதே**
**ஈசன் எந்தை இணையடி நீழலே"**[54]

இது மகேந்திரவர்மன் இவரைச் சுண்ணாம்புக் காளவாயில் இட்ட போது இறைவனை நினைத்துப் பாடியதாகும். வெப்பம் மிகுந்த காளவாய் குளிர்ச்சியையுடைய தாமரைப் பொய்கை போன்று இருந்தது என்கிறார்.

நாவுக்கரசர் வயல்களில் காணும் இயற்கையை நயம்படக் கூறுகிறார். வயல்களில் பாக்கு மரங்கள் உயர்ந்து வளர்ந்துள்ளன. வாளை மீன்கள் குதிக்கின்ற நீர்நிரம்பியுள்ள வயல்களை உடைய தலங்களில் எழுந்தருளியுள்ள இறைவனின் நடனத்தைக் கண்ட கண்கள் வேறு எதையும் காணுமோ என்கிறார். இதனை

**"பாளையுடைக் கமுகு ஓங்கிப்**
**பன்மாட நெருங்கியெங்கும்**

**வாளையுடை புனல் வந்து எறி**

**வாழ்வயல் தில்லை தன்னுள்''** [55]

என்னும் பாடல் உணர்த்தும். திருவொற்றியூர், இராமேஸ்வரம், சீர்காழி முதலான கடற்கரைத் தலங்களை வருணிக்கும் போதும் திருநாவுக்கரசர் அங்குள்ள கடற்கரைக் காட்சியை அழகுறப் புனைந்துள்ளார்.

**சுந்தரர்**

சுந்தரர் தம் பாடல்களில் இயற்கை நிகழ்வுகளைப் பதிவு செய்துள்ளார். அவருடைய இயற்கைப் புலமைக்குச் சான்றாக,

**''அரும்பருகே கரும்பருவ அறுபதம் பண்பாட**

**அணிமயில்கள் நடமாடு மணி பொழில்சூழயலின்**

**கரும்பருகே கருங்குவளை கண்வளருங் கழனிக்**

**கமலங்கள் முகமலரும் கலயநல்லூர் காணே''**[56]

என்னும் பாடல் விளங்குகின்றது. இவருடைய பதிகங்களில் இயற்கை வருணனையும், நாடு, நகர் பற்றிய வருணனைகளும் மிகுந்து காணப்படுகின்றன.

**மாணிக்கவாசகர்**

''திருவாதவூரார் பாண்டியன் இட்ட கட்டளைப்படி குதிரை வாங்கிவரப் பெரும் பொருளோடு புறப்பட்டார். பெருந்துறையில் இருந்து மரத்தடியில் அடியார்களுக்கு உபதேசம் செய்து கொண்டிருந்த குருபிரானைக் கண்டு, வைத்திருந்த பணத்தையெல்லாம் சிவ வழிபாட்டிற்காகச் செலவிட்டார். பாண்டியன் குதிரை எங்கே எனக் கேட்க, 'வரும்' என்றார். இறைவன் நரிகளைப் பரிகளாக மாற்றி அனுப்பினார். அவை நரிகளாக மாறிக் கானகம் சென்றன. அதனை அறிந்த பாண்டியன் மாணிக்கவாசகரை வைகையாற்றில் சுடுமணலில் நிறுத்தினார். இறைவன் வைகையாற்றில் வெள்ளப்பெருக்கை ஏற்படுத்தினார். இவ்வாறு இயற்கைச் செய்திகளைப் பாடல்களில் ஆங்காங்கே பதிவு செய்துள்ளார்

மாணிக்கவாசகர். ‘தனியனேன் பெரும் பிறவிப் பவ்வத்து’ என்று தொடங்கும் பாடலில் பிறவியாகிய கடல், துன்பங்களாகிய அலைகள், வெவ்வாய்ப் பெண்டிராகிய காற்று, காமமாகிய சுறாமீன், அஞ்செழுத்தாகிய புணை, முத்தியாகிய கரை என்று மிகப் பொருத்தமாக உருவகம் செய்துள்ளமை காணலாம்.”[57]

**திருமூலர்**

மனிதன் மனத்தால் உயருகிறான், உயிர் தம்மனுபவங்களைத் தானே வினாவி, தானே வினாவிடை கண்டும் தம்மளவில் அமைதியுறும். அதனை உலகினோர்க்கு உணர்த்த வேண்டும் என்ற உள்ளம் படைத்த உயர்ந்தோர் சொல்லியுங்காட்டுவார், என்பது திருமூலரின் கருத்து.

**“வாழையும் சுரையும் வந்திடங் கொண்டது**
**வாழைக்குஞ் சூரை வலிது வலிதென்பர்**
**வாழையுஞ் சூரையை வன்றுண்டஞ் செய்திட்டு**
**வாழை யிடங்கொண்டு வாழ்கின்ற வாறே”[58]**

இதனுள் வாழை – சிவானுபம், சூரை – உலகானுபவம் வினைக்கீடான உலகத்து நுகர்ச்சியை நீக்கினால் வாழை வளரும் வாழவைக்கும் என்ற கருத்தை உணர்த்துகிறார்.

**“தேனுக்குள் இன்பம் சிவப்போ கறுப்போ**
**வானுக்குள் ஈசனைத் தேடும் மதியிலியீர்**
**தேனுக்குள் இன்பம் செறிந்திருந்தாற்போல்**
**ஊனுக்குள் ஈசன் ஒளிந்திருந்தானே”[59]**

தேனுக்கு முக்கியம் சுவைதான். நிறம் அல்ல. அதுபோல உனக்குள்ளே ஈசன் ஒளிந்திருக்கின்றான் என இயற்கையின் எதார்த்த நிலையினைத் திருமூலர் தத்துவமாகப் பாடியுள்ளார்.

**ஆழ்வார் பாடல்களில் இயற்கை**

பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகியோரின் பாடல்களிலும் இயற்கை எழில் நன்கு இயம்பப்பெறுகிறது. அந்தக் காட்சிகள் பெரும்பாலும் திருவேங்கடத்தைச் சுற்றியே அமைகின்றன.

**பொய்கையாழ்வார்**

பொய்கையாழ்வாரின் கற்பனைத்திறன் அளவிற்கு அதிகமானது. அவருடைய முதல் பாடலே இயற்கையை இறைவனாகக் கண்டு பாடப்பட்டது.

**வையம் தகளியா வார்கடலே நெய்யா**
**வெய்ய கதிரோன் விளக்காக செய்ய**
**சுடராழியானடிக்கே சூட்டினேன் சொல்மாலை**
**இடராழி நீக்குகவே என்று (நா.தி.பி.பா. 2082)**

பூமியை அகலாமலும் அதைச் சுற்றியுள்ள கடலே நெய்யாகவும் வெப்ப கிரகங்களை வீசும் சூரியனே தீச் சுடராகவும் வைத்து அழகிய ஒளி வீசும் சுதர்சனத்தைத் தரித்திருக்கும் எம்பெருமானது திருப்பாதங்களில் விளக்காக ஏற்றினேன். இறைவா! உனக்காக நான் செய்யும் தொண்டில் தடையேதும் வராது என்னைக் காத்தருளுவாயாக எனப் பொய்கையாழ்வார் முதற்திருவத்தாதியின் முதல் பாடலில் இயற்கையை விளக்காக ஏற்றி எம்பெருமானுக்குச் சமர்ப்பித்திருக்கிறார்.

**பூதத்தாழ்வார்**

திருமாலின் எண்ணம் பூதம்போல் அழுத்தியதால் பூதத்தாழ்வார் எனப் பெயர் பெற்றார். பொய்கை ஆழ்வாரைப் போல இவர் ஞானச் சுடர்விளக்கு ஏற்றுகிறார். அன்பை அகலாகவும், ஆர்வத்தை நெய்யாகவும் மனத்தை திரியாகவும் வைத்து நாராயணனுக்கு விளக்கு ஏற்றுகின்றார்.

**அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக**
**இன்புருகு சிந்தை இடுதிரியா நன்புருகி**

**ஞானச் சுடர்விளக் கேற்றினேன் நாரணற்கு**

**ஞானத் தமிழ் புரிந்த நான் (நா.தி.பி.பா. 2182)**

என்று பாடுகிறார்.

**பேயாழ்வார்**

பேயாழ்வார், பூதத்தாழ்வார், பொய்கையாழ்வார் மூவரையும் முதலாழ்வார்கள் எனக் குறிப்பிடுகின்றார்கள். இம்மூவரும் ஒரே நாளில் ஒரே நேரத்தில் திருமாலால் ஆட்கொள்ளப்பட்டவர்கள். இவர் இறைவன் தான் மூலக்கடவுள் உலகில் எல்லாமாகவும் திருமால் விளங்குகிறார். பஞ்சபூதங்களாக இருக்கும் திருமாலை வழிபடும்படி தம் நெஞ்சுக்குக் கூறுகின்றார்.

**வருங்கா லிருநிலனும் மால்விசும்பும் காற்றும்**

**நெருங்குதீ நீருருவுமானான் பொருந்தும்**

**சுடராழி ஒன்றுடையான் சூழ்கழலே நாளும்**

**தொடராழி நெஞ்சே தொழுது (நா.தி.பி.பா. 2305)**

என்கிறார்.

**திருமழிசை ஆழ்வார்**

ஆழ்வார் உலகிலுள்ள புறநிலைகள் அனைத்தும் இறைவனால் படைக்கப்பட்டவை என்கிறார்.

**வானுலாவு தீவளி மாகடல் மாபொருப்பு**

**தானுலவு வெங்கதிரும் தண்மதியும் — மேல்நிலவு**

**கொண்டல் பெயரும் திசையெட்டும் சூழ்ச்சியும்**

**அண்டம் திருமால் அகைப்பு (நா.தி.பி.பா. 2418)**

ஆகாயமும், நெருப்பும், காற்றும், கடலும், மலைகளும், சஞ்சரிக்கும் சூரியனும், குளிர்ச்சியான சந்திரனும், வானில் உலாவரும் மேகங்களும், எட்டுத்திசைகளும்,

உயிர்களும், கடல்களும் என அனைத்து இயற்கையும் இறைவனால் படைக்கப்பட்டவை எனக் கூறுகிறார்.

**நம்மாழ்வார்**

நம்மாழ்வார் இயற்கை நிகழ்வுகளைத் தம் பாடல்களில் பதிவு செய்துள்ளார்.

**பின் துரக்கும் காற்றிழந்த சூல்கொண்டல் பேர்ந்தும்போய்**
**வன்திரைக் கண் வந்தணைந்த வாய்மைத்தே (நா.தி.பி.பா. 2647)**

சமுத்திரத்திலுள்ள நீரை அள்ளிக் கொண்டு போய் கருத்து சூல் கொண்டுள்ள கார்மேகத்தைக் காற்று ஓரிடத்தில் நிற்க விடாது அடித்துக் கொண்டு போகிறது. இறுதியில் காற்று அயர்ந்து ஓரிடத்தில் விட்டு விடுகிறது. கார்மேகமானது அங்கு மழையாகப் பொழிகின்றது என மழையின் அழகை நயம்படப் பாடியுள்ளார் ஆழ்வார்.

**பெரியாழ்வார்**

பெரியாழ்வார் திருமால் எழுந்தருளியிருக்கின்ற திருத்தலங்களின் பெருமைகளையும் அங்குள்ள இயற்கை நிகழ்வுகளையும் பாடியுள்ளார்.

**குன்றாடு கொழுமுகில்போல் குவளைகள் போல் குரைகடல் போல்**
**நின்றாடு கணமயில் போல் நிறமுடைய நெடுமால் ஊர்**
**குன்றூடு பொழில் நுழைந்து கொடியிடையார் முலையணவி**
**மன்றூடு தென்றல் உலாம் மதிள் அரங்கம் என்பதுவே**

**(நா.தி.பி.பா. 410)**

குன்றின் உச்சியிலுள்ள நீர் கொண்ட கார்மேகம் மனதைக் குளிர்விக்கின்றது. கருங்குவளை மலரிலே ருசியான தேன் இருக்கும். கடலின் நிறமே மனதை வசியப்படுத்தும். ஆடும் மயிலின் வார்த்தையை வர்ணிக்க வார்த்தையே இல்லை எனத் திருவரங்கத்தின் இயற்கை அழகினைப் பதிவு செய்துள்ளார்.

**ஆண்டாள்**

இயற்கை வருணனை இவரது பாசுரங்களில் சிறப்பாக இடம்பெற்றுள்ளது.

**கனைத்திளங் கற்றெருமை கன்றுக் கிரங்கி**

**நினைத்து முலைவழியே நின்று பால்சோர (நா.தி.பி.பா. 485)**

கன்றை ஈன்று சில நாட்களே ஆன எருமைகள் கன்றுகளை நினைத்து மனம் இரங்க, முலைக்காம்புகள் வழியே பால் வழிகின்றது. அதனால் வீடுமுழுவதும் நனைந்து சேறாகியுள்ளது. பால் கறக்கும் பாத்திரங்கள் பொங்கி வழியும்படி இடைவிடாமல் பாலைச் சொரியும் வள்ளலான பெரும் பசுக்களைக் கொண்ட நந்தகோபனின் மகன் இல்லம் என இப்பாடலில் பசுக்களின் நிலையினைச் சுட்டியுள்ளார். ஆண்டாள் பாடல்களில் உருவகமாவும், உவமையாகவும் கார்மேகம், கிளி, குயில், மலர்கள் போன்ற இயற்கைச் செய்திகள் இடம் பெற்றுள்ளன.

**குலசேகர ஆழ்வார்**

ஆழ்வார் திருமால் வீற்றிருக்கும் திருப்பதியிலே தானும் இருக்க வேண்டும் என்ற எண்ணமுடையவராக உள்ளார்.

**தேனார் பூஞ்சோலைத் திருவேங்கடச் சுனையில்**

**மீனாய்ப் பிறக்கும் விதியுடையே னாவேனே (நா.தி.பி.பா. 678)**

தேன் சுரக்கும் பூக்கள் நிறைந்த அழகிய சோலையில் உள்ள சுனையில் ஒரு மீனாய்ப் பிறக்கும் பாக்கியம் கிடைத்தால் போதும் என இயற்கையோடு ஒன்றிவிடுகிறார்.

**திருமங்கையாழ்வார்**

ஆழ்வார் பாடல்களில் பறவைகள், விலங்குகள், சோலைகள், தாவரங்கள், ஐம்பூதங்கள் என அனைத்து இயற்கைச் செய்திகளும் இடம் பெற்றுள்ளன.

**வரை செய்மாக்களிறு இளவெதிர் வளர்முளை**
**அளைமிகு தேன் தோய்த்து**
**பிரசவாரி தன்னிளம் பிடிக்கும் அருள் செய்யும்**
**பிருதி சென்றடை நெஞ்சே (நா.தி.பி.பா. 962)**

இமயப் பனிமலையில் மலை போன்ற பெரிய ஆண் யானை, இளைய மூங்கிலை வளைத்து முளைகளைப் பிடுங்கி, தேன் கூட்டிலுள்ள தேனில் தோய்த்து, தன் இளம் பெண் யானைக்குக் கோது தட்டாதபடி வாயில் பிழியும் இயற்கைக் காட்சியினை அழகாகப் படம் பிடித்துக் காட்டியுள்ளார்.

ஆழ்வார்களின் பாசுரங்களில், இயற்கை குறித்த செய்திகள் இறைவனின் பெருமை கூறும் வகையில் இடம்பெற்றுள்ளன. இவர்கள் இயற்கை வருணனையை முன் இரண்டு அடிகளிலும் இறைவனின் பெருமையைப் பின் இரண்டு அடிகளிலும் பாடியுள்ளனர். கடலின் அருகே உள்ள குளத்திலே தாழை மடல் விரிந்து அதன் நிழல், நீரில் குருவி போன்று தோற்றமளிக்கின்றது. அதனை குருகென அஞ்சி கெண்டை மீன் தன்னை தாமரைப் பூவினுள்ளே மறைத்துக் கொள்கிறது. இதனைக் கண்ணுற்ற கடல் முத்துக்கள் நகைக்கின்றன என இயற்கையைக் கண்டு இயற்கையே அஞ்சியும், நகைத்தும் இருக்கின்றது எனக் கவிஞன் தான் கண்ட காட்சிகளுக்கு ஏற்றம் கொடுத்துப் பாடுகின்றார். இவற்றால் இயற்கையைப் பாடாத கவிஞன் இல்லை. இயற்கை இல்லாது இலக்கியம் இல்லை என்பது புலனாகிறது.

### இயற்கையைப் பாடிய இருபதாம் நூற்றாண்டுக் கவிஞர்கள்

இயற்கையின்றி மாந்தர் வாழவில்லை. இயற்கையன்னையின் பேரெழிலை, அருமை பெருமைகளைப் பற்றி பாடும் வழக்கம் காலம்காலமாய்த் தொடர்கிறது. இயற்கையைப் பற்றிப் பாடாத கவிஞர்களே இல்லை. இயற்கையைப் பாடாத இலக்கியமுமில்லை. அவ்வகையில் இருபதாம் நூற்றாண்டுக் கவிஞர்களும் தம் கவிதைகளில் இயற்கையைப் பாடியுள்ளனர்.

**பாரதியார்**

“பாரதியின் ஞானக் கருத்தையும் தத்துவத்தையும் உலகம் உணரத் துணைபுரிவது, புதுவையிலிருந்து அவர் படைத்த ‘குயில்பாட்டு’ எனும் கவிதை நூல். அந்நூலில் புதுவைக் கடற்கரையிலிருந்து கதிரவனின் காட்சியைக் கண்டு, இன்பத்தில் ஆழ்ந்த பாரதி,

> **“காலையிளம் பரிதி வீசுங் கதிர்களிலே**
> **நீலக்கடலோர் நெருப்பெதிரே சேர்மணிபோல்**
> **மோகனமாஞ் சோதி பொருந்தி”**

என்று காலைக் காட்சியைப் புதுமையாய்ச் சித்திரித்துள்ளார். ஞாயிறு தோன்றியதும் இருள்மறையும், இந்நிகழ்வினைப் பாரதி,

> **“ஞாயிறே, இருளை என்ன செய்துவிட்டாய்?**
> **ஓட்டினாயா? கொன்றாயா? விழுங்கிவிட்டாயா?”**[60]

என்று புதுமையான முறையில் இயற்கையைப் பதிவுசெய்துள்ளார்.

**பாரதிதாசன்**

முண்டாசுக் கவிஞர் பாரதியிடம் பேரன்பு கொண்ட பாரதிதாசனும் இயற்கை இன்பத்தில் ஈடுபாடு கொண்டவர். **‘நீலவான் ஆடைக்குள் உடல் மறைத்து, நிலாவென்று காட்டுகிறாய் ஒளிமுகத்தை’** என்னும் பாடலில் நிலவைப் பெண்ணாக உருவகித்துப் பாடி, நிலவுப் பாவலர்களில் ‘தமக்கு நிகர் தாமே’ என்று புகழும்படியாய்த் திகழ்பவர். இவரின் **அழகின் சிரிப்பு** இயற்கை வர்னணைக்குச் சான்றாக விளங்குகிறது.

மனித இனம் சாதி, மதம், இன வேறுபாடுகளில் சிக்கித் தவிக்கிறது. ஆறறிவு பெற்ற மனிதனிடம் இல்லாத ஒற்றுமை, அஃறிணை உயிராகிய

பறவைகளிடம் இருப்பதை, புறாக்கள் இரையுண்ணும் ஓர் இயற்கைக் காட்சியின் வாயிலாக எடுத்துரைக்கின்றார்.

**இட்டதோர் தாம ரைப்பூ**
**இதழ்விரிந் திருத்தல் போலே**
**வட்டமாய்ப் புறாக்கள் கூடி**
**இரையுண்ணும் அவற்றின் வாழ்வில்**
**வெட்டில்லை, குத்து மில்லை,**
**வேறுவே றிருந்த ருந்தும்**
**கட்டில்லை, கீழ்மேல் என்னும்**
**கண்மூடி வழக்க மில்லை**

என மலர்ந்திருக்கும் தாமரை மலர் போல் வட்டமாய்ப் புறாக்கள் இருந்து இரையுண்ணும் காட்சியினைப் பதிவுசெய்துள்ளார்.

எத்தனை கோடி இன்பம் வைத்தாய்! இறைவா! என்று வியந்த பாரதி தொடங்கிப் பாவேந்தர், திரு.வி.க, வாணிதாசனார், தங்கப்பா, க.பொ. இளம்வழுதி, அரிமதி, தென்னகன், தி.கல்லாடன், வ.கலியபெருமாள், பாரதிவசந்தன் முதலியோர் இயற்கையின் எழிலைப் பாடி இன்றைய சமுதாயத்தினருக்குப் புத்துணர்வூட்டி வருகின்றனர்.''[63]

ஒவ்வொரு காலகட்டத்திற்கும் ஏற்ப கவிஞர்கள் இயற்கையைக் கையாண்டுள்ளனர். இலக்கியங்களில் சங்ககால மக்களின் வாழ்வியலை இயற்கையின் வழியே அழகாகப் படம் பிடித்துக்காட்டியுள்ளனர். பக்தி இலக்கியத்தில் இயற்கையின் வழியே பக்தியை வெளிப்படுத்தியுள்ளனர். இருபதாம் நூற்றாண்டுக் கவிதைகளில் இயற்கையின் வழியே சமூகச்சிந்தனையை வெளிப்படுத்தியுள்ளனர். ஒவ்வொரு காலகட்டத்திலும் இயற்கையைப் பயன்படுத்தும் முறையும் மாறிக்கொண்டே வருகிறது.

இலக்கியங்களில் இயற்கை பலவிதப் பொருண்மைகளின் கீழ் பயன்படுத்தப்பட்டுள்ளது. சங்க இலக்கியங்களில் தலைவன் தலைவியின்

உணர்வுகளை வெளிப்படுத்தும் சூழ்நிலையில் இயற்கை நிகழ்வுகளைப் பதிவு செய்துள்ளனர். காப்பியங்களில் இயற்கை காப்பியச் சுவையை அளிக்கிறது. பக்தி இலக்கியத்தில் பக்தியினை வெளிப்படுத்த இயற்கையைக் களமாக எடுத்துக் கொண்டு பக்தியை வெளிப்படுத்தியுள்ளனர். இவ்வாறு காலந்தோறும் தோன்றும் அனைத்து இலக்கியங்களிலும் பாடுபொருளாக இயற்கை விளங்குகிறது. அவ்வகையில் நாலாயிரத் திவ்விய பிரபந்தம் சிறப்பிடம் பெறுகிறது.

**நாலாயிரத் திவ்விய பிரபந்தத் தோற்ற வரலாறு**

**நாதமுனிகளின் அவதாரம்**

சங்கு இனங்கள் முத்துக்களை உமிழும் அழகிய காவேரியாற்றின் கரையில் வீரநாராயணபுரம் என்னும் திருப்பதி ஒன்று உண்டு. அங்கே பூத்துக்குலுங்கும் பொய்கையில் புதிய மலர்களிலிருந்து தேன் பெருக அதனை வண்டுகள் உண்டு பாடும் இன்னிசையும், மறையவர்கள் இல்லம்தோறும் ஓதும் வேத ஒலியும் என்றும் எங்கும் கேட்கும். அவ்வூரில் பல கலைகளையும் கற்றுனர்ந்த மறையவர்கள் இருந்தனர். அவர்கள் எம்பெருமானிடத்தில் பேரன்பு வாய்ந்தவர்களாக விளங்கினர். அவர்களுள் சொட்டைக்குலம் என்னும் ஓர் இனத்தைச் சார்ந்த ஈச்சுவரமுனிகள் என்பார், தென்மொழி, வடமொழி என்னும் இரு மொழிகளிலுள்ள பல கலைகளையும் கற்றுணர்ந்து மறையவர்களுள் சிறந்து விளங்கினார். அவருக்கு ஒரு மைந்தன் அவதரித்தார். ஈச்சுவரமுனிவர் தம் மைந்தனுக்கு நாதமுனிகள் எனப் பெயரிட்டார். அவரும் தென்மொழி, வடமொழிக் கலைகள் அனைத்தையும் கற்றுணர்ந்து திருமகள் நாதன்பால் நீங்காத அன்புகொண்டிருந்தார். அவரை அனைவரும் இவர் உலகு உய்யத் தோன்றிய பெரியோர் ஆவார் எனப் போற்றினர். அவருக்கு ஒரு மைந்தன் தோன்றினார். அவருக்கு, தனது தந்தையின் பெயரான ஈச்சுவரமுனிகள் என்ற திருநாமத்தையே சூட்டினார். அவரும் தென்மொழி, வடமொழி கற்றுணர்ந்து சிறந்த அறிஞராய் விளங்கினார். ஒரு மெல்லியலாரை மணந்து இல்லறத்தை இனிதே நடத்துவாராயினர்.

**நாதமுனிகள் வடநாட்டுப் பதிகளுக்குச் சென்று மீண்டும் வருதல்**

நாதமுனிகள் தம் தந்தையுடனும், மைந்தனுடனும் சேர்ந்து திருமாலுக்குத் தொண்டுகள் புரிந்து வந்தனர். அவர் எம்பெருமானின் திருத்தலங்களுக்குச் சென்று தரிசிக்க விரும்பினார். நாதமுனிகள் மன்னனாரிடம் தனது விருப்பத்தைத் தெரிவித்தார். மன்னனாரும் அருச்சகர் மூலமாக நாதமுனிகளுக்கு விடையளித்தார். நாதமுனிகள் தம்குடும்பத்தாருடன் புறப்பட்டுச் சென்று வடமதுரை, சாளக்கிராமம், துவரை, அயோத்தி, வதரி முதலிய திருப்பதிகளுக்குச் சென்று திருமகள் நாதனை வணங்கினர். பின் கண்ணன் களிப்புற்று ஆடிப்பாடிய யமுனைக்குச் சென்று யமுனைத் துறைவனை வணங்கி, அங்கேயே தங்கி, தன் குடும்பத்துடன் யமுனைத் துறைவனுக்குத் தொண்டுகள் புரிந்தார்.

ஒருநாள் மன்னனார், நாதமுனிகள் கனவில் தோன்றி மீண்டும் நம்முடைய வீரநாராயணபுரத்திற்கு வருமாறு பணித்தார். நாதமுனிகளும் யமுனைத் துறைவனை வணங்கித் தன்குடும்பத்துடன் புறப்பட்டு சகந்நாதம், சிங்கவேள் குன்றம், அகோபிலம், திருவேங்கடம், திருக்கடிகை, திருப்புட்குழி, திருக்கச்சி, திருவயிந்திரபுரம், திருக்கோவலூர், திருவரங்கம், திருக்குடந்தை முதலிய திருப்பதிகளுக்கெல்லாம் சென்று இறைவனை வணங்கி, பின்னர் வீராநாராயணபுரத்தை அடைந்து மன்னனாரை வணங்கினார்.

**நாதமுனிகள், ஆழ்வாரிடத்து நாலாயிரத்தைப் பெறுதல்**

நாதமுனிகள் மன்னனாருக்குத் தொண்டு செய்கையில் மேலைநாட்டிலிருந்து வைணவர் இருவர் மன்னனாரை வணங்கி 'ஆரா அமுதே அடியேன் உடலம் நின்பால் அன்பாயே' எனத் தொடங்கும் திருவாய்மொழியின் பதினொரு பாசுரங்களையும் ஓதி மன்னனாரை வணங்கினர். அப்போது நாதமுனிகள் அவர்களை வணங்கி திருமாலின் அடியீரே, நீங்கள் ஓதிய பாசுரங்களுள் ஒன்றான ஈற்றுப் பாசுரத்தில் ஆயிரத்துள் இப்பத்தும் என்பது காணப்படுதலின், இவை ஆயிரம் பாசுரங்களைக் கொண்ட ஒரு பிரபந்தத்தைச் சேர்ந்தவை என்பது புலனாகிறது. அப்பிரபந்தம் உங்களுக்கு முற்றும் வருமோ என்று கேட்டார்.

அன்பரே நாங்கள் அறிந்தவை இப்பதினொரு பாசுரங்கள் மட்டுமே என்றனர். இதனை முற்றும் அறிந்தவர் எவரும் உளரோ என வினாவினார். பெரியீர் எங்களுக்கு இப்பதினொரு பாசுரங்கள் மட்டுமே வரும், மற்றவர்களுக்கு அதுவும் தெரியாது என்றனர்.

நாதமுனிகள் பலவாறு சிந்தித்து இப்பாசுரம் சீசடகோபர் அவதரித்த திருக்குருகூர் நகரில் இருத்தல் வேண்டும் எனக் கருதி, ஆழ்வார் திருநகருக்குச் சென்று, ஆழ்வாரை வணங்கி விட்டு, அப்பகுதியில் உள்ள சிலரை வினாவினார். அன்புடைய பெரியோர் எங்களுக்கு அப்பிரபந்தம் பற்றி ஒன்றும் தெரியாது. பாராங்குசதாசர் என்னும் பெரியவர் ஒருவர் இருக்கிறார். அவரிடம்சென்றால் அப்பிரபந்தம் பற்றி அறிதல் கூடும் என்று அவர் இருப்பிடத்தைத் தெரிவித்தனர். நாதமுனிகள் அப்பெரியவரிடம் சென்று வணங்கி சீசடகோபர் அருளிய பிரபந்தத்தின் ஏடுகள் இங்கு உள்ளதா என வினாவினார். அவர் நாதமுனிகளை நோக்கி அன்பரே அப்பிரபந்தம் மறைந்து வெகுநாட்கள் ஆகிவிட்டன. அதனை அருளிய சீசடகோபருடைய சீடனான மதுரகவிகள் அவரைப் பற்றி பாடிய பதினொரு பாசுரங்களை கொண்ட கண்ணிநுண் சிறுத்தாம்பு என்னும் பிரபந்தம் ஒன்று உள்ளது. அதனை ஆழ்வார் திருமுன் சென்று ஒன்றிய மனதாய் இப்பாசுரத்தை பன்னீராயிரம் முறை பாடுபவர்களுக்கு ஆழ்வார் தோன்றி அருள்வார் என்று கூறி அப்பிரபந்தத்தை நாதமுனிகளுக்கு அருளினார்.

நாதமுனிகள் அப்பிரபந்தத்தைப் பெற்றுக் கொண்டு ஆழ்வார் வீற்றிருந்த திருப்புளிஅடியில் இருந்து கண்ணிநுண் சிறுதாம்பு என்னும் பிரபந்தத்தினை அன்புடன் பன்னீராயிரம் முறை கூறினார். அவருக்கு முன் ஞானதேசிகராய் ஆழ்வார் தேன் நிறைந்த மகிழமலர்த் தொடை, திருப்புயத்தில் இலங்கச், சிரத்தில் திருமுடி பொலிய, ஒளிவிடும் குண்டலங்கள் காதுகளில் திகழ, குளிர்ச்சியோடு கூடிய செந்தாமரை மலரை ஒப்ப திருமுகச் சோதியாய், முத்திரை திருக்கையோடு தோன்றி நாதமுனிவரை நோக்கி அன்பில் சிறந்த அருட்குணச் செல்வரே உம்முடைய நெஞ்சில் நம்மையே கருதி துதித்துக் கொண்டிருந்ததன் காரணம் யாது உரைப்பீர் எனக் கேட்க, நாதமுனிகள் ஆழ்வாரை வணங்கி நின்று தாங்கள் அருளிச்செயலைப் பெற வேண்டும் என்னும் விருப்பத்தின் காரணமே என்றார்.

ஆழ்வாரும் நாதமுனிகளை அன்புடன் நோக்கி, திருமகள் நாதன் தமக்கு மயர்வற மதிநலம் அருளினாற் போல அவருக்கு மெய்ஞ்ஞானக் கண்ணை அளித்தருளித் தாம் அருளிச்செய்த திருவாய்மொழி, திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி என்னும் நான்கு பாசுரங்களையும், பொய்கையார், பூதத்தார், பேயார், திருமழிசையார், குலசேகரர், பெரியாழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார், திருப்பாணர், திருமங்கை மன்னர், கோதைநாச்சியார் என்பவர்கள் அருளிச்செய்த பிரபந்தங்களையும் திருமந்திரத்தையும் மற்றும் உள்ள நுற்பாக்களின் அரும்பொருட்களையும் திருவாய் மலர்ந்தருளி அட்டாங்க யோகத்தின் நுட்பங்களையும் கூறினார்.

நாதமுனிகள் ஆழ்வாரை வணங்கி விடைபெற்றார். அங்கேயே சிறிது காலம் தங்கினார். வீரநாராயணபுரத்தில் எழுந்தருளியுள்ள மன்னனார் நாதமுனிகள் கனவில் தோன்றி அன்பனே நீ பெற்ற நாலாயிரத்தை என்முன் வந்து கூறுவாயாக என்று அருளினார். நாதமுனிவரும் வீராநாராயணபுரம் சென்று மன்னனாரிடம் பணிந்தருளியபடி அவர் திருமுன் நின்று நாலாயிரத்தையும் ஒருமனதாகக் கூறினார். மன்னனாரும் மகிழ்ச்சியுடையவராக நாதமுனிவர் கனவில் தோன்றி அன்பனே நீ இவற்றை இயற்றமிழுக்கு உரிய வகையில் வகுத்து அவற்றிற்கு இசையும் அமைத்திடுக என்று உரைத்தார். நாதமுனிகள் தங்களுடைய மருமக்களும் இசையில் வல்லவர்களும் ஆகிய கீழையகத்தாழ்வார், மேலையகத்தாழ்வார் என்பவர்களை அழைத்து மன்னனாரின் கட்டளையைத் தெரிவித்தார். வேதவியாசகர் வேதத்தை நான்காக வகுத்து அவற்றிற்கு உதாத்தம், அநுதாத்தம் முதலிய உச்சரிப்பு முறைகளையும் அமைத்தாற்போல, நாலாயிரத்தை முதலாயிரம், பெரியதிருமொழி, இயற்பா, திருவாய்மொழி என்னும் நான்கு பகுதிகளாக வகுத்து அவற்றிற்குத் தேவகானத்தை அமைத்து அவற்றைத் தம்முடைய மருமக்களைக் கொண்டு பாடும் படிச் செய்தார். அதனால் நாலாயிரம் உலகில் பரவிற்று.

### நாதமுனிகள் ஒரு பொது மகளுக்கு உற்ற குறையை ஒழித்தருளல்

தேவகானம் வல்லாள் ஒரு பொது மகளும், மானிடகானம் வல்லாள் ஒருபொது மகளும் தத்தம் இசை சிறந்தது எனக் கூறி, சோழமன்னன்பால் தங்கள்

பிணக்கத்தைத் தீர்த்துக்கொள்ள வந்தனர். மன்னரும் இசையில் வல்லவர்களைச் சபையில் கூட்டி அவர்கள் முன் இருவரையும் பாடச் செய்தனர். அவர்கள் மானிடகானம் பாடும் மங்கையே சிறப்புடையவள் என்று உரைத்தனர். மன்னரும் அவளுக்குப் பரிசுகளை வழங்கினார். தேவகானம் பாடும் மங்கை என் பாடலைத் தேவர்கள் அறிவார்களே தவிர மானிடர்கள் அறியமாட்டார் எனக் கூறி, திருதலங்கள்தோறும் சென்று பாடினார். வீரநாராயணபுரத்தில் மன்னனார் முன் சென்று பாடிய பொழுது அதனைக் கேட்ட நாதமுனிகள் அப்பெண்ணைப் பாராட்டினார்.

தேவகானம் பாடும் மங்கை சோழமன்னன்பால் சென்று தேவகானம் அறிந்த வல்லார் ஒருவர் வீரநாராயணபுரத்தில் உள்ளார். அவர் நாதமுனிகள் என்னும் பெயருடையவர் என்று கூறினார். சோழமன்னர் நாதமுனிகளைச் சபைக்கு வரும்படி அழைத்தார். நாதமுனிகளும் மன்னரிடம் சென்றார். மன்னர் அவரை வணங்கி இருக்கையில் அமரச்செய்து இப்பெண்ணின் தேவகானத்தை நீர் அறிவீரோ என்று கேட்டார். நாதமுனிகள் மானிடகானம் பாடும் பெண்ணையும், தேவகானம் பாடும் பெண்ணையும் பாடச் சொல்லிக் கேட்டார். இவள் பாடும் மானிடகானத்தை மக்கள் அறிவர். தேவகானத்தைத் தேவர்கள் அறிவார்கள் அன்றி மாந்தர்கள் அறியார் என்று உரைத்தார். தேவகானத்தைத் தேவர் அறிவார் என்பதை நாங்கள் அறிந்து கொள்வது எங்ஙனம் என்று கேட்டனர். நாதமுனிகள் நாலாயிரம் தாளங்களை ஒரே நேரத்தில் இசைக்கச்செய்து அவற்றின் ஓசையைக்கேட்டு இது இவ்வளவு எடையை உடையது என்பதைக் கூறினார். மன்னரும் அதன் எடையைச் சரிபார்த்தார், எடை சிறிதும் ஏறாமலும் குறையாமலும் இருந்தது. மன்னர் வியந்து அவர் திருவடிகளை வணங்கி, பொன்னும் பொருளும் பரிசாக வழங்கினார். நாதமுனிகள், நான் திருமால் நாதனின் திருவடிகள் அன்றி வேறு எதையும் விரும்பாதவன். எனவே இவை எனக்கு வேண்டாம் என்று மீண்டும் வீரநாராயணபுரத்திற்குச் சென்று மன்னனாரை நாள்தோறும் வணங்கினார்.

உய்யக்கொண்டார், குருகைக்காவலப்பன், நம்பி கருணாகரதாசர், ஏறுதிருவுடையார், திருக்கண்ணமங்கை ஆண்டான், வானமாலை தேவியாண்டான், உருப்பட்டூர் ஆச்சான் பிள்ளை, சோகத்தூர் ஆழ்வான் என்னும் எண்மர்

நாதமுனிகளின் திருவடிகளை வந்தடைந்தார்கள். நாதமுனிகள் அவர்களுக்கு மந்திரங்களுட் சிறந்ததாகிய துவயத்தின் பொருளைக் கூறியருளித் திருவாய் மொழி முதலிய திவ்யபிரபந்தங்களையும் அவர்கள் ஓதச்செய்து, திருமகள் நாதன்றன் கரிய கோலத் திருவுருவைத் தம்முடைய மணமலரில் அமைத்துக்கொண்டு யோகத்தில் எழுந்தருளியிருந்தார். இவ்வாறு நாலாயிரத் திவ்விய பிரபந்த தோற்ற வரலாறு வழங்குகிறது.

**பாசுரங்களின் தொகை**

''நாலாயிரத்தின் பாசுரத் தொகை

| | | |
|---|---|---|
| முதலாயிரம் | — | 947 |
| பெரிய திருமொழி | — | 1134 |
| திருவாய்மொழி | — | 1102 |
| இயற்பா | — | 593 |
| | | — — — |
| மொத்தம் | | 3776 |
| | | — — — |

என்றவாறு அமைகின்றது. இரு மடல்களையும் நீக்கினால் இத்தொகை 3774 என்றாகின்றது. இத்தொகை நாலாயிரத்திற்கு (4000 — 3774) 226 குறைகின்றது. வேதாந்த தேசிகர் தாம் இயற்றிய பிரபந்தசாரத்தில் இரு மடல்களையும் 118 பாசுரங்களாகவும் இராமாநுச நூற்றந்தாதிப் பாசுரங்கள் 108 — ம் சேர்த்து 226 என்ற தொகையாக்கி திவ்வியப்பிரபந்தம் 4000 பாசுரங்கள் என்ற கணக்கு நிறைவு பெறுகின்றது.''[62]

**ஆழ்வார்கள்**

''ஆழ்வார் என்னும் சொல்லுக்கு இறைமைக் குணங்களில் ஆழ்ந்து ஈடுபடுவோர் என்பது பொருள். வேறொன்றில் கண் வையாதே பகவத் குணங்களிலே ஆழங்காற் பட்டிருந்தமையால் இவர்களுக்கு ஆழ்வார்கள் என்று

பெயராயிற்று என்பர். பெரும்பாலோர் இவ்விளக்கத்தையே உடன்பட்டு ஏற்றுள்ளனர். ஆயினும் மு. இராகவையங்கார், இப்பெயர் வழக்கிற்குத் திவ்வியப் பிரபந்தங்களிற் பிரமாணங்காணப் பட்டில என்கிறார். அன்றியும் ஆழ்வார் என்று சாசனங்களிற் பயின்று வரும் வழக்கினை எடுத்துக்காட்டி ஆள் என்பதே ஆழ்வார் என்பதற்குப் பகுதியோ எனவும் ஐயுறுகின்றார். அவரது கருத்தினையொட்டி ஆழ்வார் என்பதை ஆள்வார் என்ற சொல்லின் திரிபாகக் கொண்டு நம்மை ஆள்பவர் என்று பொருள் சொல்வதுண்டு, இப்பொருளில் ஆழ்வார்கள் கடவுள் மீது மெய்யன்பு செலுத்தி நம்மை ஆளும் தலைவராகிறார்கள். சிவனடியார்களை நாயன்மார் எனக் குறிக்கும் சொல்லாட்சியும் தலைவர் என்று பொருள் தருவதே ஆகும். கடவுள் மீது மெய்யன்பு செலுத்தித் தலைவரானவர் என்றே அதற்கும் பொருள் கூறப்படுகிறது எனினும் ஆழ்வார் என்பதற்கு நாம் முதலில் குறித்தது போல இறைமைக் குணங்களில் ஈடுபட்டவர் என்று நேர்பொருள் காண்பதே பொருத்தமாகத் தோன்றும் என்கிறார் ம.பெ. சீனிவாசன்.''[63]

ஆழ்வார்கள் திருமால் ஒருவனே பரம்பொருள் என்று நிரூபணம் செய்தவர்கள், திருமாலிடமிருந்தே அனைத்துத் தெய்வங்களும் தேவதைகளும் தோன்றின என்ற கொள்கையுடையவர்கள். அவனே பரம்பொருள் என்று சரணடைந்தவர்கள் இதனால் திருமாலின்றி வேறு தெய்வம் தொழார். திருமாலின் திருநாமத்தை மறக்காது இருப்பவர்களையும் மறந்தும் கூட பிற தெய்வத்தைத் தொழாமல் இருப்பவர்களை எமன் கூட வணங்கி செல்வான் என்கின்றனர்.

கலியுகத்தில் இறைவனது திருநாமங்களை ஓதுவது ஒன்றே, அவனை எளிதான முறையில் அடைவதற்குரிய வழியாகும் என்பதை உபதேசித்தவர்கள் ஆழ்வார்கள். ஆழ்வார்கள் சிலர் துவாரபரயுகத்திலும், சிலர் கலியுகத்திலும் அவதரித்துள்ளனர். காலம் மாறிய போதிலும் கருத்துக்கள் மாறவில்லை. ஆழ்வார்கள் அனைவரும் ஒரே மனதாக இறைவனின் இணையில்லாப் புகழினை இயன்றவரையில் பாடியுள்ளனர். இறைவனை அடையப் பல முயற்சிகள் செய்துள்ளார் பொய்கையாழ்வார்.

**நாவுடையேன், பூ உடையேன், நின் உள்ளிநின்றமையால்**

**கா அடியேன் பட்ட கடை (நா.தி.பி.பா. 2191)**

என்று துதிக்கின்றார் பூதத்தாழ்வார்.

**அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு**

**வடிவாய் நின்வல மார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு**

**வடிவார் சோதி வலத்துறையும் சுடர் ஆழியும் பல்லாண்டு**

**படைப்போர் புக்கு முழங்கும் அப்பாஞ்ச சன்னியமும் பல்லாண்டே**

**(நா.தி.பி.பா. 2)**

என்று தன்னைப் படைத்த இறைவனுக்குப் பல்லாண்டு பாடுகிறார் பொரியாழ்வார்

**நானுன்னை அன்றி இலேன் கண்டாய் நாராயணனே (நா.தி.பி.பா. 2388)**

என்று வணங்குகிறார் திருமழிசையாழ்வார்.

**பாரும் நீ, வானும்நீ, காலும் நீ, தீயும் நீ**

**நீரும் நீ, ஆய்நின்ற நீ (நா.தி.பி.பா. 2595)**

என்று ஐம்பெரும் பூதங்களாய்த் திகழும் இறைவனைப் பாடுகிறார் நம்மாழ்வார்.

**வாழக் கண்டோம் வந்து காண்மின் தொண்டீர்காள்**

**(நா.தி.பி.பா. 1800)**

என இறையன்பர்களை அழைத்துப் பாடுகிறார் திருமங்கையாழ்வார்.

இப்பாசுரங்கள் அனைத்தும் ஆழ்வார்கள் இறைவனிடத்துக் கொண்டிருந்த உண்மையான அன்பினை, பக்தியினை வெளிப்படுத்துகின்றன. திருமாலின் அருளைப் பெறுவதற்கு ஆழ்வார்கள் அருளிச்செய்த நாலாயிரத் திவ்விய பிரபந்தம் என்னும் இப்பாசுரங்களே உறுதுணையாகும்.

**பொய்கையாழ்வார்**

காஞ்சிநகரில் சித்தார்த்தி வருஷம் ஐப்பசி மாதத்தில் செவ்வாய்க்கிமையன்று திருவோண நட்சத்திரத்தில் பெருமானின் ஐம்படைகளில் ஒன்றாகிய பாஞ்சசன்நியம் என்னும் திருச்சங்கின் அம்சமாக அவதரித்தார். அவர் பொய்கையில் அவதரித்த காரணத்தால் பொய்கையார் எனச் சிறப்பிக்கப்பட்டார். பொய்கையார்,

**திருமாலை அல்லது தெய்வம் என்று ஏத்தேன்,**
**வருமாறு எம் மேல் வினை (நா.தி.பி.பா. 2145)**

என்றெல்லாம் திருமாலைப் பாடிப் பரவியவர். மேலும் அவர் மாலும் சிவனும் ஒன்று. மாலை வணங்குவோர் சிவனை வெறுக்க வேண்டாம். சிவனைத் தொழுவோர் அரியைப் பழிக்க வேண்டாம் என்று மக்களுக்குச் சொல்லிக் கொண்டும் திருமாலின் மீது ஆராக் காதல் கொண்டிருந்தார். இவருடைய காலம் கி.பி 7 — ஆம் நூற்றாண்டு.

**பூதத்தாழ்வார்**

மாமல்லபுரத்தில் ஒரு குருக்கத்தி மலரிலே (மாதவிப் பூவலிலே) ஐப்பசி மாதம் அவிட்ட நட்சத்திரத்தில் திருமாலின் ஐம்படைகளில் ஒன்றான கௌமோதலி என்னும் கதையின் அம்சமாக பூதத்தாழ்வார் அவதரித்தார். இவருடைய காலம் கி.பி.7ஆம் நூற்றாண்டு.

**பேயாழ்வார்**

சென்னை மயிலாப்பூரில் செவ்வல்லிப்பூ ஐப்பசி மாதம் வியாழக் கிழமையன்று சதய நட்சத்திரத்தில் திருமாலின் பஞ்ச படைகளில் ஒன்றான நாத்தகம் என்னும் வாளின் அம்சமாகப் பேயாழ்வார் தோன்றினார் இவருடைய காலம் கி.பி.7ஆம் நூற்றாண்டு.

இம்மூன்று ஆழ்வார்களையும் முதல் ஆழ்வார்கள் என்பர். இவர்கள் மூவரும் ஒரே நேரத்தில் திருக்கோவிலூரிலுள்ள இறைவனால் தடுத்தாட்கொள்ளப்பட்டனர்.

**திருமழிசையாழ்வார்**

தொண்டை நாட்டில் உள்ள திருமழிசையில் முனிவர் தம்பதியருக்கு தைத்திங்கள் மகம் நட்சத்திரத்தில் சுதர்சனம் என்னும் திருவாழியின் அம்சமாக, தசைப்பிண்டமாக திருமழிசையாழ்வார் அவதரித்தார். அந்தத் தம்பதியர் அந்தப் பிண்டத்தைப் பிரம்புப் புதரில் விட்டுச் சென்றனர். அப்போது திருமால் திருவருளால் அப்பிண்டம் ஒரு அழகான ஆண் குழந்தையாக மாறியது. பிரம்பு விற்கும் தம்பதியர் அக்குழந்தையை எடுத்துச் சென்று வளர்த்தனர். திருமழிசைப்பிரான் என்று பெயர் சூட்டினர். குழந்தை பால் உண்ணாது, நீர் கழிக்காது இருந்தது. அதனைக் கண்டு வருத்தமுற்றனர். நான்காவது சாதியில் பிறந்த ஒரு முதியவர் கொண்டுவந்த பாலைக் குழந்தை குடித்தது. அதைக் கண்டு தம்பதியர் மகிழ்ச்சியடைந்தனர். ஒரு நாள் குழந்தை குடித்தது போக பால் மீதம் இருந்தது. அந்தப் பாலை தம்பதியர் குடித்தனர். வயது முதிர்ந்த அந்த தம்பதியர் மீண்டும் இளமை பெற்றனர். அதன் விளைவாக அத்தம்பதியருக்கு ஆண் குழந்தை பிறந்தது. அக்குழந்தைக்குக் கணிக்கண்ணன் என்று பெயரிட்டனர். அக்குழந்தை கணிக்கண்ணன் திருமழிசைப் பிரானுக்குத் தோழனாகி, பிற்காலத்தில் அவருக்குச் சீடனாக விளங்கினார்.

திருமழிசை ஆழ்வாருக்கு ‘பக்திசாரர்’ என்னும் பெயரும் உண்டு. கோயில் பணியாளரான மூதாட்டி ஒருத்தி பணிபுரிய இயலாமல் தள்ளாடினாள். அவள் மீது மனமிரங்கிய திருமழிசை ஆழ்வார் திருமாலிடம் வேண்டி இளமை பெற உதவினார். இவருடைய காலம் கி.பி 7 – ஆம் நூற்றாண்டு.

**நம்மாழ்வார்**

ஆழ்வார் திருநகரி என்னும் திருக்குருகூரில் வைகாசி மாதம் பௌர்ணமி வெள்ளிக்கிழமையன்று விசாக நட்சத்திரத்தில் கடக லக்கனத்தில் சேனை முதல்வரின் அம்சமாக நம்மாழ்வார் அவதரித்தார். சிறுவயதிலேயே புளியமரத்தடியில் பதுமாசனம் இட்டு யோகத்தில் அமர்ந்தார் அந்தப் புளியமரத்தை ஆதிசேடனின் அவதாரம் என்றும், திருப்புளி ஆழ்வார் என்றும் அழைப்பர். குழந்தை முதலே யோகத்தில் இருந்து அசைவு தரும். காற்றாகிய சடம் என்னும் வாயுவைச்

சினந்து அடக்கியமையால் சடகோபர் எனவும், திருமாலே நம் சடகோபன் என அழைத்ததால் நம்மாழ்வார் எனவும், பிற சமயங்கள் என்னும் யானைகளுக்கு அங்குசமாகத் திகழ்ந்தமையால் பாராங்குசர் எனவும் தமிழ்மாறன் எனவும் சிறப்புடன் அழைக்கப்படுகிறார். இவருடைய காலம் கி.பி 9 — ஆம் நூற்றாண்டு.

## மதுரகவி ஆழ்வார்

பாண்டியநாட்டுத் திருக்கோளூரில் குமுதரென்னும் கணநாதரின் அம்சமாக ஈசுவர ஆண்டு சித்திரை மாதம் சித்திரை நட்சத்திரத்தில் அவதரித்தார் மதுரகவி ஆழ்வார். இவர் யோக நிலையிலிருந்த நம்மாழ்வாரைத் தனது ஞானாசிரியராக ஏற்றுக்கொண்டார். அது போல் நம்மாழ்வாரை மட்டுமே இறைவனாகக் கொண்டு இறைவன் மீது பாடல்கள் பாடாது நம்மாழ்வார் மீது பாடல் பாடியுள்ளார். பன்னிரு ஆழ்வார்களுள் இறைவனைப் பாடாது இறைத் தொண்டராகிய நம்மாழ்வாரைக் குருவாக ஏற்று அவர் மீது பாடல் பாடியவர் மதுரகவியாழ்வார் ஆவார். இவருடைய காலம் கி.பி 9 — ஆம் நூற்றாண்டு.

## குலசேகர ஆழ்வார்

கேரள மாநிலத்தில் கோழிக்கோடு என்ற பகுதியை ஆண்ட திடவிரன் என்னும் மன்னனின் மகனாக மாசித்திங்கள் புனர்ப்பூச நட்சத்திரத்தில் திருமாலின் மார்பிலுள்ள கௌத்துவமணியின் அம்சமாகத் தோன்றினார் குலசேகரஆழ்வார். இவர் திருமால் கதைகூறும் பாகவதர்கள் மீது அதிகப் பேரன்பு கொண்டவராக இருந்ததால் இதைப்பிடிக்காத சிலர் பாகவதர் திருமாலின் இரத்தின மாலையைத் திருடியதாகக் கூறினர். ஒரு குடத்தில் பாம்பை இட்டுப் பாகவதர் திருடியிருந்தால் அது என்னைக் கடிக்கட்டும் என்று கூறி, ஆழ்வார், குடத்தினுள் கைவிட்டார். பாம்பு கடிக்கவில்லை இதன் மூலம் பாகவதரின் சிறப்பையும் திருமாலின் பெருமையையும் வெளிப்படுத்தினார். திருமாலின் தொண்டர்களுக்கு பரிசோதிப்பதற்காகக் கூடித் தண்டனை வழங்கக் கூடாது என்று தானே தண்டனையை ஏற்று நிரூபித்துக் காட்டியவர். இவருடைய காலம் கி.பி 8 — ஆம் நூற்றாண்டு.

**பெரியாழ்வார்**

ஸ்ரீவில்லிப்புத்தூரில் வேயர் குலத்தில் ஆனி மாதம் சுவாதி நட்சத்திரத்தில் கருடனின் அம்சமாகப் பெரியாழ்வார் தோன்றினார். இவர் இயற்பெயர் விஷ்ணுசித்தர்; பட்டர்பிரான் எனவும் அழைப்பர். இவர் திருமாலுக்கு மலர்களால் அர்ச்சனை செய்து வணங்கியவர். திருமாலை, குழந்தையாகப் பாவித்து அவருக்குப் பிள்ளைத்தமிழ் பாடியவர். பிள்ளைத்தமிழ் இலக்கியத்தின் முன்னோடியாவார். இவருடைய காலம் கி.பி 9 – ஆம் நூற்றாண்டு.

**ஆண்டாள்**

பெரியாழ்வாரின் நந்தவனத்தில் துளசிச் செடிக்கு அருகில் ஆடித்திங்கள் பூரநட்சத்திரத்தில் பூமிப்பிராட்டியின் அம்சமாகத் தோன்றினார் கோதை நாச்சியார். இவர் பெரியாழ்வாரின் வளர்ப்பு மகள். இவர் திருமாலை காதலனாகக் கொண்டார். திருமாலுக்கு அணிவிக்கும் மாலையைத் தந்தைக்குத் தெரியாது தான் சூட்டி மகிழ்ந்தார். இதை அறிந்த பெரியாழ்வார் வேறு மாலை கட்டித் திருமாலுக்குச் சாத்த முனைந்தார். பெருமாள், பெரியாழ்வார் கனவில் தோன்றி ஆண்டாள் சூடிக் கொடுத்த மாலையே எமக்கு விருப்பம் எனக் கேட்டார். எனவே ஆண்டாள் சூடிக் கொடுத்த சுடர்க்கொடி எனவும், ஆண்டவனை ஆண்டதால் ஆண்டாள் எனவும் சிறப்பிக்கப்படுகின்றாள். திருமால் திருவரங்கத்தில் ஆண்டாளைத் தன்னுடன் ஏற்றுக் கொண்டார். இவருடைய காலம் கி.பி 9 – ஆம் நூற்றாண்டு.

**திருப்பாண் ஆழ்வார்**

திரிசிராம் – உறையூரில் திருமாலின் ஸ்ரீவத்சத்தின் அம்சமாகக் கார்த்திகை மாதம் ரோகிணி நட்சத்திரத்தில் ஓர் அந்தணர் அல்லாத தாழ்ந்த குலத்தில் பாணாழ்வார் தோன்றினார். இவர் காவிரிக் கரையில் இருந்தே கோபுரம் பார்த்து இசைபாடித் திருமாலை வழிபட்டார். பாணாழ்வார் காவிரிக் கரையிலே நிற்பதால் காவிரியே தீட்டுப்பட்டதாக எண்ணி அவரை அந்தணர்கள் கல்லால் அடித்தனர். அவர் நெற்றியில் பட்ட காயத்தால் திருமாலின் நெற்றியில் குருதி கொட்டியது. பாணரைத் தோளிலே சுமந்து வருமாறு லோகசாரங்களை எம்பிரான் பணித்தார்.

இறைவனைக் கோயிலினுள் நேரே கண்ட பாணாழ்வார் இறைவனின் அழகில் மனதைப் பறிகொடுத்தார். திருமாலை வணங்கி அமலனாதிபிரான் என்னும் பாசுரத்தைப் பாடினார். இவருடைய காலம் கி.பி 8 – ஆம் நூற்றாண்டு.

**தொண்டரடிப் பொடி ஆழ்வார்**

திருமண்டங்குடியில் ஆடித்திங்கள் கேட்டை நட்சத்திரத்தில் திருமாலின் வைஜெயந்தி என்னும் வனமாலையின் அம்சமாக, பாாப்பனருடைய மகனாகப் பிறந்தார் ஆழ்வார். இயற்பெயர் விப்ர நாராயணன். இவர் திருமணத்தில் விருப்பற்று எம்பெருமானுக்குக் கைங்கரியம் செய்வதையே பெரிதாக எண்ணினார். திருநந்தவனம் அமைத்து திருத்துழாய் மாலை முதலிய பல்வேறு பூ மாலைகளைச் செய்து அரங்க நாதருக்குச் சூட்டி மகிழ்ந்தார். இவர் 'தேவதேவி' என்ற விலைமாதரின் வலையில் சிக்கினார். 'பொன்வட்டில் கனவு' என்ற நிகழ்ச்சியை உண்டாக்கி எம்பெருமான் ஆழ்வாரை மீட்டார். தான் செய்த தவறுக்குக் கழுவாயாக அடியார்களின் ஸ்ரீ பாத தீர்த்தத்தை உட்கொண்டு தூய்மையானார் அடியார். அதன் காரணமாகத் தொண்டரடிப் பொடியாழ்வார் என்ற திருநாமம் பெற்றார். இவருடைய காலம் கி.பி 8 – ஆம் நூற்றாண்டு.

**திருமங்கையாழ்வார்**

சோழநாட்டில் உள்ள திருக்குறையலூரில் கள்ளர் குலத்தில் திருமாலின் 'சாரங்கம்' என்ற வில்லின் அம்சமாக கார்த்திகைத் திங்கள் கார்த்திகை நட்சத்திரத்தில் பிறந்தவர் திருமங்கையாழ்வார். இவர் பிறருக்கு காலன் போன்று இருந்ததால் பரகாலன் எனப்பட்டார். திருமங்கையாழ்வார் குறுநில மன்னனாக இருந்தார். குமுதவல்லி என்னும் பெண்ணைத் திருமணம் செய்து கொண்டார். மனைவியின் ஆசைப்படி வைணவ அடியவர்களுக்கு உணவு வழங்கினார். மன்னருக்குக் கட்ட வேண்டிய திறைப்பணத்தை இறைப் பணமாகவே கருதினார். அதற்காகச் சிறை சென்றார். அடியார்களுக்கு நன்மை புரிய வழிப்போக்கர்களிடம் கொள்ளை அடித்தார். ஒரு முறை திருமாலும் திருமகளும் வழிப்போக்கர்களாக வந்தனர். இலக்குமியின் கால் விரலணி உட்படக் கழற்றித் தூக்கும் போது தூக்க

முடியவில்லை. பின்னர் இறைவன் உணர்த்திய ஓம் நமோ நாராயணா என்னும் மந்திரத்தை ஓதினார். பின் இறைவனின் அருளைப் பெற்றார். பின்னர் நாகை பௌத்த விகாரங்களைக் கொள்ளையடித்து திருவரங்கத்தின் மூன்றாவது மதிலைக் கட்டி முடித்தார்.

பன்னிரு ஆழ்வார்களும் திருமாலுக்குக் கைங்கரியம் செய்வதையே தங்களது முழுப்பணியாகக் கொண்டவர்கள். திருமாலின் அருளை மக்களுக்குப் புரியவைத்து அவர்களை எம்பெருமானின் அடியவர்களாக்குவதே ஆழ்வார்களின் நோக்கமாக இருந்திருக்கிறது. இவருடைய காலம் கி.பி 8 – ஆம் நூற்றாண்டு.

**ஆழ்வார்கள் இறைவனிடத்து வேண்டுவன**

பிறவித் துன்பத்தினின்றும் நீங்கிப் பரமபதம் அடைதல் ஆழ்வார் விரும்பும் பயனே எனினும், இறைவனிடத்து நீங்கா அன்பும், அவனை வணங்குவதும், அவன் புகழ் பாடி மகிழ்வதுமே ஆழ்வார்களின் விருப்பம் என்பதை அவர்களின் பாசுரங்களே விளக்குகின்றன.

ஆழ்வார்கள் எந்தப் பயனும் கருதித் திருமாலிடம் அன்பு கொள்ளவில்லை. இயல்பாகவே அந்நிலையை அடைந்தவர்கள். அவர்கள் மோட்சத்தை அடைத்தாலும் சரி, சொர்க்கத்தை அடைந்தாலும் சரி, நரகத்தை அடைந்தாலும் சரி எதுவாயினும், எம்பெருமானை இடைவிடாது நினைந்து மகிழும் இன்பமே வேண்டும் என்கின்றனர். அந்த இன்பத்தை நான் எங்கிருந்தாலும் அடைவேன் என்பார் நம்மாழ்வார். இதனை,

**சிறப்பில் வீடு சுவர்க்கம் நரகம்**
**இறப்பில் எய்துக எய்தற்க யானும்**
**பிறப்புஇல் பலபிற விப்பெரு மானை**
**மறப்புஒன்று இன்றி என்றும் மகிழ்வேனே (நா.தி.பி.பா. 2995)**

என்னும் இப்பாடல் உணர்த்துகின்றது. இறைவனை நினைப்பது மட்டும் அன்றி, அவனுக்கு வேண்டிய தொண்டுகளையும் செய்ய விரும்புகின்றார் ஆழ்வார். இன்ன தொண்டு தான் என்று கிடையாது எதை வேண்டுமானாலும் செய்யவேண்டும்.

ஒரு சமயம் தொண்டு செய்வது, பின் விட்டுவிடுவது என்று நில்லாது வாழ்நாள் முழுவதும் தன்னால் முடிந்த தொண்டுகளைச் செய்து கொண்டே இருக்கவேன்டும் என்ற எண்ணமுடையவர்கள். அவ்வாறு செய்யும் தொண்டு என் விருப்பத்திற்காகச் செய்யக்கூடாது. அவன் விருப்பத்திற்காகச் செய்யவேண்டும்; அதனைக் கண்டு அவன் மகிழ்ச்சியடையவேண்டும்; அவனது மகிழ்ச்சியைக் காண்பதே பேரின்பமாகும் எனக் கூறுகின்றனர்.

**எனக்கே ஆட்செய் எக்காலத்தும் என்றுஎன்**
**மனக்கே வந்துஇடை வீடுஇன்றி மன்னி**
**தனக்கே யாக எனைக் கொள்ளு ஈதே**
**எனக்கே கண்ணனை யான் கொள் சிறப்பே (நா.தி.பி.பா. 2994)**

ஆழ்வார்கள் இந்த எண்ணத்தை அவர்களின் பாசுரங்களே விளக்குகின்றன. உனது திருவடிகளின் கீழே மீண்டும் நீங்காமல் இருக்கும் பாக்கியத்தை நான் அடையும்படி உன்னை எனக்குத்தராமல் இருக்கின்றாயே! சான்றோர்களால் அனுபவிக்கப்படுகின்ற எம்பொருமானே, வெல்லத்தினால் செய்த பழம் போன்றவனே. நீ எக்காலத்திலும் என் தந்தையாய் அடியேன் இதயத்தில் நிரந்தரமாக இருக்க வேண்டும். உன்னிடத்தில் நான் எக்காலத்திலும் இதைத்தவிர வேறு எதையும் வரமாகக் கேட்க மாட்டேன்.

**எக்காலத்திலும் எந்தையாய் என்னுள் மன்னில், மற்று**
**எக்கா லத்திலும் யாதொன்றும் வேண்டேன்**
**மிக்கார் வேத விமலர் விழுங்கும் என்**
**அக்காரக் கனியே! உன்னை யானே (நா.தி.பி.பா. 2998)**

என ஆழ்வார் இறைவனிடம் இதையே வேண்டுகிறார்.

**ஆழ்வார்களின் பிறப்பில் இயற்கை**

இயற்கையைப் படைத்தவன் இறைவன். இயற்கை இறைவனுக்குள் அடங்கும், ஆனால் இறைவன் இயற்கைக்குள் அடங்காதவன் என்ற

கொள்கையுடைய ஆழ்வார்கள் திருமால் திருவருளால் இயற்கையாக அவதரித்தவர்கள். திருமாலின் சங்கு, சக்கரம், சாரங்கம் என ஒவ்வொரு பொருளின் அம்சமாக அவதரித்தனர். பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், ஆண்டாள் போன்றவர்கள் மனிதர்கள் வழிப் பிறப்பில்லாது இயற்கையாகத் தோன்றியவர்கள்.

**தாமரையில் மலர்ந்த பொய்கையார்**

காஞ்சிபுரத்திலுள்ள புனிதமான ஊர் திருவெ∴கா. அந்த ஊரிலுள்ள பொய்கையில் பொற்றாமரை மலரில் குழந்தையாக அவதரித்தார் பொய்கையாழ்வார். பொய்கையில் அவதரித்த காரணத்தினால் பொய்கையார் என்றே அழைக்கப்பட்டார். சித்தார்த்தி ஆண்டு ஐப்பசி மாதத்தில் செவ்வாய்க் கிழமை திருவோண நட்சத்திரத்தில் அவதரித்த இவருக்கு இறைவனே தாயும், தந்தையுமாக விளங்கினார். திருமகள்நாதனாகிய திருமால் அட்டமி திதியில், திருமாலின் திருக்கையில் விளங்கும் பாஞ்சசன்னியம் என்று கூறப்படும் வெண்சங்கின் அம்சமாக அவதரித்தார் பொய்கையார். வெற்றிக்கு அறிகுறியாக சங்கின் ஒலி கூறப்படுகிறது.

**……………………. வெற்றிப்**

**பணிலம் வாய்வைத்து உகந்தான் பண்டு (நா.தி.பி.பா. 2341)**

என்பதைப் பேயாழ்வரின் பாடல் வழி அறியமுடிகிறது. சங்கிலிருந்து உண்டாகும் ஓங்கார ஒலியால் இறைவன் உலகையும், உலக உயிர்களையும் உண்டாக்குகிறான் என ஆழ்வார்கள் உணர்த்துகின்றனர்.

**குருக்கத்தியில் உதித்த பூதத்தாழ்வார்**

தொண்டை நாட்டின் கடற்கரைப் பட்டினமாகச் சிறப்புடன் முற்காலத்தில் விளங்கிய நகரம் திருக்கடன்மல்லை என்பதாகும். திருக்கடன் மல்லையை மாமல்லபுரம், மகாபலிபுரம் எனவும் வழங்குவர். மல்லை நகரம் நீர்வளமும், நிலவளமும் நிறைந்தது. மல்லையைச் சுற்றிலும் பசுமையான மலர்ச்சோலைகள் நிறைந்திருக்கும். அந்த நந்தவனத்தின் ஒருபுறத்தில் மல்லிகைச் செடிகள்

புதர்போல காட்சியளித்தன. மணம் பரப்பும் மல்லிகை மலர்ப் புதரின் நடுவே குருக்கத்திக் கொடி ஒன்று படர்ந்திருந்தது. அக்கொடியில் நீலநிறமலர் ஒன்று பூத்துக் குலுங்கியது. குருக்கத்திக் கொடியில் மலர்ந்து மணம்பரப்பிய நீலோற்பல மலரில்தான் பூதத்தாழ்வார் அவதாரம் செய்தார்.

துவாபர யுகம் சித்தார்த்தி ஆண்டு ஐப்பசி மாதம் சுக்கில பட்சம் நவமி திதி அவிட்ட நட்சத்திரம் கூடிய புதன்கிழமை அன்று பூதத்தாழ்வார் அவதாரம் செய்தார். திருமாலின் ஐம்படைகளுள் ஒன்றான கௌமோதகி என்னும் கதையின் அம்சமாகப் பிறந்தவர் பூதத்தாழ்வார்.

**செவ்வல்லிப் பூ பெற்ற பேயாழ்வார்**

தொண்டை வளநாட்டில் அமைந்துள்ளது திருவல்லிக்கேணி என்னும் திருத்தலம். திருவல்லிக்கேணிக்குத் தென்திசையில் திருமயிலை என்றொரு திருத்தலம் உண்டு. மயிலையை மயிலாப்பூர் என்றும் வழங்குவர். மயிலாப்பூரில் திருமால் திருக்கோயில் உள்ளது. இக்கோயில் பெருமானுக்கு ஆதிகேவசப் பெருமான் என்பது திருநாமம். இக்கோயிலில் கிணறு ஒன்று உள்ளது. அக்கிணற்றிலுள்ள செவ்வல்லிமலரில் பேயாழ்வார் அவதரித்தார். ஐப்பசி மாதம் வியாழக் கிழமையன்று சதய நட்சத்திரத்தில் திருமாலின் பஞ்ச படைகளில் ஒன்றான நாத்தகம் என்னும் வாளின் அம்சமாகப் பேயாழ்வார் தோன்றினார்.

**துளசியின் அடியில் தோன்றிய ஆண்டாள்**

ஆடி மாதம் சுக்ல பட்சம் சதுர்திதியும் பூர நட்சத்திரமும் கூடிய நன்னாளில், பெரியாழ்வார் என்கின்ற விஷ்ணு சித்தர் நந்தவனத்தில் துளசிச் செடியின் கீழ் கொத்திக்கொண்டிருந்த போது ஒரு அழகிய பெண் குழந்தை அவருக்குக் கிடைத்தது. அவரும் அக்குழந்தையைத் தன் மகளாகவே கருதி ‘கோதை’ எனப் பெயரிட்டு வளர்த்தார். ஆண்டாள் பூமிப் பிராட்டியின் அவதாரமாய்க் கருதப்படுகிறார். இவ்வாறு இயற்கையை அன்னையாகக் கொண்டு பிறந்தவர்கள் முதலாழ்வார்களும், ஆண்டாளும் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**தொகுப்புரை**

ஆதிகாலம் தொட்டு இன்று வரை மனிதன் இயற்கையோடு இயற்கையாகத் தான் வாழ விரும்புகிறான். கால மாற்றத்தினாலும் அறிவியல் வளர்ச்சியாலும் இயற்கையில் மாற்றம் ஏற்பட்டு இச்சூழ்நிலையை மனிதன் பழகிக்கொண்டாலும் மீண்டும் அந்த இயற்கையைக் காண வேண்டும் என்ற நோக்கம் தான் அனைவர் மனதிலும் ஓடிக்கொண்டிருக்கிறது. ஆதனால் தான் மனிதன் இயற்கையை செயற்கையாக உருவாக்கி மகிழ்கிறான். இயற்கை என்பது இதுதான் என வரையறுத்துக் கூறமுடியாது. மனிதனால் உருவாக்கப்படாத அனைத்தும் இயற்கையே.

தொல்காப்பியர், எவையெல்லாம் இயற்கைப் பொருள்களுக்குள் அடங்கும் என வகுத்து அதனை முதல், கரு, உரிப் பொருள் எனப் பகுத்துள்ளார்.

மானிட உணர்வுகளோடு இயற்கையின் எழிலை இணைத்துக் காட்டியது பண்டைய தமிழர்களின் இலக்கிய மரபு. அதோடு மட்டும் இல்லாது காதல் உணர்வின் பல நிலைகளைக் குறிப்பிட நிலங்களையும், பருவங்களையும் காலத்தையும் வகுத்தனர்.

நிலங்களை ஐந்து பகுதிகளாகப் பிரித்துள்ளனர். குறிஞ்சி, முல்லை, மருதம். நெய்தல், பாலை எனப் பிரித்து, அவைகளுக்கு எனத் தனித்தனி பயிரினங்களையும், உயிரினங்களையும் பாகுபடுத்தி அது முழுவதும் ஐந்திணைக்குரிய கருப்பொருள்கள் என வகைப்படுத்தியுள்ளனர்.

மக்களின் இயற்கையோடு இயைந்த வாழ்வும் தொழில்களும் அவர்களது பாடல்களில் பாடப்பட்டன. மலை, கடல், வயல், காடு ஆகியவற்றின் இயற்கை அழகும் பாடப்பட்டன. இயற்கைப் பொருள்களும், தொழில்களுமே இவர்களின் வாழ்வின் ஆதாரமாகக் கொள்ளப்பட்டுள்ளதை அறிய முடிகிறது.

ஆகையால் காதல் வாழ்வே அகப் பாடல்களின் உரிப்பொருள் என்றும் அந்த வாழ்வை எடுத்துக் காட்டும் பொருளாக உள்ள மரம், விலங்கு, பறவை தொழில்

முதலியவை கருப்பொருள் என்றும், அந்த வாழ்வுக்குப் பின்புலமாக விளங்கிய நிலமும் காலமும் முதற்பொருள் என்றும் வழங்கப்பட்டுள்ளது.

சங்க காலப் புலவர்கள் உணர்ச்சிகளையும் உண்மைகளையும் தெளிவுறுத்துங்கால் இயற்கைக் காட்சிகளைக் கருத்துப் புலப்பாட்டுக் கருவியாகப் பயன்படுத்தியுள்ளனர். இயற்கைக் காட்சிகளைப் பாடுதலில் எவ்வகைத் தயக்கத்தையும் அப்புலவர்களிடையே காண இயலவில்லை. பாடலில் உட்கருக்களோடு மிக நெருங்கிக் கலந்த நிலையில் இயற்கை வருணனை வருகின்ற இடங்கள் மிகப்பல உள்ளன. அத்தகைய இடங்களில் இயற்கை வேறு வாழ்வின்கூறு வேறு என்று பிரித்துணர முடியாத அளவுக்குப் பின்னிப் பிணைப்புண்டு காணப்படுகிறது. வாழ்வின் கூறுகளுடன் ஒப்ப வைத்து நோக்குவதோடு தனி நிலையிலிருந்து காணுதற்குரிய முறையிலும் எழில் நிறைந்தனவாய்ச் சங்க இலக்கியத்தில் இயற்கைக் காட்சிகள் இடம் பெறுகின்றன. சங்க இலக்கியம் பயில்வார் அவற்றுள் வரும் இயற்கைக் காட்சிகளை உணர்ந்து மகிழ்கின்றனர். சங்க இலக்கியங்களில் இருந்து இயற்கைக் காட்சிகளை நீக்கினால் இயற்கை சிறப்படையாது.

காதல், வீரம், கொடை முதலியவற்றின் உணர்ச்சிகளைப் பாடிய புலவர்கள். கால மாற்றத்தின் காரணமாக நீதி நூல்கள் பாடத் தொடங்கினர். அப்படிப்பட்ட நீதி நூல்களில் இயற்கையின் ஈடுபாடு குறித்தும் பாடப்பட்டது.

நீதி நூல்களில் முதன்மையாகக் கருதப்படும் திருக்குறளில் இயற்கைச் செய்திகள் பதிவு செய்யப்பட்டுள்ளன. மழையின் சிறப்பினை உணர்த்துவதற்காக வான்சிறப்பு என்ற அதிகாரத்தைத் திருவள்ளுவர் படைத்துள்ளார். மலர்கள், விலங்குகள், பறவைகள் போன்ற இயற்கை நிகழ்வுகளை உவமைகளாகப் பயன்படுத்தியுள்ளார். தான் சொல்கின்ற கருத்துக்கு ஆதாரமாக இயற்கையைப் பயன்படுத்தியுள்ளார் திருவள்ளுவர்.

சங்க இலக்கியங்களுக்கு அடுத்த நிலையில் தமிழ் மொழிக்குப் பெருமை சேர்ப்பது காப்பியங்களாகும். காப்பியங்களை ஐம்பெருங்காப்பியங்கள், ஐஞ்சிறுகாப்பியங்கள் எனப் பகுத்துள்ளனர். அனைத்துக் காப்பியங்களும் இயற்கையின் அழகினைப்

படம்பிடித்துக் காட்டுகின்றன. காப்பியங்களைப் படிக்கும்பொழுது அதிலுள்ள இயற்கை வருணனை அந்நிகழ்விற்கு வாசகர்களைக் கொண்டு சேர்த்து விடுவதை உணர முடிகிறது. காப்பியங்களில் உயர்வு நவிற்சிக்கு இயற்கை பின்புலமாக உள்ளது.

பக்தி இலக்கிய காலத்தோடு எழுந்தவையே சிற்றிலக்கியங்கள். ஒவ்வொரு இலக்கியமும் ஒரு குறிக்கோளுடன் தோன்றுகின்றது. அந்த வகையில் இறைவனைப் பாட எழுந்தவையே சிற்றிலக்கியங்கள். பின்னர் மன்னர்கள், உயர்ந்தவர்கள் என அனைவருக்கும் சிற்றிலக்கியங்கள் எழுதப்பட்டுள்ளன. பிறகு மன்னர், நிலக்கிழார், பொது வாழ்வினர் என்பவர்களுக்கும் சிற்றிலக்கியங்கள் எழுதப்பட்டன. சிற்றிலக்கியங்கள் பல வகையாக இருந்தாலும் பிள்ளைத்தமிழ், பரணி, கலம்பகம், அந்தாதி, கோவை, உலா, தூது, மடல், சதகம், குறவஞ்சி, பள்ளு போன்ற இலக்கியங்களே பெரிதும் பேசப்படுகின்றன. இவற்றில் இயற்கைக் காட்சிகளும் இயற்கை நிகழ்வுகளும் பின்னிப் பிணைந்து காணப்படுகின்றன.

தூது இலக்கியத்தில் அஃறிணைப் பொருட்களைத் தூதாக அனுப்பும் மரபு காணப்படுகிறது. அன்னம், நாரை, மேகம், குயில், மயில், மான், வண்டு என அஃறிணைப் பொருட்கள் தூதாக அனுப்பப்படுகின்றன.

சைவர்களும், வைணவர்களும் இயற்கையை இறைவனாகக் கண்டனர். அவர்களுடைய பாடல்களில் தமிழ்நாட்டில் இயற்கை வளங்கள் அழகுற எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. ஆழ்வார்கள், நாயன்மார்கள் பாடல்களிலும் இடைக்காலத்தைச் சார்ந்த தல புராணங்களிலும் நாட்டு வருணனையாகவும் இயற்கை அமைகிறது.

இயற்கையைப் பாடாத கவிஞர்கள் இல்லை. இயற்கையினூடே இயைந்து வாழ்ந்த கவிஞர்கள். தாங்கள் பெற்ற இன்பத்தை மற்றவர்களுக்கும் ஊட்ட வேண்டும் என்ற நோக்கத்தில் இயற்கை அமைப்பைத் தம் பாடல்களில் பதிவு செய்துள்ளனர். இயற்கை அவர்களுடைய முருகியல் உணர்வைத் தெளிவாகக் காட்டுகிறது.

எக்காலத்திலும் எந்த நிலையிலும் மனிதன் இயற்கையைத் தனி ஒரு பொருளாகக் கருதவில்லை. இயற்கை இல்லை எனில் மனித வாழ்வு இல்லை. இயற்கையும், மனிதனையும் பிரிக்க இயலாது. ஆதலால்தான் மனிதன் இயற்கையோடு இயைந்த வாழ்வை மேற்கொள்கின்றான்.

இயற்கையைப் புனையும் இலக்கியங்களுள் பக்தி இலக்கியம் சிறப்பிடம் பெறுகிறது. அவற்றுள்ளும் நாலாயிரத் திவ்விய பிரபந்தம் குறிப்பிடத்தக்கதாகும். இதன் தொகுப்பு வரலாறும் பன்னிரு ஆழ்வார்கள் வரலாறும் இயற்கையோடு தொடர்புடையனவாகும்.

வீரநாராயணபுரத்தில் உள்ள ஈச்சுவரமுனிவரின் மைந்தன் நாதமுனிகள் ஆவார். இவர் வடமொழி, தென் மொழிக் கலைகள் பலவற்றை நன்கு கற்றுணர்ந்தவர். திருமகள் நாதன்பால் நீங்காத அன்புடையவர். அவருக்கு ஒரு மைந்தன் தோன்றினார். அவருக்குத் தனது தந்தையின் பெயரையே சூட்டினார். நாதமுனிகள் தன்குடும்பத்துடன் வீரநாரயணபுரத்திலுள்ள மன்னனாருக்குத் தொண்டுபுரிந்தார். நாதமுனிகள் திருமால் திருத்தலங்களான வடமதுரை, சாளகிராமம், துவரை, அயோத்தி, வதரி, யமுனை, சகந்தநாதம், சிங்கவேள்குன்றம், அகோபிலம், திருவேங்கடம், திருக்கடிகை, திருப்புட்குழி, திருக்கச்சி, திருவயிந்திரபுரம், திருக்கோவலூர், திருவரங்கம், திருக்குடந்தை போன்ற திருப்பதிகள் தோறும் சென்று எம்பெருமானை வழிபட்டுள்ளார்.

ஒருமுறை திருமாலின் அன்பர்கள் பாடிய 'ஆரா அமுதே அடியேன் உடலம் நின்பால்' என்ற திருவாய்மொழியின் பாடல் நாதமுனிகளைப் பெரிதும் கவர்ந்தது. அப்பாடல் முழுமையும் பெற வேண்டி சீசடகோபர் அவதரித்த திருக்குறுகூர் சென்றார். அங்கே மதுரகவியாழ்வார் பாடிய கண்ணிநுண் சிறுதாம்பு என்னும் பாடலைப் பன்னீராயிரம் முறை பாடி ஆழ்வாரிடம் இருந்து பாசுரங்களைப் பெற்று நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தைத் தொகுத்தார். நாதமுனிகள் தாம்பெற்ற நாலாயிரத்தை, திருமாலின் விருப்பப்படி இயற்றமிழுக்கு உரிய வகையில் முதலாயிரம், பெரியதிருமொழி, இயற்பா, திருவாய் மொழி என்னும் நான்காகப் பிரித்து தேவகானத்தையும் அமைத்தார். நாலாயிரம் தாளங்களையும் ஒரே நேரத்தில்

இசைக்கச் செய்து அதன் எடையைச் சரியாகக் கூறி தேவகானத்தின் பெருமையினை உலகறியச் செய்தார்.

ஆழ்வார்கள் திருமால் ஒருவனே பரம்பொருள் என்று நிரூபணம் செய்தவர்கள். திருமாலிடம் இருந்தே அனைத்துத் தெய்வங்களும், தேவதைகளும் தோன்றின என்று பாசுரத்தின் மூலம் நிருபித்துள்ளனர்.

திருமாலின் திருவருள் பெற்றுப் பிறந்தவர்கள் ஆழ்வார்கள். பொய்கையார் திருமாலின் திருச்சங்கின் அம்சமாகத் தோன்றியவர். பூதத்தாழ்வார் திருமாலின் ஐம்படைகளின் ஒன்றான கௌமோதகி என்னும் கதையின் அம்சமாகத் தோன்றியவர். பேயாழ்வார் நாத்தகம் என்னும் வாளின் அம்சமாகத் தோன்றியவர். திருமழிசையாழ்வார் சுதர்சனம் என்னும் திருவாழியின் அம்சமாகத் தோன்றியவர். நம்மாழ்வார் சேனை முதல்வரின் அம்சமாகத் தோன்றியவர். மதுரகவியாழ்வார் இறைவனைப் பாடாது நம்மாழ்வாரையே குருவாகப் போற்றிப் பாடியவர். குலசேகர ஆழ்வார் திருமாலின் கௌத்துவமணியின் அம்சமாகத் தோன்றியவர். பெரியாழ்வார் திருமாலின் வாகனமான கருடனின் அம்சமாகத் தோன்றியவர். ஆண்டாள் பூமாதேவியின் அம்சமாகத் தோன்றியவர். திருப்பாண் ஆழ்வார் திருமாலின் ஸ்ரீவத்சத்தின் அம்சமாகத் தோன்றியவர். தொண்டரடிப் பொடியாழ்வார் திருமாலின் வைஜெயந்தி என்னும் வனமாலையின் அம்சமாகத் தோன்றியவர். திருமங்கையாழ்வார் திருமாலின் சாரங்கம் என்னும் வில்லின் அம்சமாகத் தோன்றியவர்.

ஆழ்வார்கள் இறைவனிடத்து, பிறவாவரம் வேண்டும் என்கின்றனர். செய்வினையின் பயனாக மீண்டும் பிறந்தால் திருமாலே உன்னை மறவாது உன் திருவடியையே பற்றி வாழும் பாக்கியம் வேண்டும் என்கின்றனர்.

ஆழ்வார்களில் முதல் மூவர் மற்றும் ஆண்டாள் ஆகியோர் மனித வயிற்றில் பிறவாது திருமாலின் திருவருளால் இயற்கையாகத் தோன்றியவர்கள். மற்ற ஆழ்வார்கள் தாயின் வயிற்றில் பிறந்தாலும் மனிதர்களைப் போல் அன்றி திருமாலின் திருவருளால் வளர்ந்தவர்கள். ஆழ்வார்களின் பாசுரங்கள் ஒவ்வொன்றும் அவர்கள் திருமால் மீது கொண்ட பக்தியினையே வெளிப்படுத்துகின்றன.

## சான்றெண் விளக்கம்

1. சே. குருசாமி, இலக்கியத்தில் இயற்கை, ப.1
2. மேலது, ப.2
3. பி.ஆர். இராமநாதன் இருபதாம் நூற்றாண்டு தமிழ்ப் பெயரகராதி, ப.197
4. மாருதிதாசன் (ப.ஆ), நர்மதாவின் தமிழ் அகராதி, ப.97
5. எஸ்.ராமகிருஷ்ணன் (ப.ஆ), க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.101
6. ச.பாவானந்தம் பிள்ளை, தமிழ்ச் சொல்லகராதி, ப.57
7. மு.வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப.33
8. மேலது, ப.35
9. மேலது, ப.21
10. இரா. இளங்குமரனார் (உ.ஆ), தொல்காப்பியம், பொருளதிகாரம், நூ.14
11. மேலது, நூ.4
12. மேலது, நூ.18
13. மேலது, நூ.3
14. சே. குருசாமி, இலக்கியத்தில் இயற்கை, ப.19
15. மு.வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப.47
16. மேலது, ப.47
17. ச.வே. சுப்பிரமணியன் (ப.ஆ), சங்க இலக்கியம், ஐங்குறுநூறு, பா.492
18. மு.வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப.48
19. மேலது, ப.48
20. ச.வே. சுப்பிரமணியன் (ப.ஆ), சங்க இலக்கியம், முல்லைப்பாட்டு, பா.249
21. ச.வே. சுப்பிரமணியன் (ப.ஆ), சங்க இலக்கியம், குறிஞ்சிப்பாட்டு, பா.413
22. மு.வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப.52
23. மேலது, ப.52
24. ச.வே. சுப்பிரமணியன் (ப.ஆ), சங்க இலக்கியம், நற்றிணை, பா.172
25. ச.வே. சுப்பிரமணியன் (ப.ஆ), சங்க இலக்கியம், அகநானூறு, பா.134

26. பே.சு. கோவிந்தராசன் (உ.ஆ), திருக்குறள், குறள்.1114

27. மேலது, குறள்.90

28. பே.சு. கோவிந்தராசன் (உ.ஆ), திருக்குறள், குறள்.500

29. புலியூர்கேசிகன் (உ.ஆ), பழமொழி நானூறு, பா.25

30. மேலது, பா.47

31. மேலது, பா.168

32. மேலது, பா.267

33. மேலது, பா.301

34. சே. குருசாமி, இலக்கியத்தில் இயற்கை, ப.48

35. மேலது, ப.48

36. கு.சுந்தரமூர்த்தி (உ.ஆ), தண்டியலங்காரம், பொதுவணியியல், நூ.8

37. ந.மு.வேங்கடசாமி நாட்டார் (உ.ஆ), சிலப்பதிகாரம், மங்கலவாழ்த்து, பா.1

38. நச்சினார்க்கினியர் (உ.ஆ), சீவகசிந்தாமணி, நாமகள் இலம்பகம், பா.53

39. மேலது, பா.73

40. மேலது, பா.33

41. இரா. இளங்குமரனார் (உ.ஆ), வளையாபதி, பா.43

42. இரா. இளங்குமரனார் (உ.ஆ), குண்டலகேசி, பா.10

43. வை.மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார் (உ.ஆ), கம்பராமாயணம், வனம் புகுபடலம், பா.47

44. மேலது, சித்திரக்கூடப்படலம், பா.14

45. ச.வே. சுப்பிரமணியன், தமிழ் இலக்கிய வரலாறு, ப.202

46. புலியூர்க்கேசிகன் (உ.ஆ), திருக்குற்றாலக் குறவஞ்சி, பா.8

47. ச.வே. சுப்பிரமணியன், தமிழ் இலக்கிய வரலாறு, ப.202

48. புலியூர்க்கேசிகன் (உ.ஆ), முக்கூடல்பள்ளு, (வளமை செழுமை) ப.44

49. முத்து.இராமமூர்த்தி (ப.ஆ), நந்திக்கலம்பகம், தனிப்பாடல், பா.21

50. ச.வே. சுப்பிரமணியன் (ப.ஆ), பன்னிருதிருமுறை, திருஞானசம்பந்தர் தேவாரம், பா.68

51. மேலது, பா.749

52. சே. குருசாமி, இலக்கியத்தில் இயற்கை, ப.69

53. ச.வே.சுப்பிரமணியன் (ப..ஆ), பன்னிருதிருமுறை, திருஞானசம்பந்தர் தேவாரம், பா.294

54. ச.வே.சுப்பிரமணியன் (ப.ஆ), பன்னிருதிருமுறை, திருநாவுக்கரசர் தேவாரம், பா.6112

55. மேலது, பா.4928

56. ச.வே.சுப்பிரமணியன் (ப.ஆ), பன்னிருதிருமுறை, சுந்தரர் தேவாரம், பா.7380

57. சே. குருசாமி, இலக்கியத்தில் இயற்கை, ப.83

58. ச.வே.சுப்பிரமணியன் (ப.ஆ), பன்னிருதிருமுறை, திருமூலர், திருமந்திரம், பா.2922

59. மேலது, பா.3065

60. கு. தட்சணாமூர்த்தி, இயற்கைப் பாடல் வாணிதாசன் — தங்கப்பா, ஓர் ஆய்வு, பக்.35,37

61. மேலது, ப.38

62. ந. சுப்புரெட்டியார், வைணவமும், தமிழும், ப.55

63. ம.பெ. சீனிவாசன், திவ்வியப் பிரபந்த இலக்கிய வகைகள், ப.57

# இயல் — 2

## பறவைகள் புனைவில் பக்தி நெறி

இறைவனிடம் மனதையும் ஐம்பொறிகளையும் முழுமையாகச் செலுத்த வகை செய்யும் பேராற்றல் கொண்டது பக்தியேயாகும். ஆற்றல் மிக்க அன்பினால் இறையருள் பெற்றுப் பெறுதற்கரிய வீடுபேற்றை அடைய வழிகோலுவது பக்தியாகும். பக்திநெறியை மேற்கொள்வதற்குச் சாதி சமய வேறுபாடுகளோ, ஆண், பெண் என்னும் பால் பகுப்போ, செல்வந்தன், ஏழை என்ற பொருளாதார ஏற்றத்தாழ்வோ இளைஞர், முதியோர் என்ற வயது வேறுபாடோ தடை இல்லை. அனைவரையும் ஒரே நிலையில் வைத்துச் சீர்தூக்கிச் செம்மைப்படுத்துவது பக்திநெறியாகும். ஆழ்வார்கள் இறைவனை இறைவனாகக் காணாது இறைவனோடு உறவுமுறையில் வாழ்ந்ததால் ஆண்டாளையும், இறைவனைப் பாடாது நம்மாழ்வாரைப் பாடியதால் மதுரகவியாழ்வாரையும் வேறு வரிசையில் தொகுத்து ஆழ்வார்கள் பதின்மர் என்றும் கூறுவர். வைணவ சமயத்தின் முதன்மைத் தெய்வமாகிய திருமாலைப் போற்றி தமிழ்ச் செய்யுட்களால் பாசுரங்கள் பாடியவர்கள் ஆழ்வார்கள். திருமாலின் பெருமையினை அவனது அன்பினை, அருளினை மக்களிடம் புரிய வைத்து திருமால் மீது அனைவரையும் பற்றுகொள்ளச் செய்வதே அவர்களின் நோக்கம். எனவேதான், இயற்கையைப் பெரிதும் விரும்பும் மனிதர்கள் இயற்ககையின் வழியே பக்தியினைச் செலுத்தினர். அவ்வகையில் இயற்கையின் படைப்பான பறவைகளின் வழி, திருமால் மீது கொண்ட பக்தியினை ஆழ்வார்கள் தம் பாசுரங்களில் வெளிப்படுத்தியிருப்பதை ஆராய்ந்து விளக்குவதாக இவ்வியல் அமைகிறது.

### நாலாயிரத் திவ்விய பிரபந்தத்தில் இடம் பெற்றுள்ள பறவைகள்

ஆழ்வார்கள் தாம் திருமாலின் மீது கொண்ட பக்தியினையும் அவனது அருட் குணத்தையும் வெளிப்படுத்த பல முறைகளைக் கையாண்டுள்ளனர். அவற்றுள் இயற்கையைப் பாடுபொருளாகக் கொண்டதும் ஒன்றாகும். மனிதன் இயற்கையை விரும்பக் கூடியவன். எனவே அதன்வழியே பக்தியினை அவனுள் செலுத்தினர். இயற்கை என்பது இறைவனால் தோற்றுவிக்கப்பட்டவை.

இயற்கையின் வழியே இறைவனை அடைய முடியும். இறைவனின் படைப்பாகிய அனைத்து உயிர்களிலும் இறைவன் அடங்கியுள்ளான் என்ற உண்மையினை ஆழ்வார்கள் தம் பாசுரங்கள் மூலமாக மக்கள் மனதில் பதிய வைத்தனர். உயிரினங்களுள் ஒன்றாகிய பறவைகளின் மூலமாகவும் ஆழ்வார்கள் தம் பக்தியினை வெளிப்படுத்தியுள்ளனர்.

நாலாயிரத் திவ்விய பிரபந்தத்தில் ஆழ்வார்கள் கருடன், கொக்கு, வண்டு, அன்னம், குருகு, அன்றில், கிளி, மயில், தாரா, பருந்து, குயில், நாகணவாய், தேனீக்கள், புறா, நாரை, செம்போத்து, காக்கை, கரிச்சான், கோழி ஆகிய பறவைப் புனைவின் வாயிலாக இறைவன் மீது கொண்ட பக்தியினை வெளிப்படுத்தியுள்ளனர்.

இயற்கையாகப் படைக்கப்பட்ட பறவைகளின் மூலமாகத் திருமாலின் பெருமையினை உணர்த்தியதோடு, சில சமயங்களில் அசுரன் பறவையாக மாறி வருகின்ற நிலையில் எம்பெருமான் அவற்றை அழித்து மக்களைக் காத்த செய்தியினையும் பதிவு செய்துள்ளனர்.

**பொய்கையாழ்வார்**

பொய்கையாழ்வார் தம் பாசுரங்களில் கருடன் என்ற பறவையை மட்டுமே மூன்று இடங்களில் (நா.தி.பி.பா *2102, 2103, 2166*) குறிப்பிட்டுள்ளார். மற்ற பறவைகளைப் பற்றி அவர் குறிப்பிடவில்லை. திருமாலை ''கருடவாகனர்'' கருடனுக்குத் தலைவன்' என்ற அழைக்கின்றார். கருடனுடைய சிறப்புகளை மட்டுமே பதிவு செய்துள்ளார்.

**பூதத்தாழ்வார்**

பூதத்தாழ்வார் தம்முடைய பாசுரங்களில் பறவைகளைப் பற்றிய செய்திகளைக் குறிப்பிடவில்லை.

**பேயாழ்வார்**

பேயாழ்வார் தம் பாசுரங்களில் வண்டுகள் பற்றிய செய்திகளை மட்டுமே ஐந்து இடங்களில் (நா.தி.பி.பா 2289, 2304, 2316, 2336, 2363) பதிவு செய்துள்ளார். மற்ற பறவைகளைப் பற்றிக் குறிப்பிடவில்லை.

**திருமழிசையாழ்வார்**

திருமழிசையாழ்வார் பாசுரங்களில் வண்டினைப் பற்றி இரண்டு இடங்களிலும் (நா.தி.பி.பா 795, 2443) அன்னம், கொக்கு பற்றிய செய்தியினை ஓர் இடத்திலும் (நா.தி.பி.பா 770) குறிப்பிட்டுள்ளார்.

**நம்மாழ்வார்**

நம்மாழ்வார் தம் பாசுரங்களில் கருடன் பற்றி செய்தியினை மூன்று இடங்களிலும், (நா.தி.பி.பா 2501, 2824, 2868) குருகு பற்றிய செய்தியினை ஐந்து இடங்களிலும், (நா.தி.பி.பா 2507, 2828, 3343, 3740, 3747) வண்டு பற்றிய செய்தியினை ஆறு இடங்களிலும், (நா.தி.பி.பா 2532, 2829, 2867, 3725, 3744, 3746) அன்றில் பற்றிய செய்தியினை இரண்டு இடங்களிலும், (நா.தி.பி.பா 2560, 2902) நாரை பற்றிய செய்தியினை ஐந்து இடங்களிலும், (நா.தி.பி.பா 2824, 2901, 3344, 3428, 3739) குயில் பற்றிய செய்தியினை நான்கு இடங்களிலும், (நா.தி.பி.பா 2825, 3348, 3581, 3824) அன்னம் பற்றிய செய்தியினை ஐந்து இடங்களிலும், (நா.தி.பி.பா 2826, 3346, 3348, 3429, 3748) நாகணவாய் பற்றிய செய்தியினை மூன்று இடங்களிலும், (நா.தி.பி.பா 2831, 3347, 3723) மயில் பற்றிய செய்தியினை இரண்டு இடங்களிலும், (நா.தி.பி.பா 3011, 3581) கொக்கு பற்றிய செய்தியினை ஓர் இடத்திலும், (நா.தி.பி.பா 3282) கிளி பற்றிய செய்தியினை இரண்டு இடங்களிலும், (நா.தி.பி.பா 3379, 3721) கோழி பற்றிய செய்தியினை ஓர் இடத்திலும் (நா.தி.பி.பா 3720) எனப் பறவைகள் பற்றிய புனைவுகளைப் பாடியுள்ளார்.

**மதுரகவியாழ்வார்**

மதுரகவியாழ்வார் பறவைகள் பற்றிய செய்திகளைக் கூறவில்லை. அவர் நம்மாழ்வாரைக் குருவாக நினைத்து அவர் மீது பாடிய கண்ணிநுண் சிறு

தாம்பு என்ற 11 பாசுரங்கள் மட்டுமேயாகும். அதில் அவர் எந்த அஃறிணை உயிரினங்கள் ஒன்றையும் குறிப்பிடவில்லை.

**குலசேகராழ்வார்**

குலசேகராழ்வார் வண்டு பற்றி செய்தியை மட்டும் ஒரு பாடலில் (நா.தி.பி.பா 722) பதிவு செய்துள்ளார். மற்ற பறவைகளைப் பற்றிய செய்திகளைக் குறிப்பிடவில்லை.

**பெரியாழ்வார்**

பெரியாழ்வார் தம் பாசுரங்களில் வண்டு பற்றிய செய்தியினை ஐந்து இடங்களிலும், (நா.தி.பி.பா 133, 283, 354, 407, 409) மயில் பற்றிய செய்தியினை ஓர் இடத்திலும், (நா.தி.பி.பா 410) அன்னம் பற்றிய செய்தியினை ஓர் இடத்திலும், (நா.தி.பி.பா 420) காக்கை பற்றிய செய்தியினை காக்கைப் பத்து(நா.தி.பி.பா 162 முதல் 171 வரை) எனத் தனியே ஒரு பாசுரமாகவும் அமைத்துள்ளார்.

**ஆண்டாள்**

ஆண்டாள் பாசுரங்களில் வண்டு பற்றிய செய்தியினை இரண்டு இடங்களிலும், (நா.தி.பி.பா 476, 547) கருடன் பற்றிய செய்தியினை ஓர் இடத்திலும், கரிச்சான் பற்றிய செய்தியினை இரண்டு இடங்களிலும், (நா.தி.பி.பா 480,594) அன்னம் பற்றிய செய்தியினை ஓர் இடத்திலும், (நா.தி.பி.பா 549) குயில் பற்றிய செய்திகளைக் குயில் பத்து என்ற பாசுரத்தில் ஐந்து இடங்களிலும் (நா.தி.பி.பா 545, 552, 555) கோழி பற்றிய செய்தியினை ஓர் இடத்திலும், (நா.தி.பி.பா 491) மயில் பற்றிய செய்தியினை ஓர் இடத்திலும் (நா.தி.பி.பா 590) எனப் பாடியுள்ளார்.

**திருப்பாணாழ்வார்**

திருப்பாணாழ்வார் பாசுரத்தில் வண்டு, மயில் பற்றிய பதிவுகள் ஒரு பாடலில் மட்டும் (நா.தி.பி.பா 930) இடம் பெற்றுள்ளன. மற்ற பறவைகள் பற்றிய செய்திகள் இடம் பெறவில்லை.

**தொண்டரடிப் பொடியாழ்வார்**

அன்னம் பற்றி ஒரு பாசுரத்திலும் (நா.தி.பி.பா 918) காக்கை, கழுகு பற்றி ஒரு பாசுரத்திலும் (நா.தி.பி.பா 877) மயில், குயில், வண்டு பற்றி ஒரு பாசுரத்திலும் (நா.தி.பி.பா 885) ஆகப் பறவைகள் பற்றிய செய்திகளைத் தொண்டரடிப் பொடியாழ்வார் பதிவு செய்துள்ளார்.

**திருமங்கையாழ்வார்**

திருமங்கையாழ்வார் பாசுரகளில் வண்டு பற்றிய செய்திகள் பன்னிரெண்டு இடங்களிலும், (நா.தி.பி.பா 2725, 967, 1062, 1149, 1186, 1198, 1899, 1230, 1279, 1291, 1873, 2077) அன்னம் பற்றிய செய்திகள் ஆறு இடங்களிலும், (நா.தி.பி.பா 2730, 1191, 1214, 1346, 1493, 1587, 1226) அன்றில் பற்றிய செய்தியிகள் ஐந்து இடங்களிலும், (நா.தி.பி.பா 2738, 2757, 1111, 1962, 2045) கிளி பற்றிய செய்தி ஓர் இடத்திலும், (நா.தி.பி.பா 2681) தாரா என்ற நீர் பறவை பற்றிய செய்திகள் இரண்டு இடங்களிலும், (நா.தி.பி.பா 991, 1805) மயில் பற்றிய செய்திகள் மூன்று இடங்களிலும், (நா.தி.பி.பா 1158, 1074, 1230) கொக்கு பற்றிய செய்தியிகள் மூன்று இடங்களிலும், (நா.தி.பி.பா 1179, 1291, 1798) நாகணவாய் பற்றிய செய்தி ஓர் இடத்திலும், (நா.தி.பி.பா 1215) குயில் பற்றிய செய்தியிகள் நான்கு இடங்களிலும், (நா.தி.பி.பா 1074, 1222, 1376, 1944) புறா பற்றிய செய்திகள் இரண்டு இடங்களிலும் (நா.தி.பி.பா 1229, 2069) எனப் பறவைகள் பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன. இப்பறவைகள் புனைவின் மூலம் ஆழ்வார்கள் திருமால் மீது கொண்ட பக்தி நெறியினைப் புலப்படுத்தியுள்ளனர்.

**பக்திநெறி**

ஆழ்வார்கள் இறைவனை இறைவனாகக் காணாது இறைவனோடு உறவு முறையில் வாழ்ந்தவர்கள். ஆழ்வார்களில் எம்பெருமான் மீது கொண்ட பக்தியினைக் காதலாக வெளிப்படுத்தினர். இறைவனைத் தன் காதலனாகக் கொண்டனர். ஆண்டாள் திருமாலைக் காதலனாக எண்ணி இறுதியில் இறைவனுடன் ஜோதியாகச் சரணடைந்தார். பெரியாழ்வார் இறைவனைக்

குழந்தையாகப் பாவித்துப் பிள்ளைத்தமிழ் இலக்கியம் படைத்தார். இவ்வாறு ஆழ்வார்கள் இறைவனுடன் உறவுமுறையில் வாழ்ந்துள்ளனர்.

‘‘ஆழ்வார் இறைவனுக்கும் தங்களுக்கும் இடையிலுள்ள தொடர்பை ஒன்பது வகை உறவுகளாகப் பேசுவர். தந்தை — மகன் உறவு, காப்பான் — காக்கப்படும் உறவு, ஆண்டான் — அடிமை உறவு, தலைவன் — தலைவி உறவு, அறிபவன் — அறியப்படும் பொருள் உறவு, சொத்துக்குடையவன் — சொத்து உறவு, உயிர் — உடல் உறவு, தாங்குபவன் — தாங்கப்படும் உறவு, நுகர்பவன் — நுகரப்படும் உறவு, இவ்வகை உறவுகளில் தலைவன் — தலைவி உறவே மிகச்சிறந்தது. சரணாகதி அடைகின்ற உயிர்கள் இந்த ஒன்பது வகை உறவுமுறைகளில் நெருங்கி ஒன்றுபடவேண்டும். இறைவனுடைய தோற்றம் மனதை ஈர்க்கவல்லது; பேரழகு வாய்ந்தது. கோல் தேடி ஓடும் கொம்பே போல் மால் தேடி ஓடும் மனம், இறைவனாகிய புருஷோத்தமனை உயிர்கள் நாடிச் செல்லும். இறைவனைப் பிரிந்த ஆத்மாக்கள் பரந்தாமனைத் தேடிச்செல்கின்றன.’’[1]

‘‘ஆன்மா உய்வு பெறுவதற்கு அ:.து இறைவனிடம் கொள்ளும் தனிப்பட்ட உறவே பக்திநெறியாகும். அளவிற்சிறந்த பற்றோடு கடவுள் பால் கொள்ளும் உண்மையான அன்பே பக்தியாகும். இறைவனை நாடும் நம் இதயத்தின் தாபத்தினைத்தான் பக்தி என்கிறோம். ஆறுகள் எல்லாம் கடலை நோக்கி ஓடுவது போல ஆருயிர்கள் எல்லாம் பேருயிரான இறைமையை நாடும் இயல்பான வேகத்தினைப் பக்தி என்கிறோம்’’[2] என மா. சண்முக சுப்பிரமணியன் கூறியுள்ளார்.

இறைவனிடம் மனதையும் ஐம்பொறிகளையும் முழுமையாகச் செலுத்த வகை செய்யும் பேராற்றல் கொண்டது. பக்தியோடும் ஆற்றல் மிக்க அன்பினாலும் இறையருள் பெற்றுப் பெறுதற்கரிய வீடு பேற்றை அடைய வழிகோலுவது. சமய வேறுபாடுகளோ, ஆண் — பெண் என்னும் பால்பகுப்போ, செல்வர் — ஏழை என்ற பொருளாதார ஏற்றத் தாழ்வோ, இளைஞர் — முதியோர் என்ற வயது வேறுபாடுகளோ, உயர்திணை — அ:.றிணை என்ற வேறுபாடுகளோ தடை இல்லை.

அனைவரையும் ஒரே நிலையில் வைத்துச் சீர் தூக்கிச் செம்மைப்படுத்துவது பக்திநெறியாகும்.

**ஆழ்வார்கள் பறவைகளைப் புனைவதற்குக் காரணம்**

“இரண்டு சிறகுகளைக் கொண்டு பறவைகள் எங்ஙனம் விசும்பில் பறந்து செல்லுதல் இயலுகின்றதோ அங்ஙனமே ஞானம், ஒழுக்கம் என்னும் இரண்டாலும் இறைவனை அடைய முடிகிறது என்பது ஆன்றோர் கொள்கை. எனவே ஞானத்தையும், அநுட்டானத்தையும் சிறகுகளாகக் கொள்ள வேண்டும். பறவைகளிலும் அன்னம், வண்டு முதலியவற்றைச் சொல்லும் போது இன்னவர் இதனைப் போன்றவர்கள் என்னும் உள்ளுறைப் பொருளிலும் அருளிச் செய்யப் பெற்றுள்ளது. அன்னமாகப் பேசப்பெறுபவர்கள், செல்வநம்பி, பெரியாழ்வார், நாதமுனிகள், ஆளவந்தார் ஆகியோர். நாதமுனிவர், லோக சாரங்க முனிவரால் தாங்கப் பெற்ற திருப்பாணாழ்வார், தம்பிரான்மார் போன்றவர்கள் தும்பி என்றும், வண்டு என்றும் பேசப் பெறுவர். கிளி, பூவை, குயில், மயில் என்பவற்றிக்கு உள்ளுறைப் பொருளாக மதுரகவிகள், தொண்டரடிப் பொடியாழ்வார், கூரத்தாழ்வான், நாரை, கொக்கு, குருகு என்னும் பறவைகட்குக் குலசேகரப் பெருமாள் ஆசாரிய பதத்தில் நின்றவர்களான முதலிகள் போல்வார் உள்ளுறைப் பொருளாக அமைவர். மேகத்திற்கு உள்ளுறையாக திருமழிசைப்பிரான் திருமங்கையாழ்வார், இராமானுசர் முதலியோர் பேசப்பெறுவர்”[3] என்ற குறிப்புகள் ஆசர்ய – ஹிருதயம் சூத் *151 – 155* உரையில் விளக்கம் தரப்பெற்றுள்ளதாகக் ந.சுப்புரெட்டியார் கூறுவர்.

வைணவப் பெரியோர்களான ஆழ்வார்களும் ஆச்சாரியர்களும் எம்பெருமானை அனுபவித்தலில் பலவகையான நடை உள்ளது. அவனுடைய திருநாமங்களைச் சொல்லி வணங்குதல் திருக்கல்யாண குணங்களைச் சொல்லி வணங்குதல், வடிவழகைச் சொல்லி வணங்குதல், அவன் எழுந்தருளிய திவ்விய தேசங்களின் வளங்களைச் சொல்லி வணங்குதல், அங்கே அனுபவமுள்ள வைணவப் பெரியவர்களின் பெருமை பேசுதல் எனப் பலவகைப் பக்தி அனுபவங்கள் உள்ளன. அதில் எல்லாவற்றிலும் சிறந்ததாக நாயக – நாயகி

பாவனையை வழங்குவர். இந்த வைணவத் தத்துவம், பரம்பொருளுக்கும் ஆன்மாவிற்கும் கூறும் ஒன்பது வகையான உறவுகளில் இதுவும் ஒன்று. ஏனைய உறவுகளில் உயர்வானது இந்த உறவு. அந்த உறவினை விளக்கும் பாசுரங்களை நாலாயிரத்தில் காணலாம். வைணவப் பெருமக்கள் சங்ககாலத் தமிழ் நெறியினையொட்டி ஓர் அகப்பொருள் நெறியினைப் பாசுரங்களில் அமைத்துக் காட்டிய பெருமையினைப் பெற்றனர். “புருடோத்தமனான எம்பெருமானின் பேராண்மைக்கு முன்னர் உலகிலுள்ள ஆன்மாக்கள் யாவும் பெண் தன்மையினை அடைந்து நிற்கும் என்பது அவர்கள் கண்ட தத்துவம். எனவே ஆழ்வார்களில் நம்மாழ்வாரும், திருமங்கையாழ்வாரும் பெண் தன்மை எய்திப் பல திருக்கோயில் மூர்த்திகளை அனுபவித்ததை அவர்களுடைய பாசுரங்களில் காணலாம். திருமால்மீது காதல் கொண்ட ஆழ்வார்கள் அவனிடம் பறவை, மேகம், மனம் எனக் காணும் அனைத்து பொருட்களையும் தூதாக அனுப்பியுள்ளனர். இவ்வாறு பல வழிகளில் ஆழ்வார்கள் தங்கள் பக்தியினைப் புலப்படுத்தியுள்ளனர்.”[4]

## பொருண்மைகள்

ஆழ்வார்கள் பறவைகள் புனைவில் தம் பக்தியினைப் புலப்படுத்தும் நிலையில் அகப்பொருள் மரபினைப் பின்பற்றியுள்ளனர். பறவையினைப் புகழ்வதன் மூலம் திருமாலைப் புகழ்தல், திருமால் மீது கொண்ட பக்தியினைக் காதலாக மாற்றி, தலைவன் – தலைவி நிலையில் பறவைகளிடம் காதல் மொழி பேசுதல், எம்பெருமானிடம் பறவைகளைத் தூதாக அனுப்புதல், திருமாலின் திருத்தலப் பெருமையினைப் பறவைகளின் வழி உணர்த்துதல் என ஆழ்வார்கள் தம் பக்தியினைப் பதிவு செய்துள்ளனர்.

இறைவன் இயற்கையாகப் படைக்கப்பட்ட பறவைகளிடம் அருளுணர்வோடு விளங்குகிறான். அதே சமயத்தில் அசுரர்கள் பறவைகளாக மாறி மக்களுக்குத் துன்பம் தரக்கூடிய சூழ்நிலையில், அவற்றை வதம் செய்து அனைவரையும் காத்தருள்கின்றான் என்ற இரு நிலைகளையும் சுட்டிக்காட்டியுள்ளனர் ஆழ்வார்கள்.

**வழிபாட்டு முறைகள்**

ஆழ்வார்கள் இறைவனை வழிபடுவதற்குப் பல்வேறு முறைகளைக் கையாண்டுள்ளனர். இறைவழிபாட்டில் இசை, நாட்டியம், பாடல் என இவை மூன்றும் முதன்மையான வழிகளாகக் கருதப்படுகின்றன. எனினும் இசைவழி மட்டும் அல்லாது பாடல் புனைவதன் மூலமும் வேறு இறைத் தொண்டுகள் மூலமும் இறைவனை வழிபடலாம் என்கின்றனர் ஆழ்வார்கள். இசைபாடியும், பாடல்கள் புனைந்தும் நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் காதல்மொழி கூறியும், பெரியாழ்வார் பிள்ளையாகப் போற்றியும், சிலர் நந்தவனம் அமைத்துக் கைங்கரியம் செய்தும் இறைவனை வழிபட்டனர். இறைவனை வழிபடும் முறையில் தம்பதியராக இணைந்தே வழிபடவேண்டும். துறவிகள் மட்டுமே தனியே வழிபடுவர் என்றும் கூறுவர். உடலாலும் உணர்வாலும் மனதாலும் எனப் பல நிலைகளில் ஆழ்வார்கள் திருமாலை வழிபட்டுள்ளனர். இறைவனை நாடிச் சென்று வழிபடுதல் இறைவனைத் தன்னை நாடி வரும்படி வழிபடுதல் என்ற இரு முறையினை ஆழ்வார்கள் பாசுரங்களில் பதிவு செய்துள்ளனர். இம்முறையினைப் பறவைகளின் செயல்களோடு ஒப்புமைப்படுத்தித் தம் பக்திநெறியைப் புலப்படுத்தியுள்ள தன்மை அவர்களின் பாசுரங்களில் காணப்பெறுகிறது.

**பறவைகளின்வழிப் பக்தி நெறி**

ஆழ்வார்கள் திருமால் மீது கொண்ட பக்தியினைப் பறவைகளின் வழியாகப் பின் வருமாறு வெளிப்படுத்தியுள்ளனர். அவையாவன,

1. திருமாலிடம் இசை பாடப் பறவையை அழைத்தல்
2. இறைவனிடம் பாடல் பாடப் பறவையை அழைத்தல்
3. இறைவனுக்குத் தொண்டு புரியப் பறவையை அழைத்தல்
4. திருமாலின் திருத்தலப் பெருமையினைப் பறவைகள் வழி விளக்குதல்
5. எம்பெருமானிடம் பறவையைத் தூதாக அனுப்புதல்
6. திருமாலின் நிறத்தோடு பறவைகளின் நிறத்தை ஒப்பிடுதல்
7. திருமாலை வணங்காதவர் நிலையினைப் பறவைகளின் மூலம் விளக்குதல்

**திருமாலிடம் இசை பாடப் பறவையை அழைத்தல்**

இன்னிசை பாடி வழிபட்ட ஆழ்வார்கள், வண்டுகள் ரீங்காரமிடுவதைக் கொண்டு அவைகளும் பல இசைகளைப் பாடி, திருமாலைத் துதிப்பதாகப் பதிவு செய்துள்ளனர்.

**வண்டறையும் தண் துழாய் (நா.தி.பி.பா. 2289)**

**விரும்பி விண் மண்ணளந்த அஞ்சிறைய வண்டார்**

**கரும்பு துளையில் சென்றூத – அரும்பும் (நா.தி.பி.பா. 2304)**

திருத்துழாயில் உள்ள வண்டுகள் கண்ணன் குழலூதுவது போல சிறகுகளை விரித்துக் கொண்டு குழலில் சென்று ஊத அரும்புகள் மலர்கின்றன என்கிறார் பேயாழ்வார்.

பெரியாழ்வார் வண்டுகள் தாழை, துளசி, தாமரை போன்ற மலர்களிலுள்ள வண்ணப் பொடிகளை எல்லாம் தன் மேல் பூசிக்கொண்டு மனதை மயக்கும் யாழிசையை இசைக்கின்றன. மேலும் மாலை வேளையில் ஊர் ஊராகச் சென்று வண்டுகள் திருமாலின் பெருமையைப் பாடிக் கொண்டு மல்லிகைப் பூவாகிய வெண்சங்கை ஊதுகின்றன. வண்டுகள் இயல்பாக ரீங்காரமிட்டுச் சுற்றித்திரிகின்ற நிலையினை ஆழ்வார்கள், அவை எம்பெருமானின் புகழ் பாடித்திரிகின்றன என, எப்பொழுதும் திருமால் நினைவாக இருக்கின்ற ஆழ்வார்கள் அவை திருமாலின் புகழைப்பாடுவதாகப் பாசுரங்களில் பதிவுசெய்துள்ளனர். ஆண்டாள், குலசேகர ஆழ்வார் ஆகிய இருவரும் வண்டின் ரீங்காரத்தைக் காமரம் என்ற இசை பாடுவதாகச் சுட்டியுள்ளனர்.

வண்டுகள் இயல்பாக ரீங்காரமிட்டுச் சுற்றித்திரிகின்ற நிலை ஆழ்வார்களுக்கு அவை திருமாலின் பெருமையினைப் பல இன்னிசைகளில் பாடுவதாகத் தோன்றுகின்றது. அவர்கள் எப்போதும் திருமாலின் நினைவில் இருப்பதாக அவர்கள் காணும் அனைத்திலும் திருமாலைப் பார்க்கின்றனர்.

**விரிகுழல் மேல் நுழைந்த வண்டு இன்னிசைக்கும்**

**(நா.தி.பி.பா. 133)**

**தாழை மடலூடு ரிஞ்சித்தவள வண்ணப் பொடியணிந்து**
**யாழினிசை வண்டினங்கள் ஆளம் வைக்கும் அரங்கமே**

**(நா.தி.பி.பா. 407)**

பாதாள உலகிலுள்ள அசுரர்கள் அதிகமாகாதபடி சக்கராயுதத்தை விட்டு அழித்த ஜனார்த்தனனின் ஊர் தாழம்பூக்களிலுள்ள தேனை உறிஞ்சிக் கொண்டு அதன் பொடியைப்பூசிக் கொண்டு வண்டுகள் ரீங்கரிப்பது, யாழின் இசையினை இசைப்பது போலத் தோன்றும் திருவரங்கமாகும். திருமால் இருக்கின்ற திருத்தலங்கள் செழிப்புடன் இருப்பதால் அங்குள்ள மலர்களின் தேனை உண்டு வண்டுகள் மகிழ்கின்றன. எனவே திருமால் இருக்கின்ற இடந்தனிலே உள்ள உயிர்களுக்கு எப்பொழுதும் இன்பமே கிட்டும் என்பதை அழ்வார்கள் உணர்த்துகின்றனர்.

**ஊர் எல்லியம் போது இருஞ்சிறை வண்டு எம்பெருமான் குணம்பாடி**
**மல்லிகை வெண்சங்கூதும் மதிள் அரங்கம் என்பதுவே**

**(நா.தி.பி.பா. 409)**

மாலைப் பொழுதில் மல்லிகைப் பூ மலரும். அந்த நேரம் வண்டுகள் அம்மலரில் உள்ள தேனை உறிஞ்ச அப்பூக்களைச் சுற்றும். இந்நிகழ்வினை ஆழ்வார்கள், திருமால் வீற்றிருக்கக் கூடிய திருவரங்கத்தில் உள்ள வண்டுகள் மாலை நேரத்தில் எம்பெருமானின் புகழைப் பாடிக்கொண்டு வெண்சங்கிற்கு ஒப்பாக இருக்கும் மல்லிகையின் மொட்டைத் திறந்து சங்கை ஊதுவது போல உள்ளது அவற்றின் ரீங்காரம் என்கின்றார் பெரியாழ்வார். இவ்வாறாக ஆழ்வார்கள் திருமால் மீதுள்ள பக்தியினைப் பறவைகளின் வாயிலாக எடுத்துரைத்துள்ளனர்.

**போதலர் சாவில் புதுமணல் நாறப்**
**பொறிவண்டின் காமரம் கேட்டு (நா.தி.பி.பா. 547)**

**வண்டினங்கள் காமரங்கள் இசைபாடும் (நா.தி.பி.பா. 722)**

இப்பாடல்களில் துளசி, தாமரை, தாழை போன்ற புது மலர்களிலுள்ள மலர்கள் தேனைப் பருகி ரீங்காரமிட்டுக் கொண்டு சுற்றித் திரிவதை ஆழ்வார்கள் தாழை மடலிலுள்ள வண்ணப் பொடிகளை எல்லாம் தன்மேல் பூசிக்கொண்டு வண்டுகள் யாழின் இசையை இசைக்கின்றன எனவும் வண்டுகள் மாலையில் மலர்கள் மலரும் போது ரீங்காரத்துடன் அதிலுள்ள தேனை உறிஞ்சி வண்டுகள் ஊர் ஊராகச் சென்று பல ராகங்களில் இசைபாடி இறைவனை வழிபடுகின்றன எனவும் தம் பாடலில் பதிவு செய்துள்ளனர்.

**“துளையவிழ்பூஞ் சினைச்சுரும்பு யாழ்போல இசைப்பவும்”**[5]

**“வடிநரம்பு இசைபோல் வண்டொடுசுரும்பு ஆர்ப்பத்**
**தொடிமகள் முரற்சிபோல் தும்பிவந்து இமிர்தர**
**இயன்எழீஇ யவைபோல எவ்வாயும் இம்எனக்**
**கயன்அணி பொதும்பருள் கடிமலர்த் தேன்ஊத”**[6]

மரத்தில் வண்டுகளும் சுரும்புகளும் யாழ் போல் இசைத்து ஒலிக்கின்றன. தும்பிகள் விறலியைப் போல் பாடுகின்றன. சில வண்டுகள் குளங்கள் சூழ்ந்த மலர்ச் சோலையில் மலர்களையே வாத்தியங்களாகக் கொண்டு இம் என்னும் இசையை எழுப்புகின்றன என வண்டின் முரற்சியை இசையாகப் பதிவுசெய்துள்ளார் நல்லந்துவனார். சங்க இலக்கியப் புலவர்கள் முதல், இக்காலக் கவிஞர்கள் வரை வண்டின் முரற்சியை அவரவர் மனநிலைக்கு ஏற்றவாறு பாடியுள்ளனர்.

திருமால் மீது பக்தி கொண்ட ஆழ்வார்களுள், பெரியாழ்வார் வண்டின் ஓசையை யாழிசை என்றும், வெண்சங்கின் ஓசை என்றும் பாடியுள்ளார். அதனையே ஆண்டாளும், குலசேகர ஆழ்வாரும் காமரம் என்ற இசையோடு ஒப்பிட்டுள்ளனர். திருமால் மீதுள்ள பக்தியினால் வண்டின் இரைச்சல் கூட ஆழ்வார்களுக்கு இசையாகத் தோன்றியுள்ளதை இப்பாடல்கள் உணர்த்துகின்றன.

**இறைவனிடம் பாடல் பாடப் பறவையை அழைத்தல்**

வண்டுகள் பல இராகங்களால் இறைவனை வழிபடுதல் போல, குயில்கள் தம் இனிமையான குரலால் பாடி இறைவனை வணங்குவதாக ஆழ்வார்கள் கூறுகின்றனர். குயில் குரல் மிகவும் இனிமையானது; அதன் ஓசை கேட்போரை மனம் கவரக்கூடியது. எனவே அது கூவுவதைப் புலவர்கள் பாடுவதாகக் கூறுவர். அதனைப்போன்றே திருமால் மீது அன்புகொண்ட ஆழ்வார்கள் தன் பக்தியினைக் குயிலிடம் கூறி, நீ உன் இனிமையான குரலால் எம்பெருமானிடம் எடுத்துக்கூறி அவன் எங்களை ஆட்கொள்ளுமாறு செய்ய வேண்டும் என வேண்டுகின்றனர்.

ஆழ்வார்கள் இன்னிசை பாடும் குயிலே எனக் குயில் பற்றிய செய்தியினைப் பாசுரங்களில் பதிவு செய்துள்ளனர். ஆண்டாள், நாச்சியார்திருமொழியில் ‘‘குயிற்பத்து’’ என்னும் தலைப்பில் பாசுரம் பாடியுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

ஆழ்வார்கள் ஆண்களாக இருந்த போதிலும் இறைவன் மீது கொண்ட பக்தியினைக் காதலாக மாற்றித் தன் மனதைப் பெண்ணாகவும், திருமாலைக் காதலனாகவும் ஏற்று, காதல் பாடல்கள் அமைத்துள்ளனர். ஆண்டாள் பூமாதேவியின் மகளாகப் பிறந்து திருமாலையே கணவனாக அடைய எண்ணினார். எனவே இவருடைய பாடல்களில் உண்மையான நாயகன் — நாயகி பாவனை வெளிப்படும். தான் திருமால் மீது கொண்ட காதலைக் குயிலிடம் கூறி, நீ அவன் காதில் கேட்குமாறு கூவு அப்படியாவது அவன் என்மீது இரக்கம் கொள்ளட்டும் எனப் பலவாறு தன் நிலையினைக் கூறிக் குயிலிடம் புலம்புவதாகக் குயிற்பத்து முழுமையும் ஆண்டாள் அமைத்துள்ளார்.

**போதலர் காவில் புதுமணம் நாறப்**
**பொறிவண்டின் காமரம் கேட்டு உன்**
**காதலி யோடுடன் வாழ்குயிலே! என்**
**கருமாணிக் கம்வரக் கூவாய் (நா.தி.பி.பா. 547)**

இறைவன் மனிதனின் வேண்டுகோளுக்கு மட்டுமல்லாது அஃறிணை உயிராகிய பறவையின் வேண்டுகோளையும் கூடக் கேட்கின்றான். இறைவன் உயிர்களிடத்து வேறுபாடு இல்லாதவன். அவனுடைய திருவருள் பெறுவதற்கு உயர்திணை, அஃறிணை என்ற வேறுபாடு தேவையில்லை என்பது பதிவு செய்யப்பட்டுள்ளது. இறைவனிடம் அனைத்து உயிர்களும் சமம் என்பதை ஆழ்வார்கள் புலப்படுத்தியுள்ளனர்.

**கள்ளவழி செண்பகப் பூமலர் கோதிக்**

**களித்திசை பாடுங் குயிலே**

**மெள்ள இருந்து மிழற்றி மிழற்றாது என்**

**வேங்கட வன்வரக் கூவாய் (நா.தி.பி.பா. 546)**

சிறந்த பூக்கள் மலர்ந்து மணம் வீச, அதிலுள்ள தேனை உறிஞ்சிக் கொண்டு வண்டினங்கள் காமரம் இசைக்க, தேன் பெருகும் செண்பக மலரின் மடலைக் கோதிக் கொண்டு தன் பெடையுடன் இன்னிசைபாடும் குயிலே! அவனுடைய திருவுருவத்தை என்னிடம் காட்டாது என்னைக் கரைந்து போகும் படிச் செய்கின்ற அந்த மாதவனிடம் நீ மெள்ளச் சென்று மெதுவாகக் கெஞ்சியும், கொஞ்சியும் அவனுக்குப் புரியும்படித் திருத்தமாகப் பாடி கரிய மாணிக்கம் போன்ற திருமேனியையுடைய எம்பெருமான் என்னிடம் வரும்படி நீ கூவ வேண்டும்.

**மென்னடை அன்னம் பரந்து விளையாடும்**

**வில்லிபுத்தூர் உறை வான்தன்**

..........

**இன்னடி சில்லொடு பாலமு தூட்டி**

**எடுத்த என்கோலக் கிளியை**

**உன்னொடு தோழமை கொள்ளுவன் குயிலே**

**உலகளந் தான்வரக் கூவாய் (நா.தி.பி.பா. 549)**

மெதுவாக நடக்கும் அன்னப்பறவைகளே, நீங்கள் விளையாடுவதற்கு ஏற்ற இடமான ஸ்ரீவில்லிபுத்தூரில் இருக்கக்கூடிய வடபத்ரசாயியின் பொன்னான

திருவடிகளைக் காணவேண்டும் என்ற ஆசையினால் கெண்டைமீன் போன்ற எனது கண்கள் தூங்கவில்லை. குயிலே, இனிய சாதமும், பாலமுதும் ஊட்டி வளர்க்கப்பட்ட எனது அழகிய கிளியை உன்னோடு தோழமை கொள்ளச் செய்கிறேன். உலகளந்த அந்தப் பெருமான் என்னிடம் வந்து சேரும்படி கூவுவாயாக என ஆண்டாள் குயிலைத் திருமாலிடம் தூதாக அனுப்புகிறாா்.

**சார்ங்கம் வளைய வலிக்கும் தடக்கைச் சதுரன் பொருத்தமுடையன்**
**நாங்கள் எம் இல்லிருந் தொட்டிய கச்சங்கம் நானும் அவனும் அறிதும்**
**தேங்கனி மாம்பொழில் செந்தளிர் கோதும் சிறுகுயிலே! திருமாலை**
**ஆங்குவிரைந் தொல்லை கூகிற்றியாகில் அவனை நான் செய்வனகாணே**

**(நா.தி.பி.பா. 552)**

அழகிய குயில்கலே, வெயிலுக்கு அஞ்சி நிழலிலே மறைந்திருப்பதால் உனக்கு என்ன பெருமை. திருப்பாற்கடலில் பள்ளிகொண்டிருக்கும் அந்த பாரந்தாமனை என்னிடம் வரும்படிக் கூவினால் உனக்குப் புண்ணியமாவது கிடைக்கும். மேலும் இனிய மாம்பழங்களை எல்லாம் உண்டு அதன் சிவந்த துளிர்களை வாயலகால் கோதுகின்றாய், நீ தொலைவில் இருக்கும் எம்பிரானை விரைவில் வரும்படிக் கூவு, அவன் வந்தபின் உன்முன்னாலே அவன் படும் பாட்டைக் கவனி எனக் குயில்களிடம் ஆண்டாள் கூறுகின்றாா்.

**பைங்கிளி வண்ணன் சிரீதரனென்பது ஓர் பாசத்து அகப்பட்டிருந்தேன்**
**பொங்கொளி வண்டிரைக்கும் பொழில்வாழ் குயிலே! குறிக்கொண்டு இது நீ கேள்**
**சங்கொடு சக்கரத்தான் வரக் கூவுதல் பொன்வளை கொண்டு தருதல்**
**இங்குள்ள காவினில்வாழக்கருதில் இரண்டத் தொன்றேல் திண்ணம் வேண்டும்**

**(நா.தி.பி.பா. 553)**

பச்சைக்கிளியின் நிறம் கொண்ட ஸ்ரீதரனின் அன்பு வலையில் அகப்பட்டுக் கொண்டிருக்கின்றேன். உன்னுடைய குரலை ரசிக்கும் நிலையில் நான் இல்லை. என்னிடம் கூவி என்னை வருத்துவதைவிட, பரந்தாமனிடம் போய்க் கூவி அவனை இங்கு வரச் சொல், இல்லையேல் அவனது பிரிவுத் துயரால் உடல்

மெலிந்து கழன்று விழுந்த என் தங்க வளையலைத் தேடிக் கண்டுபிடித்துக் கொடு. இத்தோட்டத்தில் நீ வாழ நினைத்தால் இரண்டில் ஒன்றைச் செய்; இல்லையேல் உன்னை விரட்டி விடுவேன் என ஆண்டாள் குயிலிடம் கூறுகிறார்.

இப்பாடல்களில் ஆண்டாள் குயிலிடம் தன் அன்பினைத் திருமாலிடம் போய்க் கூறு என வேண்டுகிறார். இதன்மூலம் இறைவன் மனிதனின் வேண்டுகோளை மட்டும் அல்லாது அஃறிணையாகிய பறவையின் வேண்டுகோளையும் ஏற்றுக் கொள்கிறான். இறைவன் உயிர்கள் அனைத்தையும் ஒன்றாகக் கருதுகின்றான். உயர்திணை, அஃறிணை என்ற வேறுபாடு இல்லாதவன். அன்பை மட்டுமே எதிர்பார்க்கக் கூடியவன் என்பதை உணர்த்துவதற்காகவே குயிலிடம் தன் பக்தியினை வெளிப்படுத்துவதாக இப்பாடல்கள் அமைந்துள்ளன.

**என்நீர்மை கண்டு இரங்கி இதுதகாது என்னாத**
**எனநீர்மை முகில்வண்ணற்கு என்சொல்லியான் சொல்லுகேனோ?**
**நன்னீர்மை இனியவர்கண் தங்காதுஎன் றொருவாய்ச்சொல்**
**நன்னீல மகன்றில்காள் நல்கீரா (நா.தி.பி.பா. 2827)**

நீரில் வாழ்கின்ற அடர்த்தியான இறகுகளைக் கொண்ட நீலநிற மகன்றில் பறவைகளே, எனது உருகும் மனம் பற்றித் தெரிந்திருந்தும் இரக்கம் கொண்டு பிரிந்திருப்பது தகாது என்று எண்ணாத என் நீலமேக வண்ணருக்கு என்ன சொல்லி அனுப்புவேன். இப்படிச் செய்தால் இனி அத்தகையவரிடம் நல்ல பண்பானது தங்கியிராது என்றொரு வார்த்தையைமட்டும் அவரிடம் சொல்லுவீர்களா, மாட்டீர்களா எனத் திருமாலை அடையாத ஆண்டாளின் வருத்தத்தினை இப்பாடல் உணர்த்துகிறது.

**“பூஇடைப் படினும் யாண்டுகழிந் தன்ன**
**நீர்உறை மகன்றிற் புணர்ச்சி போல்”**[7]

மகன்றிற் பறவை என்ற நீர்வாழ்பறவை இணைந்தே வாழ்வன. தம்மிடையே ஒரு பூ விழுந்து இடைவெளி ஏற்பட்டாலும் ஓர் ஆண்டுகழிந்தது போன்ற

வருத்தம் அடையும் பறவை என்று சிறைக்குடி ஆந்தையார் குறிப்பிட்டுள்ளார். அத்தகைய பிரிவே அறியாத பறவைகளிடம் ஆண்டாள் தனது பிரிவுத் துன்பத்தை வெளிப்படுத்துவதாக இப்பாசுரம் அமைந்துள்ளது.

**திருத்தாய், செம்போத்தே**
**திருமாமகள் தன் கணவன்**
**மருத்தார் தொல்புகழ் மாதவனை வரத்**
**திருத்தாய் செம்போத்தே (நா.தி.பி.பா. 1942)**

**மல்லார்தோள் வட வேங்கடனை வரச்**
**சொல்வாய் பைங்கிளியே! (நா.தி.பி.பா. 1946)**

செம்போத்துப் பறவையே, பச்சைக் கிளியே மகாலெட்சுமியின் கணவனை, வாசனையுள்ள மலர்களை தரித்திருக்கும் மாதவனைத் தன்னிடம் வரும்படிக் கூவு என வேண்டுகின்றார் திருமங்கையாழ்வார். ஆழ்வார்கள் திருமால் மீது கொண்ட பக்தியினைப் பறவைகள் வழியாகப் புலப்படுத்தியுள்ளனர். மற்ற பாசுரங்களில் ஆழ்வார்கள் இறைவனை நாடிச் செல்வதாகப் பாடியுள்ளனர். ஆனால், பறவைகளைத் தூதாக அனுப்பும் இப்பாசுரங்களில் திருமாலையே தன்னிடம் வரும்படிப் பாடல் பாடியுள்ளனர்.

“ஆண்டாள் பிறந்து வளர்ந்த ஊரிலே பாடித் திரிகின்ற பறவைகள் கூட எம்பெருமான் மீது சிந்தனையைச் செலுத்தியவையாகவே இருக்கின்றன. சில கருங்குருவிகள் விடியற்காலையிலேயே எழுந்திருந்து கூட்டங் கூட்டமாகக் கூடி எம்பெருமானுடைய வரவுக்குக் கட்டியங் கூறுவன போலப் பண்ணிசைக்குமாம். அவர் தொடர்பான வார்த்தைகளையே சொல்லுமாம். பனிபடர்ந்த காலை வேளையில் பனியையும் குளிரையும் பொருட்படுத்தாமல் கரிய நிறத்தினையுடைய குருவிகள் ‘கீசு கீசு’ என்று எங்கும் ஒலிக்கும் ஒலிகளிலே இறைவனின் நாமத்தைக் கேட்கின்றாள் ஆண்டாள்”[8] என்ற கருத்தினைப் பதிவுசெய்துள்ளார் கே.ஏ மணவாளன்.

**இறைவனுக்குத் தொண்டு புரியப் பறவையை அழைத்தல்**

இறைவனுக்குத் தொண்டு புரிவதையே பெரும் பேறாகக் கொண்டவர்கள் ஆழ்வார்கள். இறைத் தொண்டில் சிறந்து விளங்கும் இவர்கள் தங்களோடு இணைந்து பறவையைத் தொண்டு புரிய அழைக்கின்றனர்.

கண்ணனின் குழந்தைப் பருவத்தை, பிள்ளைத்தமிழாகப் பாடிய பெரியாழ்வார், அழகின் வடிவாகிய கிருட்டிணனின் கூந்தலை வார வாராய் எனக் காக்கையை அழைக்கின்றார். பெரியாழ்வார் தம் திருமொழியில் கண்ணனின் சிறப்பினைக்கூறி இத்தகைய சிறப்புடைய எம்முடைய கண்ணனுக்குக் குழல் வாரக் காக்கையை வா எனவும், கண்ணன் மாடுகளை மேய்க்கக் கோல் கொண்டு வரக் கேட்டும் இருநிலைகளில் பாசுரங்கள் பாடியுள்ளார்.

**பேயின் முலையுண்ட பிள்ளை இவன் முன்னம்**
**மாயச் சகடும் மருதும் இறுத்தவன்**
**காயா மலர்வண்ணன், கண்ணன் கருங்குழல்**
**தூய்தாக வந்து குழல்வாராய், அக்காக்காய்!**
**தூமணி வண்ணன் குழல் வாராய், அக்காக்காய்**

**(நா.தி.பி.பா. *163*)**

திருப்போர் என்ற தலத்தில் பள்ளிகொண்டிருப்பவன் எங்கள் குலத்தில் உள்ள அனைவரையும் அடிமைகொண்ட மாதவன். நீலோற்பல மலர்போன்ற கண்ணனின் கரிய கூந்தலை நீ வந்து நன்றாக வாரவேண்டும். நீண்ட கருமையான மேகம் போன்ற மேனிநிறம் கொண்ட கண்ணனது குழல்வார வாராய் காக்கையே! எனப் பெரியாழ்வார் காக்கையை அழைக்கின்றார்.

**கண்ணனை வந்து குழல் வாராய், அக்காக்காய்**
**கார்முகில் வண்ணன் குழல்வாராய் அக்காக்காய் (நா.தி.பி.பா. *164*)**

**பிள்ளையை வந்துகுழல் வாராய், அக்காக்காய்**
**பேய்முலையுண்டான் குழல் வாராய், அக்காக்காய் (நா.தி.பி.பா. *165*)**

**அற்றைக்கும் வந்து குழல் வாராய், அக்காக்காய்**
**ஆழியான் தன்குழல் வாராய், அக்காக்காய்** **(நா.தி.பி.பா. 166)**

**வண்டொத் திருண்டகுழல் வாராய், அக்காக்காய்**
**மாயவன் தன்குழல் வாராய், அக்காக்காய்** **(நா.தி.பி.பா. 168)**

**தந்தத்தின் சீப்பால் குழல் வாராய், அக்காக்காய்**
**தாமோதரன் குழல் வாராய், அக்காக்காய்** **(நா.தி.பி.பா. 169)**

**பொன்னின் முடியினைப் பூவணை மேல் வைத்து**
**பின்னே இருந்துகுழல் வாராய், அக்காக்காய்**
**பேர் ஆயிரத்தான் குழல் வாராய், அக்காக்காய்** **(நா.தி.பி.பா. 171)**

காக்கையே இவன் பூதனை என்ற அரக்கியிடம் பாலோடு சேர்த்து அவள் உயிரைக் குடித்தவன். இரட்டை மருதங்களை முறித்தவன். உறியின் மேல் வைத்த வெண்ணெயை அப்படியே உண்டவன். நீர் நிலைகளில் இரை தேடித் திரியும் கொக்கின் வடிவாக வந்த பகாசுரனை அழித்தவன். கன்றாக வந்த அசுரனை அழித்தவன். இத்தகைய சிறப்புக்களையுடைய தாமோதரனின் கூந்தலில் புளிப்பழத்தைப் போட்டுத் தேய்த்ததால் கூந்தல் சிக்காகி உள்ளது. அதனால் நீ ஏதோ உன் மொழியில் பேசிக் கொண்டு மூதாதையர்களுக்காகக் கொடுக்கும் திவசத்தில் இடும் சோற்றுக்காகவும் பிசாசுகளுக்குப் போடும் நீர் சோற்றை உண்பதற்காகவும் சுற்றித்திரியாமல், சிக்கெடுக்க, தந்தத்தால் ஆன சீப்பு வைத்திருக்கின்றேன். அந்தச் சீப்பினால் சிக்கெடுத்து, கூந்தலை வாரிவிட வா எனப் பெரியாழ்வார் காக்கையை அழைக்கின்றார். இதன்மூலம் இறைவனுக்குத் தொண்டு புரிவதற்கு உயிர்ப் பாகுபாடுகள் தேவையில்லை என்பதை உணர்த்துகின்றார். மனிதர்கள் காக்கைகளைப் போல தேவையில்லாத பேச்சுக்களை எல்லாம் பேசிக்கொண்டு பொழுதைக் கழிக்காது இறைத்தொண்டின் மீது கவனம் செலுத்தினால் வீடு பேற்றிற்குரிய அருள் கிட்டும் என்பதைக் காக்கைக்கு உணர்த்துவதன்மூலம் அடியார்களுக்கு எடுத்துரைக்கின்றார்.

கண்ணன் கோகுலத்தில் தன் நண்பர்களுடன் இணைந்து ஆனிரைகளை மேய்த்தான். அவன் பசுக்களின் தலைவன். அவ்வாறு அவன் பசுக்கூட்டங்களை மேய்க்கச் செல்கிறான் காக்கையே அவனுக்கு ஒரு கோல் கொண்டு வா எனப் பெரியாழ்வார் காக்கையை அழைக்கின்றார்.

**வேலிக் கோல் வெட்டி விளையாடு வில்லேற்றி**
**தாலிக் கொழுந்தைத் தடங்கழுத்தில் பூண்டு**
**பீலித் தழையைப் பிணைத்துப் பிறகிட்டு**
**காலிப்பின்ட போவாற்கோர் கோல் கொண்டு வா**
**கடல்நிற வண்ணற்கோர் கோல் கொண்டு வா (நா.திபிபா. 172)**

**அங்கம் உடைய தோர் கோல் கொண்டு வா**
**அரக்கு வழித்ததோர் கோல் கொண்டு வா (நா.திபிபா. 173)**

**சிறுக்கன்று மேய்ப்பாற் கோர் கோல் கொண்டு வா**
**தேவ பிரானுக்கோர் கோல் கொண்டு வா (நா.திபிபா. 174)**

**கன்றுகள் மேய்ப்பது ஓர் கோல் கொண்டு வா**
**கடல் நிற வண்ணற்கோல் கொண்டு வா (நா.திபிபா. 175)**

**தேரொன்றை ஊர்ந்தாற் கோர் கோல் கொண்டு வா**
**தேவ பிரானுக்கோர் கோல் கொண்டு வா (நா.திபிபா. 176)**

**கோலப்பிரானுக்கோர் கோல் கொண்டு வா**
**குடந்தைக் கிடந்தாற்கோர் கோல் கொண்டு வா (நா.திபிபா. 177)**

**மற்றைக் கண் கொள்ளாமே கோல் கொண்டு வா**
**மணிவண்ண நம்பிக்கோர் கோல் கொண்டு வா (நா.திபிபா. 178)**

**மின்னும் முடியற்கோர் கோல் கொண்டு வா**
**வேலையடைத்தாற்கு ஓர் கோல் கொண்டு வா (நா.திபிபா. 179)**

**மின்னலங் காரற்கோர் கோல் கொண்டு வா**

**வேங்கட வண்ணற்கோர் கோல் கொண்டு வா (நா.தி.பி.பா. 180)**

வேலியிலுள்ள கோலை வெட்டி அதை விளையாடுகின்ற வில்லாக்கி, நாண் ஏற்றி, ஆமைத் தாலியைத் தன் கழுத்திலே அணிந்துகொண்டு, மயில் தோகைகளை ஒன்று சேர்த்துப் பின்பக்கத்தில் கட்டிக் கொண்டு, பசுக் கூட்டங்களின் பின்னால் போக விரும்பும் இந்தக் கடல் வண்ணனுக்கு ஒரு கோல் கொண்டு வந்து கொடு. தேவர் கோமகனுக்கு ஒரு கோல் கொண்டு வா எனக் காக்கையை கோல் கொண்டு வரக் கேட்கின்றார் பெரியாழ்வார்.

திருமாலுக்குக் கைங்கரியம் செய்வதையே தொழிலாகக் கொண்ட ஆழ்வார் பறவையாகிய காக்கையை நீ தேவர்களுக்குத் தலைவனான திருமாலுக்குத் தொண்டு செய்வதால் உனக்கு அவன் அருள் கிட்டும். எனவே உன்னால் முடிந்த தொண்டினைச் செய்து அவன் அருளைப் பெற்றுக் கொள் எனக் கூறுவது போல அமைந்துள்ளது.

இறைவனுக்குத் தொண்டு புரிய உயிர்ப் பாகுபாடு தேவையில்லை. எனவே அனைவரும் அவனுக்குத் தொண்டு புரிந்து அவன் அருள் பெற வேண்டும் என்பதைப் பறவைகள் மூலமாக வெளிப்படுத்தியுள்ளார்.

இறைவனைப் போற்றிப் பாடினால் மட்டுமே இறைவனை அடைய முடியும் என்பதையும் எம்பிரானுக்கு கைங்கரியம் செய்து கூட அவனை அடைய முடியும் என்பதையும் உலகிற்கு உணர்த்தியவர்கள் ஆழ்வார்கள். இறைத்தொண்டின் மேன்மையை உணர்த்துவதே ஆழ்வார்களின் நோக்கமாகும். எனவே அதனைப் பறவைகளின் மூலமாகப் புலப்படுத்தியுள்ளனர்.

### திருமாலின் திருத்தலப் பெருமையினைப் பறவைகள் வழி விளக்குதல்

ஒருவரின் சிறப்பினைக் கூறும்பொழுது அவரின் வாழ்விடத்தைச் சிறப்பித்து, இத்தகைய இயற்கை எழில் சூழ்ந்த அழகிய இடத்தில் இவர் வாசம் செய்கிறார் என அவருடன் சேர்த்து அவரின் வாழ்விடத்தைப் புகழ்வது சங்க இலக்கியம் முதல் அனைத்து இலக்கியங்களிலும் பின்பற்றப்பட்டு வருகிறது.

சங்க இலக்கியத்தில் தலைவனின் பெருமையினைச் சுட்டி இத்தகைய சிறப்புமிக்க ஊரினை உடைய தலைவன் என்பர் புலவர். சங்க இலக்கிய அக மரபினைப் பின்பற்றியே பின் பக்தி இலக்கியங்கள் தோன்றின. இறைவனின் பெருமையினை விளக்க எண்ணிய இறைத் தொண்டர்கள் இறைவன் வீற்றிருக்கின்ற இடம் இத்தகைய இயல்புகளை எல்லாம் உள்ளடக்கியதாக விளங்கும் என இறைவனின் அருள் தன்மையினை அங்கே பதிவு செய்தனர். சைவர்களும், வைணவர்களும் இறைவன் வீற்றிருக்கின்ற ஒவ்வொரு திருத்தலத்தின் பெருமையினையும் பாடியுள்ளனர். ஆழ்வார்களும் நாலாயிரத் திவ்ய பிரபந்தத்தில் திருமாலின் திருத்தலங்கள் பற்றிய பெருமையினைப் பதிவு செய்துள்ளனர்.

திருமாலின் திருத்தலத்திலுள்ள இயற்கை அமைப்பு, அங்குள்ள மக்களின் அன்பு நிலை, உறவு முறைகள் எனத் திருமாலின் திருத்தலங்களிலுள்ள ஒவ்வொரு நிலையினையும் பறவையின் செயல்கள்வழிப் புனைந்துள்ளனர்.

**இயற்கை எழில்**

**குரவ மேகமழும் குளிர் பொழி லூடு குயிலொடு மயில்கள் நின்றால**
**இரவியின் கதிர்கள் நுழைதல் செய்தறியாத் திருவல்லிக் கேணிக் கண்டேனே**

**(நா.தி.பி.பா. 1074)**

அல்லி மலர்கள் மலர்ந்து மணம் வீசிக் கொண்டிருக்கும் சோலைக்குள்ளே வண்டுகள் தேனை உறிஞ்சி ரீங்காரம் இசைக்க, குயில்கள் பாடுவதற்கு ஏற்ப ஆடும் மயில்கள் நிறைந்து சூரியனின் ஒளிக்கதிர்கள் உள்ளே நுழைந்தறியாத சோலைகளைக் கொண்ட திருவல்லிக்கேணியில் எம்பெருமான் வீற்றிருக்கின்றான்.

**மின்னினன்ன நுண்மருங்குல் வேயேய் தடந்தோள் மெல்லியற்கா**
**மன்னு சினத்த மழவிடைகள் ஏழ் அன்றடர்த்த மாலதிடம்**
**மன்னுமுது நீரரவிந்த மலர்மேல் வரிவண்டிசைபாட**
**புன்னை பொன்னேய் தாதுதிர்க்கும் புள்ளிம் பூதங்குடிதானே**

**(நா.தி.பி.பா. 1353)**

நப்பின்னையின் பொருட்டு ஏழுகாளைகளையும் வென்ற திருமால் குடிகொண்டுள்ள இடம் நீர்நிலைகளிலுள்ள தாமரைப் பூக்களிலே வரியுள்ள வண்டுகள் இசைபாட, புன்னை மரங்கள் பொன்னிறமான மகரந்தத் தூகள்களை உதிர்க்கும் புள்ளம்பூதங்குடி என்னும் திருத்தலத்தில் குடிகொண்டிருக்கின்றான்.

**நீரில் பணைத்த நெடுவாளைக்கு அஞ்சிப் போன குருகினங்கள்**
**ஆரல் கவுளோடு அருகணையும் அணியார் வயல்சூழ் அழுந்தூரே**

**(நா.தி.பி.பா. *1589*)**

**செய்யார் ஆரல் இரைகருதிச் செங்கால் நாரை சென்றணையும்**
**பொய்யா நாவின் மறையாளர் புள்ளம் பூதங்குடிதானே (நா.தி.பி.பா. *1352*)**

நீரிலுள்ள பெரிய வாளை மீனுக்கு அஞ்சி ஓடின குருகினங்கள் சிறிய ஆரல் மீன்களைக் கதுப்பிலே கௌவிக் கொண்டுதிரியும். சிவந்த கால்களையுடைய நாரைகள் வயல்களிலுள்ள ஆரல் மீன்களைத் தேடிச் செல்லும் இடம், பொய்யறியாத நாவினால் வேதங்களை ஓதும் வைதிகர்கள் குடியிருக்கும் புள்ளம் பூதங்குடி.

இத்தகைய திருத்தலங்களுக்கெல்லாம் சென்று அங்குள்ள கோவிந்தனை வழிபடுங்கள். அவ்வாறு செய்தால் துயரங்கள் அழியும், பாவங்கள் நில்லாது ஓடிப்போகும். திருமாலின் அருள் உங்களை வந்தடையும் என்கிறார் ஆழ்வார்.

**அடியார் செல்லும் திருத்தலம்**

திருமாலின் திருத்தலங்கள் இயற்கை அழகோடு என்றும் அருள் நிறைந்ததாகவும் எளியவர்களும் சென்று வணங்கும் சிறப்புடையதாகவும் விளங்கும் என்று கூறிய ஆழ்வார், திருமால் இருக்கின்ற சிங்கவேள் குன்றம் என்னுமிடம் கொடுமையானதாகவும் இருக்கும் என்பதையும் சுட்டியுள்ளார்.

**கவ்வு நாயும் கழுகும் உச்சிப் போதொடுகால் சுழன்று**
**தெய்வமல்லால் செல்ல ஒண்ணாச் சிங்கவேள் குன்றமே**

**(நா.தி.பி.பா. *1011*)**

இரணியன் என்ற எதிரியின் உடலைக் கூரிய நகங்களால் கிழித்து அவனது உயிரைப் பிரித்த நரசிம்மமூர்த்தி அருள் புரியும் இடம், அனைவரையும் கடிக்கும் நாய்களும், கொத்தும் கழுகுகளும், அனல் காற்று வீசும் கொடுமையான திருச்சிங்கவேள் குன்றமாகும். இந்தத் திருத்தலத்திற்கு சாரணர்களால் செல்ல முடியாது. பிழையின்றி வேதங்களை ஓதும் அடியவர்கள் மட்டுமே செல்ல முடியும் என்ற செய்தியினைக் குறிப்பிட்டுள்ளார்.

**பறவையின் அன்பு நிலை**

திருமால் திருத்தலத்தில் வாழ்கின்ற பறவைகளின் வாழ்வில் மனித இயல்புகளை ஏற்றிப் பாடியுள்ளார் ஆழ்வார். பறவைகளின் அன்பில் காதல் உணர்வையும், தாய்மையுணர்வையும் வெளிப்படுத்தியுள்ளார்.

**மாதவிப் பந்தலில் பெடைவரப் பிணியவிழ் கமலத்து**
**தென்னஎன்று வண்டு இன்னிசை முரல்தரு திருவயிந்திரபுரமே**
**(நா.தி.பி.பா. 1149)**

**சிறை வண்டு களிபாடும் வயல் சூழ் காழிச்**
**சீராமவிண்ணகரே சேர் மினீரே (நா.தி.பி.பா. 1186)**

மின்னும் சுதர்சனத்தைத் திருக்கையில் உடையவனும், திருமகள் வாசம் செய்யும் திருமார்பையுடையவனும் நான்கு வேதங்களில் பொருளாக இருப்பவனுமான பரந்தாமன் உறையும் இடம், வண்டுகள் மலைப்பக்கத்திலுள்ள குருக்கத்திப் பந்தலில் இருந்து பெடைகள் வருவதற்காகக் கமல மலரில் இருந்து கொண்டு தென்னந்தென என்று இன்னிசைக் குரல் எழுப்புகின்றன. மேலும் வண்டுகள் செங்கழுநீர்ப் பூக்களில் தம் துணையோடு சேர்ந்திருந்து தாமரை மலரில் புகுந்து தேனை உண்டு அங்கேயே உறங்கி, பின்னர் தாழை மடல்களிலுள்ள மகரந்தத் தூள்களில் புரண்டு களித்து ரீங்காரமிசைக்கும் காழிச் சீராம விண்ணகரம்.

“திருவயிந்திரபுரத்தில் தாமரை மலர்கள் நிறைய மலர்ந்திருக்கின்றன. அம்மலரில் வண்டுகள் தம் பெடைகளுடன் கூடியிருந்து தேனைப் பருகிக்

களித்து இனிய பண்ணைப் பாடுகின்றன. இரண்டிற்கும் இடையே ஊடல் வந்துவிட பெண்வண்டுகள் தம் துணையைவிட்டு நீங்கிச் சென்று அழகிய சோலைகளுக்கிடையே நுழைகின்றன. அங்கு குருக்கத்திக் கொடிகள் ஒன்றோடொன்று பின்னப் பட்டிருக்கின்றன. அது பந்தல் போலக் காணப்படுகிறது. சோலையில் நுழைந்த வண்டுகள் அப்பந்தல்களில் ஒளிந்து கொள்கின்றன. பெண் வண்டுகளின் பிரிவாற்றா நிலையிலுள்ள ஆண் வண்டுகள் ஊடல் தீர்ந்து ஓடி வருமாறு அழைப்பது போலப் பண் எழுப்புகின்றன. அப்போது கேட்கும் இன்னிசை, ஆழ்வாருக்கு அவை தென்னா என்று ஆண்டவனைப் பாடி வணங்குவதாக இருக்கிறது. ஊடல் தீர்க்க அவை கூவியழைக்கும் ஓசைகூட திருமாலின் பக்தி வெள்ளத்தில் மூழ்கித் திளைக்கும் ஆழ்வாருக்கு அவை திருமாலின் நாமத்தைக் கூறுவது போலத் தோன்றுகிறது''[9] என து.லலிதா குறிப்பிட்டுள்ளார்.

**பெடை யோடு செங்கால் அன்னம் துகைப்பத்**
**தொகைப் புண்டரீகத்திடைச் செங்கழுநீர்**
**மடையோட நின்று மதுவிம்மும் நாங்கூர்**
**மணிமாடக் கோயில் வணங்கு என் மனனே (நா.தி.பி.பா. *1226*)**

**அன்னம் பெடையொடும் சேரும் வயல் வெள்ளியங்குடியதுவே**
**(நா.தி.பி.பா. *1346*)**

பிரகாசமான சுதர்சனத்தையும், ஒப்பற்ற பஞ்சசன்னியத்தையும் உடையவனே என வானோர் போற்றும் இடம் திருநாங்கூர் மணிமாடக் கோயிலாகும். அங்குள்ள அழகிய தடாகத்தில் சிவந்த காலுடைய ஆண் அன்னம் பெண் அன்னத்தோடு கூடித் தாமரைப் பூக்களை மிதிக்க, அம்மலர்களிலிருந்து பெருகும் தேன் அருகிலுள்ள செங்கழுநீர்ப் பூக்களின் இதழ்களிலே ஓடிப் பாயும். அத்தகைய சிறப்புடைய தலத்துப் பெருமானை மனமே நீ சேவிப்பாயாக.

**சூல்முகமார் வளையளைவாய் உகுத்தமுத் தைத்**
**தொல்குருகு சினையெனச் சூழ்ந்தியங்க எங்கும்**

**தேன்முகமார் கமலவயல் சேல்பாய் காழிச்**

**சீராம விண்ணகரே சேர்மினீரே (நா.திபிபா. 1179)**

**தக்க மரத்தின் தாழ்சினை யேறித் தாய்வாயில்**

**கொக்கின் பிள்ளை வெள்ளிறவுண்ணும் குறுங்குடியே**

**(நா.திபிபா. 1798)**

உழும் வயல்களிலே காளைகள் ஓடுவதால், நன்கு விளைந்த சங்குகள் வளைகளில் ஈன்ற முத்துக்களை கொக்குகள் தங்களுடைய முட்டைகள் என மயங்கி அந்த முத்துக்களைச் சுற்றும் காழிச் சீராம விண்ணகரம். அன்புப் பேடையோடு கூடி, குஞ்சுகளுக்காக இரை தேடிச் செல்லும் பறவை விளைநிலங்களில் சிறு கயல் மீன், வெள்ளிரால் மீன்களைத் தேடி கொண்டுவந்து குஞ்சுகள் ஏறத்தகுந்த தாழ்ந்த கிளையில் அமர்ந்து தன்வாயிலுள்ள மீனைக் குஞ்சுகளுக்கு ஊட்டும் சிறந்த திருக்குறுங்குடியில் உள்ள எம்பெருமாளை வணங்குங்கள்.

**புள்ளுப் பிள்ளைக்கிரை தேடிப் போனகாதல் பெடையோடும்**

**அள்ளல் செறுவில் கயல்நாடும் அணியார் வயல்சூழ் அழுந்தூரே**

**(நா.திபிபா. 1591)**

அன்புப் பெடையோடு கூடி, குஞ்சுகளுக்காக இரைதேடிச் செல்லும் பறவை, சகதியாகிய விளைநிலங்களில் சிறிய கயல் மீன்களில் தேடியெடுக்கும் வளமான வயல் சூழ்ந்த திருவழுந்தூரிலே என்னெஞ்சில் குடியிருக்கும் எம்பெருமான் நித்தியவாசம் செய்கின்றார்.

**“உடங்குஇரை தேரும் தடந்தாள் நாரை**

**ஐய சிறுகண் செங்கடைச் சிறுமீன்**

**மேக்குஉயர் சினையின் மீமிசைக் குடம்பைத்**

**தாய்ப்பயிர் பிள்ளை வாய்ப்படச் சொரியும்”[10]**

சிவந்த நீண்ட கால்களை உடைய நாரை தன் பெடையோடு கூடிச் சென்று இரையைத் தேடுவதற்குத் துழாவும். அந்த நாரை மெல்லிதான சிவந்த கடைக்கண் கொண்ட சிறிய மீன்களைப் பிடித்து கிளைகளின் மேல் உள்ள கூட்டில் இருக்கும் குஞ்சுகளைக் கூவி அழைத்து அக் குஞ்சுகளின் வாயில் மீனைக் கொடுக்கும். அத்தகைய ஊரினையுடைய தலைவன் எனத் தலைவனின் இருப்பிடத்தைப் பிசிராந்தையார் குறிப்பிடுவது ஒப்பிடத்தக்கதாகும்.

**“நிலம்தாழ் மருங்கின் தெண்கடல் மேய்ந்த**
**விலங்குமென் தூவிச் செங்கால் அன்னம்**
**பொன்படு நெடுங்கோட்டு இமயத்து உச்சி**
**வான்அர மகளிர்க்கு மேவல் ஆகும்**
**வளராப் பார்ப்பிற்கு அல்குஇரை ஒய்யும்”**[11]

எனத் தலைவனின் உள்ளத்தின் வருத்தத்தைக் குஞ்சுகளுக்காகத் தெற்கே கடலில் தேடிய இரையை இமயமலைச் சாரலுக்குக் கொண்டு செல்லும் அன்னங்களுக்கு ஒப்பிடுவர் பரணர். சங்க இலக்கியத்தில் இப்பறவைகள் தலைவனின் நாட்டின் வளத்திற்கும், அவனது மனநிலைக்கும் ஒப்பாகக் கூறப்பட்டுள்ளதைப் போலத் திருமாலின் திருத்தலப் பெருமையினை ஆழ்வார்கள் பறவைகளின் வழியாகப் புனைந்துள்ளனர்.

இப்பாடல்களில் பறவைகள் தங்களது துணையையும், குஞ்சுகளையும் பாதுகாக்கின்ற இத்தகைய சிறந்த தலங்களிலுள்ள எம்பெருமானை வணங்குங்கள் என்கின்றனர் ஆழ்வார்கள். திருமால் உறைகின்ற இடம், இயற்கை எழில் மிகுந்தும், அன்பும் அருளும் நிறைந்ததாகவும் இருக்கும். அங்குள்ள மனிதர்கள் மட்டுமல்லாமல் பறவைகளும் அன்பின் வடிவாகத் திகழ்கின்றன. இத்தகைய இடங்களுக்கு எல்லாம் சென்று எம்பெருமானை வழிபட்டால் மனிதப் பிறவி முழுப்பயனையும் பெறும் என்பதைப் பறவைகளின் புனைவுகள்வழி ஆழ்வார்கள் எடுத்தியம்பியுள்ளனர்.

**பிரிவுத் துயரத்தைப் பறவைகளின்வழி விளக்குதல்**

“வேதங்களில் குறிப்பிடப் பெறும் பக்தி ஆழ்வார்களிடம் கால முறையில் வளர்ச்சியுற்ற நிலையினை அறிய முடிகின்றது. இவர்கள் எம்பெருமான் மீது கொள்ளும் காமம் பகவத்விஷயகாமம் என்று வழங்கப்பெறும். இவர்கள் மாதவன் மீது கொள்ளும் காமம் மற்றவர்கள் மங்கையர் மீது கொள்ளும் காமத்தினின்றும் வேறுபட்டது. ஆயினும் சிற்றின்ப அநுபவமாகிய காதலுக்குக் கூறப்பெறும் அகப்பொருள் துறைகள் யாவும் பேரின்ப அநுபவமாகிய இந்த பகவத் விஷயகாமத்திற்கும் கூறப்பெறும். சிற்றின்ப அநுபவத்திற்குக் கொங்கை முதலியன சாதனமாக இருப்பவை போல் பகவத் விஷயாநுபவத்திற்கும் பரபக்தி, பரஞானம், பரமபக்தி என்பவை இன்றியமையாதனவாக இருப்பதால் அவையே கொங்கை முதலான சொற்களின் வாயிலாக அருளிச் செயல்களில் கூறப் பெறுகின்றன என்று சமயச் சான்றோர்கள் கொள்வர்”[12]

| | | |
|---|---|---|
| பரபக்தி | — | எம்பெருமானை நேரில் காணவேண்டும் என்ற ஆவல் |
| பரஞானம் | — | எம்பெருமானை நேரில் காணல் |
| பரமபக்தி | — | எம்பெருமானை மேன்மேலும் இடையறாது அநுபவிக்க வேண்டும் என்னும் ஆவல். |

“காதல் சுவையின் தொடர்பு சிறிதுமின்றியே பக்திச் சுவையின் அடிப்படையாகவே பாசுரங்கள் அருளிச் செய்தல் கூடும். அங்ஙனமிருக்க காதல் சுவையையும் கலந்து பாசுரங்கள் அருளிச் செய்யப் பெற்றிருப்பதற்குக் காரணம் என்ன? உடல் நலத்திற்குக் காரணமான வேப்பிலை உருண்டையை உட்கொள்ள வேண்டியவர்கட்கு வெல்லத்தை வெளியில் பூசி உண்பிப்பது போலவும், கொயினா மாத்திரைகட்குச் சருக்கரை பாகு பூசி இனிப்புச் சுவையை ஊட்டி உண்பிப்பது போலவும் சிற்றின்பம் கூறும் வகையால் பேரின்பத்தை நிலை நாட்டுகின்றனர் என்று பெரியோர்கள் பணிப்பர். ஆழ்வார்களின் முறுகிய பக்தி நிலையை உணர்த்துவதற்கேற்ற ஓர் இலக்கிய மரபு இது என்பர்”.[13]

“ஆழ்வார்கள் எம்பெருமானின் நினைவுகளிலிருந்து சற்றும் மாறாத மனம் படைத்தவர்கள். பிரித்தாலும் அவன் திருவுள்ளப்படியே பிரிந்திருக்கிறோம், சேர்ந்தாலும் அவன் திருவுள்ளப்படியே மீண்டும் அவனைச் சேர்வோம் என்றெண்ணி இந்தப் பிரிவானது எப்போது முடியுமென்று பிரிவுத் துன்பத்தில் ஆழ்ந்து தலைவனை விட்டுப் பிரிந்து தலைவி காத்திருப்பதைப் போன்று இறைவனது பேரருளுக்குக் காத்திருப்பவர்கள் பிரிவுக் காலம் நீண்டு கொண்டே சென்றால் அதைத் தாங்க மாட்டாமல் எம்பெருமானோடு தர்க்க வாதம் புரியவும் தயங்காதவர்கள்.”[14]

திருமால் மீது காதல் கொண்ட ஆழ்வார்கள் அவனை அடைய முடியாத நிலையில் பிரிவு வேதனையால் வாடுவதையும், பசலை பாய்ந்து உடல் மெலிந்துள்ள நிலையினையும் தன் விரகதாபத்தினையும் நாலாயிரத்தில் பதிவு செய்துள்ளனர். எம்பெருமானிடம் ஆழ்வார்கள் கொண்ட அன்பினைப் பறவைகளின் வாயிலாக எடுத்தியம்பியுள்ளதைப் பாசுரங்கள் எடுத்துரைக்கும்.

**நுமரோடும் பிரியாதே, நீரும்நும், சேவலுமாய்**
**அமர்காதல் குருகினங்காள் (நா.தி.பி.பா. 3740)**

**தகவன்று என்று உரையீர்கள் தடம்புனல்வாய் இரைதேர்ந்து**
**மிக இன்பம் படமேவும் மெல்நடைய அன்னங்காள்**
**மிகமேனி மெலிவுஎய்தி மேகலையும் ஈடுஅழிந்து என்**
**அகமேனி ஒழியாமே திருமூழிக் களத்தார்க்கே (நா.தி.பி.பா. 3748)**

காதல் பறவைகளான குருகுக் கூட்டங்களே, அன்னங்களே நீங்கள் உங்கள் சேவலுடன் பிரியாது ஒன்றுபட்டுள்ளீர். நீங்கள் திருமூழிக்களத்தில் உறையும் பகவானிடம் சென்று ஆபரணங்கள் பூண்ட என் மார்பகங்கள் நிறம் மாறி பிரிவுத் துயரால் பசலை படர்ந்து, என் மேனி மிகவும் இளைத்து இடுப்பில் அணியும் ஒட்டியாணம் கழன்று விழுகிறது. ஆகையால் என் ஜீவன் அவள் நினைவால் முடிந்து போகும் முன் அவனிடம் போய் என் நிலையினை உணர்த்துங்கள்

என்கிறார் ஆழ்வார். "அன்னங்கள் ஆணும் பெண்ணும் ஒன்றையொன்று விட்டுப் பிரியாதிருக்கும் இயல்பின என்பதை மருதக்கலியில்,

**மணிநிற மலர்பொய்கை மகிழ்ந்தாடும் அன்னந்தன்**
**அணிமிகு சேவலை யகலடை மறைத்தெனக்**
**கதுமெனக் காணாது கலங்கியம் மடப்பெடை**
**மதிநிழல் நீருட்கண் டதுவென உவந்தோடித்**
**துன்னத்தன் எதிர்வரூஉந் துணைகண்டு மிகநாணிப்**
**பன்மலர் இடைப்புகூஉம் பழனஞ்சேர் ஊர்**

என அன்னத்தின் ஓவியம் புனையப்பட்டுள்ளதை க. ரத்னம் பதிவுசெய்துள்ளார்.[15]

**விளரிக் குரல் அன்றில் மென்பெடை மேகின்ற முன்றில் பெண்ணை**
**முளரிக் குரம்பை இதுஇது வாக முகில் வண்ணன் பேர்**
**கிளரிக் கிளரிப் பிதற்றும் மெல் லாலியும் நைவும் எல்லாம்**

**(நா.தி.பி.பா. 2560)**

**முன்னியபெண் ணைமேல் முள்முளரிக் கூட்டகத்துப்**
**பின்னு மவ்வன்றில் பெடைவாய்ச் சிறுகுரலும்**
**என்னுடைய நெஞ்சுக்கோ ஈர்வாளாம் என் செய்கேன்.**

**(நா.தி.பி.பா. 2757)**

**பொங்கார் மெல்லிளங் கொங்கை பொன்னேபூப்பப்**
**பொருகயல் கண்ணீரரும்பப் போந்து நின்று**
**செங்கால மடப்புறவம் பெடைக்கும் பேசும்**
**சிறுகுரலுக் குடலுருகிச் சிந்தித்து ஆங்கே**
**தண்காலும் தண்குடந்தை நகரும் பாடித்**
**தண் கோவலூர் பாடியாடக் கேட்டு**
**நங்காய்! நங்குடிக்கிதுவோ நன்மை (நா.தி.பி.பா. 2068)**

வீட்டு முற்றத்தில் உள்ள பனை மரத்தில் முட்களை நீக்கிக் கட்டப்பட்ட கூட்டிலே தன்பெடை மேல் ஆசை கொண்ட அன்றில் பறவை விளரி என்னும் பண் கொண்டு உச்சக் குரலில் அழைக்கிறது. பெடை வந்ததும் இரண்டும் இணைந்து கிடக்கின்றன. இதைக் கண்ட இவள் தன் நாதனை நினைத்து ஆற்றாமையோடு உடலும், உயிரும் தளர்ந்து நைந்து விட்டாள். கார் மேக நிறத்தவனான தன் தலைவன் பெயரைத் திரும்பத் திரும்பச் சொல்லிப் பிதற்றுகிறாள். பெண் அன்றில், ஆண் பறவையோடு அலகோடு அலகு பின்னிக் கூவுகின்ற சிறிய ஒலியும் சிவந்த கால்களையுடைய ஆண் புறாக்கள் தங்கள் பெடைகளோடு கொஞ்சும் ஒலியும் என் நெஞ்சைப் பிளக்கும் கூர்வாளாயிற்று எனப் புலம்பிக் கொண்டு கயல் போன்ற விழிகளில் கண்ணீர் ததும்ப நிற்கின்றாள். இதனால் திருமால் எழுந்தருளியிருக்கும் திருத்தங்காவையும், குளிர்ச்சியான திருக்குடந்தை நகரையும், திருக்கோவலூரையும் பாடி, நடனமாடித் திருமாலை அழைக்கின்றார். பின் வாய்விட்டு மணாளனை அழைப்பது நம் பெண் குலத்திற்குப் பெருமை அல்ல என நினைத்து ஒதுங்குகிறாள். இவ்வாறு திருமால் மீது கொண்ட பக்தியின் காதலை அழகாகப் பாசுரங்களில் பதிவு செய்துள்ளார். இதன்வழி திருமங்கையாழ்வார் தம்மைப் பெண்ணாகப் பாவித்து, திருமாலை எண்ணி உருகிய நிலையினை அறியமுடிகிறது.

**"மன்றலம் பெண்ணை மடல்சேர் வாழ்க்கை**
**அன்றிலும் பையென நரலும்"**[16]

**"முழவுமுதல் அரைய தடவுநிலைப் பெண்ணைக்**
**கொழுமடல் இழைத்த சிறுகோற் குடும்பைக்**
**கருங்கால் அன்றில் காமர் கடுஞ்சூல்**
**வயவுப்பெடை அகவும் பானாட் கங்குல்"**[17]

**"......................துணைபுணர் அன்றில்**
**எக்கர்ப் பெண்ணை அகமடல் சேர"**[18]

முழவுபோல் அடியினை உடைய அகன்ற பனையின் கொழுவிய மடலில் சிறுகுச்சிகளால் அமைந்த கூட்டினுள் கரிய கால்களை உடைய அன்றில் பறவை அழகிய நிறை கருப்பத்தால் வயாநோயுடன் உள்ள பெண்பறவை ஆண்பறவையை அழைக்கும் ஒலி நள்ளிரவில் மன்றம் பிளக்கும்படி வருகின்றது. அன்றில் பறவையின் ஒலியால் திருமாலைப் பிரிந்த ஆண்டாள் வருந்துவதைப் போல சங்க இலக்கியத்தில் தலைவனைப் பிரிந்து வருந்தும் தலைவியின் நிலையினைக் குன்றியனார் பதிவுசெய்துள்ளார்.

**முன்றில் தனி நின்ற பெண்ணைமேல் கிடந் தீர்கின்ற**
**அன்றிலின் கூட்டைப் பிரிக்ககிற்பவர் ஆர் கொலோ?**

**(நா.தி.பி.பா. 1962)**

வாசலில் தனியே நிற்கும் பனைமரத்தின் மேல் இருந்து கொண்டு கூடிக் குரலெழுப்பி என்னை வருத்தும் அன்றில் பறவையே உங்களைக் கூட்டைவிட்டு யாராவது துரத்தமாட்டார்களா என இணையாக இருக்கும் பறவைகளைப் பார்த்து ஏங்குகின்றார் ஆழ்வார்.

**வாயும் திரை உகளும் கானல் மடநாராய்**
**ஆயும் அமர்உலகும் துஞ்சிலும் நீ துஞ்சாயால்**
**நோயும் பயலைமையும் மீதுரா எம்மேபோல்**
**நீயும் திருமாலால் நெஞ்சம்கோட் பட்டாயே? (நா.தி.பி.பா. 2901)**

**ஆட்பட்ட எம்மேபோல் நீயும் அரவணையான்**
**தாட்பட்ட தண்துழாய்த் தாமம்கா முற்றாயே (நா.தி.பி.பா. 2902)**

அலைமோதுகின்ற கடற்கரையான நெய்தல் நிலத்து மடநாரையே, கூர்மையான அலகுடைய அன்றிலே, என்தாயும், தேவர் உலகமும் உறங்கினாலும் நீங்கள் மட்டும் உறங்கவில்லையே என்னைப் போல் நீங்களும் பிரிவுநோயும், பசலையும் மேனியெங்கும் பரவும்படித் திருமாலிடம் மனதைப் பறிகொடுத்தாயோ? கூர்மையான அலகுடைய அன்றில் பறவையே நெஞ்சம் கவரப்பட்டு நீண்ட இரவுகளில் படுக்கையில் சேராமல் வேதனைப்படுகிறாயோ! அனந்தாழ்வான் மீது

பள்ளிகொண்ட திருமாலுக்கு அடிமைப்பட்ட என்னைப் போல் நீயும் அவன் திருத்துழாய் மாலையைப் பெற ஆசைப்பட்டாயே எனத் திருமாலின் அருள் கிடைக்காது அவதிப்படுகின்ற நிலையினைக் குறிப்பிடுகின்றார். இப்பாடல்கள் திருமாலின் மீது கொண்ட பக்தியினை ஆழ்வார்கள் வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளன. இப்பாசுரங்களில் அவர்களின் பக்தி மட்டுமே வெளிப்பட்டுள்ளது. இறைவனை உடலாலும், உள்ளத்தாலும் வணங்கிய ஆழ்வார்கள் எம்பெருமான் மீதுகொண்ட மிகுந்த பக்தியினை இவ்வாறான பல வழிகளில் வெளிப்படுத்தியுள்ளனர். பறவைகள் தன் துணையுடன் எப்பொழுதும் இணைந்திருப்பதைப் போலத் தாமும் எப்பொழுதும் திருமாலின் திருவடியில் இணைந்திருக்க வேண்டும் என்ற மனநிலை கொண்ட ஆழ்வார்கள், அதனைப் பறவையைப் புனைவதன் மூலம் வெளிப்படுத்தியுள்ளனர்.

**எம்பெருமானிடம் பறவையைத் தூதாக அனுப்புதல்**

“தூது என்பது ஒருவர் தம்முடைய கருத்தை வேறொருவருக்கு இடைநின்ற ஒருவர் வாயிலாகக் கூறிவிடுப்பது. சங்க இலக்கியங்களில் காமம் மிக்க கழிபடர்கிளவிகளாக இருந்த துறையே பிற்காலத்தில் தூது இலக்கியங்களாக வடிவு கொண்டன என்பது ஆய்வாளர்களின் கருத்து. பக்தி இலக்கியங்கள் வந்த காலத்தில் ஆழ்வார் பெருமக்கள் இந்த அகத்துறைகளை மிக அருமையாகப் பயன்படுத்தியுள்ளனர். ஆழ்வார்கள் புள்ளினங்களைத் தூது அனுப்புவதாகப் பாசுரங்கள் அமைத்துள்ளனர். குருகினங்கள், நாரைகள், அன்னங்கள், பூங்குயில்கள், கிளி, மயில், பூவை, அன்றில்கள், வண்டினங்கள் முதலியன தூது விடும் பொருளாக அமைந்திருக்கின்றன.”[19]

**பிணியவிழும் நறுநீல மலர்கிழியப் பெடையோடும்**
**அணிமலர்மேல் மது நுகரும் அறுகால் சிறுவண்டே**
**மணி கழுநீர் மருங்கலகும் வயலாலி மணவாளன்**
**பணியறியேன், நீ சென்று என் பயலை நோய் உரையாயே**

**(நா.தி.பி.பா. *1199*)**

**அருள் ஆழி அம்மானைக் கண்டக்கால் இதுசொல்லி**

**அருள், ஆழி வரிவண்டே! யாமும் என் பிழைத்தோமே?**

**(நா.தி.பி.பா. 2829)**

வட்டமான வரிகளையுடைய வண்டே! அருட்கடலான எம்பெருமானைப் பார்க்க நேர்ந்தால், அவர் அருள்செய்த எனக்கு நீ அருள் புகுந்து இந்த பாராங்குச நாயகியின் நிலையினை எடுத்துக் கூறி, தன் கருடன் மீதேறி ஒரு முறையாவது இந்தத் தெருவழியாக அவனைப் பறந்து செல்லும்படி கேள். அவர் அப்படிச் செய்தால் இந்தப் பாராங்குச நாயகி பிழைத்திருப்பாள் என வண்டினத்தை வேண்டுகிறார்.

**தூதுரைத்தல் செப்புமின்கள்**

**தூமொழிவாய் வண்டினங்காள்**

**தூதுரைத்தல் செப்புதிரேல்,**

**சுடர்வளையும் கலையுமே (நா.தி.பி.பா. 3744)**

மொட்டென்னும் கட்டவிழும் மணமுள்ள நீலோற்பல மலர்கள் கிழியும்படித் தன் பெடையுடன் பூக்களிலிருந்து தேன் உறிஞ்சும் அறுகாலுள்ள சிறு வண்டினமே, பசுக்களை மேய்த்தவனை, தேவர்களுக்கு எல்லாம் தலைவனைக் கண்டு பயப்படாமல் அவன் அருகில் சென்று ஒரு காரிகை உன் மேல் காதல் கொண்டு இருக்கிறாள்; அவள் தேகம் உன் பிரிவாற்றாமையினால் பசலை நோய் கொண்டிருக்கிறது என்ற செய்தியைக் கூறிவிட்டு வா எனத் திருமங்கையாழ்வார் வண்டுகளிடம் வேண்டுகின்றார்.

இனிய சொற்களைப் பேசும் வண்டுக் கூட்டங்களே! பூக்களில் அமர்ந்து தேனருந்தக் கூடிய தோட்டங்கள் நிறைந்த திருமூழிக்களத்தில் உறையும் பரந்தாமனின் திருநாமத்தைக் கூறி என் வாய் உலர்ந்து போனதையும், விரக வேதனையில் என் தேகம் மெலிந்து என் ஒளிவீசும் வளையல்களும், மேகலையும் கழன்று விழுவதையும் தூதாகச் சென்று எடுத்துரைப்பீர்களா என்று பணிந்து வேண்டுகிறார்.

**விதியினால் பெடைமணக்கும் மென்னடைய அன்னங்காள்**

**(நா.தி.பி.பா. 2826)**

**அலர்மேல் அசையும் அன்னங்காள் (நா.தி.பி.பா. 3351)**

நீங்கள் செய்த புண்ணியத்தால் பெண் அன்னங்களோடு எப்பொழுதும் இணைந்து தாமரைப்பூவில் அமர்ந்து அதன் அசைவிற்கு ஏற்ப அசையும் அன்னங்களே! திருமூழிக் களத்துப் பெருமானிடம் கொண்ட காதலால் என் மேனி இளைத்து, சிந்தை குழம்பி, மனம் கலங்கி, மயங்கிக் கிடக்கின்றேன். இப்படி என்னைத் தவிக்க விடுவது நியாயமல்ல என்று அவனிடம் எடுத்துக் கூறுங்கள் என்கிறார் நம்மாழ்வார்.

**"மணிநிற மலர்பொய்கை மகிழ்ந்தாடும் அன்னம்தன்**
**அணிமிகு சேவலை அகல்அடை மறைத்தெனக்**
**கதுமெனக் காணாது கலங்கி அம்மடப்பெடை**
**மதிநிழல் நீருள்கண்டு அதுஎன உவந்துஓடித்**
**துன்னத்தன் எதிர்வரூஉம் துணைகண்டு மிகநாணிப்**
**பன்மலர் இடைப்புகூம் பழனம்சேர் ஊர்"[20]**

எனத் தலைவியைப் பிரிந்த தலைவனுக்குத் தலைவியின் புலம்பலை உணர்த்துவதாக அமையும் கலித்தொகைப் பாடல். அவ்வாறே திருமாலைப் பிரிந்த ஆண்டாளின் வருத்தத்தினை இப்பாசுரங்களின் மூலம் அறியமுடிகிறது.

**எடுத்த என் கோலக் கிளியை**
**உன்னோடு தோழமை கொள்ளுவன் குயிலே**
**உலகளந் தான்வரக் கூவாய் (நா.தி.பி.பா. 549)**

ஆண்டாள் குயிலிடம் தான் வளர்த்த கிளியை உன்னோடு தோழமை கொள்ளச் செய்கிறேன் எனக் கையுறைப்பொருள் கொடுத்து நீ எனக்காகப் பரந்தாமனிடம் சென்று அவன் என்னை வந்து அடையும்படிக் கூவுவாயா என்று வினவுகின்றாள்.

இளங்குயில்களே! கண்ணனின் பெயரைக் கூவியே என்னைக் கொல்கிறீர்கள். அது என் உயிருக்கு யமன் என்று உங்களை நான் கெஞ்சிக் கேட்டதை மறந்து விட்டீர்களா. பேசச் சொல்லிக் கொடுத்ததற்காக இவ்வாறு செய்கிறீர்கள். (நா.தி.பி.பா. 3724) எனக் கூவும் குயில்களிடம் கோபம் கொள்கிறார் நம்மாழ்வார்.

**பழகு நான் மறையின் பொருளாய் மதம்**

**ஒழுகு வாரணம் உய்ய அளித்தஎம்**

**அழகனார் அணி ஆய்ச்சியர் சிந்தையுள்**

**குழகனார் வரில் கூடிடு கூடலே (நா.தி.பி.பா.543)**

"இப்பாடல் பிரிந்திருக்கும் ஆற்றாமையைப் புலப்படுத்துவதோடு கண்ணன்பால் கொண்ட காதல் பரம்பொருட் காதலே என்பதையும் முதல்வரி எடுத்துக் காட்டும். இப்பிரிவாற்றாமையால் தன் காதலன் வரக் கூவுமாறு குயிலைக் கேட்கின்றாள். பொதுவாகப் பிரிந்திருப்பாரை வருத்துவன – தென்றலும், திங்களும் என்பர். இவற்றோடு இளவேனிற் காலமும் அக்காலத்தே குயில் கூவுவதும் காதலுணர்வைக் கிளர்ந்தெழச் செய்வன என்பர். குயிலின் குரல் தன்னை வருத்துவதைக் கருதியே நீ நாராயணனை வரக் கூவு என்கிறாள்"[21] என ப.அருணாசலம் குறிப்பிட்டுள்ளார்.

**அஞ்சிறைய மடநாராய், அளியத்தாய்! நீயும் நின்**

**அஞ்சிறைய சேவலுமாய் ஆ ஆ என்று எனக்கு அருளி**

**வெஞ்சிறைப்புள் உயர்த்தாற்கு என் விடுதூதாய்ச் சென்றக்கால்**

**வன்சிறையில் அவன்வைக்கில் வைப்புண்டால் என்செயுமோ**

**(நா.தி.பி.பா. 2824)**

அழகிய இறகுகளையுடைய மென்மையான நாரையே! அருளுள்ளம் கொண்ட நீயும், அழகிய சிறகுகளை உடைய உன் துணையுமாய் ஐயோ! பாவம் என்று என் நிலைக்கு மனமிரங்கி உதவிசெய்யுங்கள் எனக் கேட்க நினைக்கின்றேன், ஆனால் எனக்காக நீ தூது சென்றால் உன்னைச் சிறையில் அடைத்து விடுவானோ என எண்ணித் தவிக்கின்றேன். பறவைகள் கூட

ஒன்றையொன்று பிரியாது இருக்கின்றன. ஆனால் நான் என் பரந்தாமன் திருவடியைச் சேரும் நாள் எந்நாளோ? எனத் திருமங்கையாழ்வார் புலம்புகிறார்.

**காதல் மென்பெடையோடு உடன்மேயுங் கருநாராய்**
**வேத வேள்வி ஒலி முழங்க தண்திருவண்வண்டூர்**
**நாதன் ஞாலமெல்லாம் உண்டு நம்பெருமானைக் கண்டு**
**பாதம் கைதொழுது பணிவீர் அடியேன் திறமே (நா.தி.பி.பா. 3344)**

தன் காதலியுடன் இணைந்து உலவி இரைதேடும் நாரையே, எப்பொழுதும் யாகங்கள் ஒலித்துக் கொண்டிருக்கும் திருவண்வண்டூரில் எழுந்தருளியுள்ள நாயகனைக் கண்டு திருவடி தொழுது என்நிலையினை எடுத்துக் கூறுங்கள் என நம்மாழ்வார் நாரையிடம் வேண்டுவதாக அமைந்துள்ளது இப்பாசுரம்.

**எங்கானல் அகம் கழிவாய் இரை தேர்ந்திங்கு இனிதமரும்**
**செங்காலமடநாராய்! திருமூழிக்களத்து உறையும்**
**கொங்கு ஆர்பூந் துழாய்முடி எம் குடக்கூத்தர்க்கு என் தூதாய்**
**நும்கால்கள் எம் தலைமேல் கெழுமீரோ, நுமரோடே**

**(நா.தி.பி.பா. 3739)**

சிவந்த கால்களையுடைய மடநாரையே, எங்களது கடற்கரைச் சோலையில் உள்ள உப்பங்கழியிலே இரைதேடி இனிதாக அமர்ந்திருக்கும் நீ எனக்காக திருமூழிக்களம் சென்று அங்கு உறையும், தேனிறைந்த அழகிய திருத்துழாயைத் திருமுடியிலே தரித்துள்ள கண்ணனிடம் என் தூதாகச் சென்று என் நிலையை அவனுக்குத் தெரிவிப்பாய், இந்த உதவியை நீ செய்தால் உன்னுடைய கால்களை என் தலை மீது வைத்துப் போற்றுவேன் என வேண்டுகின்றார்.

இப்பாடல்களில் எல்லாம் பறவைகளைத் தூதாக அனுப்பி, திருமால் மீது கொண்ட அளவு கடந்த பக்தியை வெளிப்படுத்தியுள்ளனர் ஆழ்வார்கள். பக்தி முற்றி இறைவனோடு கலந்து விடத்துடிக்கும் நிலையினை இப்பாடல்களில் காணஇயலும். திருமாலை அன்றி வேறு தெய்வத்தை வணங்காத ஆழ்வார்கள் திருமாலின் அருளைப் பெறுவதற்குப் பல வழிகளில் முயன்றுள்ளமையைக்

காணமுடிகிறது. எம்பெருமான் மீது கொண்ட பக்தியினைப் பல வழிகளில் எடுத்துக் கூறியும் அவன் மனமிரங்கி என் புலம்பல்களுக்குச் செவிசாய்க்கவில்லை. பறவைகளாகிய உங்கள் பேச்சையாவது அவன் கேட்பானா என்றும் தெரியவில்லை. இருப்பினும் அவனிடம் என் மனத்துடிப்பைக் கூறுங்கள். அவன் கேட்காவிட்டாலும் அவனிடம் மன்றாடி என் நிலையினை எடுத்துக் கூறுங்கள். அவனுடைய திருப்பாதங்களில் என்னை ஆட்கொள்ளுமாறு செய்யுங்கள் என ஆழ்வார்கள் பறவைகளின் வழியாகத் தம் பக்தியினை வெளிப்படுத்தியுள்ளனர்.

**திருமாலின் நிறத்தோடு பறவைகளின் நிறத்தை ஒப்பிடுதல்**

திருமால் கிருதயுகத்தில் பால் போன்ற வெள்ளை நிறமாகக் காட்சி அளிக்கின்றான். திரேதாயுகத்தில் சிவந்த பொன்னின் நிறமாகவும் துவாபரயுகத்தில் பாசியின் பச்சை நிறமாகவும், கலியுகத்தில் நீல நிறமாகவும் இருக்கின்றான். அவனைக் கார்மேகக்கண்ணன், கடல்நிற வண்ணன் எனவும் அழைக்கின்றனர். திருமால் தன்னுடைய ஒவ்வொரு அவதாரத்திலும் ஒவ்வொரு நிறத்தில் தோன்றினார். எனவே திருமாலின் நிறத்தோடு பறவைகளின் நிறத்தை ஒப்பிட்டு ஆழ்வார்கள் பாசுரங்கள் அமைத்துள்ளனர்.

**பொற்புடைத் தடத்து வண்டு விண்டுலாம் நீலநீர்மை**

**(நா.தி.பி.பா. 795)**

**செங்கண் கருமுகிலின் திருவுருப்போல் மலர்மேல்**
**தொங்கிய வண்டினங்கள் (நா.தி.பி.பா. 591)**

**நன்கு எண்ணி நான் வளர்த்த சிறு கிளிப் பைதலே**
**இன்குரல் நீமிழற்றேல் என் ஆர் உயிர்க் காகுத்தன்**
**நின் செய்ய வாய்ஒக்கும் வாயன், கண்ணன், கைகாலினன்**
**நின்பசுஞ்சாம நிறத்தன் கூட்டு உண்டு நீங்கினான்**

**(நா.தி.பி.பா. 3722)**

அழகிய சோலையில் வாழும் குயில்களே, மயில்களே, வண்டினங்காள், கிளிகளே, நீங்கள் திருமாலின் அழகிய மேனியின் நிறத்தைக் கொண்டுள்ளீர்கள்.

அதனால் தான் அவன் உங்களை மட்டும் நேசிக்கின்றான். நான் அவனுடைய நிறத்தோடு ஒற்றுமையில்லாது போய் விட்டேன். அதனால் தான் அவன் என் அன்பைப் புரிந்து கொள்ளாது இருக்கின்றானோ என ஆழ்வார்கள் பறவைகளின் நிறத்தைக் கண்டு தாங்களும் அவ்வாறு இல்லையே என வருந்துகின்றனர். ஆழ்வார்கள் என்றும் அவன் நினைவில் இருப்பதனால் பறவைகளுக்கு இயற்கையாக அமைந்த நிறத்தைக் கூடத் திருமாலின் தோற்றத்தோடு ஒப்புமைப்படுத்தி அதனால் தான் அவன் தங்களுக்கு அருள் செய்யாமல் அவைகளுக்கு அருள் செய்கிறான் எனத் தம் பக்தியினை வெளிப்படுத்தியுள்ளனர். ‘‘இதனையே,

**காரெனும் பெயர்க் கரியவன்**
**மார்பினிற் கதிர்முத்து**
**ஆரமென்னவும் பொலிந்தன**
**அளக்கரும் களக்கர்**
**நீர்முகந்தமா மேகத்தின்**
**அருகுற நிரைத்துக்**
**கூடும் வெண்ணிறத் திறத்தன**
**பறப்பன குரண்டம்**

வெண்மை நிறமான கொக்குகள் வரிசையாக கரிய நிறம்பொருந்திய வானில் பறப்பது, திருமாலின் மார்பில் அழகாக அணிந்து விளங்குகின்ற முத்துமாலையைப் போல் அழகாக இருந்தது எனக் கம்பர் தமது கவியோவியத்தின் மூலம் விளக்கிக் காட்டுகிறார்’’[22] என முத்து எத்திராசன் குறிப்பிட்டுள்ளார். ‘‘இதனையே நக்கீரரும் அகநானூற்றில்,

**நெடுவேள் மார்பின் ஆரம் போலச்**
**செவ்வாய் வானந் தீண்டிமீன் அருந்தும்**
**பைங்காற் கொக்கின் நிரைபறை யுகப்ப**

செவ்வானம் படர்ந்த மாலைக் காலத்தில் கொக்குகள் பறப்பது, முருகனின் மார்பில் அணிந்த முத்து மாலை போலத் திகழ்கிறது என்கிறார்."[23] இறைவனிடம் முழுமையான பக்தி கொண்ட எவராயினும் அவர்கள் காண்கின்ற பொருட்கள் அனைத்திலும் இறைவனை மட்டுமே காண்பர் என்பது இவர்களது பாடல்களின் மூலம் அறியமுடிகிறது.

**கருடன்**

கருடன் திருமாலின் வாகனமாகக் கருதப்படுகிறது. திருமால் பறவையினமான கருடனைத் தன்னுடைய வாகனமாக ஏற்றுள்ளார். திருமால் மனிதர்கள் மீது மட்டும் அல்லாது பறவைகளிடமும் அன்புடையவன் என்பதை உணர்த்தும் விதமாகத்தான் பறவையைத் தன் வாகனமாகக் கொண்டுள்ளான் என்கின்றனர் ஆழ்வார்கள். பறவைகளின் அரசனான கருடன் திருமாலின் தொண்டன். அவனது புகழை ஆழ்வார்கள் தம் பாடல்களில் பதிவு செய்துள்ளனர். ஆழ்வார்கள் திருமாலை, கருடவாகன், கருடனுக்குத் தலைவனான திருமால் என்று அழைக்கின்றனர். கருடனைக் கண்டால் திருமாலையே கண்டதற்குச் சமம் என்கின்றனர். பறவைகளின் தலைவனான கருடனைத் திருமால் தனக்கு வாகனமாகக் கொண்டுள்ளார்.

பொய்கையாழ்வார், பற்பல நிறம் கொண்ட இறக்கைகளையுடைய கருடனே உன்னைத் திருமால் வாகனமாக ஏற்றுள்ளார். அதனால்தான் உன்னை இவ்வையமே போற்றுகின்றது என்கிறார். (நா.தி.பி.பா.22) இன்று கூடக் கருடதரிசனம் கோடி புண்ணியம் என்னும் வழக்கு உள்ளது. கோயில் திருகுடமுழுக்கு நிகழ்வின் போது கருடன் வந்தால் நல்லது; அதுதான் நல்ல நேரம் என்று புனித நீர் ஊற்றுவது இன்று வழக்கிலுள்ள நிகழ்வு ஆகும்.

கருடனைப் போற்றிய நம்மாழ்வார் சில இடங்களில் கருடனைக் கொடுமையானவன் எனக் கூறுகின்றார். கருடனைப் பல இடங்களில் போற்றிய நம்மாழ்வார் தான் இறைவன் மீது கொண்ட பக்தியினை இறைவன் ஏற்றுக் கொள்ளாத சூழ்நிலையில், திருமாலே நீ இப்படிக் கல்மனதாக, அன்பற்றவனாக

இருக்கிறாய் அதற்குக் காரணம் நீ அல்ல உன் கருட வாகனம்தான் என்கிறார். கருடன் தன் இரைக்காகச் சிறிய உயிர்களைக் கூட, கொன்று தின்னும் தன்மையுடையது. இரக்க குணம் அற்றது. அது கரடுமுரடான தோற்றத்தைக் கொண்டது. அதைப் போய் நீ உன் வாகனமாகக் கொண்டுள்ளாய். அதனுடனே பல நாட்கள் பழகியதால் அதன் எண்ணம் தான் உன்னுள் இருக்கிறது என்கிறார். இறைவன் மீது கோபம் கொள்ளும் போது கூட இறைவனை நேரடியாகத் திட்டாது கருடனின் செயல்மீது ஏற்றிக் கூறி, தான் இறைவன் மீது கொண்ட பக்தியைப் புலப்படுத்துகிறார். அதிகமான அன்பு, காதல் இருக்குமிடத்தில் கோபம் கொள்ளா நிலை இருக்கும். அதுபோல் நம்மாழ்வாரும் இறைவன் மீது கொண்ட காதலால் அந்தத் தன்மையை வெளிப்படுத்துகிறார்.

திருமால் யாரிடமும் உயர்வு தாழ்வு காணாதவன். எனவேதான் பறவைகளுக்கு அரசனான வலிமையுடைய கூர்த்த நோக்கினையுடைய கருடனைத் தலைவனாகவும் தூய்மையான எளிமையான சிறு தாவரமாகிய துளசியைத் தன் மார்பில் மாலையாகவும் சூடியுள்ளான். திருமால் வலியவன் எளியவன் என்று எண்ணாது அனைத்து உயிர்களிடமும் அன்பு கொள்பவன். அவனைப் பக்தியினால் மட்டுமே வெல்ல முடியும். இதனை உணர்த்துவதற்காகவே இறைவன் பறவையாகிய கருடனையும், தாவரமாகிய துளசியையும் ஏற்றுக்கொண்டுள்ளார் என்பதை,

**ஓடும்புள் ஏறி**
**சூடும் தண்துழாய்**
**நீடு நின்றவை**
**ஆடும் அம்மானே (நா.தி.பி.பா. 2868)**

என்ற அடிகளில் விளக்கியுள்ளார்.

### திருமாலை வணங்காதவர் நிலையினைப் பறவைமூலம் விளக்குதல்

திருமாலுக்குத் தொண்டு செய்வதையே உயிராகக் கொண்ட தொண்டரடிப் பொடியாழ்வார், அனைவரையும் திருமாலுக்குத் தொண்டு புரியும்படிப் பணிக்கிறார்.

அவ்வாறு செய்யாதவர்கள் காக்கையும், கழுகும் கவ்வும்படி நரகத்திற்குச் செல்வர் என்கிறார்.

திருவரங்கத்தில் வண்டுகள் கூட்டமாகச் சோலைகளில் ரீங்காரமிடுகின்றன. மயில் கூட்டங்கள் தோகைவிரித்து ஆடுகின்றன. குயில் கூட்டங்கள் இனிமையாக இசைக்கின்றன. தேவாதி தேவனான திருமால் பள்ளிக் கொண்டிருக்கின்ற இப்படிப்பட்ட அழகிய திருவரங்கத்தின் பெருமைகளைப் பாடாதவர்களை, வணங்காத நன்றி கெட்ட மூர்க்கர்களின் மேல் பாய்ந்து, அவர்கள் உண்ணும் உணவை நாய்க்குப் பறித்துப் போடுங்கள் என்கிறார். இவ்வாறு அவர் திருமால் மீது கொண்ட பக்தியினையும், அவனை வணங்காதவரை அடியோடும் வெறுக்கும் நிலையினையும் அறியமுடிகின்றது.

## தொகுப்புரை

இயற்கையின் வழியே இறைவனை வழிபட்ட ஆழ்வார்கள் இயற்கையின் படைப்பாகிய பறவைகளின் வழியாகத் தம் பக்தியினை வெளிப்படுத்தியுள்ளனர். அவர்களின் பாசுரங்களில் கருடன், கொக்கு, அன்னம், கிளி, மயில், வண்டு, நாரை, அன்றில், குருகு, கோழி, புறா, காக்கை, செம்போத்து, நாகணவாய், கரிச்சன், குயில் ஆகிய பறவைகள் மூலமாகத் தம் பக்தியினை வெளிப்படுத்தியுள்ளனர்.

பன்னிரு ஆழ்வார்களில் பூதத்தாழ்வார், மதுரகவியாழ்வார் தவிர மற்ற ஆழ்வார்கள் இப்பறவைகளைப் பற்றிப் பாசுரங்களில் பாடியுள்ளனர். குறிப்பாக நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் பாடல்களில் பறவைகள் புனைவு அதிக அளவில் இடம்பெற்றுள்ளன.

ஆன்மா உய்வு பெறுவதற்கு அஃது இறைவனிடம் கொள்ளும் தனிப்பட்ட உறவே பக்தி நெறியாகும். அளவிற் சிறந்த பற்றோடு கடவுள் பால் கொள்ளும் உண்மையான அன்பே பக்தி நெறியாகும்.

இறைவனிடம் மனதையும் ஐம்பொறிகளையும் முழுமையாகச் செலுத்த வகை செய்யும் பேராற்றல் மிக்கது பக்தியேயாகும். ஆற்றல் மிக்க அன்பினால்

இறையருள் பெற்றுப் பெருகுதற்கு அரிய வீடுபேற்றினை அடைய வழிவகை செய்வது பக்தியாகும்.

இரு சிறகுகள் கொண்ட பறவைகள் விசும்பில் பறப்பது போல ஞானம், ஒழுக்கம் என்னும் பண்புகள் இறைவனை அடையும் வழி என்கின்றனர். எனவே, பறவைகளின் இரு சிறகுகளை ஞானத்திற்கான வழியாகக் கொள்கின்றனர். ஆழ்வார்களைப் பறவைகளின் அம்சமாகக் குறிப்பிடுவது வைணவ வழக்காக உள்ளது.

ஆழ்வார்கள் பறவைகள் புனைவில் தம் பக்தியினைப் புலப்படுத்தும் நிலையில் அகப்பொருள் மரபினைப் பின்பற்றியுள்ளனர். திருமாலிடம் இசைபாடப் பறவையை அழைத்தல், திருமாலுக்குக் கைங்கரியம் செய்யப் பறவையை அழைத்தல், திருமால் புகழ்பாடுதல், திருமால் திருத்தலப் பெருமையினைப் பறவைகள் வழி விளக்குதல், திருமால் மீது ஆழ்வார்கள் கொண்ட பிரிவுத்துயரத்தைப் பறவைகள் வழிப் பாடுதல், பறவையைத் திருமாலிடம் தூது அனுப்புதல் போன்ற பொருண்மைகளின் அடிப்படையில் ஆழ்வார்கள் பாசுரங்கள் அமைத்துள்ளதை அறியமுடிகிறது.

வண்டுகள் ரீங்காரம்மிட்டுத் திரிவதை ஆழ்வார்கள் அவை மலர்களிலுள்ள தேனை உறிஞ்சிக் கொண்டு இன்பமாக யாழிசை, காமரம் போன்ற பல இராகங்களை இசைத்தவாறு திருமாலை வழிபடுகின்றன என்றும் ஊர் முழுவதும் அவன் பெருமையினை எடுத்துக் கூறுகின்றன என்றும் பாடியுள்ளனர். ஆழ்வார்கள் வண்டின் இயல்பான நிலையினை திருமாலின் புகழைத்தான் அவை பாடித் திரிகின்றன எனத் தங்களின் பக்தித்திறனை வண்டுகள் வழிப் புலப்படுத்தியுள்ளனர்.

வண்டுகள் பல இராகங்களால் இறைவனை வழிபடுவது போல குயில் தன் இனிமையான குரலில் பாடல் பாடி இறைவனைத் துதிப்பதாக ஆழ்வார்கள் தம் பாசுரங்களில் பதிவு செய்துள்ளனர். இறைவனை வழிபடும் முறையில் இறைவன் இருப்பிடம் சென்று வழிபடுதல், இறைவனைத் தன்னிடம் தேடி வர வைத்தல் என இருமுறைகளில் வழிபடுகின்றனர். இதில் ஆண்டாள் குயிலிடம் இறைவன் தன்னை வந்து சேரும்படிக் கூவுக என வேண்டுகின்றார்.

திருமாலுக்குத் தொண்டு புரிவதையே மேன்மையாகக் கொண்டவர்கள் ஆழ்வார்கள். மனிதர்கள் மட்டுமே தொண்டு செய்ய வேண்டும் என்பது இல்லை. பறவைகளாகிய நீங்களும் எம்பெருமானுக்கு உங்களால் முடிந்த தொண்டுகளைச் செய்து அவன் அருள் பெறுக என்கின்றனர் ஆழ்வார்கள். பெரியாழ்வார் காக்கையைத் திருமாலுக்குத் தலை வார வரவேண்டும் என்றும் திருமால் மாடு மேய்க்கக் கோல் கொண்டு வா என்றும் கூறுகிறார். குழல்வார வாராய் அக்காக்காய், கோல் கொண்டு வாராய் அக்காக்காய் எனப் பாசுரங்களை அமைத்துள்ளனர்.

திருமால் திருத்தலத்தின் பெருமையினை அங்குள்ள பறவைகள் வழி எடுத்துரைத்துள்ளனர் ஆழ்வார்கள். எம்பிரான் இருக்கின்ற திருத்தலத்தில் உள்ள பறவைகள் கூட அன்பு, கருணை, பாசம், அருள் போன்ற குணங்கள் நிறைந்தவையாக விளங்குகின்றன. திருமால் வீற்றிருக்கின்ற திருத்தலத்தில் மனிதர்கள் மட்டும் அல்லாது பறவைகளும் அருட் குணத்தோடு இருக்கின்றன என ஆழ்வார்கள் தம் பாசுரங்களில் சுட்டியுள்ளனர்.

எம்பெருமானின் நினைவுகளிலிருந்து சற்றும் மாறாத மனம் படைத்த ஆழ்வார்கள் பிரிந்தாலும் அவன் என்னப்படியே பிரிகின்றோம்; சேர்ந்தாலும் அவன் என்னப்படியே சேர்கின்றோம் என்கின்றனர். திருமாலின் மீது கொண்ட பக்தியினைப் பல வழிகளில் போற்றிப் பாடியும், மனம் நிறைவு பெறாத ஆழ்வார்கள் அகப்பொருள் மரபையும் பின்பற்றியுள்ளனர்.

திருமாலைத் தலைவனாகவும். தன் மனதைத் தலைவியாகவும் பாவித்து, தலைவனைப் பிரிந்த தலைவி சங்க இலக்கியத்தில் எவ்வாறு எல்லாம் புலம்புகின்றாளோ அதே போன்று ஆழ்வார்களும் எம்பெருமானுடைய அருள் கிட்டாத நிலையில் புலம்பிப் பிரிவுத் துயரை அடைகின்றனர். பிரிவு அதிகமானதால் உடல் மெலிந்து பசலை பூத்து அணிகலன்கள் கழன்று விழுகின்றன. இந்த நிலையில் கூட அவன் தனக்கு அருள் செய்யவில்லையே என ஆழ்வார்கள் பறவைகளிடம் தெரியப்படுத்துகின்றனர்.

அவன் இருக்கும் திருத்தலத்தில் பறவைகள் கூடத் தன் பேடையை விட்டுப் பிரியாது இருக்கின்றன. ஆனால் தேவர்களின் தலைவனான எம்பெருமான் என்னை எண்ணாது இப்படிப் பிரிந்திருக்கின்றானே என வருந்துகின்றனர்.

பறவைகளை இறைவனிடம் தூதாக அனுப்பி அவன் என்னை வந்து அடையும்படி செய். அவன் மீது நான் ஆராக் காதல் கொண்டுள்ளேன் என்று கூறு என ஆழ்வார்கள் திருமாலை நோக்கித் தூது அனுப்புகின்றனர்.

பறவைகளின் இயற்கையான நிறத்தோடு எம்பிரானின் நிறத்தையும் ஒப்புமைப்படுத்திப் பாசுரங்கள் அமைத்துள்ளனர்.

திருமாலை வணங்காதவர்கள் எப்பொழுதும் நரகத்தைச் சென்றடைவார்கள் என்பதையும் பதிவு செய்துள்ளனர்.

திருமாலின் பெருமையினை உலகறியச் செய்து மக்கள் அனைவரையும் அவன்பால் திருப்புவதே ஆழ்வார்களின் நோக்கமாகும். இதனை ஆழ்வார்கள் பறவைகள் மூலமாக மக்களுக்கு எடுத்துரைத்துள்ளனர்.

## சான்றெண் விளக்கம்

1. இரா. இராஜகோபாலன், நாலாயிரத் திவ்விய பிரபந்தத்தில் சரணாகதிநெறி ப.142
2. மா.சண்முகசுப்பிரமண்யன், ஞானச்சுடர், ப.185
3. ந.சுப்புரெட்டியார், வைணமும் தமிழும், ப.74
4. மேலது, ப.59
5. ச.வே. சுப்பிரமணியன் (ப.ஆ), சங்க இலக்கியம், கலித்தொகை, பா.34
6. மேலது, பா.36
7. மேலது, பா.57
8. கே.ஏ. மணவாளன், ஆண்டாள், ப.66
9. து. லலிதா, பெரிய திருமொழி ஓர் பார்வை, ப.51
10. ச.வே. சுப்பிரமணியன் (ப.ஆ), சங்க இலக்கியம், நற்றிணை, பா.91
11. மேலது, பா.356
12. ந.சுப்புரெட்டியார், வைணமும் தமிழும், ப.72
13. மேலது, ப.73
14. ஆ.எதிராஜன், ஆழ்வார்கள் வரலாறு, ப.16
15. க. ரத்னம், தமிழ் செவ்வியல் இலக்கியத்தில் பறவைகள், ப.23
16. ச.வே. சுப்பிரமணியன் (ப.ஆ), சங்க இலக்கியம், குறுந்தொகை, பா.177
17. மேலது, பா.301
18. ச.வே. சுப்பிரமணியன் (ப.ஆ), சங்க இலக்கியம், அகநானூறு, பா.260
19. ந.சுப்புரெட்டியார், வைணமும் தமிழும், ப.73
20. ச.வே. சுப்பிரமணியன் (ப.ஆ), சங்க இலக்கியம், கலித்தொகை, பா.70
21. ப.அருணாசலம், பக்தி இலக்கியம், ப.306
22. முத்து எத்திராஜன், கம்பர் காட்டும் கார்காலம், ப.39
23. ச.வே. சுப்பிரமணியன் (ப.ஆ), சங்க இலக்கியம், அகநானூறு, பா.120

## இயல் — 3

## விலங்குகள் புனைவில் பக்திநெறி

இயற்கையோடு இயற்கையாக வாழ்ந்த மக்கள் இயற்கைப் படைப்புகளைக் கண்டு வியந்தனர். இயற்கையின் ஒவ்வொரு படைப்பையும் அதன் அழகையும் கண்டு மகிழ்ந்தனர். இயற்கையைத் தெய்வமாக வணங்கினர். இயற்கையின் அரிய படைப்பான விலங்கினங்களைத் தெய்வமாகப் போற்றினர். ஒவ்வொரு விலங்குகளிடத்தும் தெய்வம் குடிகொண்டிருப்பதாக நம்பினர். எனவே தான் தெய்வங்களுக்கு வாகனமாக விலங்குகளை அமைத்தனர். பசுவை கோமாதா என்றும், கலைமகள் பசுக்களிடம் குடிக்கொண்டுள்ளது என்றும் நம்பி காளையை நந்திதேவன் என்றனர். பாம்பு கண்ணபிரானுக்குப் படுக்கையாகவும், சிவபிரானுக்குக் கழுத்தணியாகவும் விளங்குவதாகப் போற்றினர். நாயினைப் பைரவர் என்னும் காவல் தெய்வமாகவும் வழிபட்டனர். பசு, எருது, நாய் போன்ற விலங்குகள் மனிதர்களின் நண்பனாகவும் அவை குடும்பத்தின் அங்கமாகவும் கருதப்படுகின்றன. யானைத் தலை, விநாயகருக்கு உரியதாகிறது. அவருக்கு வாகனமாக மூஞ்சூறு கொள்ளப்படுகிறது. பார்வதி தேவிக்கு, சிங்கம் வாகனமாக அமைகிறது. இவ்வாறு விலங்குகளைத் தெய்வங்களுக்குச் சமமாக வைத்துப் போற்றுவது மரபாக உள்ளது. முன்னோர்கள் ஏற்படுத்திய இம்மரபு இன்று வரை தொடர்கிறது. ஒவ்வொரு விலங்குகளும் இறைவனின் உருவகமாகவும், இறை அருள் அவற்றுள் நிறைந்துள்ளதாகவும் கருதப்படுகிறது. எனவேதான் விலங்குகளை வழிபட்டால் இறைவனையே வழிபட்டதற்குச் சமம் என்கின்றனர். சமய நூல்களில் விலங்குகளைப் போற்றுதல் பற்றிய செய்திகள் அதிகமாகக் காணப்படுகின்றன.

திருமாலின் திருவருள் பெற்ற ஆழ்வார்கள் தம்முடைய பாசுரங்களில் திருமால், விலங்குகளின் மீது அதிகப் பற்றுடையவர் என்பதைப் பாடியுள்ளனர். எம்பிரான் கிருட்டிணவதாரத்தில் பசுக்கள் மேய்க்கும் ஆயர்குலச் சிறுவனாகப் பிறந்து பசுக்கள் மேய்த்ததைச் சுட்டுகின்றனர். மாயோன் உயிர்களிடத்து மிகுந்த அன்பு கொண்டவன். அவற்றிற்குத் துன்பம் நேரும் போது விரைந்து காக்கக்

கூடியவன் என்கின்றனர். இதன் வழியாக மக்கள் அனைவரும் எம்பிரானை வழிபடவேண்டும், அவன் திருப்பாதத்தைச் சரணடைய வேண்டும், அவனை வழிபட்டோரை எப்பொழுதும் காக்கக்கூடியவன் என்ற உண்மையினை விலங்குகளின் செயல்களைக் கொண்டு மக்களுக்கு உணர்த்துகின்றனர் ஆழ்வார்கள். அவ்வகையில் ஆழ்வார்கள் திருமால் மீது கொண்ட பக்தியினை விலங்குகளின் வழியாகத் தம் பாசுரங்களில் பதிவு செய்துள்ள பாங்கை ஆராய்ந்து விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும்.

**பாசுரங்களில் இடம் பெற்றுள்ள விலங்குகள்**

ஆழ்வார்கள் தங்களுடைய பாசுரங்களில் பல்வேறு விலங்குகளைக் குறிப்பிட்டுள்ளனர். அவற்றுள் பசு, யானை, குதிரை, குரங்கு, பாம்பு, சிங்கம், புழு, பல்லி, ஆடு, கோழி, நாய், பன்றி, புலி, எருமை, கரடி, முயல், கோவேறு கழுதை, மான் என்பன நிலவாழ் உயிரினங்களாகும். முதலை, ஆமை, கயல், கெண்டை, ஆரல், வாளை, நண்டு, நத்தை, மீன்கள் என்பன நீர்வாழ் உயிரினங்களாகும்.

**விலங்குகள் புனைவில் பக்தி வெளிப்பாடு**

திருமால் விலங்குகள் மீது பற்றுக்கொண்டவன். அவற்றிற்குத் துன்பம் நேரும் போது அவற்றைக் காத்தவன் என்றும், அதே சமயத்தில் அவற்றால் மற்றவர்களுக்குத் துன்பம் நேரும் போது அந்த விலங்குகளை அழிக்கக் கூடியவன் என்றும் ஆழ்வார்கள் குறிப்பிட்டுள்ளனர். அவ்வகையில் ஆழ்வார்கள் பாசுரங்களில் கூறப்பட்டுள்ள விலங்குகள் பற்றிய பதிவுகள் கீழ்க்காணும் பகுதிகளாகப் பிரித்துக் காணத்தக்க வகையில் அமைந்துள்ளன. அவையாவன,

1. திருமால் தன் பக்தர்களை என்றும் காக்கக்கூடியவன் என்பதை விலங்குகள் வழி உணர்த்துதல்
2. திருமால் விலங்குகளாக அவதரித்து நன்மைகள் புரிதல்
3. அசுரர் விலங்குகளாக அவதாரம் எடுத்து வரும்போது அவற்றை அழித்தல்
4. திருமால் திருத்தலப் பெருமையை விலங்குகள் வழி உணர்த்தல்

5. திருமால் உருவத்தோடு விலங்குகளை ஒப்பிடுதல்

6. திருமாலை வணங்காதவர் நிலை உணர்த்துதல்

**திருமால் தன் பக்தர்களை என்றும் காக்கக்கூடியவன் என்பதை விலங்குகள் வழி உணர்த்துதல்**

மனிதன் தன் ஐம்பொறிகளையும் அடக்கி ஆள வேண்டும். மதம்பிடித்த யானை போல் மனதைத் தறிகெட்டு அலையவிட்டால் அதனால் ஏற்படக்கூடிய துன்பத்தை அவனால் ஒரு போதும் தாங்கிக் கொள்ள முடியாது. எனவே, மனிதன் தம் ஐம்புலன்களையும் அடக்கிக் கொண்டு மெய்ஞான நிலையோடு எம்பிரானை வழிபட வேண்டும். அவ்வாறு வணங்குபவரை இறைவன் விரைந்து சென்று காப்பான். தன்னை வணங்கிய விலங்குகளுக்கு ஆபத்து வரும்போது விரைந்து சென்று காத்தவன் நாரயணனே. எனவே திருமாலைப் போற்றுங்கள் அவர் நம்மருகிலேயே இருப்பார் என ஆழ்வார்கள் உணர்த்துகின்றனர்.

**யானைக்கு அருள் செய்தல்**

இந்திரத்யுமனன் என்ற அரசன் சிறந்த விஷ்ணு பக்தன். திருமாலை வழிபட்டு கொண்டிருந்த போது அகத்திய மாமுனி அவரிடம் எழுந்தருளினார். திருமாலையே நினைத்துக் கொண்டிருந்த அரசன் முனிவரைக் கவனிக்கவில்லை. அதனால் கோபம்கொண்ட முனிவர், நீ யானை போல் செறுக்குற்று இருந்தமையால் நீ யானையாகப் பிறக்கக்கடவாய் எனச் சபித்தார். அவ்வாறு சாபம் பெற்ற யானையே கஜேந்திரனாகப் பிறந்து தாமரை மலர்களால் திருமாலைப் பூசித்தது. அந்த கஜேந்திரன் என்ற யானைக்கு இறைவன் அருள்புரிந்த நிகழ்வினை ஆழ்வார்கள் பாசுரங்களில் பதிவுசெய்துள்ளனர்.

**பிடிசேர் களிறளித்த பேராளா உன்றன்**
**அடிசேர்ந் தருள் பெற்றா ளன்றே** (நா.தி.பி.பா. 2178)

**தொடரெடுத்த மால்யானை சூழ்கயம் புக்கஞ்சி**
**படரெடுத்த பைங்கமலம் கொண்டு அன்றிடரடுக்க**
**ஆழியான் பாதம் பணிந்தன்றே வானவர்கோன்**

**பாழிதான் எய்திற்றுப் பண்டு (நா.தி.பி.பா. 2194)**

**மீனமர் பொய்கை நாள்மலர் கொய்வான் வேட்கை யினோடு சென்றிழிந்த**
**கானமர் வேழம் கையெடுத்தலறக் கரா அதன் காலினைக் கதுவ**
**ஆனையின் துயரம் தீரப்புள்ளூர்ந்து சென்று நின்று ஆழி தொட்டனைத்**
**(நா.தி.பி.பா. 1076)**

**பதக முதலைவாய்ப் பட்ட களிறு**
**கதறிக்கை கூப்பி என் கண்ணா! கண்ணா! என்ன**
**உதவப்புள் ஊர்ந்து அங்கு உறுதுயர் தீர்த்த அதகன்**
**(நா.தி.பி.பா. 126)**

பெண்யானையுடன் வசிக்கக்கூடிய கஜேந்திரன் என்ற ஆண்யானை தினமும் தாமரை மலர்களால் மாதவனைப் போற்றியது. ஒரு முறை தாமரை பறிக்கத் தடாகத்தில் இறங்கிய போது முதலை அதன் காலைப் பற்றிக்கொண்டது. வலியால் துடித்த யானை ஆதிமூலமே எனக் கதறியது. அக்கணமே திருமால் கருடன் மீது அமர்ந்து விரைந்து சென்று சுதர்சனத்தால் முதலையைக் கொன்று கஜேந்திரனைக் காத்தார். முனிவரால் சாபம் பெற்ற சுகூ என்ற கந்தருவனே அந்த முதலை. யானையாகப் பிறந்த இந்திரத்தனனுக்கும், முதலையாகப் பிறந்த கந்தருவனுக்கும் திருமால் சாபவிமோச்சனம் அளித்து அவர்களைக் காத்தருளினார். அதேபோல் அந்தக் கண்ணபிரானை நாம் போற்றினால் அவர் நம்மைத் துன்பகாலத்தில் விரைந்து காப்பார் என உணர்த்துகின்றனர் ஆழ்வார்கள். இந்நிகழ்வு பாசுரங்களில் பல்வேறு இடங்களில் கூறப்பட்டுள்ளது.

பொய்கையாழ்வார் – இரண்டு இடங்கள் (நா.தி.பி.பா 2128, 2159)
பூதத்தாழ்வார் – இரண்டு இடங்கள் (நா.தி.பி.பா 2194, 2254)
திருமங்கையாழ்வார் – ஐந்து இடங்கள் (நா.தி.பி.பா 1076, 1132, 1140, 2695, 1288)
பெரியாழ்வார் – இரண்டு இடங்கள் (நா.தி.பி.பா 126, 220)
திருமழிசையாழ்வார் – ஓர் இடம் (நா.தி.பி.பா 79)

தொண்டரடிப் பொடியாழ்வார் — மூன்று இடங்கள்

(நா.தி.பி.பா 899, 918, 917)

**பசுக்களிடம் கருணை காட்டுதல்**

திருமால் கிருட்டிணனாகப் பசுக்களை மேய்க்கும் ஆயர்குலச் சிறுவனாக அவதரித்து, பசுக்களை மேய்த்ததையும் பரிவோடு அவற்றை அரவணைத்ததையும், துன்பகாலத்தில் அவற்றைக் காத்ததையும் ஆழ்வார்கள் சுட்டிக்காட்டி அதுபோல நல்ல குணம் கொண்ட மனிதர்களிடத்தில் இறைவன் எப்பொழுதும் அருகிலேயே இருப்பார் என்பதை உணர்த்துகின்றனர்.

**கோவலனாய் ஆநிரைகள் மேய்த்துக் குழலூதி (நா.தி.பி.பா. 2323)**

கோவலனாகத் தோன்றி பசுக்களை மேய்த்து, புல்லாங்குழல் இசைத்து, மிக மென்மையாக, சாதுவாக இருக்கின்ற கண்ணன், கோசிகாசுரனின் வாயைப் பிளந்தவன்; நரசிங்கமாகி இரணியனது மார்பைப் பிளந்த பெரும் கோபக்காரன் என்பதை எடுத்துரைக்கின்றார்.

**மேட்டிளமேதிகள் தளை விடும் ஆயர்கள்**
**வேய்ங்குழலோசையும் விடை மணிக்குரலும்**
**ஈட்டிய இசை திசை பரந்தன (நா.தி.பி.பா. 920)**

எருமைகளைக் காலையில் மேய்ச்சலுக்காக ஆயர்கள் கட்டவிழ்த்துவிட, புல்லாங்குழல் ஊதிக்கொண்டு அவற்றின் பின் செல்ல ஆரம்பித்துவிட்டான். அந்தக் காளைகளின் கழுத்து மணியோசை எங்கும் பரவிற்று. வயலில் வண்டுகள் ரீங்காரமிடத் தொடங்கிவிட்டன என விடியலின் தோற்றத்தை எடுத்துரைக்கின்றார் ஆழ்வார்.

**சுருண்டிருண்ட குழல் தாழ்த்த முகத்தான்**
**ஊதுகின்ற குழலோசை வழியே**
**மருண்டுமான் கணங்கள் மேய்கை மறந்து**
**மேய்ந்த புல்லும் கடைவாய் வழிசோர**

**இரண்டு பாடும் துலுங்காப் புடைபெயரா**

**எழுது சித்திரங்கள் போல நின்றனவே (நா.தி.பி.பா. 283)**

மழை மேகம் போல் நிறமுடையவனும், செந்தாமரை மலர்களைச் சுற்றி மொய்க்கின்ற வண்டுக் கூட்டம் போல சுருண்ட இருண்ட கூந்தலை உடையவனுமாகிய கண்ணன் தன் நண்பர்களோடு பசுக்கூட்டங்களை அழைத்துக்கொண்டு காட்டிற்குச் சென்று அவற்றை மேய்த்துக் கொண்டு நண்பர்களோடு விளையாடி மகிழ்கின்றான். அப்போது அவன் குழலோசை இசைக்கின்றான். அவன் இசையால் மயங்கி, உயிரினங்கள் மேய்தலையும் மறந்து, மேய்ந்த புல்லும் வாய்வழியே விழுவது கூடத் தெரியாது சித்திரங்கள் போல் நிற்கின்றன. சில பசுக்கூட்டங்கள் பரவசமாகி, கால்களைப்பரப்பி, தலைகளைத் தாழ்த்தி, காதுகளை அசைத்தால் இசை கேட்கத் தடையாகும் என்று செவிகளை ஆட்டாது கிடந்தன. மேலும் மதுசூதனன் எந்தப் பக்கம் குழலூதுகின்றானோ, அந்தப் பக்கமுள்ள மரங்கள் எல்லாம் தேன் சிந்தும். சில மலர்களை உதிர்க்கும், உயரமான மரங்கள் கிளைதாழ்த்தி வணங்கும், சில உருகிநிற்கும் இதை எல்லாம் எப்படிப் பாரட்டுவேன் என்கிறார் பெரியாழ்வார்.

**பசுக்களைத் துன்பத்தில் இருந்து காத்தல்**

**புயலுறுவரை மழை பொழிதர மணிநிரை**

**மயலுற, வரகுடை எடுவிய நெடியவர் (நா.தி.பி.பா. 1710)**

**குன்றமெடுத்து ஆநிரை காத்தவன் (நா.தி.பி.பா. 2031)**

ஆயர்குல மக்கள் இந்திரனை வணங்காது கோவர்த்தனகிரியை வணங்கினர். அதனால் சினங்கொண்ட இந்திரன் புயல் மழையினால் மக்களைத் தாக்கினார். இதனால் மக்கள் உயிரினங்கள் என அனைத்தும் துயருற்றன. அப்போது கண்ணன் கோவர்த்தனகிரியைப் பெயர்த்து எடுத்துக் குடையாகப் பிடித்து உயிரினங்கள் அனைத்தையும் காத்தார். அவ்வாறு இறைவன் நம்மையும் காக்க வேண்டுமாயின் நமது மனம் திருமாலைச் சென்றடையவேண்டும். எவன் ஒருவன் மனதை அவன் போக்கில் மேயவிடாது சுத்தமாக வைத்துக் கொள்கின்றானோ,

அவன் எம்பெருமானை எளிதில் உணர்ந்து கொள்வான். அவனது மனம் பசுக்கூடத்தின் நடுவே கன்று தன் தாயை எவ்வாறு தேடிச் சென்று அடைகிறதோ அதேபோல் திருமாலின் பாதத்தைச் சென்றடையும் என்பதைத் திருமங்கையாழ்வார் உணர்த்துகின்றார்.

**திருமால் விலங்குகளாக அவதரித்து நன்மைகள் புரிதல்**

திருமால் விலங்குருவில் அவதாரம் எடுத்து வந்து நன்மைகள் புரிந்துள்ள செய்தியை ஆழ்வார்கள் பாசுரங்களில் சுட்டியுள்ளனர். திருமால் பல அவதாரங்கள் எடுத்துள்ளார். மனிதனாகப் பிறந்து மக்களோடு மக்களாக வாழ்ந்திருக்கிறார். விலங்குகளாகவும் அவதாரம் எடுத்து நன்மைகள் செய்துள்ளார். இறைவன் மக்களுக்கு மட்டும்தான் உரியவன், அவர்களுக்கு மட்டும்தான் அருள் புரிவான் என்பது கிடையாது. இறைவனிடத்தில் உயர்திணை, அஃறிணை என்ற வேறுபாடு கிடையாது. உண்மையான அன்பு உள்ள இடத்தில் இறைவன் கண்டிப்பாக இருப்பான் என்பதை உணர்த்துவதற்காகவே திருமால் பல அவதாரங்களை எடுத்துக் காட்டியுள்ளார் என்ற உண்மையினை ஆழ்வார்கள் குறிப்பிட்டுள்ளனர்.

திருமால் மச்ச அவதாரம், கூர்ம அவதாரம், வராக அவதாரம், நரசிம்ம அவதாரம், வாமன அவதாரம், பரசுராமன் அவதாரம், இராம அவதாரம், பலராம அவதாரம், கிருஷ்ண அவதாரம், கல்கி அவதாரம் என்பன திருமால் குறித்த பத்து அவதாரங்கள் ஆகும். இவற்றுள் கல்கி அவதாரத்தைத் தவிர மற்ற அவதாரங்கள் பற்றிய செய்திகள் நாலாயிரத் திவ்விய பிரபந்தத்தில் காணப்படுகின்றன. கூர்மம் – ஆமை, மச்சம் – மீன், வராகம் – பன்றி, நரசிம்மம் – சிங்கம் என இவை நான்கு அவதாரமும் விலங்குகளாக அவதரித்தவை. ஏனையவை மனிதர்களாக அவதரித்தவை. திருமாலின் இப்பத்து அவதாரங்களையும்

**மீனோடு ஆமை கேழல் அரிகுறளாய் முன்னம் இராமனாய்த்**
**தானாய் பின்னும் இராமனாய்த் தாமோதரனாய்க் கற்கியும்**
**ஆனான் தன்னை கண்ணபுரத்து அடியன் (நா.தி.பி.பா. 1727)**

எனத் திருமங்கையாழ்வார் பாடுகிறார். இவற்றுள் கல்கியாகிய அவதாரம் இன்னும் நிகழவில்லை.

கடல்வாழ் உயிராகிய மீனிலிருந்து படிப்படியே வளர்ந்து பேரறிவுடைய கிருட்டிணாவதாரம் வரை திருமாலின் அவதாரங்கள் அமைந்துள்ளன. உலகம் தோன்றிய காலத்திலிருந்து உயிரினங்கள் படிப்படியாகத் தான் பிறந்து வளர்ந்து வந்துள்ளன என்பதை ஆழ்வார்கள் எடுத்துரைக்கின்றனர். இதனையே மாணிக்கவாசகரும்,

**“புல்லாகிப் பூடாகிப் புழுவாய் மரமாகிப்**
**பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்**
**கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்**
**வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்**
**செல்லாஅ நின்ற இத்தாவர சங்கமத்துள்**
**எல்லாப் பிறப்பும் பிறந்திளைத் தேன்”**[1]

என்று உயிர்கள் படிப்படியே வளர்ச்சி பெற்றமையைக் குறிப்பிடுகின்றார்.

ஆழ்வார்களும், நாயன்மார்களும் ஒரே கருத்தையே முன்வைக்கின்றனர். உயிர்கள் உருவாகுவதற்கு காரணம் இறைசக்தியே. உலகை உருவாக்கியவன் இறைவன். அதற்குக் காரணம் திருமால் என்கின்றனர் ஆழ்வார்கள், சிவன் என்கின்றனர் நாயன்மார்கள்.

ஆழ்வார்களும், நாயன்மார்களும் திருமால், சிவன் என்று தனித்தனியே பாடினாலும், ஒரு சில இடங்களில் அரியும், சிவனும் ஒன்று என்ற உண்மையினையும் பதிவுசெய்துள்ளனர்.

**நின்றுலகம் தாய நெடுமாலும் — என்றும்**
**இருவரங்கத் தால் திரிவ ரேலும் ஒருவன்**
**ஒருவன் அங்கத் தென்றும் உளன் (நா.தி.பி.பா. 2179)**

பொன் போன்ற சாரீரத்தையும், ஜடாமுடியையும் கொண்ட புண்ணியனான சிவனும், உலகங்களையெல்லாம் ஓங்கி உயர்ந்து அளந்து கொண்ட திருமாலும், எப்பொழுதும் உடலளவில் இருவராகச் செயல்பட்டாலும் சிவன் திருமாலின் அங்கத்தில் ஒரு பாதியாய் என்றும் இருக்கின்றான் என்கிறார் பொய்கையாழ்வார்.

ஆழ்வார்கள் இறைவனின் தசாவதாரத்தில் ஈடுபட்டுப் பல பாசுரங்களைப் பாடியுள்ளனர். அவதாரங்கள் யுக அடிப்படையில் நான்கு வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளன. அவற்றுள் விலங்குகளாக அவதரித்த கூர்மம், மச்சம், வராகம், நரசிம்மம் ஆகிய அவதாரங்கள் கிருதாயுகத்தில் தோன்றியதாகக் கருதப்படுகிறது.

**கூர்ம அவதாரம்**

துர்வாச முனிவர் லெட்சுமிதேவியிடம் இருந்து பெற்று வந்த மாலையைத் தேவேந்திரனுக்குக் கொடுத்தார். அதனைத் தன்செங்கோலால் பெற்ற தேவேந்திரன், யானையின் கழுத்தில் போட்டான். அதனை யானை கீழே போட்டு தன் கால்களால் மிதித்தது. இதனால் ஆத்திரம் அடைந்த துர்வாச முனிவர். தேவேந்திரனது செல்வமெல்லாம் தொலைந்துபோகும்படிச் சாபம் இட்டார். அதன் காரணமாக கற்பகத்தரு, காமதேனு, சிந்தாமணி முதலிய தேவபோகச் செல்வங்களெல்லாம் திருப்பாற்கடலுக்குள் சென்று மூழ்கிவிட்டன. இதனால் தேவர்கள் துன்புற்றனர்.

தேவர்கள் அனைவரும் ஒன்றுகூடி, பிரம்மதேவனைச் சரணடைந்து தங்களைக் காக்குமாறு வேண்டி நின்றனர். பிரம்மதேவன் அவர்களிடம் நீங்கள் பெருங்குற்றம் செய்து விட்டீர்கள் என்றார். அனைவரும் பெருமாளிடம் அடைக்கலம் புகுவோம் என்று கூறினார். பிரம்மதேவன் உள்ளிட்ட தேவர்கள் அனைவரும் திருப்பாற்கடலைச் சென்றடைந்து ஒருமனதாக நாராயணப் பெருமானைப் போற்றினர். இழந்துவிட்ட செல்வங்களையெல்லாம் மீண்டும் பெற்று மகிழ்வுடன் வாழ எங்களுக்கு அருள்புரிய வேண்டுமென்று பணிந்து வேண்டினர்.

மகாவிஷ்ணு அவர்கள் மீது இரக்கம்கொண்டு காட்சியருளி, தேவர்களின் விண்ணப்பத்தைக் கேட்டார். உங்களுடைய செல்வங்களெல்லாம் இந்தப்

பாற்கடலுள் படிந்திருந்தால் நீங்கள் அமிர்தம் வெளிப்படுமாறு கடலைக் கடைதல் வேண்டும். இப்பெரிய திருப்பாற்கடலைக் கடைவதற்கான மத்து மந்திரமலையேயாகும். நீங்கள் ஒரு பக்கமும் அசுரர்கள் மறுபக்கமுமாக இருந்து கொண்டு கடையவேண்டும். அவ்வாறு செய்தால் நீங்கள் கருதுவது கைகூடும் என்று மொழிந்தார். பரந்தாமனின் திருவாணைப்படி, மந்திரமலையை அடியோடு பெயர்த்து எடுத்துக்கொண்டு வரும்பொழுது, அதைத் தாங்கும் ஆற்றலை இழந்தவர்களாகித் தேவர்களும், அசுரர்களும் வருந்தினர். அதைக்கண்ட நாராயணப் பெருமான் அந்த மந்திரமலையைத் தம்முடைய விரல் ஒன்றால் ஏந்திச் சரியாக நிறுத்தி, வாசுகியாகிய பாம்பை அதில் சுற்றிப் பூட்டினார். பின்னர் தேவர்களும் அசுரர்களும் மிகக் கடுமையாகக் கடலைக் கடைந்தனர். மந்திரமலை சுழன்றது. கடல் கலங்கியது. வாசுகியாகிய பாம்பு, கொடிய நஞ்சைக் கக்கியது. அதைக் கண்டு தேவர்கள் நடுங்கினர். பரந்தாமனை நோக்கி முறையிட்டனர். அவர்களது முறையீட்டைக் கேட்டறிந்த மகாவிஷ்ணு, மிகப்பெரியதான ஆமையின் உருவத்தை எடுத்தருளினார். பாற்கடலுள் புகுந்து நிலைகுலைந்து நின்ற மந்திரமலைக்குக் கீழ் சென்று, அதனைத் தன் திருமுதுகில் ஏற்றுத் தாங்கிக் கொண்டார். பாற்கடல் நன்கு கடையப்பட்டது. காமதேனு, கற்பகத்தாரு, சிந்தாமணி, ஜராவதம் முதலிய ஜசுவரியங்கள் எல்லாம் தேவர்கட்குத் திரும்பக் கிடைத்தன. இறுதியில் அமிர்தமும் கிடைத்தது. இவ்வாறாக மகாவிஷ்ணு கூர்மாவதாரம் எடுத்துத் தேவர் குறை தீர்த்தருளினார். பாற்கடலைக் கடைந்த நிகழ்வைப் பொய்கையாழ்வார்,

**கண்ணன் நெடுமால் கடல்கடைந்த (நா.தி.பி.பா. 2088)**

என்றும் பூதத்தாழ்வார்,

**... .... .... கடல் கடைந்த**

**நீராழி வண்ணன் நிறம்... (நா.தி.பி.பா. 2232)**

என்றும், பேயாழ்வார்,

**மலைமுகடு மேல் வைத்து வாசுகியைச் சுற்றி**

**தலைமுகடு தானொருகை பற்றி — அலைமுகட்டு**
**அண்டம் போய் நீர் தெறிப்ப அன்று கடல் கடைந்தான்**
**பிண்டமாய் நின்ற பிரான். (நா.தி.பி.பா. 2327)**

**அம்புலாவு மீனுமாகி, ஆமையாகி, ஆழியார்**
**தம்பிரானுமாகி மிக்கது அன்புமிக்கு (நா.தி.பி.பா.786)**

பாற்கடலைக் கடைய எண்ணிய போது திருமால், ஆமையாக மாறித் தன் முதுகிலே மந்தரகிரி மலையைத் தாங்கி, வாசுகி என்னும் நாகத்தைக் கடையும் கயிறாகச் சுற்றி, தலைப்பகுதியைத் தான் ஒரு கையில் பிடித்துக் கொண்டு திருப்பாற்கடலைக் கடைந்தவன். ஒவ்வொரு உயிரிலும் உண்ணும் உணவின் சக்தியாக விளங்குகின்ற எம்பெருமானே! நீ உலகையே ஆளக்கூடியவனாக இருந்தாலும் மீனாகவும் ஆமையாகவும் அவதரித்த உன்னுடைய கருணையினை எங்ஙனம் போற்றுவது என்கின்றனர் ஆழ்வார்கள்.

**மச்ச அவதாரம்**

மச்சம் என்றால் மீன். மச்ச அவதாரத்தைக் குறித்துப் பற்பல மாறுபட்ட விளக்கங்கள் இருப்பினும் கரு ஒன்றே; வடிவங்கள் தான் வேறானவை. சத்திய கிருத யுகத்தில் பிரசாபதி என்னும் படைப்புக் கடவுளான பிரம்மன் உறக்க மயக்கத்தில் கொட்டாவி விட்டபோது அவர் வாயிலிருந்து நான்கு வேதங்களும் வெளியே தோன்றின. அப்போது அங்கு வந்தான் சோமுகாசுரன். அவன் அயகீரிவன் என்னும் குதிரை முகம் கொண்ட அரக்கன். தன் யோக சித்தியால், அந்த வேதங்ளைத் திருடிக்கொண்டு கடலுக்குள் புகுந்து அவற்றை மறைத்து ஒழித்து விட்டான். பிரம்மன் இதை அறியாது ஆழ்ந்து தூங்கிவிட்டார். வேதங்கள் தன் வசம் இல்லையேல் அவருக்குப் படைப்புத் தொழில் செய்ய இயலாது. உலகத்தில் அறமும் ஒழுக்கமும் நிறைவேற வேதத்தின் துணை அவசியம்.

பிரம்மன் உறங்கும் போதுதான் பிரளயம் தோன்றும், அப்பொழுது உலகின் எல்லாக் கடல்களும் பொங்கியெழுந்து ஆழிப்பேரலைகளால் உலகம் முழுவதும்

தண்ணீரால் மூழ்கடிக்கப்பட்டுவிடும். அதன் படியே இம்முறையும் மகாபிரளயம் ஏற்பட்டு மூன்று உலகங்களும் கடல்நீரில் மூழ்கின.

இந்தப் பிரளயம் ஏற்படுவதற்கு ஏழு நாட்களுக்கு முன் ஒரு நிகழ்வு நடந்தது. ஏழாவது மனு எனப்படும் சத்தியாவிரதன் ஒரு திராவிட நாட்டு மன்னன். தீவிர திருமால் பக்தரான இவர், உணவு ஒன்றும் உட்கொள்ளாது தண்ணீரை மட்டுமே அருந்தி, திருமாலை வணங்கி வந்தார். திருமால் அவரிடம் உலகம் முடிவுறும் போது நான் ஒரு படகை அனுப்புகிறேன். நீ உலகின் அனைத்து மரம், செடி, கொடிகள், வித்துக்கள் மற்றும் உயிரினங்களின் வகைக்கு ஒன்றாக மாதிரிக்காகச் சேகரித்துக் கொண்டு, படகில் சப்த உருசிகளுடன் ஏறிக்கொள். பிரளய காலத்தில் உலகம் நீரில் மூழ்கிவிடும், அப்போது நான் ஒரு மீனாகத் தோன்றுவேன். சப்த உருசிகள் உனக்கு ஒளியாய் இருந்து வழி காட்டுவர். வாசுகிப் பாம்பைக் கயிறாகப் பயன்படுத்தி மீனின் செதிளில் கட்டிவிடு, படகு கவிழாது நான் காப்பாற்றி பிரம்மன் விழித்து எழுந்ததும் மீண்டும் உலகை உண்டாக்குவேன் என்றார். அவ்வறே நடந்தேறியது.

பிரம்மனின் தூக்கம் கலைந்ததும் கடல் அமைதியடைந்தது. திருமால் படகைக் கரைசேர்த்தார். பிரம்மன் புது உலகின் தோற்றத்திற்காக வழிபட்டார். அப்போது தான் அவருக்கு வேதங்கள் திருடப்பட்டது தெரிந்தது. இதை அறிந்த திருமால் வேதங்கள் கடலுக்குள் இருந்ததை அறிந்து இடுப்பிற்குக்கீழ் மீன் உருவமும், இடுப்பிற்குமேல் ஆயுதங்களுடன் கூடிய நான்கு கரங்களுடன் தோன்றி கடலுக்குள் சென்று வேதங்களை மீட்டு பிரம்மனிடம் ஒப்படைத்தார். பிரம்மனும் தன் படைப்புத் தொழிலைச் செய்யத் தொடங்கினார்.

திருமால் மக்களைக் காப்பதற்காக எந்த உருவத்தையும் எடுக்கக் கூடியவர் என அவரது கருணையினைப் பாசுரங்களில் பாடியுள்ளனர் ஆழ்வார்கள்.

**அன்னமும் மீனுருவும் ஆளரியும் குறளும்**
**ஆமையும் ஆனவனே! ஆயர்கள் நாயகனே (நா.தி.பி.பா. 74)**

சுதர்சனச் சக்கரத்தைக் கையில் தரிக்கும் புருஷோத்தமனாய் இருந்தும் நீரில் வசிக்கும் மீனாக, ஆமையாக அவதரித்த கருணைக்கடலே, அதோடு நில்லாது மானிடராயிருக்கும் சாதாரணப் பெண்ணின் வயிற்றிலே தோன்றி மக்களோடு மக்களாக வாழ்ந்து அவர்களின் துன்பத்தைப் போக்கியவனே எனத் திருமாலின் அருட் குணத்தை எண்ணி வியக்கிறார் ஆழ்வார். ஏழுலகத்திற்கும் தலைவனே, நீ அன்னப்பறவையாகவும், மீனாகவும், நரசிம்மனாகவும், வாமணனாகவும், ஆமையாகவும் அவதரித்து மக்களின் குறைதீர்த்தவனே, உனக்காக ஏங்கித் தவிக்கும் என் குறையையும் தீர்க்கவேண்டும் என்கிறார்.

**துன்னிய பேரிருள் சூழ்ந்து உலகைமூட**
**மன்னிய நான்மறை முற்றும் மறைந்திட**
**பின் இவ்வுலகினில் பேரிருள் நீங்க அன்று**
**அன்னமது ஆனானே!** **(நா.தி.பி.பா. 106)**

சோமுகாசுரன் வேதங்களைத் திருடிக் கடலில் ஒளித்து வைத்தான். அதை மீனாகிக் கடலுக்குள் சென்று சோமுகனை வதைத்து வேதங்களை மீட்டு அன்ன வடிவம் எடுத்து திசைமுகனுக்கு அதனை உபதேசித்தவன் எம்பெருமான். உலகில் எங்கு துன்பம் நேர்ந்தாலும் உடனே சென்று காக்கக் கூடியவன் எம்பெருமானே என்ற உண்மையினை உரைக்கின்றார் பெரியாழ்வார்.

**வராக அவதாரம்**

காசியபர் என்ற புகழ்மிக்க முனிவருக்கும், அவருடைய மனைவி திதி என்பவளுக்கும் இரண்யன், இரண்யாட்சன் என்ற இரு புதல்வர்கள் பிறந்தனர். இவர்கள் முற்பிறவியில் மகாவிஷ்ணுவின் துவாரபாலகர்களாக இருந்தவர்கள். வைகுந்த நாராயணப்பெருமான், தனது தேவியர் மகாலெட்சுமியுடன் ஏகாந்தமாக இருந்த சமயத்தில், பெருமானது திருவாயிலில் காவல் காப்பாளர்களாக ஜயன், விஜயன் என்ற இருவர் காத்து நின்றனர். அப்பொழுது சனகாதி முனிவர் நால்வர் மகாவிஷ்ணுவைத் தரிசிக்கச் சென்றனர். துவார பாலகர்கள் இருவரும் அம்முனிவர்களைத் தடுத்து நிறுத்தினர். முனிவர்கள் அதைப் பொருட்படுத்தாது உள்ளே செல்ல முற்பட்டதால், பாலகர்கள் முனிவர்களை இகழ்ந்து பேசினர்.

அதனால் கோபம்கொண்ட முனிவர்கள் துவார பாலகர்களை அசுரர்களாகப் பிறக்கக் கடவீர்கள் என்று சாபமிட்டனர்.

காவலர்கள் முனிவர்களிடம் மன்னிக்கும்படி வேண்டினர். நடந்தவற்றை எல்லாம் அறிந்த மகாவிஷ்ணு துவார பாலகர்களை நோக்கி, நீங்கள் இரண்டு பேரும் அசுரர்களாகப் பிறந்து எமக்குப் பகைவர்களாக வாழ்வீர்கள். யாம் அவதரித்து உங்களை மாய்ப்போம் எனத் திருவாய் மலர்ந்தருளினார். அவர்களே இந்த இரண்யன் மற்றும் இரண்யட்சன். இரண்யட்சனுக்கு ஒரு தீய எண்ணம் தோன்றியது. இந்தப் பெரிய உலகத்தையே ஒரு பாயாகச் சுருட்டி எடுத்துக்கொண்டு சென்று கடலுக்கு அடியில் மறைத்துவைத்து விடவேண்டும். அப்பொழுது தான் தன்னுடைய பராக்கிரமத்தைத் தேவர்கள் தெரிந்து கொள்வார்கள். பிரம்மனின் முழுப்படைப்பையும் குறையுடையதாகச் செய்துவிடவேண்டும் என்று கருதினான். தான் கருதிய செயலைச் செய்தும் முடித்தான். அதனை அறிந்த பிரம்மன், இந்திரன் முதலிய தேவர்கள் வியப்பும் அச்சமும் கொண்டனர். அனைவரும் எதுவும் செய்ய இயலாதவராகி, மகாவிஷ்ணுவிடம் சென்று அடைக்கலம் புகுந்தனர்.

நாராயணப் பெருமாள் அவர்களுக்கு அபயம் வழங்கினார். உலகைக் காக்கும் பொருட்டுப் பெரிய உருவமும் பேராற்றலும் கொண்ட தெய்வீகப் பன்றியாக அவதாரம் எடுத்தருளினார். பன்றியுருவம் ஏற்றருளிய தோற்றமே வராகவதாரம் என்று போற்றப்பட்டது.

வலிமைமிக்க தேவப்பன்றி, இரண்டு நீண்டு வளைந்த கொடிய பற்களை வெளியே கொண்டதாக விளங்கியது. அது தன்னுடைய வெண்மையான கொம்பினால் பூமியைப் பெயர்த்து எடுத்து வந்து நிலைநிறுத்த விரும்பியது.

அசுரன் இரண்யாட்சன் அதனை அறிந்து கடுங்கோபங் கொண்டான். வராகவதாரப்பெருமானுடன் போர்புரிந்தான். பெருமானும் விளையாட்டாகவே அசுரனோடு போர்புரிந்து, அவனை சங்காரம் செய்தருளினார். இரண்யாட்சன் மாய்ந்ததும், அவனால் கடலுக்கு அடியில் ஒளித்து வைக்கப்பட்டிருந்த பூவுலகை

முன்புபோலவே அதன் மெய்நிலைக்குக் கொண்டு வருவதற்காக வராகவதாரர் கடலுக்குள் மூழ்கினார்.

வராகவதாரமாக உருவெடுத்துத் தன்னைத் தாங்கிச் செல்ல வந்த மகாவிஷ்ணுவைக் கண்ட பூமாதேவி பெரிதும் மகிழ்ந்தாள். மாதவனுக்குரிய மாதவியாகவே தாம் என்றும் நிலைத்திருக்குமாறு அருளும்படி வேண்டினார். வராகவதாரர் மகிழ்ந்து தமது வெண்கொம்பு நுனியால் பூமியைப் பரிவுடன் ஏந்திக்கொண்டு உயர்ந்து மேலே வந்தார்.

பூமியைத்தாங்கி வந்த பன்றியவதாரியின் மூச்சுக்காற்று எங்கும் பரவி, அன்பர்களைத் தூய்மைப்படுத்திப் புனிதராக்கியது. வராகவதாரர் பூவுலகை முன்பு இருந்த நிலையில் சீராக நிறுத்தினார். அச்செயலைக் கண்டு பிரம்மன், இந்திரன் முதலிய தேவர்களும் எல்லையற்ற ஆனந்தமுற்றனர்.

**பொருகோட்டோர் ஏனமாய்ப் புக்குஇடந்தாய்க்கு அன்றுன்**
**ஒரு கோட்டின் மேல் கிடந்த தன்றே (நா.தி.பி.பா. 2090)**

**கிடந்தானைக் கீண்டானை கேழலாய்ப் பூமி**
**இடந்தானை ஏத்தி எழும் (நா.தி.பி.பா. 2106)**

**….. … ….. ……………ஏனத்**
**துருவா யுலகிடந்த வூழியான் பாதம் (நா.தி.பி.பா. 2172)**

கூரிய தந்தங்களுடைய வராகமூர்த்தியாய் ஊழிவெள்ளத்தில் நிலத்தைத் குத்தி எடுத்துக் கொண்டு வெளிப்பட்ட காலத்தில் உனது கோரைப்பல்லின் ஒரு பகுதியில் அடங்கிக் கிடந்தது இந்த பூமி. அந்த அளவிற்கு இராட்சச உயரம் கொண்டு விளங்கினார். அத்தகைய எம்பெருமானின் திருப்பாதங்ளை பூஜிக்காதவர்களுக்குப் பரமபதத்தில் இடம் கிடைக்காது, எனவே திருமாலின் திருப்பாதத்தைச் சரணடையுங்கள் என்பதைப் பொய்கையாழ்வார் இப்பாடல்களில் எடுத்தியம்பியுள்ளார்.

**ஏனத் துருவாகிய ஈசனெந்தை இடவனெழ வாங்கி எடுத்த மலை**

**(நா.தி.பி.பா. 268)**

**கோட்டுமண் கொண்டிடந்து குடங்கையில் மண் கொண்டளந்து**

**மீட்டு அஃதுமிழ்ந்து விளையாடும் விமலன் மலை**

**(நா.தி.பி.பா. 357)**

**ஏனத்தினுருவாகி நிலமங்கை எழில் கொண்டான்**

**(நா.தி.பி.பா. 1100)**

இரணியாட்சன் கடலுக்கு அடியில் ஒளித்து வைத்த பூமியைத் திருமால் வராக அவதாரம் எடுத்துத் தனது கோரைப் பற்களினால் சமுத்திரத்திலிருந்து குத்தி எடுத்துச் சுமந்து வந்தார்.

**"புருவத்துக் கருவல் கந்தரத்தால்**

**தாங்கி, இவ்வுலகம் தந்தஅடிப் படுத்தனை நடுவண்**

**ஓங்கிய பலர்புகழ் குன்றினோடு ஒடுக்கும்"[2]**

பழைய காலத்தில் நீ பன்றி உருவு எடுத்துக் கருமையான வலிமையான உன் தோளினால் வெள்ளத்திலிருந்து நிலத்தை எடுத்து நிறுத்தினாய். அச்செயல் நடுநின்று உயர்த்த பலர் புகழும் மேருமலை பூமியைத் தாங்கிய செயலை ஒக்கும் எனப் புலவர் கடுவன் இளவெயினார் பரிபாடலில் திருமாலின் அவதாரச் சிறப்பினைப் பதிவுசெய்துள்ளார்.

**வானத்திலுள்ளீர் வலியீர் உள்ளீரேல் அறையோ!**

**வந்து வாங்கு மினென்பவன்போல**

**ஏனத் துருவாகிய ஈசனெந்தை இடவனெழ**

**வாங்கி எடுத்தமலை**

**கானக் களியானை தன் கொம்பிழந்து**

**கதுவாய் மதஞ்சோரத்தன் கைஎடுத்துக்**

**கூனற் பிறைவேண்டி அண்ணாந்து நிற்கும்**

**கோவர்த்தன மென்னும் கொற்றக்குடையே (நா.தி.பி.பா. 268)**

கோவர்த்தனகிரியில் உள்ள ஒரு யானை பாறைச் சுவரில் முட்டி விளையாடுகின்றது. அதனால் அதன் தந்தம் உடைந்துவிட்டது. கொம்பு நீங்கிய வலியிலே மதநீர் பெருக, துதிக்கையை உயர்த்தி, பிறை நிலவைத் தனது ஒடிந்த தந்தம் என நினைக்கிறதென்றால் நிலாவுக்கருகில் இருக்கிற மலை உச்சியைக் கொண்ட மிகப் பெரியமலையினை, ஒரு மண்கட்டியைப் போலத் தூக்கிப் பிடித்திருக்கிறான். யாரால் இச்செயல் செய்யமுடியும் எனச் சவால்விடுவது போல நிற்கின்றான். வராக வடிவம் கொண்டு கடலுக்குள் சென்று பூமியைத் தன் கொம்பினால் தூக்கி வந்தவன் எங்கள் கண்ணபிரான் எனப் பதிவு செய்துள்ளார் பெரியாழ்வார்.

திருமால் பன்றியின் உருவினை எடுத்துப் பூமியைக் காத்தார். பன்றியை இழிபிறப்பாகக் கருதுவர். ஆனால் இறைவன் படைப்பில் அனைத்து உயிர்களும் ஒன்றுதான். உயர்ந்தது தாழ்ந்தது என்று எதுவும் கிடையாது என்பதை இறைவன் இந்த அவதாரத்தின் மூலம் எடுத்துரைத்துள்ளார். பன்றி என இழிவாகக் கருதுவோர்க்கு அதன் வலிமையினை எடுத்துக்காட்டியுள்ளார்.

**நரசிம்ம அவதாரம்**

வராகமூர்த்தியால் கொல்லப்பட்ட இரணியாட்சனின் அண்ணன் இரணியகசிபு ஆவான். தனது தம்பி ஒரு பன்றியால் கொல்லப்பட்டான் என்பதை அறிந்து, பன்றியாக வந்த நாராயணன் மீது கோபம் கொண்டான். பரந்தாமனைப் பழி வாங்க எண்ணி, பிரம்மனை நோக்கிக் கடும் தவம் புரிந்தான். பிரம்மனும் மகிழ்ந்து நீ விரும்பியதைக் கேள் என்றார். இரணியன் நான்முகனைப் பார்த்து, தேவனே! தேவர்களாலும் மனிதர்களாலும் வேறு யாராலும் நான் இறத்தல் கூடாது. எவ்விதப் படைகளாலும், நீராலும், நெருப்பாலும், மண்ணாலும், விண்ணாலும், வளியாலும் நான் இறக்கக்கூடாது. எந்த விலங்காலும் நான் சாதல் கூடாது. இரவிலோ, பகலிலோ எனக்குச் சாவு நேரக்கூடாது. மூவுலகங்களிலும் என்னை விட வலிமையுடையோர் இருக்கக்கூடாது. நான் ஒருவனே தலைவனாக இருக்க

வேண்டும் என்ற வரங்களைக் கேட்டான். பிரம்மனும் அவன் விரும்பியபடியே வரம் அளித்தார்.

வரம் பெற்ற இரணியகசிபு அனைவரையும் துன்பப்படுத்தினான். அவன் மனைவி லீலாவதி கருவுற்றிருந்தாள். அசுரன் மனைவியாக இருந்தாலும் அற உணர்வுகள் கொண்டவள். மூலப் பரம்பொருளை உள்ளத்தில் கொண்டவள். அவளைத் தேவேந்திரன் கவர்ந்து செல்ல முயன்றான். நாரதர் லீலாவதியை மீட்டு, காத்து அவளுக்கு நல்ல உபதேச மொழிகளைக் கூறினார். அதனை அவள் கருவிலிருந்த குழந்தை கேட்டது. பின் இரணியனுக்கு ஆண்குழந்தை பிறந்தது. அவனுக்கு பிரகலாதன் எனப் பெயரிட்டனர். சுக்கிராசாரியார் பிரகலாதனுக்கு 'இரணியாய நமக' எனச் சொல்லுமாறு கூறினார். அதற்குப் பிரகலாதன் 'ஓம் நமோ நாராயணாய' எனக் கூறினான். சுக்கிராசாரியார் பல முறை எடுத்துக் கூறியும் பிரகலாதன் அதனை ஏற்றுக்கொள்ளவில்லை.

இதனால் ஆத்திரம் அடைந்த இரணியன் குழந்தையைக் கடுமையாகத் தண்டித்தான். சொல்லடா 'கரி' என்ற கடவுள் எங்கே இருக்கிறான் எனக் கேட்டதற்கு, 'கரி' தூணிலுள்ளான் துரும்பிலுள்ளான் எனப் பதில் கூறினான் பிரகலாதன். இரணியன் தூணை உடைத்தபோது நரசிம்மப் பெருமாள் வெளிப்பட்டார். இரண்யனைக் கொல்வதற்காகவே மனிதனே விலங்கே இல்லாத வகையில் தோன்றிய பெருமாள், வீடோ வெளியே இல்லாது வாயிற்படியில், பகலே இரவே இல்லாத அந்திப்பொழுதில் தன் மடிமீது அவனைக் கிடத்தி, அவன் உடலைத் தன் நகங்களால் கிழித்துக் கொன்றார். இதன் மூலம் அடியவர்களுக்கு ஆபத்து நேரும் போது திருமால் அங்கே அவதரித்து அவர்களைக் காப்பார் என்பதனை ஆழ்வார்களின் பாடல் வழி அறியமுடிகிறது. இந்நிகழ்வினை ஆழ்வார்கள் தமது பாசுரங்களில் பதிவுசெய்துள்ளனர்.

**முன் நரசிங்கமதாகி அவுணன் முக்கியத்தை முடிப்பான்**

**(நா.தி.பி.பா. — 279)**

**வல்லெயிற்றுக் கேழலுமாய் வாளெயிற்றுச் சீயமுமாய்**

**எல்லையில்லாத் தரணியையும் அவுணனையும் இடந்தான்**

**(நா.தி.பி.பா. 409)**

**திண்படைக் கோளரியின் உருவாய்த் திறலோன் (நா.தி.பி.பா. 1133)**

தன்னுடைய பக்தன் பிரகலாதனைக் காக்க வேண்டி, திருமால் தூணிலிருந்து புறப்பட்டு வலுவான நகங்களையும், கூரிய பற்களையும் கொண்டு கர்ஜனையோடு நரசிங்கமாய் அவதரித்து வந்து இரண்யகசிபுவின் மார்பைப் பிளந்து அவனை வதம் செய்தார்.

**"செயிர்தீர் செங்கட் செல்வ!நிற் புகழ்**
**புகைந்த நெஞ்சின், புலர்ந்த சாந்தின்**
**பிருங்க லாதன் பலபல பிணிபட**
**வலந்துழி மலர்ந்த நோய்கூர் கூம்பிய நடுக்கத்து**
**அலர்ந்த புகழோன், தாதை ஆகலின்**
**இகழ்வோன், இகழா நெஞ்சினனாக, நீ இகழா**
**நன்றா நட்டஅவன் நன்மார்பு முயங்கி**
**ஒன்றா நட்டவன் உறுவரை மார்பின்**
**படிமதம் சாம்ப ஒதுங்கி**
**இன்னல் இன்னரொடு இடி முரசு இயம்ப**
**வெடிபடா ஒடி தூ தடியொடு**
**தடிதடி பலபட வகிர்வாய்த்த உகிரினை"[3]**

எனப் புலவர் கடுவன் இளவெயினார் திருமாலின் நரசிங்க அவதாரச் சிறப்பினைப் பரிபாடலில் பதிவுசெய்துள்ளார்.

**..................முன்னம்**
**தரணி தனதாகத் தானே இரணியனைப்**
**புண்நிரந்த வள் ளுகிரால் பொன் னாழிக்கையால்**

**(நா.தி.பி.பா. 2117)**

என்று இரணியனைப் பிளந்த நரசிங்கன் நக அழகைப்பாடுகிறார் பொய்கையாழ்வார்.

**வரத்தால் வலிநினைந்து மாதவ நின்பாதம்**
**சிரத்தால் வணங்கானா மென்றே— உரத்தினால்**
**ஈரரியாய் நேர்வலியோ னாய இரணியனை**
**ஓரரியாய் நீயிடந்த தூண் (நா.தி.பி.பா. 2171)**

பெருமான் தன்னளவில் ஒருவன் குற்றம் புரிந்தால் அதனால் கோபப்படமாட்டான். ஆனால் தன்னடியார்களிடத்தில் யாரேனும் குற்றம் புரிந்தால் அவர்களைத் தண்டித்தே தீர்வான் என்பதனை இப்பாசுரத்தின் வழிப் பூதத்தாழ்வார் விளக்குகிறார்.

**............... கோள ரியாய்**
**ஒண் திறலோன் மார்வத் துகிர்வைத்து (நா.தி.பி.பா. 2199)**

**புகுந்தி லங்கும் அந்திப்பொழுதத்து, அரியாய்**
**இகழ்ந்து இரணியன தாகம் சுகிர்ந் தெங்கும்**
**சிந்திப் பிளந்த திருமால் திருவடியே**
**வந்தித் தென் நெஞ்சமே! வாழ்த்து (நா.தி.பி.பா. 2376)**

நரசிம்ம பெருமானின் திருவடிகளை வாழ்த்தவும், வணங்கவும் வேண்டும் என்று தம் நெஞ்சிற்குக் கூறுவது போல எல்லோர்க்கும் கூறுகின்றார். காக்கும் கடவுளாகிய கண்ணபிரானை வழிபட்டோரை அவன் எந்தச் சூழ்நிலையிலும், எந்த இடத்திலும், எந்த உருவத்திலும், எந்த நேரத்திலும் காக்கக்கூடியவன் என்பதை இந்நிகழ்வுகள் மூலமாக எடுத்துரைக்கின்றார்.

‘‘இமயலையில் இருக்கும் காட்டுப் பன்றிகள் மாணிக்கப் பாறையைப் பெயர்த்துத் தள்ள அவை மலையிலிருந்து விழும் நீர் வீழ்ச்சியால் உருட்டிச் செல்லப்படுகின்ற காட்சியை,

**இறங்கி யேனங்கள் வளைமருப்பிடந்திடக்**
**கிடந்தரு கெரிவீசும்**

**பிறங்கு மாமணி யருவியொ டிழிதரு**

**பிருதிசென்ற டைநெஞ்சே**

என்று கூறுகிறார். நரசிம்ம அவதாரத்தில் திருமால் வலிமைமிக்க இரணியவுருவைக் கிழித்தது போல் பன்றிகள் பெரும் பாறைகளைப் பெயர்த்துத் தள்ளியதாகக் கெள்கிறார். இயற்கையின் அழகை மட்டும் காணாது இறையன்பையும் காண்கின்றார். இறைவனின் சிறப்பைக் கூறுவதற்கு இயற்கைச் சூழலைப் பயன்படுத்தியுள்ளார் திருமங்கையாழ்வார்"[4] என து.லலிதா குறிப்பிட்டுள்ளார்.

சாந்தமும் கருணையின் வடிவும் கொண்ட தோற்றத்தையுடைய எம்பெருமான் தன் அடியவர்களைக் காப்பாற்றுவதற்காக அடையும் விகார உருவங்களுக்கு எல்லையே இல்லை என்பதை ஆழ்வார்களின் பாசுரங்களின் வழி உணர முடிகிறது. நல்லோர்க்குத் துன்பம் வரும்போதும் தீயோர்களால் உலகிற்குத் தீங்கு வரும்போதும் திருமால் அவதாரம் செய்வார் என்பதையும் உணரமுடிகிறது.

**அசுரர்கள் விலங்குகளாக அவதாரம் எடுக்கும் போது அவர்களை அழித்தல்**

கிருட்டிணன் அவதாரத்தில் குழந்தைக் கண்ணனை அழிக்க, கம்ச அரசன் பல அசுரர்களை அனுப்பினான். அசுரர்கள் மனிதர்களாகவும், சில விலங்குகளாகவும், பறவைகளாகவும் உருமாறி வந்து கண்ணனை அழிக்க முயற்சி செய்தனர். ஆனால் கிருட்டிணன் அவர்களை எல்லாம் அழித்தார். திருமால் உயிரினங்களிடம் அன்பு கொண்டவர்; அவற்றைக் காக்கக் கூடியவர் என்றாலும் அவற்றினால் துன்பம் வரும் சூழ்நிலையில் அவற்றை அழிக்கவும் கூடியவர். அதுபோல மனிதர்களாக இருந்தாலும் மற்றவர்களைப் போற்றும் அன்புக் குணம் கொண்டவர்களை மட்டுமே திருமால் ஏற்றுக் கொள்வார். பிறருக்குத் துன்பம் தரக்கூடியவர்களை ஒரு போதும் அவர் ஏற்றுக் கொள்ள மாட்டார்; அவர்களை அழிக்கவும் கூடியவர். தான்தான் உயர்ந்தவர் என்று ஆணவத்தினால்

இருப்பவர்களின் செருக்கையும் அழிக்கக்கூடியவர் என்பதை ஆழ்வார்கள் எடுத்துரைக்கின்றனர்.

**விலங்குகளாக உருமாறிய அசுரர்கள்**

| | | |
|---|---|---|
| குவலயா பீடம் | — | யானை |
| காளிங்கன் | — | பாம்பு |
| பகாசுரன் | — | கொக்கு |
| முகாசுரன், வத்ஸாசுரன் | — | கன்று |
| கோசிகாசுரன் | — | குதிரை |
| தேனுகாசுரன் | — | கழுதை |
| மாரீச்சன் | — | மான் |

**குவலயாபீடம் யானையை அழித்தல்**

**சினமா மதகளிற்றின் திண் கருப்பைச் சாய்த்து (நா.தி.பி.பா. 2324)**

கோபத்தையும், மிகுந்த மதத்தையும் கொண்ட குவலயாபீடம் என்னும் யானையின் வலிமையான தந்தத்தை முறித்தெறிந்தவன். இந்த உலகத்தையே தன் வயிற்றுள் அடக்கியவன், பெரிய ஆரங்கள் பூண்ட திருமார்பைக் கொண்டவனின் ஒரு பாதத்தின் அகலத்தில் அடங்கியுள்ளது தான் இந்த உலகம் என்கிறார் பேயாழ்வார். கோவர்த்தன கிரியைக் குடையாகப் பிடித்தவன், குதிரையாக வந்த கோசிகாசுரனை அழித்த, ஏழு மாராமரங்களைச் சாய்த்தவன்; குவலயாபீடத்தின் கொம்பை முறித்தவன்; குருந்த மரத்தைச் சாய்த்தவன். ஆணவத்தால் கண்ணனை அழிக்கப் பல உருவங்களில் வந்த அசுரர்களையெல்லாம் கொன்றவன் திருமாலே.

**துங்க மதக்கரியின் கொம்பு பறித்தவனே (நா.தி.பி.பா. 69)**

**கொலையானைப் போர்க்கோ டொசித்தனவும் (நா.தி.பி.பா. 2108)**

**தாராயதண் துளவ வண்டு உழுது வரைமார்பன்**

**போரானைக் கொம்பு ஒசித்த புட்பாகன் என்னம்மான்**

**(நா.தி.பி.பா. 1203)**

சினத்துடன் மதநீர் பெருக்கிக் கொண்டிருக்கும் வலிமையான கால்களையும், பெரிய துதிக்கையையும் உடைய குவலயா பீடம் என்னும் யானையினுடைய தந்தத்தைப் பிடுங்கி அதன் செருக்கை அடக்கியவன் திருமால். மிகுந்த ஆணவத்துடன் செருக்குடையவர்களாக இருந்தாலும் அவர்களை அடக்கி ஆணவத்தை அழித்து, அவன் மீது பற்றுக் கொள்ளச் செய்யக் கூடியவன் எம்பிரான். எனவே, ஆணவம், வன்மம், சினம் இவைகளை ஒழித்து திருமாலின் அருளைப் பெற வேண்டும் என்பதை ஆழ்வார்கள் திருமால் விலங்குகளோடு செய்த அற்புத நிகழ்வுகளை எல்லாம் எடுத்துரைத்துரைப்பதன் வழி எடுத்துரைக்கின்றனர்.

**காளிங்கன் செருக்கை அடக்குதல்**

**அடிச்சகடம் சாடி அரவாட்டி (நா.தி.பி.பா. 2414)**

**அரவன் வெருவ முனநான் பூம்புனல் பொய்கை புக்கானவனுக்கு**

**(நா.தி.பி.பா. 1132)**

துதிக்கையும், உறுதியான கால்களும் உடைய கஜேந்திரனின் இடர் நீக்கியவன்; காளிங்கன் என்னும் பாம்பு அஞ்சும்படி முன்னர் பொய்கையில் பாய்ந்தவன் உறையும் இடம், தடாகங்கள் சூழ்ந்த அழகிய காஞ்சி நகரிலே, தேன் நிறைந்த சோலையையும் மதிலையும் உடைய பாண்டிய மன்னனையே போரில் வென்ற பாம்புக் கொடியையுடைய பல்லவ மன்னன் வணங்கும் பரமேச்சுர விண்ணகரமாகும். எந்த மன்னனாக இருந்தாலும் திருமாலையே முதற்கடவுளாக எண்ணி வழிபடுகின்ற நிலையினை ஆழ்வார்கள் சுட்டியுள்ளனர்.

**கடங்கலந்தவன்கரி மருப்பொசித்து ஓர் பொய்கைவாய்**
**விடம்கலந்த பாம்பின் மேல் நடம் பயின்றநாதனே!**
**குடம் கலந்த கூத்தனாய் கொண்டல் வண்ண! (நா.தி.பி.பா. 789)**

காளிங்கன் என்ற பாம்பு யமுனா நதியில் இருந்து கொண்டு நீர் முழுவதிலும் தன் விசத்தைப் பாய்ச்சி அங்கு நீர் அருந்த வரும் விலங்குகளையும், நீரிலுள்ள மீன்களையும், மக்களையும் துன்புறுத்திக் கொண்டிருந்தது. இதனை அறிந்த கிருட்டிணன் யமுனா நதியில் பாய்ந்து காளிங்கனுடன் சண்டையிட்டு அவன் ஆணவத்தை அடக்கி அவன் தலைமீது ஆனந்தக் கூத்தாடினான். இந்நிகழ்வின் மூலம் ஆழ்வார்கள் எந்த நிலையிலும் மனிதன் தன்னிலை மறவாது வாழவேண்டும். அவ்வாறு இருப்பவர்களுக்கு அமர வாழ்வு கிட்டும் என்பதனை இந்நிகழ்வைச் சுட்டி உணர்த்துகின்றனர்.

**கொக்காக வந்த பகாசுரனை அழித்தல்**

**பொருதுடைவு கண்டானும் புள்வாய் கீண்டானும்**

**(நா.தி.பி.பா. *2099*)**

சிறு குழந்தையாகிய கண்ணன் இராட்சசக் கொக்காக வந்த பகாசுரனின் அலகுகளைப் பிளந்து அவனை அழித்தவன். சிறு குழந்தையால் இச்செயல் எவ்வாறு முடியும் என ஆச்சரியமூட்டும் செயல்களையெல்லாம் செய்தவன். அண்டத்தையே தன் வாய்க்குள் அடக்கிக் காட்டியவன். எப்பொழுதும் அவனையே நினைத்துக் கொண்டிருப்பதால் என்னெஞ்சம் கம்பீரம் அடைந்து விட்டது.

**தாங்கருஞ் சினத்துவன்தான் தடக்கைமா மருப்பு வாங்கி**
**பூங்குருந்தொசித்துப் புள்வாய் பிளந்து எருதடர்த்த**

**(நா.தி.பி.பா. *1291*)**

பகாசுரன் என்னும் அரக்கன் கொக்காக உருமாறி கண்ணனை அழிக்க எண்ணியபோது கண்ணன் கொக்கின் வாயைப் பிளந்து, கொக்காக வந்த பகாசுரனை அழித்தார். அதோடு இல்லாமல் பல அசுரர்களையும் அழித்த கேசவன் மகிழ்ந்து குடிகொண்டுள்ள இடம் மாம்பழங்களை உண்ட பெண்குரங்கு, வண்டுகள் சிதறி ஓடும்படியும் வாழைமரங்களுக்குள் தாவி வாழைப்பழங்களைத் தின்னும் இனிமையான நாங்கூர் திருமணிக்கூடமாகும்.

**மருப்பினை ஒசித்து புள் வாய் பிளந்த (நா.தி.பி.பா. 513)**

**காட்டைத் தேடி தேனுகனும் களிறும் புள்ளும் உடன்மடிய**
**வேட்டையாடி வருவானை விருந்தாவனத்தே கண்டோமே**
**(நா.தி.பி.பா. 645)**

தேனுகாசுரனும், குவலையாபீடம்மென்னும் யானையும், கொக்காக வந்த பகாசுரனும் உடனே மடியச் செய்தவனை, காட்டிற்குச் சென்று வேட்டையாடி வருபவனை நாங்கள் பிருந்தாவனத்தில் கண்டு வணங்கினோம் என்கிறார் ஆண்டாள்.

**கன்றின் வடிவாக வந்த அசுரனை அழித்தல்**

**வானோ மறிகடலோ மாரு தமோ தீயகமோ**
**கானோ ஒடுங்கிற்று? கண்டிலமாய் — ஆனீன்ற**
**கன்றுயரத் தாமெறிந்த காயுதிர்த்தார் தாள் பணிந்தோம்**
**வன்துயரை ஆவா! மருங்கு (நா.தி.பி.பா. 2638)**

கிருட்டிண பரமாத்மா பசுங்கன்று வடிவில் வந்த வத்ஸாசுரனைச் சுழற்றி விளாமரமாய் நின்ற அசுரன் மீது எறிந்து அதன் காய்களை உதிர்த்து இரு அரக்கர்களையும் அழித்தார். இத்தகைய பெருமானின் திருவடிகளை அணுகி வணங்கினோம். அதனால் எங்களது கொடிய பாவங்கள் எல்லாம் ஓடிப்போயின. அலைகள் வீசும் சமுத்திரமோ, காற்றோ, ஆகாயமோ, நெருப்போ, காடோ என எதில் போய் மறைந்தன எனத் தெரியவில்லை என நம்மாழ்வார் கூறுகின்றார்.

**கற்றுக் குணிலை விளங்கனிக்குக் கொண்டெறிந்தான்**
**(நா.தி.பி.பா. 2341)**

**கன்றினை வாலோலை கட்டிக் கனிகள் உதிர எறிந்து**
**(நா.தி.பி.பா. 159)**

கன்றுக்குட்டிகளின் வாலில் ஓலையைக்கட்டி விளையாடுகின்றாய்; கன்றாக வந்த முகாசுரனை அழித்தாய்; காளியனின் சினத்தை அடக்கினாய். இவ்வாறு பெரிய காரியங்களையெல்லாம் முடித்து விட்டு ஏதும் அறியாத சிறுவனாய் விளையாடுகின்றாய் எனக் கண்ணனின் அரிய செயல்களை எடுத்துரைக்கின்றார்.

**கரும்பார் நீள்வயல் காய்கதிர்ச் செந்நெல்லைக் கற்றானிரை மண்டித் தின்ன**
**விரும்பாக் கன்று ஒன்று கொண்டு விளங்கனி வீழ எறிந்த பிரானே**
**(நா.தி.பி.பா.228)**

நிலத்தில் கரும்பு போல் உயர்ந்து வளர்ந்துள்ள நெற்பயிர்களைக் கன்றுகளும், பசுக்களும் மேய்ந்து கொண்டிருக்க அதில் ஒரு கன்று மட்டும் மேயாமல் நின்று கொண்டிருப்பதை அறிந்த கிருட்டிண பரமாத்மா அவன் அசுரன் என்பதை அறிந்து அந்தக் கன்றின் கால்களைப் பற்றி இழுத்து சுழற்றி, அருகில் விளாமரமாக நின்று கொண்டிருந்த அசுரன் மீது அடித்து அதன் காய்களை உதிர்த்து இரு அசுரர்களையும் அழித்த பெருமானின் திருவடிகளை வணங்கினால் நமது கொடிய துயரங்கள் எல்லாம் நீங்கும்; செல்லும் என்பதை ஆழ்வார்கள் எடுத்துரைக்கின்றனர்.

கன்றாக வந்த அசுரனைக் குறிப்பிடும் போது ஒவ்வொரு ஆழ்வாரும் ஒவ்வொரு பெயரைக் குறிப்பிட்டுள்ளனர். நம்மாழ்வார் கன்றாக வந்த வத்ஸாசுரன் என்று குறிப்பிட்டுள்ளார். பெரியாழ்வார் கன்றாக வந்த முகாசுரன் என்று குறிப்பிட்டுள்ளார்.

**குதிரையாக வந்த கேசிகாசுரனை அழித்தல்**

**இருங்கைம்மாகரி முனிந்து பரியைக் கீறி**
**இனவிடைகளே மூடர்ந்து (நா.தி.பி.பா. 1144)**

கேசி என்னும் குதிரையின் வாயைப் பிளந்து அழித்து மேலும் தேனுகாசுரன், முஷ்டிகன் எனப் பல உருவங்களில் வந்த அசுரர்களை எல்லாம் அழித்த எம்பெருமான் கரிய பாக்கு மரத்தின் பச்சைப் பாளையானது வெண்மையான

முத்துக்களாகவும், காயெல்லாம் மரகதமாகவும், பழங்களெல்லாம் பவளம்போல வும் காட்சியளித்தன. புன்னைமரம் மொட்டுகளை மலரச்செய்தது. இத்தகைய திருக்கோவலூரில் மாதவனின் அழகைக் கண்டு ரசித்தேன் என்கிறார்.

**மாத்தொழில் மடங்கச் செற்று மருதிறநடந்து வன்தாள்**
**(நா.தி.பி.பா. 1290)**

**மாவலனாய்க் கீண்ட மணிவண்ணன் (நா.தி.பி.பா. 2323)**

**மாவா யுரம் பிளந்து (நா.தி.பி.பா. 2329)**

குதிரையாய் வந்த கேசிகாசுரன் என்னும் அசுரனுடைய செயல்களை அடக்கி, அவனது வாயைப் பிளந்து அழித்த கோபாலன், நீலமணி நிறத்தவன் பசுக்களை மேய்த்துக்கொண்டும் புல்லாங்குழல் ஊதிக் கொண்டும் கருணையின் வடிவாக விளங்குகின்றார்.

**மாவாய் கீண்ட மணிவண்ணனை வரக் (நா.தி.பி.பா. 1944)**

**பூக்குருந் தொசித்து ஆனை காய்ந்த அரிமாச் செகுத்து**
**ஆங்கு வேழத்தின் கொம்பு கொண்டு வன்பேய் முலை**
**(நா.தி.பி.பா. 1963)**

பூக்கள் நிறைந்த குருந்த மரத்தை முறித்து, காளைகளை அடக்கி, கேசி என்னும் குதிரையை மருளும்படிச் செய்து, கம்சனின் அரண்மனை வாயிலில் நின்ற குவலையாபீடம் என்னும் யானையின் தந்தத்தைப் பிடுங்கி, பூதனையையும் கொன்ற கண்ணன் அவனது புல்லாங்குழல் ஓசையினால் என் ஏக்கத்தைத் தூண்டி விடுகிறான் எனத் திருமங்கை ஆழ்வார் தலைவியாக நின்று திருமாலின் அருளுக்காக ஏங்குகின்ற நிலையினை இப்பாசுரம் விளக்குகிறது.

**கழுதையாக வந்த தேனுகாசுரனை அழித்தல்**

**வாசியாகி நேசமின்றி வந்தெதிர்ந்த தேனுகன்**
**நாசமாகி நாள் உலப்ப நன்மைசேர் பனங்கனிக்கு**

**வீசிமேல் நிமிர்ந்த தோளின் இல்லையாக்கினாய் கழற்கு**

**ஆசையாம் அவர்க்கலால் அமரராகல் ஆகுமே**

**(நா.தி.பி.பா. பா.831)**

கோவேறு கழுதை வடிவில் பகை உணர்வுடன் வந்த தேனுகாசுரனின் ஆயுளை முடிக்க, பனைமரத்தின் மேல் சுழற்றி அடித்து அவனது தோள் வலிமையை அழித்து பனம் பழமாய் உதிரச் செய்தவன் கண்ணன். அவனுடைய திருவடிகளை வணங்கியவர்களுக்கு மட்டும் அல்லாது மற்றவர்களுக்கு அமர வாழ்வு கிட்டாது என்பதை ஆழ்வார்கள் எடுத்துரைக்கின்றனர்.

**தேனுகன் ஆவிசெகுத்து பனங்கனி**

**தான் எறிந்திட்ட (நா.தி.பி.பா. 216)**

**தேனுகனாவி போயுக அங்கு**

**ஓர் செழுந்திரள் பனங்கனியுதிரத்**

**தானுகந்தெறிந்த தடங்கடல்வண்ணர் எண்ணி**

**முன் இடங்கொண்ட கோயில் (நா.தி.பி.பா. 1824)**

தேனுகாசுரனின் உயிரை அழிக்க அங்கு மரத்தில் திரண்டிருந்த பனம் பழங்கள் உதிரும்படி, கழுதையாக வந்த அசுரனைப் பனைமரத்தின் மீது எறிந்து மகிழ்ந்த பச்சை மரகதமணி போன்ற பிரகாசமுடைய எம்பிரான் திருமாலிருஞ்சோலையில் குடிகொண்டுள்ளான், அவன் அருளைப் பெற்று, தம் பாவங்களைப் போக்கிக் கொள்ள விரும்புவோர் இத்திருத்தலத்திற்குச் சென்று வழிபடுங்கள் என்கிறார் திருமங்கையாழ்வார்.

**மானாக வந்த மாரீச்சனை அழித்தல்**

**கிடந்தானைத் தடங்கடலுள் பணங்கள் மேவிக்**

**கிளர் பொறிய மறிதிரிய அதனின் பின்னே**

**படர்ந்தானை படுமதத்த களிற்றின்கொம்பு**

**பறித்தானைப் பாரிடத்தை எயிறுகீற**

**இடந்தானை வளைமருப்பின் ஏனமாகி**

**இருநிலனும் பெருவிசும்பும் எய்தாவண்ணம்**

**கடந்தனை எம்மானை கண்டுகொண்டேன்**

**கடிபொழில்சூழ் கடல்மல்லைத் தலசயனத்தே**

**(நா.தி.பி.பா. *1093*)**

இராமவதாரத்தில் இராமர் காட்டில் இருக்கும் போது மாரீசன் என்ற அசுரன் மான்வடிவில் வந்து நின்றான். அதன் பின்னே விரட்டிச் சென்று அதனை அழித்தவன் திருப்பாற்கடலில் ஆதிசேடன் மீது பள்ளி கொண்டிருக்கின்றான். அவன் பின்னே மனதைச் செலுத்துவோர்க்கு, சொர்க்கத்தில் இடமளிப்பார் எம்பிரான் என ஆழ்வார்கள் வலியுறுத்துகின்றனர்.

திருமால் அசுரர்கள் விலங்குகளாக உருமாறி வரும்போது அவர்களை வதம் செய்தார். விலங்கு உருவிலிருக்கும் அசுரர்களைக் கொன்றாலும் அது விலங்குகளைக் கொன்றதாகத் தான் அர்த்தம். எனவே விலங்குகளைக் கொல்லுவது பாவச்செயல் என்பதால் எம்பெருமான் உலகிலுள்ள புனித நீர்களில் நீராடித் தன் பாவத்தைப் போக்கிக் கொண்டதாக வரலாறு கூறப்படுகின்றது. அதே போன்று சிவபக்தனான இராவணனைக் கொன்ற போது அந்தப் பாவத்தைப் போக்க, கடற்கரை மணலில் லிங்கம் செய்து சிவபூஜை செய்து கடலில் நீராடி தன் பாவத்தைப் போக்கியதாகவும் அந்தத் தலமே இராமேசுவரம் என்ற புனிதத் திருத்தலமாக விளங்கியதாகவும் கூறப்படுகிறது.

திருமால் விலங்குகளாக வந்த அசுரர்களை அழித்ததும் இராவணனைக் கொன்றதும் பிறர் நன்மைக்காகவே செய்தது என்றாலும், அவர்களைக் கொன்ற பாவத்திற்குப் பல புண்ணிய நதிகளில் நீராடி, தன் பாவத்தைப் போக்கியுள்ளார். மனிதர்களும் தான் செய்த பாவத்தைப் போக்கிக் கொள்ளும் வழியைத் தேடவேண்டும் என்பதை உணர்த்தவே எம்பிரான் இச்செயலைச் செய்ததாக ஆழ்வார்கள் கூறுகின்றனர்.

**திருமால் திருத்தலப் பெருமையினை விலங்குகள் வழி உணர்த்துதல்**

திருமால் குடிகொண்டிருக்கின்ற திருத்தலங்கள் செழிப்புமிக்க இயற்கை எழில் கொஞ்சும் வளமான இடமாகக் காட்சியளிக்கின்றன. எம்பெருமான் மட்டும் அழகுடையவன் அல்ல; அவன் வீற்றிருக்கும் திருத்தலங்களும் மிகுந்த அழகுடன் விளங்குகின்றன. அங்கு வசிக்கும் விலங்குகள், பறவைகள், மனிதர்கள் என அனைவரும் அன்புடையவர்களாகவே விளங்குகின்றனர். காட்டிலே வாழும் விலங்கருள் கூட ஒன்றையொன்று அன்போடு நேசிக்கின்றன. விலங்குகள் தன்பெடையோடும், குட்டிகளோடும் இணைந்து கூடி மகிழ்கின்ற அந்த இன்ப நிலைக்குக் காரணம் அங்கு வீற்றிருக்கின்ற நாராயணனே என ஆழ்வார்கள் திருமால் திருத்தலத்தின் பெருமையினை விலங்குகள் வழி எடுத்துரைக்கின்றனர்.

**இயற்கை எழில்**

**கடிகொள் வேங்கையின் நறுமலரமளியின்**
**மணியறை மிசை வேழம்**
**பிடியினோடுவண்டு இசை சொலத்துயில்**
**கொளும் பிரிதி சென்றடை நெஞ்சே (நா.தி.பி.பா. 960)**

நீலமணிப் பாறைகளின் மேலே, வாசனையுள்ள வேங்கை மரத்தின் மலர்கள் உதிர்ந்து கிடக்கின்றன. அந்த மலர்ப்படுக்கையிலே ஆண் யானைகள், தன் பெண் யானைகளோடு சேர்ந்து, வண்டுகள் இசைபாட இனிமையாகத் துயில் கொள்ளும். அந்த அழகிய சோலை, வாசுதேவன் வசிக்கும் திருப்பிரிதியை என்ற திருத்தலமாகும்.

**கரியமா முகில் படலங்கள் கிடந்தவை முழங்கிடக் களிறென்று**
**பெரிய மாகணம் வரையெனப் பெயர்தரு பிரிதிஎம் பெருமானை**
**(நா.தி.பி.பா. 967)**

கருத்த பெரிய மேகக் கூட்டங்கள் நீர்ப் பளுவினால் முழங்க, பருத்த மலைப்பாம்புகள் அதைக்கேட்டு இரையான யானைகள் வருவதாக எண்ணி

அலைகின்றன. யானைகளையே விழுங்கும் அளவிற்கு மிகப்பெரிய மலைப்பாம்புகள் இருக்கின்ற அடர்ந்த காடுகளையுடைய திருப்பிரிதியை என்னும் இடத்தில் பாம்புகளின் தலைவனான எம்பெருமான் வீற்றிருக்கின்றான்.

**தெளிந்த சிலாதலத்தின் மேலிருந்த மந்தி**

**அளிந்த கடுவனையே நோக்கி – விளங்கிய**

**வெண்மதியம் தாவென்னும் வேங்கடமே (நா.தி.பி.பா. 2339)**

சுத்தமான கற்பாறையின் மேல் அமர்ந்து கொண்டு பெண்குரங்கு, தன் துணையான ஆண்குரங்கிடம் ஆகாயத்திலுள்ள வெண்மையான சந்திரனைப் பிடித்துத் தரும்படிக் கேட்கின்ற அளவிற்கு வானத்தையே தொடக்கூடிய மிக உயர்ந்த பெரிய மலைகளைக் கொண்ட திருவேங்கடம் என்னும் திருத்தலத்திலே திருமால் குடிகொண்டுள்ளார்.

**கோங்கு செண்பகக் கொம்பினில் குதிகொடு குரக்கினம் இரைத்தோடி**

**தேன் கலந்த தண்பலங்கனி நுகர்தரு திருவயித்திருபுரமே**

**(நா.தி.பி.பா. 1152)**

**மாங்கனி நுகர்ந்த மந்தி வந்து வண்டிரிய வாழைத்**

**தீங்கனி நுகரும் நாங்கூர்த் திருமணிக்கூடத்தானே**

**(நா.தி.பி.பா. 1291)**

வேங்கை, கோங்கு, செண்பகம் போன்ற மரங்களின் கிளைகளில் குதித்து ஆரவாரம் செய்யும் குரங்குக் கூட்டங்கள் அங்கேயே தேன் கசியும் பலாப்பழங்களைத் தின்னும்; பின் மாம்பழங்களை உண்டு குரங்குகள் அங்குள்ள வண்டுகள் சிதறி ஓடும்படி வாழை மரங்களுக்குத் தாவி வாழைப்பழங்களையும் தின்னும். இவ்வாறு செழிப்பு மிக்க நாங்கூர் திருமணிக் கூடத்தில் உலகையே காக்கக்கூடிய நாராயணன் காட்சியளிக்கின்றார்.

**“கருவிரல் மந்திச் செம்முகப் பெருங்கிளை**

**பெருவரை அடுக்கத்து அருவி ஆடி**

**ஓங்குகரை ஊசல் தூங்கி வேங்கை**

**வெற்புஅணி நறுவீ கற்சுனை உறைப்ப**

**கலையொடு திளைக்கும் வரையக நாடன்”**[5]

இத்தகைய வளமிக்க மலையையுடைய தலைவன் எனப் புலவர் ஐயூர் முடவனார் பாடியிருப்பது ஒப்பிடத்தக்கதாகும்.

**ஓங்கி உலகலளந்த உத்தமன் பேர்பாடி**

**நாங்கள் நம்பாவைக்குச் சாற்றி நீராடினால்**

**தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரி பெய்து**

**ஓங்கு பெருஞ் செந்நெலூடு கயலுகள**

**பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்பத்**

**தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலைபற்றி**

**வாங்கக் குடம் நிறைக்கும் வள்ளல் பெரும் பசுக்கள்**

**நீங்காத செல்வம் நிறைந்தேலோ ரெம்பாவாய் (நா.தி.பி.பா. 476)**

எனத் திருமால் வீற்றிருக்கக் கூடிய இடத்திலே, அவரது கருணையினால் செல்வங்கள் நிறைந்திருக்கும்; திருட்டு, ஏமாற்று என்ற எந்தத் தீயசெயல்களும் இருக்காது என்பதனை ஆண்டாள் பாசுரத்தின் வழியாக அறியமுடிகிறது. இதனையே,

**“ஓங்கு வளர்ந்த**

**பசுசெந்நெல்**

**கன்னிப் பயிர்களின்**

**தாள்களூடே**

**மீன்களின்துள்ளாட்டம்**

**நட்சத்திரங்கள்**

**மேனியில் பதிந்த**

**உண்டு உறையும்**

**இடமாய்க் குவளை மலர்கள்**

**பசுமை ராஜ்யத்தில்**

**பகலெல்லாம் கோலோட்சி**

**தொழுவத்தில் துள்ளியெழும்**

**கர்ணப் பசுக்களின்**

**பால் கொள்ள இனி இனிப்பன**

**குளங்கள் மட்டுமே**

**மூச்சில் முகுந்தன் பெயர்**

**முன் மொழிந்து வர**

**அவன் பார்வை தந்த**

**சிலிர்ப்பு ரோமக்கால்களில்**

**கொப்பளிக்கச் செய்யும்**

**குளிர் நீர்**

**நீங்காத செல்வங்கள்**

**தரும் நாயகனை**

**மாறாத அன்புடனே**

**மனதில் தியானிப்போம்**

**பெண்களே வாருங்கள்!"**[6]

என ஆண்டாளின் பாடலை கவிதை வடிவில் கொடுத்துள்ளார் ஜெ. இளங்கோ.

**கனைத்திளங் கற்றெருமை கன்றுக் கிரங்கி**

**நினைத்து முலைவழியே நின்றுபால் சோர**

**நனைத்தில்லம் சேறாக்கும் நற்செல்வன் தங்காய் (நா.தி.பி.பா. 485)**

**ஏற்றக் கலங்கள் எதிர்பொங்கி மீதளிப்ப**

**மாற்றமதே பால் சொரியும் வள்ளல் பெரும்பசுக்கள் (நா.தி.பி.பா. 494)**

கன்றை ஈன்று சில நாட்களே ஆன எருமைகள் கன்றுகளை நினைத்து மனம் இரங்க, முலைக்காம்புகள் வழியே பால் வழிகின்றது. அதனால் வீடுமுழுவதும் நனைந்து சேறாகியுள்ளது. பால் கறக்கும் பாத்திரங்கள் பொங்கி வழியும்படி இடைவிடாமல் பாலைச் சொரியும் வள்ளலான பெரும் பசுக்களைக் கொண்ட நந்தகோபனின் செல்வனே, உன் திருவடிகளை வணங்குவதற்காக, உன் புகழ்பாடி உன் வாசலில் வந்து நிற்கின்றோம் மனமிரங்கி எங்களுக்குக் கருணை காட்டக் கூடாதா என ஏங்கி நிற்கின்றார் ஆண்டாள்.

“கோவலர்கள் பசுக்களை முதலில் கறந்து, பின் எருமைகளைக் கறப்பதற்குக் காலதாமதம் ஏற்பட்டது. மேலும் பசுவுக்கும் எருமைக்கும் வேறுபாடு உண்டு. பசுவின் பால் எளிதில் சீரணமாகும், எருமைப் பால் ஆகாது. கன்றுகளை நேரில் கண்டு பால் ஊட்டினால்தான் பசுக்களுக்குச் சுரப்பு ஏற்படும். கன்றுகளைக் காணாத பசுக்கள் பாலை அடக்கிக் கொள்ளும், எருமைகள் அப்படி அல்ல, கன்றை நினைத்தாலே பாலைச் சொரிந்து விடும். அதுபோல பக்தி என்ற யோகத்தில் மூழ்கிவிட்டால் கறப்பார் இன்றி, நினைப்பால் பால் பெருகுவது போல பக்தி பெருகும் என்பதை ஆண்டாள் உணர்த்தவே இதனைக் கையாண்டுள்ளார்”[7] என்கிறார் தேவிரா.

**“குன்ற வேங்கைக் கன்றொடு வதிந்தெனத்**
**துஞ்சுபதம் பெற்றதுய்த்தலை மந்தி**
**கல்லென் சுற்றம் கைகவியாக் குறுகி**
**வீங்குசுரை ஞெமுங்க வாங்கித் தீம்பால்**
**கல்லா வன்பறழ்க் கைந்நிறை பிழியும்**
**மாமலை நாட........................”[8]**

வேங்கை மரத்தின் அடியில் வளைந்த கொம்பினை உடைய காட்டுப் பசு தன் கன்றோடு தங்கியிருக்கும். அவை தூங்குவதைக் கண்ட பஞ்சு போன்ற தலையையுடைய மந்தி, தன் சுற்றத்தாரைக் கையால் அமர்த்தி குரல் எழுப்பாது அழைக்கும். பின் அருகில்சென்று காட்டுப் பசுவின்பால் கரந்த மடியைப் பற்றி

இழுத்து இனிய பாலைக் கறக்கும். கறக்கின்ற பாலானது தன் தொழிலையும் கல்லாது வலிமையான குட்டியின் கை நிறையுமாறு மந்தி பாலைப் பிழியும். இத்தகைய வளமை மிக்க பசுக்களைக் கொண்ட ஊரினையுடைய தலைவனே எனப் பொதும்பில் கிழார் குறிப்பிட்டுள்ளதைப் போல ஆண்டாள் வளமையான பசுக்களின் தலைவனே எனத் திருமாலைக் குறிப்பிட்டுள்ளார்.

**கண்ணார் கரும்பின் கழை தின்று வைகிக்**
**கழுநீரில் மூழ்கிச் செழுநீர்த் தடத்து**
**மண்ணேந்து இளமேதிகள் வைகுநாங்கூர்**
**மணிமாடக் கோயில் வணங்கு என் மனனே!**

**(நா.தி.பி.பா. *1223*)**

கரும்புகள் செழித்து வளர்ந்திருக்க அதனை இளம் எருமைகள் அதிகமாகத் தின்றதால் நகர முடியாமல் அங்கேயே தங்கி, பின் செங்கழு நீர்ப்பூக்கள் நிறைந்த குளத்திலே மூழ்கி, சேற்றிலே புரண்டு, கொம்புகளில் குத்தி, மண் உருண்டைகளைப் பெயர்த்து எறிந்து, கரையேறாமல் மீண்டும் குளத்திலேயே மகிழ்ந்து விளையாடுகின்ற செழிப்புமிக்க இடம் மாதவன் உறைகின்ற திருநாங்கூர் திருத்தலமாகும்.

**“சேற்றுநிலை முனையஇய செங்கட் காரான்**
**ஊர்மடி கங்குலின் நோன்தளை பிரிந்து**
**கூர்முள் வேலி கோட்டின் நீக்கி**
**நீர்முதிர் பழனத்து மீனுடன் இரிய**
**அந்தூம்பு வள்ளை மயக்கத் தாமரை**
**வண்டூது பனிமலர் ஆரும்**

என அகம் – *36* ஆம் பாடலில் எருமையின் ஓவியம் தீட்டப்பட்டுள்ளது”[9] என்பர் மு.வரதராசன்.

மலை போல் நீர் சொரியும் பெரிய அருவிகள் இரத்தினங்களைத் திரட்டிக் கொண்டு வந்திறங்க, அந்த இரத்தினங்களின் பிரகாசத்தை தீச்சுவாலையாக எண்ணி யானைகள் பயப்பட, நாகங்கள் அந்த ஒளியை மின்னலாக நினைத்துப் புற்றுக்குள் சென்று ஒளிந்து கொள்ளும் திருமலைநாதன் வாழும் இடமாகும். (நா.தி.பி.பா. 2420)

**செந்நெற் கூழைவாரம் பொரீஇ, அரிவார் முகத்தெழு வாளையோய் கரும்பு அந்நற்காடு அணையும் அணி ஆலியம்மானே.**

**(நா.தி.பி.பா. 1190)**

நீர்வளம் நிறைந்த கழனிகளில் செந்நெற்பயிர்கள், பாரம் தாளாமல் வரப்புகளில் சாய்ந்திருக்க, அவற்றை அறுவடை செய்பவர் முகத்தில் அக்கதிர்களிலிருந்து துள்ளிக் குதித்த மீன்கள் நீர் நிறைந்த கரும்புத் தோட்டங்களில் போய்ச்சேரும். வளமான திருவாலியில் எம்பெருமான் குடிகொண்டுள்ளான்.

**தெங்கின் பழம் வீழக் கயல்கள் பாயக் குருகிரியும்**
**பூவார் கழனி எழிலாரும் புள்ளம் பூதங்குடிதானே.**

**(நா.தி.பி.பா. 1350)**

சோலையிலுள்ள தென்னை மரங்களிலிருந்து தேங்காய்கள் பொய்கையிலே விழ, மீன்கள் வேறிடம் பாய, மீன்களுக்காகக் காத்திருந்த நாரைகள் அஞ்சி ஓட, பூக்கள் நிறைந்த வயல்களையும் அதிலே தன் குஞ்சுகளுக்காக இரை தேடும் பறவைகளையும் கொண்ட குளிர்ச்சியான அந்தத் திருப்புள்ளம் பூதங்குடியிலே மாதவன் குடிகொண்டுள்ளான்.

தடாகங்களில் நிறைந்து ஓங்கி வளர்ந்திருக்கும் தாமரை மலர்களையும், சேல், கயல், வாளை என்னும் மீன்களையும் சம்பா நெற்பயிர்களோடு பிடித்து அறுக்க அவற்றினின்று உதிர்ந்த செழுமையான முத்துக்களை வலைச்சியர்கள் வாரித் திரட்டுவர். அத்தகு பெருமை பெற்றத் தலமான விண்ணகரத்தில் திருமால் வாசம் செய்கின்றார். (நா.தி.பி.பா. 1243)

நீரூற்று உள்ள நிலங்களில் பயிரிடப்பட்ட வாழை மரங்களிலிருந்து இற்று உதிர்ந்த கனிகளைச் சேற்றிடை வாழும் மீன்கள் இரையாக உண்டு விளையாடுகின்ற கழனியிலே வளர்ந்த பெரிய வாளை மீன்களுக்கு அஞ்சி, ஓடிப்போன குருகு இனப் பறவைகள், அரல், கயல் என்னும் சிறு மீன்களைப் பிடித்து கதுப்பிலே அடக்கிக் கொண்டுவரும் வளமான திருவழுந்தூர் எம்பொருமான் வீற்றிருக்கும் திருத்தலமாகும்.

**பாரித் தெழுந்த படைமன்னர் தம்மை மாள பாரதத்து**
**தேரில் பாகனாயூர்ந்த தேவதேவன் ஊர்போலும்**
**நீரில் பணைத்த நெடுவாளைக்கு அஞ்சிப் போன குருகினங்கள்**
**ஆரல் கவுளோடு அருகணையும் அணியர் வயல்சூழ் அழுந்தூரே**
**(நா.தி.பி.பா. 1589)**

திருமால் வீற்றிருக்கின்ற திருத்தலங்கள் எல்லாம் இயற்கை அழகும், செழிப்பும், வனப்பும் மிக்கதாக அமைந்துள்ளன. இத்தகைய அழகுமிக்க இயற்கையான சூழ்நிலையில் தேடிப்போய் இறைவன் வீற்றிருக்கவில்லை. திருமால் இருக்கின்ற காரணத்தாலேயே இந்த இடங்கள் எல்லாம் இவ்வாறு செழிப்புமிக்க அழகுடையதாக, குளிர்ச்சி பொருந்தியதாக விளங்குகின்றன என ஆழ்வார்கள் உரைக்கின்றனர். எனவே திருமால் இருக்கின்ற இந்த இனிமையான திருத்தலங்களுக்கு எல்லாம் சென்று அவனைத் தரிசிக்க வேண்டும். அவன் அருள் கிடைக்கப் பெற்றால் நம் வாழ்வும் இவ்வாறே இனிமையுடையதாக அமையும். அலைபாய்கின்ற மனதை ஒரு நிலைப்படுத்தி திருமால் திருத்தலங்கள்தோறும் சென்று அவனை வணங்கி நின்றால் நமது பாவங்கள் அகன்று மாயவனின் திருவடியைச் சேரும்; புண்ணியம் கிட்டும் என்பதை ஆழ்வார்கள் தம் பாசுரங்களில் பதிவு செய்துள்ளனர்.

**விலங்குகளின் செயல்கள்**

திருமால் திருத்தலத்தில் வாழ்கின்ற விலங்குகள் கூடத் தன் பகைமைக் குணத்தை மறந்து எம்பெருமானைப் போலவே சாந்த குணமுடையதாக உள்ளன.

விலங்குகள் தன் பெடைமீது அன்புமிக்கதாகவும் குட்டிகளுடன் சேர்ந்து இயற்கையான சூழ்நிலையில் திருமாலின் பாதுகாப்பில், அவன் அருள் பெற்று இனிமையான சூழ்நிலையில் வசிக்கின்றன.

**வரை செய்மாக்களிறு இளவெதிர் வளர்முறை அளைமிகு தேன் தோய்த்து**
**பிரசவாரி தன்னிளம் பிடிக்கு அருள்செயும் பிருதிசென்றடை நெஞ்சே**
**(நா.தி.பி.பா. 962)**

இமயப் பனிமலையிலுள்ள, மலை போன்ற பெரிய ஆண் யானைகள், இளைய மூங்கிலின் வளைந்த முளைகளைப் பிடுங்கி, தேன் கூட்டிலுள்ள தேனில் தோய்த்து, தன் இளம் பெண் யானைக்குக் கோது தட்டாதபடி வாயில் பிழியும். இத்தகைய அன்பு மிக்க யானைகள் திருமால் வீற்றிருக்கின்ற திருத்தலத்திலே வசிக்கின்றன.

**“நெடுங்கழை நிவந்த நிழல்படு சிலம்பின்**
**கடுஞ்சூல் வயப்பிடி கன்றுஈன்று உயங்க**
**பால்ஆர் பசும்புனிறு தீரிய களிசிறந்து**
**வாலா வேழம் வணர்குரல் கவர்தலின்”[10]**

**“ஈன்றநாள் உலந்த மெல்நடை மடப்பிடி**
**கன்றுபசி களைஇய பைங்கண் யானை**
**முற்றா மூங்கில் முளைதருபு ஊட்டும்”[11]**

**“..................................மடப்பிடி**
**மழைதவழ் சிலம்பில் கடுஞ்சூல் ஈன்று**
**கழைதின் யாக்கை விழைகளிறு தைவர**
**வாழைஅம் சிலம்பில் துஞ்சும்”[12]**

**“கிளைபா ராட்டும் கடுநடை வயக்களிறு**
**முளைதருபு ஊட்டி வேண்டுகுளகு அருத்த”[13]**

உயர்ந்த மூங்கில் வளர்ந்த மலையில் பெண் யானை, கன்றை ஈன்று வருந்தியிருக்கும். அண்மையில் ஈன்றதால் பசியையும் கொண்டிருக்கும். அதன் பசி தீருமாறு ஆண்யானை விளைந்த தினைக் கதிரைக் கவரும். மேலும் தன் குடும்பத்திற்கு மூங்கில் முளைகளையும் தழைகளையும் வேண்டுமளவு ஊட்டி அன்பு செய்கிறது. இத்தகைய யானைகள் பற்றிய அன்புக்காட்சிகள் சங்க இலக்கியத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளன. அவ்வாறே திருமங்கையாழ்வாரும் திருமால் திருத்தலத்திலுள்ள யானைகளின் அன்புக் காட்சிகளைப் பதிவு செய்துள்ளார்.

**கரு வாரணம் தன் பிடிதுறந்தோடக் கடல் வண்ணன்**

**திருவாணை கூறத்திரியும் தண் மாலிருஞ்சோலையே**

**(நா.தி.பி.பா. 342)**

மதயானை தன் பெண் யானையோடு ஊடல் கொண்டு இங்குமங்கும் அலைந்து கோபத்துடன் பாறையில் கொம்புகளைக் குத்த, அதனால் பெயர்ந்த வெண்மையான தந்தத்திலிருந்து முத்துக்கள் உதிர்கின்றன. இதனால் அந்தக் கரிய ஆண் யானையிடம் பெண் யானை ஊடல் கொண்டு விலகி ஓட, ஆண் யானை அழகர் மேல் ஆணையிட, அதனால் பெண் யானை மீண்டு வந்து தன் துணையுடன் சேர்கிறது. ஊடல் கொண்ட பெண் யானை, ஆண் யானை அழகர்மீது ஆணை என்று கூறியதும் உடனே தன் ஊடலைத் தணித்துக் கொண்டது. அந்த அளவிற்கு யானைகள் திருமால் மீது பக்தி கொண்டுள்ளதாகப் பெரியாழ்வார் குறிப்பிட்டுள்ளார்.

**அடங்கச் சென்று இலங்கையை ஈடழித்த**

**அனுமன் புகழ்பாடித் தம் குட்டன்களைக்**

**குடங்கைக் கொண்டு மந்திகள் கண்**

**வளர்த்தும் கோவர்த்தனம் என்னும் கொற்றக்குடையே**

**(நா.தி.பி.பா. 270)**

வாலில் இட்ட தீயினால் இலங்கை முழுவதையும் எரித்த அனுமனது புகழைத் தாலாட்டாகப் பாடிப் பெண் குரங்குகள் தம் குட்டிகளை உள்ளங்கையில் தாங்கித் தூங்க வைக்கும் மலை கோவர்த்தனம். அந்தக் கோவர்த்தன மலையைக் கண்ணன் தன் ஐந்து விரல்களையும் பரப்பி, உறங்கிக் கொண்டிருந்த குரங்குக் குட்டிகளின் உறக்கம் கலையாமல் ஏந்தி நின்றான் எனப் பாடுவதன் மூலம் அடியாருக்கு அடியாராக விளங்குபவர்களுக்கும் அருளும் திருமாலின் அருட்குணத்தை வெளிப்படுத்தியுள்ளார் ஆழ்வார்.

**குந்தி வாழையின் கொழுங்கனி நுகர்ந்து**
**தன் குருளையை தழுவிப்போய்**
**மந்தி மாம்பணை மேல் வைகும்**
**நாங்கூர் வண்புருடோத்தமமே. (நா.தி.பி.பா. 1266)**

**முன்பே வழிகாட்ட முசுக்கணங்கள் முதுகிற்பெய்து**
**தம்முடைக் குட்டன்களைக்**
**கொம்பேற்றியிருந்து குதி பயிற்றிம் (நா.தி.பி.பா. 272)**

பெண் குரங்கு வாழை மரத்தின் மீதமர்ந்து கொழுமையான வாழைப்பழத்தைத் தின்று, தன்குட்டியை அணைத்தபடி மாமரக்கிளைகளில் தாவி உண்கின்றன. பெண் குரங்குகள் பயிற்சிக்காகத் தம் குட்டிகளை முதுகில் தாங்கி ஒரு கொம்பிலிருந்து மற்றொரு கொம்புக்குக் குதித்துக் காட்டுகின்றன. இத்தகைய தாயன்புமிக்க குரங்குகள், புருசோத்தமன் குடிகொண்டிருக்கின்ற திருத்தலத்திலே வாசம் செய்கின்றன.

**“.............................. கடுவன்**
**ஊழுறு தீம்கனி உதிர்ப்ப கீழ்இருந்து**
**ஓர்ப்பன ஓர்ப்பன உண்ணும்**
**பார்ப்புடை மந்திய மலைஇறந் தோரே”[14]**

ஆண்குரங்கு மரத்திலிருந்து உதிர்த்த கனிகளில் ஆராய்ந்து நல்ல இனிய கனிகளைத் தன் குட்டிகளுக்குக் கொடுத்து உண்ணுகின்ற பெண்குரங்கு எனக் குரங்கின் அன்பினைப் பேரிசாத்தன் பதிவு செய்திருப்பது ஒப்பிடற்பாலதாகும்.

திருமால் திருத்தலத்திலே உள்ள விலங்குகள் அவனது திருவருள் பெற்று அன்பு மிக்கதாக விளங்குகின்றன. திருமால் மீது ஆணை என்றதும் பெண் யானை தன் ஊடலைத் தவிர்க்கிறது என்ற செய்தியின் மூலம் அவை எம்பிரான் மீது கொண்ட பக்தியினை அறிய முடிகிறது. திருமாலின் தொண்டனான அனுமனின் கதையினைத் தாலாட்டாகப் பாடி, தன் குட்டிகளை உறங்கச் செய்கின்றன. இறைவன் வீற்றிருக்கின்ற திருத்தலத்திலுள்ள விலங்குகள் கருணையுடையதாகவும் பக்தி மிக்கதாகவும் விளங்குகின்றன. எனவே அத்தகைய திருத்தலங்களுக்கு எல்லாம் சென்று வழிபட்டோருக்கு இவ்வுலக இன்னல்களிலிருந்து திருமால் காத்தருள்வார் என்கின்றனர் ஆழ்வார்கள்.

**திருமாலோடு விலங்குகளை ஒப்பிடுதல்**

விலங்குகளின் தோற்றத்தைத் திருமாலின் தோற்றத்தோடு ஒப்பிட்டு ஆழ்வார்கள் தம் பாசுரங்களில் பாடல்கள் புனைந்துள்ளனர்.

**மாரி மலைமுழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும்**
**சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீ விழித்து**
**வேரி மயிர்பொங்க எப்பாடும் பேர்ந்துதறி**
**மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டு**
**போதருமா போலே நீ பூவைப்பூ வண்ணா! உன்**
**கோயில்நின்று இங்ஙனே போந்தருளி கோப்புடைய**
**சீரிய சிங்கா சனத்திருந்து யாம்வந்த**
**காரியம் ஆராய்ந் தருளேலோ ரெம்பாவாய் (நா.தி.பி.பா. 496)**

மழைக்காலத்தில் மலைக்குகையில் படுத்துறங்கும் பெருமையுடைய சிங்கம், உறக்கம் தெளிந்து எழுந்து நெருப்புப் பொறி பறக்க விழித்து, தனது மணமுள்ள முடிகள் சிலிர்த்து நிற்க, நாலாபக்கமும் புடைபெயர்ந்து, உடம்பை

உதறி, கர்வத்துடன் நிமிர்ந்து, கர்ஜித்துக் கொண்டு குகையிலிருந்து வெளிவருவதைப் போல காயாம்பூ நிறத்தை உடைய கண்ணனே நீ உனது இருப்பிடத்திலிருந்து எழுந்து கம்பீரமாக நடந்துவந்து சிம்மாசனத்தில் அமர்ந்து உன் அழகான தோற்றத்தை நாங்கள் தரிசிக்க அருள்புரிவாயே என்கின்றாள் ஆண்டாள். சிங்கத்தின் கம்பீரமான தோற்றத்தைப் போல, விளங்கக்கூடிய எம்பெருமானைக் கண்டு வணங்கினால் துன்பங்கள் எல்லாம் நீங்கிவிடும் என்கின்றனர் ஆழ்வார்கள்.

“மனதிற்குப் பிடித்த தெய்வத்தை எந்த வடிவிலும் வணங்கலாம் என்பது நமது சாஸ்திரம். பாகவதர்களின் இஷ்ட தெய்வமான பகவானைப் பாகவதர்கள் முக்கியமாக — நின்ற, இருந்த, கிடந்த கோலத்தை முதன்மையாக வணங்குவார்கள்.

**நின்றது எந்தை ஊரகத்து**
**இருந்தது எந்தை பாடகத்து**
**அன்று வெஃகணைக் கிடந்தது**
**என்னிலாத முன்னெலாம்**
**அன்று நான் பிறந்திலேன்**
**பிறந்த பின் மறந்திலேன்**
**நின்றதும் இருந்ததும்**
**கிடந்ததும் என் நெஞ்சுளே**

என்பார் திருமழிசை ஆழ்வார். ஆண்டாளோ இதில், கிடந்து உறங்கும் — கிடந்த கோலம், நடந்த கோலம், நின்ற கோலம், இருந்த கோலம் என நான்கு கோலத்தையும் தம் மனத்துட்கொண்டு பாடியுள்ள சிறப்பு இப்பாட்டுக்கு உண்டு. பகவானை எந்த கோலத்தில் வழிபட்டாலும் அருளுவான் என்ற சிறந்த பொருள் இதில் கூறப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது”[15] என்கிறார் தேவிரா.

**வந்த மதலைக் குழாத்தை வலி செய்து**
**தந்தக் களிறுபோல் தானே விளையாடும் (நா.தி.பி.பா. 30)**

கண்ணன் குழந்தைகளுடன் விளையாடும்போது குட்டியானையைப் போல அவர்களை முட்டியும் வெண்மையான புழுதியை மேலே போட்டுக் கொண்டு அளையும் ஒரு யானைக் குட்டி போல, தெளிவான புழுதியில் மூவடிகளால் உலகை அளந்தவன் விளையாடுகின்றான்.

நீலமணியின் ஒளிவீசும் திருமேனியைக் கொண்ட பரந்தாமன். அவனது விழிகள் கொழுத்த கயல் மீன் போலவும், சேல் மீன் போலவும் இருக்கின்றன. (நா.தி.பி.பா. 2491) எனத் திருமாலின் உருவத்திற்கு சிங்கம், யானை, மீன்கள் போன்றவைகளை உவமையாக்கிப் பாசுரங்கள் அமைத்துள்ளனர். இதன் மூலம் ஆழ்வார்கள் விலங்குகளிடம் கூடத் திருமாலைக் கண்டுள்ள நிலையினை அறியமுடிகிறது.

**திருமாலை வணங்குவோர் நிலை**

**போதறிந்து வானரங்கள் பூஞ்சுனைபுக்கு ஆங்கலர்ந்த**
**போதரிந்து கொண்டேத்தும், போது உள்ளம்! – போதும்**
**மணிவேங்கடவன் மலரடிக்கே செல்ல**
**அணிவேங் கடவன்பேர் ஆய்ந்து (நா.தி.பி.பா. 2253)**

குரங்குகள் உதயகாலத்தை உணர்ந்து மலர்கள் நிறைந்த சுனைகளுக்குச் சென்று, அப்போது மலர்ந்த பூக்களைப் பறித்து வந்து வேங்கடவன் பாதங்களில் சமர்ப்பித்துத் துதிக்கின்றன. அதேபோல் கஜேந்திரன் என்ற யானையும் நாள்தோறும் தடாகங்களிலுள்ள பூக்களைப் பறித்து திருமாலுக்குச் சமர்ப்பித்து வணங்கியது. அவைகளைப் போலவே நெஞ்சமே நீயும் அழகிய திருவேங்கடநாதனின் திருநாமங்களை ஓதி, அவனது திருவடிகளில் தாமரை மலர்களைச் சமர்ப்பித்து வணங்குவாயாக. அவ்வாறு வணங்கினால் துன்பத்திலிருந்து நம்மை எப்போதும் காத்து நிற்பான் என ஆழ்வார்கள் எடுத்துரைக்கின்றனர்.

**இளைப்பாய் இளையாப்பாய்; நெஞ்சமே! சொன்னேன்**
**இளைக்க நமன் தமர்கள் பற்றி — இளைப்பெய்த**
**நாய் தந்து மோதல் நல்குவான் நல்காப்பான்**

**தாய் தந்தை எவ்வுயிர்க்கும் தான் (நா.தி.பி.பா. 2607)**

நெஞ்சமே நமது உயிர் பிரிந்த பின் எமதூதர்கள் நம்மைப் பிடித்திழுத்து நாம் துடிக்கும்படி நாய்களை நம்மீது ஏவிவிடுவர். திருமாலை வழிபட்டால் இத்துன்பத்தில் நாம் தவிக்காதபடி நமக்கு அருள்புரிவார். எல்லா உயிர்களுக்கும் அவனே தாயும் தந்தையும் ஆவான். எனவே அவன் மீது உள்ள நம்பிக்கை சிறிதளவும் குறையாதபடி உண்மையாக அவனை வணங்கவேண்டும். அப்போது தான் அவன் அருள் முழுமையாகக் கிடைக்கும். நம்பிக்கையில்லாது வணங்கினால் அவர்களுக்கு ஏமாற்றமே கிடைக்கும் என்கிறார் ஆழ்வார்.

**ஈன்றோ ளிருக்க மணைநீ ராட்டி படைத்திடந்து**
**உண்டுமிழ்ந் தளந்து தேர்ந்துல களிக்கும்**
**முதற்பெருங் கடவுள் நிற்ப புடைப்பல**
**தானறி தெய்வம் பேணுதல் தனாது**
**புல்லறி வாண்மை பொருந்தக் காட்டி**
**கொல்வன முதலா அல்லன முயலும்**
**இனைய செய்கை இன்பு துன்பளி**
**தொன்மா மாயப் பிறவியுள் நீங்கா**
**பன்மா மாயத் தழுந்துமாம் நளிர்ந்தே (நா.தி.பி.பா. 2583)**

பரந்தாமன் உலகங்களைப் படைத்த பேரருளாளன். ஒருசமயம் அவன் வராக அவதாரம் எடுத்து, பூமியை மேலே எடுத்து வந்து நிலை நிறுத்தினான். ஊழிக்காலத்தில் வயிற்றிலே அடக்கி, பின் உற்பத்திக்காலத்தில் அவற்றை வெளிப்படுத்தினான். திருவிக்கிரமனாய் உலகங்களை அளந்துகொண்டான். இப்படிப் பல வழிகளிலும் உலகத்தைப் பாதுகாக்கின்றான். முதற்பெருந்தெய்வமாகத் திருமால் இருக்க அவனை வணங்காது சிலர் தம் அறியாமையினால் சிறுதெய்வங்களை வழிபடுகின்றனர். இது எப்படி இருக்கிறது என்றால் பிள்ளையைப் பெற்றவள் ஒருபுறமிருக்க, ஒரு மனைப் பலகையை நீராட்டுவதற்கு ஒப்பாகும். அதோடு சிலர் பூஜை என்ற பெயரில் ஆடு, கோழி முதலியவற்றைப் பலியிட்டு உயிர்களைத் துன்பப்படுத்துவர். இவ்வழியில் பெறப்படும் நன்மைகள்

உறுதியற்றவை. அவை மீண்டும் பிறப்பைக் கொடுக்கும். உலக வாழ்க்கை என்ற மாயைக்குள் சிக்க வைக்கும். எனவே இம்முறைகளைக் கைவிட்டு சாந்தமான முறையில் இறைவனை வழிபடுவோருக்கு மீண்டும் பிறவா வரம் அளித்து, திருமால் திருவடியைச் சேரும் வாய்ப்பு கிட்டும். மேலும் சிறுதெய்வ வழிபாட்டை விட்டு அனைத்திற்கும் மூலமான திருமாலை வணங்குவதே சிறந்தது என்கின்றனர் ஆழ்வார்கள். இதனையே பரிபாடல்,

**"எவ்வயி னோயும் நீயே நின் ஆர்வலர்**
**தொழுதகை அமைதியின் அமர்ந்தோயும் நீயே**
**அவரவர் ஏவலாளனும் நீயே**
**அவரவர் செய்பொருட்கு அரணமும் நீயே"**[16]

என உணர்த்தும். எவ்விடத்தும் இருப்பவன் நீயே; உன்னைத் தொழும் ஆர்வமுடையவர் கைகளில் அகப்பட்டவனும் நீயே; பக்தர்கள் நினைத்தவற்றை முடித்துத் தருவதால் அவர்களுக்கு ஏவலாளனும் நீயே; அவர்கள் செய்கின்ற செயல்கள் அனைத்திற்கும் காவலாய் உள்ளவனும் நீயே எனக் கடுவன் இளவெயினனாரும் சுட்டியுள்ளார்.

**தொகுப்புரை**

விலங்குகளின் செயல்கள் மூலமாக ஆழ்வார்கள் தாம் திருமால் மீது கொண்ட பக்தியினைச் சிறப்பாக வெளிப்படுத்தியுள்ளனர்.

திருமாலிடத்தில் உயிர்கள் அனைத்தும் ஒன்றே. மனிதர்கள், பறவைகள், விலங்குகள், உயர்ந்தவர், தாழ்ந்தவர், சாதி, மதம் என எந்தப் பாகுபாடும் அவனிடம் இல்லை. உண்மையான அன்புடன் அவனைத் தொழுவோரை என்றும் காக்கக் கூடியவன் எம்பெருமானே. இவ்வுண்மையை மனிதர்களுக்கு உணர வைப்பதற்காகத்தான் திருமால் விலங்குகளாகவே அவதரித்துள்ளார்.

ஆழ்வார்கள் தம் பாசுரங்களில், விலங்குகள், திருமால் மீது அதிகப் பற்றுடையவைகளாக இருப்பது போல நாமும் அவனிடத்தில் அன்பு கொண்டு

விளங்க வேண்டும் என விலங்குகளின் செயலைக் கொண்டு எடுத்துரைக்கின்றனர். தம்முடைய பாசுரங்களில் இருபத்தெட்டு வகையான விலங்குகளைப் பற்றிக் கூறியுள்ளனர். இவ்விலங்குகளில் சில விலங்காக திருமால் அவதரித்ததையும், சில விலங்காக அசுரர்கள் அவதரித்ததையும் சுட்டியுள்ளனர்.

கஜேந்திரன் என்ற யானைக்கு இறைவன் அருள் புரிந்ததையும், மழையில் இருந்து பசுக்களைக் காத்ததையும், அவர்கள் மீது திருமால் கொண்ட அன்பையும் கூறி, இங்ஙனம் எம்பிரான் தன் பக்தர்களைத் துன்பத்தில் இருந்து காக்கக் கூடியவன். எனவே அவன் அருள்பெற வேண்டும் என ஆழ்வார்கள் எடுத்துரைக்கின்றனர்.

திருமால் விலங்குகளாகவே அவதரித்து பல நன்மைகள் புரிந்துள்ளார். மீனாக, ஆமையாக, நரசிம்மமாக, வராகமாக அவதரித்து, துன்ப காலத்தில் தேவர்கள், மனிதர்கள், விலங்குகள் என அனைவரையும் காத்ததை ஆழ்வார்கள் சுட்டியுள்ளனர்.

எம்பிரான் உயிரினங்கள் மீது அன்பு உடையவன் என்றாலும் சில அசுரர்கள் விலங்குகளாக அவதரித்து மக்களுக்குத் துன்பம் தரும் வேளையில் அவற்றை அழித்துள்ளார். அவர் அழித்தது அசுரர்கள் என்றாலும் அவர்கள் விலங்குருவில் இருந்ததால் அச்செயல் பாவம் என்று கருதித் தன் பாவத்தைப் போக்கிக் கொள்ளும் பொருட்டுப் பல புண்ணிய நதிகளில் நீராடியுள்ளார். இறைவனாக இருந்தாலும் தான் செய்த பாவத்தைப் போக்குகின்றார் திருமால். இந்நிகழ்வை ஆழ்வார்கள் சுட்டி மனிதர்கள் தான் செய்யும் பாவத்தைப் போக்க வேண்டும் என்றால், இறைவன் திருவடியை வணங்க வேண்டும் என்பதை வலியுறுத்துகின்றனர்.

திருமால் குடிகொண்டிருக்கின்ற திருத்தலங்கள் செழிப்புமிக்க இயற்கை எழில் கொஞ்சும் வளமான இடமாகக் காட்சியளிக்கிறது. எம்பெருமான் அழகுடையவனாக விளங்குவதால் அவன் இருக்கும் இடமும் அழகுடையதாக இருக்கின்றது. அவனது திருத்தலத்தில் வசிக்கும் விலங்குகள், மனிதர்கள், பறவைகள் என அனைத்தும் அன்புள்ளம் கொண்டவையாக இருக்கின்றன.

காட்டிலே சண்டையிட்டுக் கொள்ளும் விலங்குகள் கூட இத்திருத்தலத்தில் ஒன்றுடன் ஒன்று அன்புடனும் துணையுடனும், குட்டிகளுடன் இணைந்து இருக்கின்றன. இவ்வாறு இவைகள் இருப்பதற்குக் காரணம் இங்கு வீற்றிருக்கின்ற நாராயணனே என்கின்றனர் ஆழ்வார்கள்.

திருமால் இயற்கையான அழகுமிக்க வளங்கள் நிறைந்த இடத்திலே சென்று வீற்றிருக்கவில்லை. அவன் இருக்கின்ற காரணத்தாலே அனைத்து வளங்களும் பொருந்திய செழிப்புமிக்க இடமாக இருக்கின்றன. எனவே அவனை வணங்குவோர் வாழ்க்கையும் செழிப்புமிக்கதாக, அழகுடையதாக அமையும் என்கின்றனர் ஆழ்வார்கள்.

எம்பிரான் வீற்றிருக்கின்ற திருத்தலம், தடாகங்கள் நிறைந்த, வயல்கள் சூழ்ந்த சோலைகள் நிறைந்து அங்கு இருக்கும் விலங்குகள் மகிழ்ச்சியோடு இருக்கின்ற ஓர் இன்பமான மனதிற்கு இனிமை அளிக்கக்கூடிய திருத்தலமாக விளங்குகின்றது. அங்கே சென்று எம்பெருமானைத் தரிசித்து அவன் திருவருள் பெற்று வாழ வேண்டும் என ஆழ்வார்கள் எண்ணுகின்றனர்.

நாராயணன் வீற்றிருக்கின்ற இடத்திலுள்ள யானைகள் அன்போடு தன் துணைக்குத் தேனை ஊட்டி விடுகின்றன. குரங்குகள் தன் குட்டிக்குத் திருமாலின் கதையினையும், அவர் பாலம் கட்டத் தம் உறவினர்கள் உதவியதையும் தாலாட்டாகப் பாடி உறங்க வைக்கின்றன. இத்தகைய இனிமையான திருத்தலத்திலே சென்று எம்பெருமானை வாயார வாழ்த்தி, மனதார வணங்க வேண்டும் என்கின்றனர் ஆழ்வார்கள்.

திருமாலின் தோற்றத்திற்கு சிங்கத்தையும் யானையினையும் ஒப்பிட்டுக் காட்டியுள்ளனர் ஆழ்வார்கள். திருமாலை வணங்குவோருக்கு என்றும் துன்பம் இல்லை. மீண்டும், மீண்டும் பிறந்து இவ்வுலகத் துன்பத்தில் தவிக்காதவாறு, இறைவன் திருவடியைச் சென்று சேர இறைவன் அருள் புரிவார் என்கின்றனர் ஆழ்வார்கள்

## சான்றெண் விளக்கம்

1. ச.வே.சுப்பிமணியன் (ப.ஆ), பன்னிருதிருமுறை, மணிக்கவாசகர் திருவாசகம், சிவபுராணம், பா.அ.26 – 31
2. ச.வே. சுப்பிரமணியன் (ப.ஆ), சங்க இலக்கியம், பரிபாடல், பா.4.22 – 24
3. மேலது, பா.4.10 – 21
4. து. லலிதா, பெரியதிருமொழி, ப.48
5. ச.வே. சுப்பிரமணியன் (ப.ஆ), சங்க இலக்கியம், நற்றிணை, பா.334
6. ஜெ. இளங்கோ, திருப்பாவையில் புதுக்கவிதை, ப.9
7. இரா. இராசேந்திரன், திருப்பாவை நயவுரை, ப.58
8. ச.வே. சுப்பிரமணியன், (ப.ஆ) சங்க இலக்கியம், நற்றிணை, பா.57
9. மு. வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப.65
10. ச.வே. சுப்பிரமணியன் (ப.ஆ), சங்க இலக்கியம், நற்றிணை, பா.393
11. ச.வே. சுப்பிரமணியன் (ப.ஆ), சங்க இலக்கியம், அகநானூறு, பா.85
12. மேலது, பா.328
13. மேலது, பா.218
14. ச.வே. சுப்பிரமணியன் (ப.ஆ), சங்க இலக்கியம், குறுந்தொகை, பா.278
15. இரா. இராசேந்திரன், திருப்பாவை நயவுரை, ப.97
16. ச.வே. சுப்பிரமணியன் (ப.ஆ), சங்க இலக்கியம், பரிபாடல், பா.4.70 – 73

# இயல் – 4

## தாவரங்கள் புனைவில் பக்திநெறி

இயற்கையோடு இயைந்து வாழ்ந்த மனிதன் இயற்கையின் மூலமாகவே தன் வாழ்க்கைக்குத் தேவைவானவற்றைக் கற்றுக்கொண்டான். அதன் மூலமாக தனக்குத் தேவையான ஆற்றலைப் பெற்றுக்கொண்டான். இயற்கையின் மூலக்கூறான தாவரங்கள் மனிதன் வாழ்வில் முக்கியப்பங்கு வகிக்கின்றன. மரங்கள் மனிதனின் நண்பர் என்பர். அந்த அளவிற்கு மரங்கள் மனிதனுக்கு உதவுகின்றன. உணவாக, இருப்பிடமாக, வாகனமாக, கருவியாக என எதை எடுத்தாலும் மரங்களின் உதவியின்றி எதையும் செய்ய முடியாது. மரங்களின் மூலம் மழை பெய்கிறது. மழை மூலம் விவசாயம் செழிக்கிறது. விவசாயம் மனிதனின் வாழ்வாதாரமாகிறது. எனவேதான் இயற்கையின் முக்கியக் கூறாகத் தாவரங்கள் விளங்குகின்றன. அதன் பசுமை நிறம், வண்ணமலர்கள், பழங்கள் என அனைத்தும் மனித மனதைக் கவரக் கூடியன. அதனால் தான் அக்காலப் புலவர்கள் முதல் இக்காலக் கவிஞர்கள் வரை அதனைப் பாடாதவர்களே இல்லை. மரங்களைக் கடவுளாக வணங்கும் பழக்கம் தொன்று தொட்டு இருந்து வருகிறது. வேப்ப மரத்தை அம்மனாக வழிபடும் பழக்கமும் அரச மரமும் ஆலமரமும் விநாயகர்க்கும், வில்வ மரம் சிவனுக்கும், துளசி விஷ்ணுவிற்கும் என ஒவ்வொரு கடவுளுக்கும் தனித்தனி மரங்கள், மலர்கள் வைத்து வழிபடுவது மரபாக உள்ளது. அதனால் தான் கோயில்களில் தலவிருட்சமாக மரங்கள் வைக்கப்பட்டுள்ளன. மரங்களில் இறைவனைக் காணமுடியும். பக்தி இலக்கியங்களில் ஆழ்வார்களும் நாயன்மார்களும் தம் பாடல்கள் மூலம் தாவரங்களைப் பதிவு செய்துள்ளனர். விஷ்ணுவின் அடியவர்களான ஆழ்வார்கள் திருமால் மீது கொண்ட பக்தியைப் புலப்படுத்தும் கருவியாகத் தாவரங்களைக் கையாண்டுள்ளனர். மரம், செடி, கொடி, மலர், காய், கனி என அனைத்திலும் ஆழ்வார்கள் இறைவனைக் காண்பதை நாலாயிரத் திவ்விய பிரபந்தப் பாசுரங்களின் வழியாக ஆராய்ந்து விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும்.

**நாலாயிரத் திவ்ய பிரபந்தத்தில் தாவரங்களும் செடி, கொடிகளும்**

நாலாயிரத் திவ்ய பிரபந்தத்தில் தாவரங்கள் பற்றிய குறிப்புகள் பெரிதும் இடம் பெற்றுள்ளன. அவ்வகையில் மரங்கள், செடி கொடிகள், மலர்கள், கனிகள் பெயர்கள் பின்வருமாறு:

| **மரங்கள்** | **செடி, கொடிகள்** | **மலர்கள்** | **கனிகள்** |
|---|---|---|---|
| குருந்த மரம் | மிளகு | காயாம்பூ | கொவ்வைக்கனி |
| மராமரம் | முல்லைக் கொடி | செங்கழுநீர் | பலா |
| விளாமரம் | வெற்றிலை | நீலோற்பலமலர் | வாழை |
| வேங்கை மரம் | தர்ப்பைப்புல் | கருநெய்தல்பூ | மா |
| பனைமரம் | சம்பாப் பயிர் | முல்லை | நாவற்பழம் |
| கற்பகமரம் | கரும்பு | பூவை | பனம்பழம் |
| நெல்லி மரம் | மல்லிகை | அசோகமலர் | கோவைப்பழம் |
| அகில் மரம் | மஞ்சள் செடி | அல்லி | விளாம்பழம் |
| அரசமரம் | கள்ளிச்செடி | நெய்தல்மலர் | |
| அசோகமரம் | வல்லிக்கொடி | கோங்குமலர் | |
| குரவமரம் | | சுரபுன்னைமலர் | |
| பாக்குமரம் | | பாக்குப் பாளை | |
| சுரபுன்னை மரம் | | குவளை | |
| தென்னை மரம் | | செண்பகமலர் | |
| செண்பகமரம் | | ஆம்பல் | |

| | | | |
|---|---|---|---|
| கோங்குமரம் | | கருங்குவளை | |
| பாரிஜாதம் | | மாதுளை | |
| பலாமரம் | | பாரிஜாதமலர் | |
| | | செங்காந்தள் | |
| | | தாழம்பூ | |
| | | முருங்கைப்பூ | |
| | | ஊமத்தம்பூ | |
| | | காக்கணம் | |
| | | இருமுகை | |
| | | கொன்றை | |

**மரங்கள்**

ஆழ்வார்களின் பாசுரங்களில் பல வகையான மரங்களின் பெயர்கள் இடம்பெற்றுள்ளன. சாதாரண நிலப்பகுதியில் இருக்கும் மரங்களைவிட மலைப்பகுதிகளிலும் நீர்நிலைகளின் அருகிலும் உள்ள மரங்கள் மிக உயரமாகவும், செழிப்புடனும் பசுமையாகவும் இருப்பது இயற்கை. அதேபோல் திருமால் வீற்றிருக்கின்ற திருத்தலத்திலே அமைந்துள்ள மிக உயர்ந்து செழிப்புடன் பசுமையாக வளர்ந்துள்ள மரங்களையும், சோலைகளையும் ஆழ்வார்கள் இறைவன் இங்கு இருக்கின்ற காரணத்தாலேயே இவ்விடம் செழிப்புமிக்க பசுமையான இடமாகக் காட்சியளிக்கின்றது என்கின்றனர். திருமாலையே தங்களது உயிராகக் கருதிய ஆழ்வார்கள் எந்த நிலையிலும், எந்தநேரமும் தான் காண்கின்ற அனைத்திலும் திருமாலையே காண்கின்றனர் என்பதை அவர்களின் ஒவ்வொரு பாசுரங்களிலும் அறியமுடிகிறது.

இயற்கையை உருவாக்கியவன் இறைவன். எனவே அவன் இருக்கின்ற இடங்கள் இயற்கைச் சூழ்நிலைகள் நிறைந்து அழகாக அமைதியாக காட்சியளிக்கின்றன. எனவே திருமால் வீற்றிருக்கின்ற திருத்தலங்களில் சென்று அவரை வழிபட்டால் நமது மனமும் அமைதியடையும். இறைவன் திருப்பாதத்தைச் சென்றடைய அதுவே துணைபுரியும் என்கின்றனர் ஆழ்வார்கள்.

திருமால் உயிர்கள் அனைத்தும் ஒன்று என அனைத்து உயிரினங்களிடமும் அன்பு கொண்டவர் என்பதை அவருடைய கிருட்டிண அவதாரத்தின் மூலம் தெளிவுபடுத்துகின்றனர் ஆழ்வார்கள். திருமால் மரம், செடி, கொடி, பறவை, விலங்கு என எந்த பேதமும் இல்லாதவன். எனவே தான் பறவையைத் தன் வாகனமாகவும், தாவரமாகிய துளசியை மாலையாகவும் கொண்டுள்ளார் என்பதை ஆழ்வார்கள் பாசுரங்களில் தெளிவாகப் பதிவு செய்துள்ளனர்.

ஆழ்வார்கள் திருமால் மீது கொண்ட பக்தியினைத் தாவரங்கள் புனைவின் மூலமாக வெளிப்படுத்தியுள்ளனர். அவற்றை,

1. மரங்கள் புனைவில் பக்திநெறி
2. செடி கொடிகள் புனைவில் பக்திநெறி
3. மலர்கள் புனைவில் பக்திநெறி
4. கனிகள் புனைவில் பக்திநெறி

எனப் பாகுப்படுத்திக் காண இயலும்.

**மரங்கள் புனைவில் பக்திநெறி**

ஆழ்வார்கள் திருமால் மீது உள்ள பக்தியினை மரங்கள் புனைவின் மூலம் வெளிப்படுத்தியுள்ளதை மரங்களாக வந்த அசுரர்களை அழித்தல், திருத்தலத்திலுள்ள மரங்களின் சிறப்புக் கூறுதல் எனப் பிரித்து அவற்றின் அடிப்படையிலும் காண இயலும்.

மரங்களாக வந்த அசுரர்களை அழித்தும், மரமாக நின்றவர்களுக்குச் சாபவிமோசனம் கொடுத்து வாழவைத்தும் உள்ளார் எம்பெருமான். அவரது கருணையினை எப்படிப் போற்றினாலும் தீராது என்கின்றனார் ஆழ்வார்கள்.

**மரங்களாக வந்த அசுரர்களை அழித்தல்**

கண்ணன் அவதாரத்தில் அவனை அழிப்பதற்காக அசுரர்கள் பல வழிகளில் முயன்றனர். அதில் சிலர் மரங்களாக மாறி வந்த போது அவர்களைத் திருமால் அழித்த நிகழ்வினை ஆழ்வார்கள் சுட்டியுள்ளனர்.

**குருந்தமரம்**

சோலையின் நடுவே செழிப்போடு பசுமையான இலைகளையும், வாசனை மிகுந்த மலர்களையும் உடைய அழகான குருந்த மரமாக மாறி நின்றுகொண்டிருந்த அசுரனை அழிப்பதற்காக அதன் அழகு கெடும்படி கொம்புகளை உடைத்து, பூக்களைச் சிதைத்து, மரத்தை வேரோடு பிடுங்கியெறிந்து மரமாகநின்ற அந்த அசுரனை எம்பிரான் அழித்த நிகழ்வினை ஆழ்வார்கள் பல பாடல்களில் பதிவுசெய்துள்ளனர். இதனை,

**கொங்கலர்ந்த மலர்க்குருந்தம் ஓசித்த கோவலன்**

**(நா.தி.பி.பா. *1018*)**

**தழை வாடவன் தாள்குருந்தம் ஒசித்து (நா.தி.பி.பா.*1222*)**

**பூங்குருந்தம் சாய்ந்தனவும் (நா.தி.பி.பா. *2108*)**

**குருந்தொசித்த கோபாலன் (நா.தி.பி.பா. *2313*)**

என்பன உணர்த்தும்.

**மருதமரம்**

நாரத முனிவரால், குபேர மக்களான நளகூபன், மணிக்ரீவன் இருவரும் சாபம் பெற்றனர். மருத மரங்களாகச் சாபம் பெற்ற இருவரும் கண்ணனின் கருணையினால் சாபவிமோசனம் பெற்றனர்.

**உரம்கெடப் புதைத்து ஓர்கொம், பொசித்துகந்த உத்தமா**

**(நா.தி.பி.பா. 801)**

சாபம் பெற்று இருந்த இரட்டை மருதமரங்களுக்கு இடையே உரலுடன் தவழ்ந்து சென்று மரங்களை வேரோடு சாய்த்து அவர்களை அழித்தார்.

**அணி மருதம் சாய்த்தான் (நா.தி.பி.பா. 2332)**

இரட்டை மருதமரங்களைச் சாய்த்தவன்.

**மாமருதி னூடு போய் (நா.தி.பி.பா. 2329)**

பெரிய இரட்டை மருத மரங்களிடையே தவழ்ந்து சென்று முறித்துத் தள்ளியவன்.

**............... மருதிடை போய்க்**

**கனிந்த விளவுக்குக் கன்று எறிந்த (நா.தி.பி.பா. 3479)**

இரட்டை மருத மரங்களுக்கு இடையே சென்று அவற்றைச் சாய்த்தான்.

யசோதை கண்ணனின் குறும்புத்தனத்தைத் தாழாது உரலில் கட்டிவைத்தாள். அந்த உரலோடு கண்ணன் தவழ்ந்து சென்று இரட்டை மருத மரங்களாக நின்று கொண்டிருந்தவர்களுக்கு இடையே புகுந்து இருமரங்களை வேரோடு சாய்த்துக் கீழே தள்ளி அவர்களுக்குச் சாபவிமோசனம் அளித்த நிகழ்வினை ஆழ்வார்கள் போற்றிப் பாடியுள்ளனர்.

‘‘செல்வச் செருக்கால் மதி மயங்கி, தேவரிஷி நாரதரின் முன்பு நாணமற்று ஆடையில்லாமல் இருந்த குபேரனின் புத்திரர்களான நளக்கூவர மற்றும் மணிக்கிரீவ இருவருக்கும் தனிப்பெரும் கருணை காட்டும் வண்ணம், நாரதர் தாங்கள் யார் என்றென்று அறியாமல், மது மயக்கத்தில், மரம் போல் ஆடை இல்லாமல் இருக்கும் இவர்கள் இருவரும் அந்த மரங்கள் ஆகட்டும். இதுவே இவர்களுக்கு சரியான தண்டனை. ஆனால் என்னுடைய கருணையினால் இந்த மர உடலிலும் அவர்கள் செய்த பாவச் செயல்கள் அவர்களுக்கு நினைவில் இருக்கும். நூறு வேத வருடங்களுக்குப் பிறகு, பகவான் வாசுதேவரை சந்தித்து

இவர்கள் பாவ விமோச்சனம் பெற்று பக்தர்கள் ஆவார்கள் என்று சாபம் அளித்தார். அந்த சாபத்தின் படி அவர்கள் இருவரும் நந்த மகாராஜாவின் மாளிகை முற்றத்தில் இரட்டை அர்ஜூன மரங்கள் ஆனார்கள்.

பகவான் கிருட்டிணரின் தாமோதர லீலையின் போது தாய் யசோதை குழந்தை கிருட்டிணரை மிகப்பெரிய உரல் ஒன்றில் கட்டிப் போட்டாள். நாரதரின் மேற்கூறிய சாபத்தை நினைவில் கொண்ட கிருட்டிணர், இவர்கள் இருவரும் குபேரனின் புத்திரர்கள். எனக்கு அவர்களிடம் எந்த வேலையும் இல்லை. ஆனாலும் என் பக்தன் நாரதன் அவர்கள் முன் நான் நேருக்கு நேர் வர வேண்டுமென விரும்பியதால், இந்த இருவரின் விடுதலைக்கு நான் ஏதாவது செய்யவேண்டும் என்று தனக்குள் கூறியவாறு அந்த அர்ஜூன மரங்கள் இரண்டிற்கும் இடையில் சென்றார். அவரைக் கட்டி இருந்த உரல் படுக்கையாக விழுந்து அந்த இரண்டு மரங்களுக்கு இடையில் சிக்கிக் கொண்டது. அந்த உரலை குழந்தை கிருட்டிணர் மிகப் பலத்துடன் இழுக்க, இரட்டை மரங்கள் மிகப் பெரிய ஒலியுடன் வேரோடு சாய்ந்தன. அந்த மரங்களில் இருந்து குபேரனின் புத்திரர்கள் இருவரும் மிக்க பிரகாசத்துடன் வெளிவந்தனர். அவர்கள் உடனே 'கிருஷ்ண கிருஷ்ண மகா யோகியே தாங்களே ஆதி, பரம புருஷரும் தாங்களே' என்று துதி பாடி மர உரலில் கட்டப்பட்டிருந்த பகவானை வலம் வந்து, அவருக்கு நன்றி கூறி தங்கள் லோகம் திரும்பினர்."[1]

**விளாமரம்**

அசுரன் விளாமரமாக நின்றிருந்த போது அவனைத் திருமால் அழித்த நிகழ்வினை ஆழ்வார்கள் பாசுரங்களில் சுட்டிக்காட்டியுள்ளனர்.

**தாழ்ந்து வரங்கொண்டு தக்க வகைகளால்**
**வாழ்ந்து கழிவாரை வாழ்விக்கும் — தாழ்ந்த**
**விளங்கனிக்குக் கன்றெறிந்து வேற்றுருவாய் ஞாலம்**
**அளந்தடிக்கீழ்க் கொண்ட அவன் (நா.தி.பி.பா. 2204)**

பழங்களின் கணத்தினால் கிளைகள் தாழ்ந்து கிடக்கும்படி விளாமரமாக நின்ற அசுரனை, கன்றாக வந்த அசுரனைக் கொண்டு சுழற்றி வீசி அடித்து அக்கனிகளை உதிரும்படிச் செய்து இருவரையும் அழித்த வைகுண்ட நாதனை, வாமனனாய்த் தோன்றிய எம்பிரானை வணங்கி திருவருள் பெற்று அவரவர் சக்திக்கு ஏற்ப பூசை செய்பவனுக்கு அவன் அருள் புரிவார் என்பதனைப் பூதத்தாழ்வார் எடுத்துரைக்கின்றார்.

**கன்றுயரத் தாமெறிந்து காயுதிர்த்தார் தாள் பணிந்தோம்**
**வன்துயரை ஆவா! மருங்கு (நா.தி.பி.பா. 2638)**

பசுவின் வடிவாக வந்த வத்சாசுரனைச் சுழற்றி, விளாமரமாய் நின்றிருந்த அசுரன் மீது எறிந்து அதன் காய்களை உதிரும்படி அடித்து இருவரையும் அழித்தார். அந்த மாயவனின் திருவடியை வணங்கினால் நம் துன்பங்கள் அனைத்தும் நீங்கி நன்மை உண்டாகும் என நம்மாழ்வார் தம் பாசுரத்தின் வழி உணர்த்தியுள்ளார்.

**இளங்கன்று கொண்டு விளங்காய் எறிந்து**
**தழை வாடவன் தாள்குருந்தம் ஒசித்துத்**
**…… …… …… …… …….**
**மழையாடு சோலை மயிலாலும் நாங்கூர்**
**மணிமாடக் கோயில் வணங்கு என்மனனே! (நா.தி.பி.பா. 1222)**

கன்றாக வந்த வத்சாசுரனின் கால்களைப் பற்றி, விளா மரமாய் நின்ற கபித்தாசுரன் மேல் அடித்து இருவரையும் அழித்தவனும், குருந்த மரத்தை அதன் தழைகள் வாட முறித்தவனுமான நாராயணன் நாங்கூரிலுள்ள மணிமாடக் கோயிலில் வீற்றிருக்கின்றான். அவனைச் சென்று வணங்க வேண்டும் எனத் திருமங்கையாழ்வார் குறிப்பிடுகின்றார்.

**கன்றினை வாலோலை கட்டிக் கனிகள் உதிர எறிந்து**
**(நா.தி.பி.பா. 159)**

கன்றாக வந்த முகாசுரனைச் சுழற்றி விளாமரத்தில் அடித்து விளாமரமாக நின்ற அசுரனை அழித்தார். அவன் திருவடியை வணங்க வேண்டும் எனப் பெரியாழ்வார் குறிப்பிடுகின்றார்.

**காய்த்த நீள் விளங்கனி உதிர்த்து, எதிர்ந்த பூங்குருத்து**

**(நா.தி.பி.பா. 788)**

காய்த்துக் குலுங்கும் உயர்ந்த விளாமரமாய் நின்ற அசுரனைக் கனிகள் உதிர்ந்து சிதறும்படி அழித்தவன்! குருந்த மரமாய்ப் பூத்து நின்ற அரக்கனைக் கொன்ற அந்தக் கேசவனை வழிபடுவோரைத் துன்பம் தீண்டாது எனத் திருமழிசையாழ்வார் குறிப்பிடுகின்றார்.

விளாமரமாக நின்ற அசுரனை அழித்த எம்பிரானின் அற்புதங்களை எடுத்துக் கூறி அவனை வழிபடுபவருக்கு அவன் அருள் எப்பொழுதும் கிட்டும். தன்னை வணங்கியவரை இறைவன் காத்தருள்வார் என்பதனை ஆழ்வார்கள் இப்பாடல்களின் வழியாக மக்களுக்கு எடுத்துரைக்கின்றனர்.

**மராமரம்**

**மராமரங்கள் ஏழும் எய்தாய் (நா.தி.பி.பா. 2840)**

**மராமரம் எய்த மாயவன் (நா.தி.பி.பா. 2862)**

ஏழு மராமரங்களையும் ஒரே அம்பினால் துளைத்தவனே, பல ஆச்சர்யமூட்டும் செயல்களைச் செய்ய வல்லவனே, திருமால் அவனின் திருவருளைப் பெற்றால் நம் வாழ்வும் சிறப்புடையதாக அமையும் என்கின்றார் நம்மாழ்வார். இவற்றில் மரமாக வந்த அசுரர்களைத் திருமால் அழித்த நிகழ்வுகளை ஆழ்வார்கள் தம் பாசுரங்களில் பாடியிருப்பது புலனாகும்.

**திருமால் திருத்தலத்தில் அமைந்துள்ள மரங்களின் சிறப்புக் கூறுதல்**

திருமால் வீற்றிருக்கக்கூடிய அனைத்துத் திருத்தலங்களும் அந்த வைகுண்டத்தைப் போன்றதே. அத்தகைய திருத்தலங்களில் அமைந்துள்ள

விலங்குகள், பறவைகள், மரம், செடி, கொடி, நீர்நிலை அனைத்தும் சிறப்புடையதே என்பதை ஆழ்வார்களின் பாசுரங்கள் நன்கு உணர்த்தும். எம்பெருமான் மீதுள்ள பற்றினை அவர்கள் வெளிப்படுத்தும் போது மாதவன் வீற்றிருக்கக்கூடிய திருத்தலத்தின் பெருமைகளை உணர்த்தவும், அத்திருத்தலத்தின் சிறப்பை வெளிப்படுத்தவும் அங்கு அமைந்திருக்கக்கூடிய வானளவு ஓங்கி உயர்ந்து வளர்ந்துள்ள மரங்களை, சோலைகளை எல்லாம் குறிப்பிட்டு இதற்குக் காரணம் அங்குள்ள திருமாலின் அருளேயாகும். அஃறிணை உயிரான தாவரத்திற்கே இவ்வாறு அவன் அருள் புரியும்போது அத்திருத்தலத்தில் சென்று அவனை வழிபடுவோரை அவர் எப்பொழுதும் கைவிடமாட்டார் என்கின்றனர் ஆழ்வார்கள்.

**வேங்கைமரம்**

**சினவேங்கை பார்க்கும் திருமலையே ஆயன்**
**புனவேங்கை நாறும் பொருப்பு (நா.தி.பி.பா. 2356)**

**கார்கொள் வேங்கைகள் கணவரை தழுவிய**

**...... ...... ...... ......**

**வேர்களாயிரம் பரவிநின்றடி தொழும் பிருதிசென்றடை நெஞ்சே!**
**(நா.தி.பி.பா. 964)**

**பொன்மலர்திகழ் வேங்கை கோங்கு செண்பகம்**
**கொம்பினில் குதிகொடு குரங்கினம் இரைத்தோடி**
**தேன்கலந்த தண்பலங்கனி நுகர்தரு திருவயந்திரபுரமே**
**(நா.தி.பி.பா. 1152)**

**புன்னை செருந்தியோடு புனவேங்கையும் கோங்கும் நின்று**
**பொன்னரி மாலைகள் சூழ் பொழில் மாலிருஞ் சோலையதே**
**(நா.தி.பி.பா. 351)**

மேகத்தைத் தொடும் வரை ஓங்கி உயர்ந்த வேங்கை மரங்கள், அவற்றின் மணம் வீசும் மலர்கள் உள்ள இலைகளிலே குதித்து ஆரவாரம் செய்யும் குரங்குக் கூட்டம் இங்குமங்கும் ஓடி, தேன் கசியும் பலாப்பழங்களைத் தின்னும் வளமான சோலையை உடைய திருத்தலம். மேலும் புன்னை, செருந்தி, வேங்கை, கோங்கு ஆகிய மரங்கள் வரிசையாக அமைந்து பூத்திருப்பது பொன்னாலான மாலைகள் சுற்றி இருப்பது போலத் தோன்றும் திருத்தலங்கள் என திருவகீந்திரபுரம், திருமாலிருஞ்சோலை, திருவேங்கடம், திருபிரிதி போன்ற திருத்தலங்களின் சிறப்பினை ஆழ்வார்கள் எடுத்துரைத்து அங்கு சென்று வழிபடுவோர்க்கு திருமாலின் திருப்பாதத்தை அடையும் வழி கிடைக்கும் என்பதை உணர்த்துகின்றனர்.

‘‘திருவேங்கடத்தில் எழுந்தருளியுள்ள இறைவனுக்குப் பணிவோடு சேவை செய்ய விரும்பி வேண்டுகின்றார் ஆழ்வார். திருவேங்கடமலை வானளாவ ஓங்கிய மூங்கில் மரங்கள் நெருங்கியிருக்கப் பெற்றது. பூத்த மலர்கள் நிறைந்த சோலைகளால் சூழப்பெற்று நறுமணமுடையதாகத் திகழ்கிறது. வானளாவ உயர்ந்த மூங்கிலைக் கொண்டு தேவர்களைக் கீழே இறங்கி வரச் செய்து தன்னை வணங்க திருவேங்கடத்தானே அழைப்பது போல அவ்வியற்கைக் காட்சி அமைந்திருந்தது. தன் அருளால் பூம்பொழில்களை வளப்படுத்தி வண்டு முதலானவற்றை மகிழ்ந்திருக்கும்படிச் செய்து, எல்லா நறுமணத்தையும் இயற்கையாகத் தன் திருமேனியில் பெற்றுத் திகழ்கிறான் இறைவன். திருவேங்டத்துச் சோலையிலுள்ள மரங்களும் நீண்ட சிகரங்களும் விண்ணை முட்டி உயர்ந்தோங்கி வளர்ந்திருப்பதால் அவை விண்ணுலகத்திலுள்ள தேவர்களை வேங்கடமலைக்கு வந்து இறைவனை வழிபடுவதற்கு அழைக்கச் சென்றிருக்கின்றன என்று கற்பனை செய்வதோடு மட்டுமல்லாமல் அதற்கேற்ப தேவர்களும் வந்து தொழுகிறார்கள் என்பதை,

**விண்ணோர் தொழும்வேங் கடமா மலை**

**எங்கும் வானவர் தானவர் நிறைந் தேத்தும் வேங்கடம்**

எனக் கூறுகிறார். எவ்வுலகத்தாரும் நிறைந்து ஏத்துமிடம் வேங்கடம் என அங்கு உறையும் இறைவனின் சிறப்பு ஆழ்வாரின் பாசுரங்கள் வழி புலனாகிறது."[2] என து.லலிதா குறிப்பிட்டுள்ளார்.

**"அரும்புவாய் அவிழ்ந்த கருங்கால் வேங்கைப்**
**பொன்மருள் நறுவீ கல்மிசைத் தாஅம்**
**நல்மலை நாட!"[3]**

கரிய காம்புகளை உடைய வேங்கை மரத்தின் அரும்புகள் மலர்ந்து பொன்னிறம் போன்ற மணமிக்க மலர்களை உதிர்க்கும். இத்தகைய மலைக்குரிய நாடனே என வண்ணக்கன் சோருமருங் குமரனார் பாடியுள்ளார். இப்பாடலில் புலவர் தலைவனின் இருப்பிடம் இத்தகைய இயற்கை வளம் நிறைந்தது எனச் சுட்டியதைப் போல ஆழ்வார் திருமாலின் திருத்தலத்தின் பெருமையை உணர்த்திப் பாசுரம் பாடியுள்ளார்.

**நெல்லிமரம்**

**நல்லை நெஞ்சே! நாம் தொழுதும் நம்முடை நம்பெருமான்**
**அல்லி மாதர் புல்க நிற்க ஆயிரந் தோளனிடம்**
**நெல்லி மல்கிக் கல்லுடைப்பப் புல்லிலையார்த்து அதர்வாய்ச்**
**சில்லு சில்லென் றொல்லாத சிங்க வேள்குன்றமே (நா.தி.பி.பா. 1016)**

திருமகள் தழுவும் ஆயிரந்தோள்களை உடைய திருமாலைக் காண வேண்டும் என்று ஆசைப்படுபவர். அவனை வழிபடும் எண்ணமுடையவர்கள். நெல்லிமரங்கள் வேரோடிப் பாறைகளைப் பிளந்திருக்கும், பனை ஓலைகள் காற்றில் சலசலக்கும் சிள்வீடு என்னும் வண்டுகள் இடைவிடாமல் ரீங்கரித்துக் கொண்டிருக்கும் திருசிங்கவேள் குன்றம் என்னும் திருத்தலத்தில் சென்று எம்பெருமானை வணங்குவோம் என்கிறார் திருமங்கையாழ்வார்.

**குரவ மரம்**

திருக்கோவிலூர் என்ற திருத்தலத்தில் கோங்க மலர்களும், சுரபுன்னைகளும், குரவமரங்களும் நிறைந்துள்ள நந்தவனத்தில் வண்டுகள் இசைபாட அதைக்கேட்டுக் கொண்டு கரும்புகள் செழிப்பாக வளர்கின்றன. அத்தகைய இனிமையான திருத்தலத்திலே சென்று அங்குள்ள தேவர்களுக்கு எல்லாம் தலைவனான எம்பிரானை வழிபட்டால், அவருடைய வாழ்வு என்றும் இனிமையாகவும், அமைதியாகவும் அமையும், அவன் அருள் நம்மிடம் நிறைந்திருக்கும் எனத் திருமங்கையாழ்வார் குறிப்பிட்டுள்ளார். (நா.தி.பி.பா. *1141*) இதே போல் பரிபாடல் திரட்டில்,

> **“ஒருசார் — அணிமலர் வேங்கை, மராஅ, மகிழம்,**
> **பிணிநெகிழ் பிண்டி, நிவந்துசேர்பு ஓங்கி,**
> **மணிநிறம் கொண்ட மலை.**
> **ஒருசார் — தண்நறுந் தாமரைப் பூவின் இடைஇடை**
> **வண்ண வரிஇதழ்ப் போதின்வாய் இனவண்டு ஆர்ப்ப”[4]**

இருந்தையூரின் ஒருபக்கத்தில் வேங்கை, வெண்கடம்பம், மகிழம், அசோகு ஆகிய மரங்கள் ஓங்கி வளர்ந்திருந்தன. அவற்றின் மலர்கள் மணத்தைப் பரப்பியது. மற்றொரு பக்கத்தில் தாமரைப் பூக்கள் அழகாகக் காட்சியளித்தன, அங்கு தேன் பருக வரியுடைய வண்டுகள் இசையை ஒலித்தன என மருதநில வளம் கொண்ட இருந்தையூர் புனையப்பட்டுள்ளது.

> **மழுவினால் அவனியரசை மூவெழுகால்**
> **மணிமுடி பொடிபடுத்து உதிரக்**
> **குழுவு வார்புனலுள் குளித்து வெங்கோபம்**
> **தவிர்ந்தவன், குலைமலி கதலி**
> **குழுவும் வார்கமுகும் குரவம் நற்பலவும்**
> **குளிர் தரு சூதம்மாதவியும்**

**செழுமையார் பொழில்கள் தழுவும்**

**நன்மாடத் திருக்கண்ணங்குடியுள் நின்றானே (நா.தி.பி.பா. 1753)**

இருபத்தோரு தலைமுறைகளாக வாழ்ந்த மன்னர்களின் மணிமுடி கீழே விழும்படி கோடரியால் தலையைச் சீவி எறிந்து அவர்களின் இரத்த வெள்ளத்தில் நீராடி, கடும் கோபத்தைத் தணித்துக்கொண்ட அந்தப் பரசுராமன், வாழைக் குலைகள் நிறைந்த தோட்டங்களும், ஓங்கி வளர்ந்த பாக்கு மரங்களும், குரவ மரங்களும், குருக்கத்திக் கொடியும் செழித்து வளர்ந்திருக்கும் சோலை சூழ்ந்த திருக்கண்ணங்குடியில் நிற்கிறான். அத்திருத்தலத்தில் சென்று வழிபடுவோர், ஆணவம், கோபம், வெறுப்பு, வன்மம் நீங்கி அமைதியான மன நிலையைப் பெறுவர். எனவே அவன் அருள் பெற அத்தலத்தில் சென்று வழிபடுங்கள் என்கிறார் திருமங்கையாழ்வார்.

**பெருவரங்கள் அவைபற்றிப் பிழக்குடைய இராவணனை**
**உருவரங்கப் பொருதழித்திவ் உலகினைக் கண் பொறுத்தான் ஊர்**
**குரவரும்பக் கோங்கலரக் குயில் கூவும் குளிர் பொழில் சூழ்**
**திருவரங்கம் என்பதுவே என்திருமால் சேர்விடமே (நா.தி.பி.பா. 406)**

தவம் செய்து அரிய வரங்களைப் பெற்று ஆணவத்துடன் இருந்த இராவணனுடைய பத்துத் தலைகளையும் அழியுமாறு செய்து மக்களைக் காத்தவன் இராமன் அவன் ஊர், குரவமரம் அரும்பெடுக்க, கோங்கு மரம் பூப்பூக்க, அவற்றில் குயில்கள் அமர்ந்து இன்னிசை பாடும் திருவரங்கம். அங்கே சென்று அவன் திருவடியை வணங்கி அவன் அருள்பெற வேண்டும் என்கிறார் பெரியாழ்வார்.

**பாக்கு மரம்**

**நெட்டிலைய கருங்கமுகின் செங்காய் வீழ**
**நீள் பலவின் தாழ்சினையில் நெருங்கு பீனத்**
**தெட்ட பழம் சிதைந்து மதுச் சொரியும் காழிச்**
**சீராம விண்ணகரே சேர்மினீரே (நா.தி.பி.பா. 1185)**

சத்யபாமாவுக்காகத் தேவலோகச் சோலையிலிருந்து பாரிஜாத மரத்தையே பறித்துக் கொண்டுவந்த எம்பெருமானுடைய அடிகளைச் சேர விரும்பும் பக்தர்களே, அணிகள் தாவுவதால் பாக்குமரக்காய்கள் உதிர்கின்றன. பலாமரங்களின் தாழ்ந்த கிளைகளில் பருமனான, பழுத்த பலாக்கனிகள் நசுங்கித் தேனைப்பொழியும் வளமான இயற்கை அழகோடு விளங்கும் காழிச் சீராம விண்ணகரத்திலிருக்கும் மாதவனை வணங்கி அவன் திருப்பாதத்தை அடையும் வரத்தைப் பெறுங்கள் என்று ஆழ்வார் மொழிந்துள்ளார். இதனையே,

**“காய்மாண்ட தெங்கின் பழம்வீழக் கமுகினெற்றிப்**
**பூமாண்ட தீந்தேன் றொடைகீறி வருக்கை போழ்ந்து**
**தேமாங் கனிசி தறிவாழைப் பழங்கள் சிந்தும்**
**ஏமாங் கதமென் றிசையாற்றிசை போய துண்டே”**[5]

எனத் திருத்தக்கத்தேவரும் சீவகசிந்தாமணியில் ஏமாங்கதநாட்டின் சிறப்பை வருணித்துள்ளார். அதனையே வீரமாமுனிவர் தேம்பாவணியில்,

**“பாய்ந்த தெங்கின் பழங்கள் வீழ்தலால்**
**வாய்ந்த வாழைமா வருகை ஆசினி**
**சாய்ந்த தீங்கனி சரிந்த தேனடபுனல்**
**தோய்ந்த வாயெல்லாம் இனிமை தோய்ந்தன”**[6]

என்று நாட்டின் சிறப்பைப் பற்றிக் கூறியுள்ளார்.

**எண் திசையும் பெருஞ்செந்நெல் இளந் தெங்கு கதலி**
**இலைக்கொடி ஒண்குலைக்கமுகோடு இசலிவளம் சொரிய**
**வண்டு பல இசைபாட மயிலாலும் நாங்கூர்**
**வைகுந்த விண்ணகரம் வணங்கு மடநெஞ்சே**
**(நா.தி.பி.பா. 1230)**

சம்பா பயிர்களும், தென்னை மரங்களும், வாழை மரங்களும், பாக்கு மரங்களும், வெற்றிலைக் கொடிகளும் ஒன்றுக்கொன்று நெருங்கி செழித்து வளரும். வண்டுகள் பல்லிசைப் பாட மயில்கள் நடனமாடும். அப்படியான வளமுள்ள விண்ணகரத்தில் சிவபெருமானின் பிரமகத்தி சாபத்தைப் போக்கிய வைகுந்த நாதன் குடிகொண்டுள்ளான். கடவுளுக்கே அருள்புரியும் மிகப்பெரிய சக்தியாக விளங்கக் கூடிய பெருமாளின் அருளைப்பெற இத்தகைய திருத்தலங்களுக்கெல்லாம் சென்று வழிபடவேண்டும் என்கிறார் திருமங்கையாழ்வார். இதனையே,

**"குரவமேறி வண்டினங்குழலொடி**
**யாழ்செய் கோவலூர்"**[7]

எனச் சம்பந்தரும் சிவத்லம் பற்றிப் பாடியுள்ளார்.

**கருங்கமுகு பசும்பாளை வெண்முத்து ஈன்ற**
**காயெல்லாம் மரகதமாய்ப் பவளம் காட்ட**
**செருந்தி மிக மொட்டலர்த்தும் தேன் கொள் சோலைத்**
**திருக்கோவலூரதனுள் கண்டேன் நானே (நா.தி.பி.பா. 1144)**

கரிய பாக்கு மரத்தின் பச்சைப் பாளையானது வெண்மையான முத்துக்களைக் கொடுத்து, காயெல்லாம் மரகதமாய் ஜொலிக்க, பழங்களெல்லாம் பவளம் போல் மின்ன, சுரபுன்னை மரம் மொக்குகளை மலரச் செய்யும் தோட்டங்களையுடைய திருக்கோவலூரில் எம்பெருமானைக் கண்டு மகிழ்ந்தேன் என்கிறார் திருமங்கையாழ்வார்.

**காய்த்த நீள் கமுகும் கதலியும் தெங்கும் எங்கும் மாம்பொழில்களின் நடுவே**
**வாய்த்த நீர் பாயும் மண்ணியின் தென்பால் திருவள்ளியங்குடியதுவே**
**(நா.தி.பி.பா. 1338)**

**குலையார்ந்த பழுக்காயும் பசுங்காயும் பாளைமுத்தும்**
**தலையார்ந்த இளங்கமுகின் தடஞ்சோலைத் திருநறையூர்**

**மலையார்ந்த கோலம் சேர் மணிமாடம் மிக மன்னி**

**நிலையார நின்றான் தன் நீள் கழலே அடை நெஞ்சே!**

**(நா.தி.பி.பா. 1535)**

திருவிண்ணகரம், திருவள்ளியங்குடி, திருநறையூர் போன்ற சிறப்புடைய திருத்தலங்களுக்கு எல்லாம் சென்று இறைவனை வழிபடுவோரை அவன் என்றும் காத்தருள்வான் எனப் பொருள் தேடி அலையும் ஒரு பாணனை, பரிசில் பெற்ற பாணன் வழிக்கூறி ஆற்றுப்படுத்துவதைப் போல திருமால் அருள் கிடைக்காது தறிகெட்டு அலையும் மனித மனதை எம்பிரானின் திருத்தலப் பெருமையெல்லாம் எடுத்துரைத்து அங்கே சென்று அவனது அருளைப் பெற்றுக்கொள்ளுங்கள் என ஆற்றுப்படுத்துகிறார் திருமங்கையாழ்வார்.

தொண்டரடிப் பொடியாழ்வார் பாடிய திருப்பள்ளி எழுச்சியில் இயற்கையின் அழகான காட்சியினைக் காண திருமாலே எழுந்தருள்வாயாக என்று இயற்கையின் மொத்த உருவமாக விளங்கக் கூடிய எம்பிரானையே இயற்கையின் அழகைக் காண அழைக்கின்றார்.

**சுடரொளி பரந்தன சூழ்திசை யெல்லாம்**

**துன்னிய தாரகை மின்னொளி சுருங்கிப்**

**படரொளி பசுத்தனன் பனிமதி இவனோ!**

**பாயிருளகன்றது பைம்பொழிற் கமுகின்**

**மடலிடைக் கீறிவண் பாளைகள் நாற**

**வைகறை கூர்ந்தது மாருதம் இதுவோ**

**அடலொளி திகழ்தரு திகிரியந் தடக்கை**

**அரங்கத்தம்மா! பள்ளி எழுந்தருளாயே!**

**(நா.தி.பி.பா. 919)**

எல்லாத் திசைகளிலும் கதிரவனின் ஒளி பரந்து காணப்படுகிறது. நட்சத்திரங்களும் சந்திரனும் அதனால் ஒளியிழந்து தெரிகின்றன. இருள் போய்விட்டது. விடியலை அறிவிக்கும் தென்றல் காற்று பட்டவுடன் சோலையில்

உள்ள பாக்குமரப் பாளைகள் வெடிக்கின்றன. வீசும் காற்றில் அந்த வாசனையை உணர முடிகிறது. கிழக்குத் திசை வெகு பிரகாசமாகத் திகழ்கிறது. இந்த இனிய காட்சிகளைக் காண சுதர்சனச் சக்கரத்தை ஏந்தியவனே எழுந்தருளுக எனத் தொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலுக்குத் திருப்பள்ளியெழுச்சி பாடியுள்ளார்.

**சுரபுன்னை**

புன்னை, சுரபுன்னை மரங்கள் செழித்து வளர்ந்துள்ள தோட்டங்கள் நிறைந்த அழகிய திருவாலி நகரில் உறைபவனே! எனக்கு மாதர்கள் முதலிய இச்சையான செயல்களின் மேல் புத்தி போகாமல் உன் இரு திருப்பாத கமலங்களுக்கே நான் கைங்கர்யம் செய்யும்படி அருள் புரியவேண்டும் என வேண்டுகிறார் திருமங்கையாழ்வார்.

**சலங்கொண்ட இரணியனது அகல் மார்வம் கீண்டு**
**தடங்கடலைக் கடைந்து அமுதம் கொண்டு உகந்தகாளை**
**நலங்கொண்ட கருமுகில் போல் திருமேனி அம்மான்**
**நாள் தோறும் மகிழ்ந்து இனிது மருவியுறை கோயில்**
**சலங்கொண்டு மலர் சொரியும் மல்லிகை ஒண் செருந்தி**
**சண்பகங்கள் மணநாறும் வண்பொழிலினூடே**
**வலங்கொண்டு கயலோடு விளையாடும் நாங்கூர்**
**வைகுந்த விண்ணகரம் வணங்கு மடநெஞ்சே**

**(நா.தி.பி.பா. *1228*)**

பகை கொண்ட இரணியனின் அகன்ற மார்பைக் கிழித்தவனும், பெரிய திருப்பாற்கடலைக் கடைந்து அமிர்தத்தை எடுத்து உள்ளம் மகிழ்ந்தவனும், காளமேகம் போன்ற திருமேனியை உடையவனுமான கண்ணபிரான் தினந்தோறும் மகிழ்ந்து இனிதே இருக்கக் கூடிய இடம், மணமிக்க பூக்களைச் சொரியும் மல்லிகைச் செடிகளும், சுரபுன்னை, செண்பக மரங்களும் மலர்ந்து மணம் வீசும் சோலையின் நடுவே மீன்கள் துள்ளிவிளையாடும் தடாகங்கள் நிறைந்த

விண்ணகரத்தை தேடிச்சென்று வணங்கு என் மடமையான நெஞ்சே! எனத் தன் மனதிற்கு ஆறுதல் கூறுகிறார்.

**பைம்பொனொடு வெண் முத்தம் பல புன்னை காட்ட**
**பலங்கனிகள் தேன் காட்ட, படவரவேரல்குல்**
**அம்பனைய கண் மடவார் மகிழ்வெய்தும் நாங்கூர்**
**அரிமேய விண்ணகரம் வணங்கு மடநெஞ்சே (நா.தி.பி.பா. 1240)**

தேவர்களையும், ஏழு உலகங்களையும் ஊழிக்காலத்தில் காத்தவனான எம்பிரான் குடிகொண்டுள்ள இடம் திருவிண்ணகரமாகும். அவ்விடம் புன்னை மரங்கள் பூத்துக் குலுங்கிப் பசும்பொன்னும் வெண்முத்தும் போல ஒளிவிடுகின்றன. பலாக்களின் தேன் சொரியும், அங்கே சென்று இறைவனை வழிபடு மட நெஞ்சே எனத் தன் உள்ளத்திற்கு உரைக்கின்றார்.

**இன்றுபோய்ப் புகுதி ராகில், எழுமையும் ஏதம் சாரா**
**குன்றுநேர் மாடம் மாடே குருந்து சேர் செருந்தி புன்னை**
**மன்றுஅலர் பொழில்அ னந்த புரநகர் மாயன் நாமம்**
**ஒன்றும்ஓர் ஆயிரம் ஆம்: உள்ளுவார்க்கு உம்பர் ஊரே**
**(நா.தி.பி.பா. 3795)**

குருந்த மரங்களும், செருந்தி மரங்களும், புன்னை மரங்களும், வாசனையோடு மலரும் தோட்டங்கள் நிறைந்த திருவனந்தபுரத்திலே மாயவன் பத்மநாபன் என்ற பெயரில் பள்ளி கொண்டிருக்கின்றான். அவன் ஒவ்வொரு நாமமும் ஆயிரம் நாமங்களுக்குச் சமம். அவனை நினைத்து அதைச் சொல்பவர்களுக்குப் பரமபதத்தை அடைவது எளிது. அதனால் அந்தத் தலத்திற்குச் சென்று அவனை வழிபட்டு ஏழு பிறப்பிலும் உண்டாகக் கூடிய துன்பங்களைப் போக்கிக் கொள்ளுங்கள் என்பதை நம்மாழ்வார் தம் பாசுரத்தில் தெளிவுபடுத்துகிறார்.

**தென்னை**

நிறையப் பாளைகளுடன் உயர்ந்திருக்கும் தென்னை மரங்களிலிருந்து மட்டையுள்ள தேங்காய்கள் மாமரங்களில் விழ, அதனால் உதிர்ந்த மாம்பழங்களை உருட்டிக் கொண்டும் மலர்களைச் சூழ்ந்து கொண்டும் பெருகி வரும் பொன்னி நதி பாயும் திருநாங்கூரில் திருத்தெற்றியம்பலத்தில் செந்தாமரைக் கண்ணன் வீற்றிருக்கின்றான். (நா.தி.பி.பா. *1280*)

**"ஆசினி மென்பழம் அளிந்தவை உதிரா**
**தேன்செய் இறாஅல் துளைபடப் போகி**
**நறுவடி மாவின் பைந்துணர் உழக்கி**
**குலையுடை வாழைக் கொழுமடல் கிழியா**
**பலவின் பழத்துள் தங்கும் மலைகெழு வெற்பனைப்"**[8]

கனிந்து நின்ற ஆசினிப் பலாப்பழங்களை விழச் செய்தது. தேனடையைத் துளைத்துக் கொண்டு சென்று மாமரத்தின் புதிய பூங்கொத்துக்களை அழித்து, தாரோடு கூடிய வாழையில் வளமாக இருக்கும் புதிய இலைகளைக் கிழித்து, பலாப்பழத்தில் பதியும் மலையை உடையவன் எனத் தலைவன் மலைவளம் புனையப்பட்டுள்ளதைப் போல ஆழ்வாரும் திருமாலின் அருளினை இயற்கை வளங்கள் மூலமாகவே வெளிப்படுத்தியுள்ளார்.

**ஆய்ச்சியரழைப்ப வெண்ணெயுண்டு ஒருகால்**
**ஆலிலை வளர்ந்த எம்பெருமான்**
**பேய்ச்சியை முலையுண்டு இணைமரு திறுத்துப்**
**பெருநிலம் அளந்தவன் கோயில்**
**காய்த்த நீள் கமுகும் கதலியும் தெங்கும்**
**எங்கும் மாம்பொழில்களின் நடுவே**
**வாய்த்த நீர் பாயும் மண்ணியின்**
**தென்பால் திருவெள்ளியங்குடியதுவே (நா.தி.பி.பா. *1338*)**

செழிப்பு மிக்க எம்பெருமான் விரும்பி உறைகின்ற திருவெள்ளியங்குடி என்னும் தலத்தில் சென்று இறைவனை வழிபட்டு அவன் அருளைப் பெற வேண்டும் என்பதைத் திருமங்கையாழ்வார் சுட்டியுள்ளார்.

**பச்சிலை நீள் கமுகும் பலவும் தெங்கும் வாழைகளும்**
**மச்சணி மாடங்கள் மீதணவும்தாண் திருவல்லவாழ்**
**நச்சரவின் அணைமேல் நம்பிரானது நன்னலமே (நா.தி.பி.பா. 3324)**

திருமால் நின்றகோலம், அமர்ந்தகோலம், கிடந்த கோலம் என எல்லா நிலைகளிலும் காட்சியளிக்கின்றார். ஒவ்வொரு திருத்தலத்திலும் ஒவ்வொரு நிலையிலும் வீற்றிருக்கின்றான். திருவல்லவாழ் என்ற தலத்திலே திருமால் ஆதிசேடன் மீது பள்ளி கொண்டிருக்கின்றார். நாம் அந்தக் கோலபிரான் திருவடியைச் சேரும் நாள் எந்த நாளோ? எப்பொழுதும் அவர் திருவடியைச் சேவித்துக் கொண்டிருப்பவரை ஊழிக்காலத்தில் காத்தருள்வார் என்பதை இப்பாடல் வழி எடுத்துரைக்கின்றார் நம்மாழ்வார்.

**கோலமா ணிக்கம் என் அம்மான்**
**செறிகுலை வாழை, கமுகு, தெங்கு அணிசூழ்**
**அடிஇணை அல்லது ஓர் அரணே (நா.தி.பி.பா. 3599)**

அழகிய மாணிக்கம் போன்ற எம்பெருமான் வாழை, கமுகு, தென்னைமரங்கள் சூழ்ந்த திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறு என்ற திருத்தலத்தில் அனைவரும் அறிய பூர்ண வடிவமாக நின்றிருக்கின்றான். அந்தப் பரந்தாமன் திருவடிகள் அல்லாமல் நமக்கு வேறெதுவும் பாதுகாப்பு இல்லை என்பதை நம்மாழ்வார் உணர்த்துகின்றார்.

**செண்பகம்**

**மொய்கொள் மாதவி சண்பகம் முயங்கிய முல்லை அம்கொடியாட**
**செய்ய தாமரைச் செழும்பணை திகழ்தரு திருவயிரந்திரபுரமே**
**(நா.தி.பி.பா. 1150)**

குருக்கத்திச் செடிகளோடும், செண்பக மரங்களோடும் பிணைந்திருக்கும் முல்லைக் கொடிகளையும், தாமரை மலர்களையும் உடைய திருவயிந்திரபுரம். ஊழிக்காலத்தில் ஏழு உலங்களையும் உண்டு ஆலிலையில் பள்ளிகொண்ட மாயவன் ஒளிவு மறைவு இன்றி, தன்னை அப்படியே பக்தர்களுக்குக் காட்டக் கூடிய கேசவன் வீற்றிருக்கிறான்.

**கோங்கு செண்பகக் கொம்பினில் குதிகொடு குரக்கினம் இரைத்தோடி**
**தேன்கலந்த தண்பலங்கனி நுகர்தரு திருவயிந்திரபுரமே**

**(நா.தி.பி.பா. 1152)**

மகாபலியிடம் வாமனனாகச் சென்று யாசித்தவன் நப்பின்னைக்காக ஏழு காளைகளை வென்றவன் உறையுமிடம், பொன்னிற மலர்கள் நிறைந்த வேங்கை, கோங்கு, செண்பகம் இவற்றின் கிளைகளில் குதித்து ஆரவாரம் செய்யும் குரங்குக் கூட்டங்கள் இங்கும் அங்குமாக ஓடி, தேன் கசியும் பலாப்பழங்களைத் தின்னும் வளமான சோலையை உடைய திருவயிந்திரபுரமாகும்.

**சலங்கொண்டு மலர் சொரியும் மல்லிகை ஒண்செருந்தி**
**சண்பகங்கள் மணநாறும் வண்பொழிலினூடே**
**வலங் கொண்டு கயலோடு விளையாடும் நாங்கூர்**
**வைகுந்த விண்ணகரம் வணங்கு மட நெஞ்சே**

**(நா.தி.பி.பா. 1228)**

காளமேகம் போன்ற திருமேனியை உடையவனான எம்பெருமான், தினம்தோறும் மகிழ்ந்து இனிதாகப் பொருந்தி வாழ்கின்ற இடம், நீரைக்குடித்து, பூக்களைச் சொரிகின்ற மல்லிகைச் செடிகளும், சுரபுன்னை, செண்பக மரங்களும் வாசனை வீசும் தோட்டங்களூடே மீன்கள் துள்ளி விளையாடும் வளமுடைய திருவைகுந்த விண்ணகரத்தை மட நெஞ்சே, நீ சேவிப்பாயாக எனத் தன் நெஞ்சிற்குக் கூறுவதைப் போல மற்றவர்களுக்கும் அறிவுறுத்துகிறார்.

**அம்பினாலறுத்து அரசு அவன் தம்பிக்கு அளித்தவனுறை கோயில்**
**செம்பலா நிரை செண்பகம் மாதவி சூதகம் வாழைகள் சூழ**

**வம்புலாம் கமுகோங்கிய நாங்கூர் வண்புருடோத்தமமே**

**(நா.தி.பி.பா. 1258)**

சிவந்த பலாமரங்களும், செண்பகம், வாழை, மாமரங்களும், குருக்கத்திக் கொடிகளும் சூழ்ந்த, மணம் வீசும் பாக்கு மரங்கள் ஓங்கி வளரப் பெற்ற திருநாங்கூரிலுள்ள திருவண் புருடோத்தமமாகும். எம்பிரான் வீற்றிருக்கக்கூடிய அனைத்துத் திருத்தலங்களும் இயற்கை எழில் கொஞ்சும் அழகிய சிறப்புமிக்க தலங்களாக விளங்குகின்றன. அத்தகைய இடங்களுக்கெல்லாம் சென்று கேசவனை வழிபடுவோரைக் காத்து அவன் திருவடியில் இருக்கும் பாக்கியத்தைத் தருவார் என்பதைத் திருமங்கையாழ்வார் இப்பாசுரங்களின் வழி எடுத்துரைக்கின்றார்.

**வேம்பின்புழு வேம்பன்றி யுண்ணாது அடியேன்**
**நான்பின்னும் உன் சேவடியன்றி நயவேன்**
**தேம்பலிளந்திங்கள் சிறைவிடுத்து ஐவாய்ப்**
**பாம்பினணைப் பள்ளி கொண்டாய், பரஞ்சோதீ (நா.தி.பி.பா. 2028)**

வேப்பமரத்தில் உண்டான புழு, அந்த மரத்தின் இலை தண்டு இனங்களை உண்ணுமேயன்றி வேறொரு மரத்தின் பகுதிகளை உண்ணாது, அதுபோல உன் பக்தனான நான், நீ பாரா முகமாய் இருப்பினும், உன் சிவந்த திருப்பாதங்களையன்றி வேறொன்றைத் தஞ்சமடைய மாட்டேன் எனத் திருமால் மீதுள்ள பக்தியினை அழகாக வெளிப்படுத்தியுள்ளார்.

**மூங்கில்**

**நெடுவேய்கள் படுமுத்த முந்தவுந்தி**
**புலம்பரந்து பொன் விளைக்கும் பொய்கை வேலிப்**
**பூங்கோவலூர் தொழுதும் போது நெஞ்சே (நா.தி.பி.பா. 2057)**

யாசிப்பவர்கள் திருப்தியடையும் அளவு கொடுக்கும் நீண்ட திருக்கரங்களைக் கொண்ட தேவர்களின் தலைவன், விரும்பிக் கோயில் கொண்டுள்ள தலம் தென் பெண்ணை நதி, நீண்ட மூங்கில்களை வேரோடு பறித்துச் செல்ல, அவை உதிர்க்கும் முத்துக்கள் கழனிகளில் சேர, பொன்விளையும் பொய்கைகளை

வேலியாகக் கொண்ட திருக்கோவலூருக்குச் சென்று வணங்குவோம் வாருங்கள் என அடியார்களை அழைக்கின்றார் திருமங்கை ஆழ்வார்.

**"வேங்கை தாய ஓங்குமலை அடுக்கத்து**
**ஆடுகழை நிவந்த பைங்கண் மூங்கில்**
**ஓடுமழை கிழிக்கும் சென்னிக்**
**கோடுஉயர் பிறங்கல் மலைகிழ வோனே"[9]**

நீலமணிபோலத் தெளிந்த நீருடைய அருவி மலையில் வீழ்கின்றது. மலையில் உள்ள வேங்கை மரங்கள் பொன் போன்ற மலர்களை உதிர்க்கின்றன. அசைகின்ற கணுக்களைக் கொண்ட மூங்கில் மரங்கள் வானில் ஓடுகின்ற மேகங்களைக் கிழிக்கும் அத்தகைய உச்சியை உடைய மலை நாட்டை உடையவனே என முதுகூத்தனார் தலைவனைப் புகழ்வது போல திருமங்கை ஆழ்வாரும் திருமாலின் அருளினை இத்திருத்தலத்தின் வாயிலாகப் புலப்படுத்தியுள்ளார்.

**வாழை**

**முதல்வனவன் மகிழ்ந்து இனிது மருவியுறை கோயில்**
**எண்திசையும் பெருஞ்செந்நெல் இளந்தெங்கு கதலி**
**இலைக்கொடி ஒண்குலைக்கமுகோடு இசலிவளம் சொரிய**
**வண்டு பல இசைபாட மயிலாலும் நாங்கூர்**
**வைகுந்த விண்ணகரம் வணங்கு மடநெஞ்சே (நா.தி.பி.பா. 1230)**

சிவபெருமானின் பிரம்மகத்தி தோசத்தை நீக்கிய ஆதியானவன் மகிழ்ந்து உறைகின்ற நாங்கூர் விண்ணகரம், வண்டுகள் இசை பாட மயில்கள் நாட்டியமாடும் செழுமையான தோட்டங்களை உடையது. அங்குள்ள வைகுந்த வாசனை என் மடநெஞ்சே எப்போதும் வணங்குவாயாக என்கிறார் திருமங்கையாழ்வார்.

**பாரிஜாதம்**

> **என்னாதன் தேவிக்கன்றின்பப்பூ ஈயாதாள்**
> **தன் நாதன் காணவே தண்பூ மரத்தினை**
> **வன்னாதப் புள்ளால் வலியப் பறித்திட்ட**
> **என்னாதன் வன்மையைப் பாடிப்பற (நா.தி.பி.பா. 307)**

கண்ணனின் தேவியான சத்யபாமாவுக்கு தேவலோகத்திலிருக்கும் பாரிஜாத மலரை இந்திராணி கொடுக்காததினால், கருடனைக் கொண்டு அம்மரத்தையே பறித்துக் கொண்டு வந்த பெருமானுடைய அடியைச் சேர விரும்பும் பக்தர்களே, அவன் விரும்பி உறைகின்ற இடமான, மனதிற்கு இனிமை தரும் இயற்கை அழகு மிகுந்து விளங்கும் திருத்தலங்களுக்கு எல்லாம் சென்றடையுங்கள் என அடியார்களுக்கு வழிகாட்டுகிறார் திருமங்கையாழ்வார்.

## செடி, கொடிகள் புனைவில் பக்தி நெறி

மரம், செடி, கொடி என அனைத்திலும் இருக்கக்கூடியவர் திருமால், உயிர்கள் அனைத்தும் அவன் படைத்தது. அவன் எல்லாவுமாக விளங்குகின்றார். உயிர்ப் பாகுபாடு பார்க்காதவர் என்பதை அனைவருக்கும் உணர்த்தவே பறவையை வாகனமாகவும், மலரை அமரும் இருக்கையாகவும், பாம்பைப் படுக்கையாகவும், துளசியை மாலையாகவும் கொண்டுள்ளார் என்பதை ஆழ்வார்களின் பாசுரங்கள் தெளிவுபடுத்துகின்றன. அவ்வகையில் ஆழ்வார்கள் செடி, கொடிகளில் திருமாலைக் கண்டு போற்றுகின்றனர்.

### துளசி

துளசி, செடி வகையைச் சார்ந்தது. துளசியினைத் திருத்துழாய் என்கின்றனர் ஆழ்வார்கள். திருமாலுக்கு உகந்தது துளசி மாலை என்பதால், துளசிச் செடி புனிதமானதாகக் கருதப்படுகிறது. துளசி இயற்கையாகவே மருத்துவக் குணம் கொண்டது. அதிகக் குளிர்ச்சியை உடையது. எனவே தான் எம்பிரான் குளுமையாக இருக்கக்கூடிய துளசி மாலையைக் கழுத்தில்

அணிந்துள்ளார் என்கின்றனர். பொய்கை ஆழ்வார் துளசி மாலை அணிந்த வேங்கடேசா என்கின்றார். (நா.தி.பி.பா. 2094)

**வண்டுலவு தண்துழாய்த் தார்தன்னைச் சூழத்தரித்து**

**(நா.தி.பி.பா. 2443)**

**சீரா யின தெய்வ நன்னோய் இது தெய்வத் தண்ணந்துழாய்த்**
**தாரா யினும் தழை யாயினும் தண்கொம்ப தாயினும் கீழ்**
**வேரா யினும் நின்ற மண்ஆயி னும்கொண்டு வீசுமினே**

**(நா.தி.பி.பா. 2530)**

நம்மாழ்வார் தன்னைத் தலைவியாகவும் திருமாலைத் தலைவனாகவும் நினைத்துக் காதல் பிரிவால் வருந்தியபோது கேசவன் சூடிய திருத்துழாய் மாலையோ, அல்லது அதன் கிளையோ அல்லது ஓர் இலையோ அல்லது வேரோ, அதுவும் இல்லாவிட்டால் துளசி முளைத்த மண்ணையோ கொண்டு வாருங்கள், அதன் காற்றுப் பட்டால் போதும் என்கிறார். இதன் மூலம் திருமால் சூடியதால் அந்தத் துளசி மாலைக்கு அவன் அருள் கிட்டி இருக்கும். எனவே அதன் காற்றைச் சுவாசித்தால் போதும், அவனது திருவருள் முழுமையாக நமக்குக் கிட்டும் என்பதை உணர்த்துகின்றார்.

**தாராயதண் துளவ வண்டு உழுத வரை மார்பன் (நா.தி.பி.பா. 1203)**

என்கின்றார் திருமங்கை ஆழ்வார்.

தேன் நிறைந்த துளசி, வில்வம், தாமரை, ஆம்பல் ஆகிய மலர்களை எல்லாம் அந்த வராக மூர்த்தியின் திருப்பாதங்களுக்குத் தூவ வேண்டும் என்ற எண்ணம் வரவேண்டும். அவ்வாறு இல்லாதவர்கள் மனம் ஒரு குப்பைக் கிடங்கு என்றே கருதவேண்டும் என்கிறார் திருமங்கை ஆழ்வார்.

**வண்டு கிண்டு தண்துழாய் அலங்காய் (நா.தி.பி.பா. 773)**

**தேனகம் செய் தண்ணறும் மலர்த்துழாய் நன்மாலையாய்**

**(நா.தி.பி.பா. 781)**

எனத் திருமால் அணிந்த துளசி மாலையின் தன்மையினை ஆழ்வார் சுட்டியுள்ளார்.

**திருத்தலத்தில் அமைந்துள்ள செடி, கொடிகள்**

திருமால் வீற்றிருக்கக்கூடிய ஒவ்வொரு திருத்தலத்திலும் ஒவ்வொரு செடி கொடிகள் சிறப்புப் பெற்று விளங்குகின்றன. எந்தத் திருத்தலத்தில் எந்தச் செடிகள் செழிப்புடன் அதிகமாகவுள்ளன என்பதை ஆழ்வார்கள் பாசுரங்களில் பதிவு செய்துள்ளனர்.

**குருக்கத்தி**

**மணங்கொள் மாதவி நெடுங்கொடி விசும்புற**
**நிமிர்ந்தவை முகில் பற்றி**
**பிணங்கு பூம்பொழில் நுழைந்து வண்டு இசை**
**சொலும் பிரிதிசென்றடை நெஞ்சே (நா.தி.பி.பா. 963)**

நறுமணமுள்ள குருக்கத்திக் கொடிகள் மேகங்களைப் பற்றுக் கொம்பாகப் பற்றிப் படரும் ஓங்கி உயர்ந்த கொடியுடைய நந்தவனம், திருமால் வீற்றிருக்கின்ற திருப்பிரிதியை என்ற திருத்தலம் என்று திருத்தலத்தின் செழிப்பினை எடுத்துரைக்கின்றார்.

**மாதவிப் பந்தல்மேல் குயிலினங்கள் கூவினகாண் (நா.தி.பி.பா. 491)**

குருக்கத்திப் பந்தலின் மேல் குயில் கூட்டங்கள் கூவுகின்றன. அதன் ஒலி கேட்கவில்லையா, மாதவா, உடனே எடுத்து வா என ஆண்டாள் கண்ணனை எழுப்புகின்றார்.

**பொன்திகழ் புன்னை மகிழ்புது மாதவி மீதணவித்**
**தென்றல் மணங்கமழும் திருவல்லவாழ்நகர் (நா.தி.பி.பா. 3322)**

பொன்போல் ஒளி வீசக் கூடிய புன்னை, மகிழமரம், அன்றலர்ந்த மலர்களையுடைய குருக்கத்தி செடி ஆகியவை மீது பட்டு மணம் கமழும், தென்றல் வீசும்

திருவல்லவாழ்நகரில் நின்றருளும் எம்பிரானுடைய திருவடிப்பொடியை அடியேன் தலையில் சூடும் நாள் எதுவோ என்று அத்திருத்தலத்தின் புகழ் பாடுகின்றார் நம்மாழ்வார்.

**முல்லை**

**மொய்கொள் மாதவி சண்பகம் முயங்கிய முல்லை அம்கொடியாட**
**செய்ய தாமரைச் செழும்பணை திகழ்தரு திருவயிந்திபுரமே**

**(நா.தி.பி.பா. 1150)**

குருக்கத்திச் செடிகளோடும், செண்பக மரங்களோடும் பிணைந்திருக்கும் முல்லைக் கொடிகள் அசைவதும் செழுமையான வயல்களில் தாமரை மலர்கள் செழித்து வளர்வதுமான திருவகீந்திரபுரம் என்னும் திருத்தலத்தில் அடியவர்களுக்குத் தன்னை உள்ளபடி காட்டும் தேவநாயகப் பெருமாள் வீற்றிருக்கின்றான்.

பூத்துக் குலுங்கும் முல்லைக் கொடிகள் அவற்றைத் தழுவிக் கொண்டு கீழ்த்திசையிலிருந்து வீசும் இனிய காற்றைச் சுவாசித்துக் கொண்டு உறங்கிக் கொண்டிருக்கின்ற அரங்கநாதா, நீ துயில் நீங்கி எழுந்திரு எனத் தொண்டரடிப் பொடியாழ்வார் திருப்பள்ளி எழுச்சி பாடுகின்றார்.

முல்லைக் கொடியிலுள்ள தேனை உண்ணவரும் வண்டுகளே, இதனை நீங்கள் அருந்த வேண்டும் என்றால் தேவர்களின் தலைவனான கண்ணபிரானை இங்கே வந்து எனக்கு அருள் புரியச் செய்யுங்கள். அப்போதுதான் உங்களைத் தேன் அருந்த அனுமதிப்பேன் என நம்மாழ்வார் கூறுகின்றார்.

**வெற்றிலை**

**கால்கொள் கண் கொடிக்கையெழக் கமுகிளம் பாளைகள் கமழ்சாரல்**
**சேல்கள் பாய்தரு செழுநதி வயல்புகு திருவயிந்திரபுரமே**

**(நா.தி.பி.பா. 1156)**

அடைமழை பெய்த போது பசுக் கூட்டத்தைக் காக்க கோவர்த்தன கிரியைக் குடையாகப் பிடித்த எம்பெருமாள் குடி கொண்டுள்ள இடம்,

மலைச்சாரலில் வெற்றிலைக் கால்கள் கணுக்கள் தோறும் கிளைக்கின்ற வெற்றிலைக் கொடிகள் அதிகமாக வளரப்பெற்றதும், பாக்கு மரங்களின் குருத்துகள் வாசனை வீசுகின்ற சாரலை உடைய, மீன்கள் துள்ளி விளையாடும் கெடில நதி வயல்களிலே பெருகப் பெற்றதுமான திருவகீந்திரபுரமாகும் என அத்திருத்தல இயற்கை அழகை எடுத்துரைக்கின்றார் ஆழ்வார்.

மென்மையான இலைகளையும், பசுமை வளத்தையும் கொண்ட வெற்றிலைக் கொடிகள் ஆசையுடன் இளந்தாளையுடைய பாக்கு மரத்தைத் தழுவிப் படர்கின்றன. அதன் அருகே மடலையும், இலையையும் கொண்ட வாழை மரங்கள் குலை தள்ளிய கனிகளுடன் அந்த வெற்றிலைக் கொடிகளுக்கும், கமுகு மரங்களுக்கும் குடை போல் குவிந்திருக்கின்றன. அதன் அருகே தென்னை ஓலைகள் பரந்திருக்க, இவற்றின் ஊடே மணம் கமழ் தென்றல் காற்று வீசும் குளிர்ச்சியான திருப்புலியூரில் மல்லர்களை அழித்த யசோதையின் செல்வனான கண்ணபிரான் கோயில் கொண்டிருக்கின்றாள். இத்தகைய இயற்கையான இடத்தில் குளிர்ச்சியோடு இருக்கக்கூடிய எம்பிரானை வழிபட்டு முக்தி அடைய வேண்டும் என்கிறார் நம்மாழ்வார். (நா.தி.பி.பா. 3657)

**சம்பாப் பயிர்**

நீர் வளம் நிறைந்த கழனிகளில் செந்நெற்பயிர்கள் பாரம் தாளாமல் வரப்புகளில் சாய, அறுவடை செய்பவர் முகத்தில் அக்கதிர்களிலிருந்து துள்ளிக் குதித்த மீன்கள் நீர் நிறைந்த கரும்புத் தோட்டங்களில் போய்ச் சேரும் வளமான திருவாலியில் எழுந்தருளி இருக்கும் மன்னவா, நீ எப்போது வருவாய் என ஏங்க விடாது நிரந்தரமாக என் உள்ளத்தில் குடி இருப்பது நான் இப்பிறவியில் செய்த புண்ணியமாகும் என்கிறார் திருமங்கையாழ்வார்.

**நெல்தொடுத்த மலர் நீலம் நிறைந்த சூழல்**
**இருஞ்சிறைய வண்டொலியும் நெடுங்கணார்தம்**
**சிற்றடிமேல் சிலம்பொலியும் மிழற்றும் நாங்கூர்த்**
**திருத்தெற்றியம்பலத்து என் செங்கண்மாலே (நா.தி.பி.பா. 1279)**

நெற்கதிர்களின் மேல் கருநெய்தற்பூக்கள் படர்ந்திருக்க, சுற்றுப்புறங்களில் வண்டுகள் ரீங்கரிக்க, நீண்ட கண்களையுடைய மங்கையரின் சிறிய பாதங்களில் சிலம்பும் சேர்ந்தொலிக்கும் சிறப்புடைய நாங்கூரில் திருத்தெற்றியம்பலத்தில் என் செந்தாமரைக் கண்ணன் குடிகொண்டுள்ளான். அவனைச் சென்று சரணடையுங்கள் என்கிறார்.

**வரம்புற்ற கதிர்ச் செந்நெல் தாள்சாய்த்துத்**
**தலை வணங்கும் தண்ணரங்கமே (நா.தி.பி.பா. 419)**

வாமனனாய் அவதரித்து மகாபலியிடம் சென்று மூன்றடி நிலம் யாசித்து திரிவிக்ரமனாய் வளர்ந்து, மூன்றாவது அடியை அவன் சொன்னபடி அவன் தலையில் வைத்து உதைத்து பாதாளத்தில் தள்ளி, அவன் கர்வமடக்கி, மகாபலியைப் பாதாள உலகை ஆளும் படிப் பணித்து மகிழ்ந்த எம்பெருமான் கோயில் கொள்ள திருவரங்கத்திலே உள்ள கதிர்முற்றிய நெற்கதிர்தான் தலை சாய்ந்து, திருமாலை வணங்குவதாகப் பெரியாழ்வார் குறிப்பிடுகின்றார்.

**கரும்பு**

**மாறுகொண்டு உடன்றெதிர்ந்த வல்லவுணன் தன் மார்பகம் இருபிளவா**
**கூறுகொண்டு அவன் குலமகற்கு இன்னருள் கொடுத்தவனிடம் மிடைந்து**
**சாறுகொண்ட மென் கரும்பிளங்கழை தகைவிசும் புற, மணி நீழல்**
**சேறு கொண்ட தண்பழனத் தெழில்திகழ் திருவயிந்திரபுரமே**

**(நா.தி.பி.பா. 1151)**

பகைமையுடன் கறுவிக் கொண்டு எதிரிட்டு வந்த வலிமையான இரண்யகசிபுவின் மார்பு இரு பிளவாகும்படிப் பிளந்து அழித்து, அவனது குலக்கொழுந்தான பிரகலாதனுக்கு அருட்செய்த எம்பெருமான் உறையுமிடம் ஒன்றோடொன்று நெருங்கி சாறு நிறைந்த கரும்புகள் ஆகாயத்தைத் தொட்டு வளர்ந்திருப்பதால், அதன் சாறு வழிந்து கழனிகள் சேறு நிறைந்ததாய் உள்ள எழில்மிகுந்த வளமான இயற்கை வளம் கொழிக்கும் திருவகீந்திரபுரத் திருத்தலமாகும். இவ்வாறு பெரும் செல்வம் பொலிந்திருக்கும் அவ்வூர்

இறைவனை மனதார வணங்கவேண்டும். அவன் அனைத்து நல்வரங்களையும் அருள்வார் என்கிறார்.

**நோக்கும் பக்கமெல்லாம் கரும்பொடு செந்நெல் ஓங்கு செந்தாமரை**
**வாய்க்கும் தண்பொருநல் வடகரை வண்தொலை வில்லி மங்கலம்**
**நோக்கு மேல் அத்திசையெல்லால் மறுநோக்கிலள் வைகல் நாடொறும்**
**வாய்க் கொள் வாசகமும் மணிவண்ணன் நாமமே இவள் அன்னையீர்**

**(நா.தி.பி.பா. *3392*)**

பார்க்கும் இடமெல்லாம் கரும்பும், செந்நெல் பயிரும் ஓங்கி செழித்திருக்க, நீர்நிலைகளில் செந்தாமரை நிறைந்திருக்கும், குளிர்ச்சியான தாமிரபணியின் வடகரையில் அமைத்துள்ள தொலைவில்லி மங்கலத்தை ஒருமுறை பார்த்தால் அத்திசையில் இருந்து பார்வையைத் திருப்பி வேறு எதையும் காணமுடியாது. நும்மை அறியாது வாய் கருநீலமணி போன்ற நிறத்தை உடையவனது திருநாமத்தை ஓயாது உச்சரித்துக் கொண்டே இருக்கும் என்கிறார்.

**மலர்கள் புனைவில் பக்தி நெறி**

இறைவழிபாட்டில் முதலிடம் பெறுவது மலர்கள். மலர்களைக் கொண்டு இறைவனின் திருநாமத்தைக் கூறி, அர்ச்சனை செய்தால் நாம் வேண்டிய வரத்தை இறைவன் நமக்கு அருள்வார் என்பது முன்னோர் வழக்கு. எனவேதான் எந்தச் சமயமாக இருந்தாலும் பூக்கள் முதலிடம் பெறுகின்றன. இப்பூக்களைப் பற்றிய செய்திகள் பாசுரத்தில் இடம்பெற்றுள்ளன.

திருமால் விரும்பி உறையும் இடமாகத் தாமரை உள்ளது. திருமாலை அழைக்கும் போது தாமரைக் கண்ணா, செந்தாமரை போன்ற வடிவமுடையவனே என்கின்றனர் ஆழ்வார்கள். தாமரை மலர்களின் நிறத்தைத் திருமாலோடு ஒப்பிட்டும், மலர்களைக் கண்கள், கை, பாகம் போன்றவற்றோடு ஒப்பிட்டும் பாடியுள்ளனர். திருமகள் வாசம் செய்யும் மலராகத் தாமரை உள்ளது.

**திருமாலுக்குப் பூச்சூட்டுதல்**

பெரியாழ்வார், திருமொழியில் திருமாலுக்கு விதவிதமாகப் பலவகையான வண்ண மலர்களைச் சூட்டி மகிழ்கின்றார். கண்ணன் செய்த அற்புதங்களை எல்லாம் கூறி, அவரைப் பூச்சூட அழைக்கின்றார்.

**ஆனிரை மேய்க்க நீ போதி அருமருந்து ஆவதறியாய்**
**கானகம் எல்லாம் திரிந்து உன் கரிய திருமேனிவாட**
**பானையிற் பாலைப் பருகிப் பற்றாதார் எல்லாம் சிரிப்ப**
**தேனில் இனிய பிரானே! செண்பகப் பூச்சூட்ட வாராய்**

**(நா.தி.பி.பா. 182)**

அனைவரும் கேலி செய்யும் படி அவர்கள் வீட்டிலுள்ள பாலைக் குடித்து, உன் கரிய திருமேனிவாட, காடு முழுவதும் அலைந்து பசுக்களை மேய்க்க நீ போகிறாய், தேனைவிட இனிய தலைவனே, பிறவிப் பெருவினை தீர்க்கும் அருமருந்து நீயே என்பதை உணராது விளையாடுகிறாயே. உன் கூந்தலில் இந்தச் செண்பக மலரைச் சூட்டிக் கொள்ள வா என்கிறார்.

**மருவி மணம் கமழ்கின்ற மல்லிகைப் பூச்சூட்ட வாராய்**

**(நா.தி.பி.பா. 183)**

**பச்சைத் தமனகத்தோடு பாதிரிப் பூச்சூட்ட வாராய்**

**(நா.தி.பி.பா. 184)**

**மருவுந் தமனகமும் சீர்மாலை மணம் கமழ்கின்ற**

**(நா.தி.பி.பா. 185)**

திருவேங்கடத்தில் அருள் புரிபவனே நீ தினமும் மாளிகைகளுக்குப் போய் அங்குள்ள நங்கையர்களிடம் குறும்புத்தனம் செய்கின்றாய், நான் உனக்காக மருக் கொழுந்தும், தமனகமும், பாதிரிப் பூவையும் சேர்த்துக் கட்டிய மாலையை வைத்திருக்கிறேன். இதனைச் சூட்டிக் கொள்ள வா! என் நாதனே என அழைக்கின்றார்.

**புள்ளினை வாய் பிளந்திட்டாய், பொருகிரியின் கொம்பொசித்தாய்**
**கள்ள அரக்கியை மூக்கொடு காவலனைத் தலை கொண்டாய்**
**அள்ளி நீ வெண்ணெய் விழுங்க அஞ்சாதடியேன் அடித்தேன்**
**தெள்ளிய நீரில் எழுந்த செங்கழுநீர் சூட்ட வாராய் (நா.தி.பி.பா. 186)**

கொக்காக வந்த பகாசுரனின் அலகைப் பிளந்தவனே! குவலயாபீடம் என்ற யானையின் கொம்பைப் பிடுங்கியவனே! சூர்ப்பணகையின் மூக்கை அறுத்தவனே! அப்படிப்பட்ட உன்னை வெண்ணெய் தின்றதற்காக அடித்தேன், அதற்காகக் கோபப்படாமல் தெளிந்த நீரில் தோன்றிய செங்கழுநீர்ப் பூவைச் சூடிக்கொள்ள வாராய் கண்ணே என அழைக்கின்றார்.

**எருதுகளோடு பொருதி, ஏதும் உலோபாய் காண், நம்பி**
**கருதிய தீமைகள் செய்து கஞ்சனைக் கால் கொடு பாய்ந்தாய்**
**தெருவின் கண் தீமைகள் செய்து சிக்கென மல்லர்களோடு**
**பொருது வருகின்ற பொன்னே! புன்னைப் பூச் சூட்ட வாராய்**
**(நா.தி.பி.பா. 187)**

**இடந்திட்டிரணியன் நெஞ்சை இரு பிளவாக முன் கீண்டாய்**
**குடந்தைக் கிடந்த என்கோவே! குருக்கத்திப் பூச் சூட்ட வாராய்**
**(நா.தி.பி.பா. 188)**

**ஏமாற்றம் என்னைத் தவிர்த்தாய்! இருவாட்சிப் பூச் சூட்ட வாராய்**
**(நா.தி.பி.பா. 189)**

**உண்டிட்டு உலகினை ஏழும் ஓராலிலையில் துயில் கொண்டாய்**
**கண்டு நான் உன்னை உகக்கக் கருமுகைப் பூச்சூட்ட வாராய்**
**(நா.தி.பி.பா. 190)**

**செண்பக மல்லிகையோடு செங்கழுநீர் இருவாட்சி**
**எண்பகர் பூவும் கொணர்ந்தேன் இன்று இவை சூட்ட வா**
**(நா.தி.பி.பா. 191)**

பெரியாழ்வார் இப்பாடல்களில் எல்லாம் திருமாலின் அற்புத நிகழ்வுகளையும், மல்லர்களை அழித்ததையும், செய்த குறும்புத் தனத்தையும் எல்லாம் நினைத்து மகிழ்ந்து, அனைத்து சக்திக்கும் மேலான சக்தியாக விளங்குபவனே, இப்பூக்களை எல்லாம் உனக்குச் சூட்டி மகிழவேண்டும், நீ விரைவாக வருவாயாக எனத் தான் திருமாலின் மீது கொண்ட பக்தியை, அன்பினை வெளிப்படுத்தியுள்ளார்

**திருமாலின் புகழ்பாடும் மலர்கள்**

திருமகள் வீற்றிருக்கின்ற தாமரை மலர் எம்பிரானுக்கு விருப்பமானவை. எனவே செந்தாமரை கொண்டு நாள்தோறும் பெருமானின் திருவடிகளில் சமர்ப்பித்து வணங்குவோர் ஏழுபிறவியிலும் மன்னராகப் பிறந்து அரசனாக வாழும் அருளைப் பெறுவர் என்பதனை,

**கோவாகி மாநிலம் காத்து, நங்கண் முகப்பே**
**மாவேகிச் செல்கின்ற மன்னவரும் — பூமேவும்**
**செங்கமல நாபியான் சேவடிக்கே ஏழ்பிறப்பும்**
**தண்கமலம் ஏய்ந்தார் தமர் (நா.தி.பி.பா. 2250)**

என்னும் இப்பாடல் வழி தெளிவுபடுத்துகிறார்.

ஆதிசேடன் மீது பள்ளிகொண்டிருக்கின்ற எம்பெருமானை வணங்கிப் போற்றாதவர்கள் இல்லை. தாமரை மலரிலே தோன்றிய பிரம்மன், இந்திரன், நெற்றிக் கண்ணுடைய சிவன் என அனைவரும் நாள்தோறும் வைகுண்டம் சென்று வணங்குகின்றனர்.

தாமரை மலர் ஆகாயத்திலுள்ள சூரியனைக் கண்டு மலரும். அதுபோல எனது உள்ளம் தாமரையில் தோன்றிய திருமகள் மணாளனான எம்பெருமானையே கண்டு மலரும் என்கிறார் பொய்கையாழ்வார்.

**வல்லெயிற்றுக் கேழலுமாய் வாளெயிற்றுச் சீயமுமாய்**
**எல்லையில்லாத் தரணியையும் அவுணனையும் இடந்தான் ஊர்**

**எல்லியம்போது இருஞ்சிறை வண்டு எம்பெருமான் குணம்பாடி**
**மல்லிகை வெண் சங்கூதும் மதிள் அரங்கம் என்பதுவே**
**(நா.தி.பி.பா. 409)**

கோரைப் பற்களை உடைய வராகமாகத் தோன்றி, பூமியைத் தாங்கியும், தூணிலிருந்து இரணியகசிபுவை அழித்தவனுமான எம்பிரானின் புகழை வண்டுகள் மாலைப்பொழுதில் ஊர்புறத்திலே பாட, அதற்கேற்றாற் போல் மல்லிகைப் பூக்களாகிய வெண்சங்கை ஊதுவதைப் போல மெல்ல தன்னுடைய இதழ்களை விரிக்கின்றன. இந்நிகழ்வினைக் கண்ட பெரியாழ்வார் திருமாலின் திருப்புகழைப் பாடாதவர்கள் எவருமில்லை. அவனுடைய திருநாமத்தை ஓதியே அனைத்து உயிர்களும் இன்புறுகின்றன என்கிறார். அவருக்கு மல்லிகைப் பூக்கள் வெண்சங்காகக் காட்சி தருகின்றன.

**திருத்தலத்திலுள்ள மலர்கள்**

**செந்நெலொடு செங்கமலம் சேல்கயல்கள் வாளை**
**செங்கழு நீராடுமிடைந்து கழனி திகழ்ந்து எங்கும்**
**மன்னுபுகழ் வேதியர்கள் மலிவெய்தும் நாங்கூர்**
**வைகுந்த விண்ணகரம் வணங்கு மடநெஞ்சே (நா.தி.பி.பா. 1232)**

எம்பிரான் இனிது மகிழ்ந்து கோயில் கொண்டிருக்குமிடத்தில் சம்பாப்பயிரும், செந்தாமரைகளும், சேல், கயல், வாளை போன்ற மீன்களும் செங்கழுநீர்ப் பூக்களும் நெருங்கி வயல்களில் நிறைந்திருக்கும் பெருமையுடைய நாங்கூர் வைகுந்த விண்ணகரமாகும். அங்கு தாமரைப்பூக்கள் செங்கழுநீர்மலர்கள் அவற்றிலிருந்து தேன் பெருகி வெள்ளமாகப் பாய்வதால் குடியானவர்கள் தங்கள் வயல்மடையை அடைக்க, வற்றாத பெருஞ்செல்வம் கொண்ட அந்நகரின் தெய்வத்தை மட நெஞ்சே நீ வணங்கு என்கிறார் திருமங்கையாழ்வார்.

**நெகுவாய் நெய்தற் பூமது மாந்தி கமலத்தின்**
**நகுவாய் மலர்மேல் அன்னமுறங்கும் நறையூரே (நா.தி.பி.பா. 1493)**

பெரிய வாயையுடைய பூதனையைக் கொன்றவன், குவலயாபீடத்தின் ஆணவத்தை அழித்தவன் உறைகின்ற திருத்தலத்திலே அன்னங்கள் மலர்ந்த கருநெய்தல் மலரிலே தேனைப் பருகி தாமரை மலரிலே கண்ணுறங்கக் கூடிய திருநாரையூர் திருத்தலமாகும். அந்த அன்னங்களைப் போல அமைதியான வாழ்வைப் பெற இத்திருத்தலத்திலே வீற்றிருக்கக் கூடிய கேசவனைத் தொழுது வணங்கினால் அவனின் அருளைப் பெறவேண்டும் என்கிறார் ஆழ்வார்.

**வானார் வண்கமுகும் மதுமல்லிகையும் கமழும்**
**தேனார் சோலைகள் சூழ்திருவல்லவாழ் உறையும்**

**(நா.தி.பி.பா. 3321)**

வானளாவிய பாக்கு மரங்களும், தேன் நிறைந்த மல்லிகையும், மணம் வீசும் தேன் பொருந்திய தோட்டங்கள் சூழ்ந்த திருவல்ல வாழ் என்ற தலத்தில் உறையும் எம்பெருமானுடைய திருவடியைச் சென்று எப்பொழுது அடைவேனோ என்று வருந்துகிறார்.

யாதவர்களின் தலைவனான எம்பெருமான் அல்லிமலர்கள் மணம்வீசும் குளிர்ந்த சோலைக்குள் குயில்களின் பாட்டிற்கேற்ப ஆடும் மயில்கள் நிறைந்த பகலவனின் கதிர்கள் நுழைந்தறியாத சோலை சூழ்ந்த திருவல்லிக்கேணி என்ற திருத்தலத்தையும் உழவர்குல மங்கையர்கள் வயலில் இறங்கி, நெய்தல் மலரைத் தங்கள் விழிகளாகவும், சிவந்த அல்லி மலரைத் தங்களது வாயாகவும் கருதி, களை பறிக்காமல் கரையேறும் இடமான காழிச் சீராம விண்ணகரத்தையும் சென்று எம்பெருமானின் திருவடியை வணங்கி அவர் அருள் பெற வேண்டும் எனத் திருமங்கையாழ்வார் வேண்டுகிறார். இதனையே,

**“தண்நறு நெய்தல் தளைஅவிழ் வான்பூ**
**வெண்நெல் அரிநர் மாற்றினர் அறுக்கும்**
**மெல்லம் புலம்பன் மன்றஎம்**
**பல்இதழ் உண்கண் பனிசெய் தோனே”**[10]

என ஐங்குநூறு சுட்டுவது ஒப்பிடற் பாடலதாகும். இதில் குளிர்ச்சி பொருந்திய நெய்தல் மொட்டுக்கள் அவிழ்ந்து ஒளி பொருந்திய பூக்களைப் பூக்கும் நெய்தல் மலர்கள் நெல்வயலில் மலர்ந்துள்ளன. அவற்றை நீக்கி அறுவடை செய்கின்றனர் என மருத வளம் குறிப்பிடப்பட்டுள்ளது.

**பாலனாகி ஞாலமேழும் உண்டு பண்டு ஆலிலைமேல்**
**சால நாளும் பள்ளி கொள்ளும் தாமரைக் கண்ணன் எண்ணில்**
**நீலமார் வண்டுண்டு வாழும் நெய்தலந்தண் கழனி**
**ஏலம் நாறும் பைம்புறவின் எவ்வுள் கிடந்தானே**

**(நா.தி.பி.பா. 1062)**

ஊழிக்காலத்தில் ஏழுலகங்களையும் உண்டு, ஆலிலையில் சயனித்திருப்பவன் இப்போது நீலவண்டுகள் தேனை உண்டு வாழும் நெய்தல் மலர்கள் நிறைந்த குளிர்ந்த வயல்களும், வாசனை உடைய தோட்டங்களும் நிறைந்த திருஎவ்வுளூரில் சயனித்திருக்கின்றான் என ஒவ்வொரு திருத்தலத்தின் இயற்கை அழகினையும், அங்கு விரும்பி இருக்கின்ற திருமாலின் பெருமையினையும் கூறி அவனை வணங்கினால் நம் வாழ்வில் அனைத்து இன்பங்களையும் பெற்று நல்வாழ்வை அடைய முடியும் என்பதை இப்பாசுரங்களின் வழி, திருமங்கையாழ்வார் எடுத்துரைக்கின்றார்.

### திருமாலோடு மலரை ஒப்பிடுதல்

திருமாலின் நிறத்தோடும், கண்களோடும், வாயோடும் மலர்களை ஒப்பிட்டு ஆழ்வார்கள் பாசுரங்கள் பாடியுள்ளனர்.

### திருமாலின் மேனிநிறத்தோடு ஒப்பிடுதல்

கரு ஊதா நிறத்தில் இருக்கின்ற மலர்கள் அனைத்தும் திருமாலோடு ஒப்பிடப்படுகின்றன. ஏனெனில் அவை திருமாலின் மேனியின் நிறத்தை ஒத்துள்ளன. பேயாழ்வார் திருமாலைக் காயாம்பூப் போன்ற மேனியை ஒத்தவனே என்கிறார்.

**பூவையும் காயாவும் நீலமும் பூக்கின்ற**

**காவி மலரென்றும் காண் தோறும் — பாவியேன்**

**மெல்லாவி மெய்ம்மிகவே பூரிக்கும் அவ்வவை**

**எல்லாம் பிரானுருவே என்று (நா.தி.பி.பா. 2657)**

பூவைப்பூவையும், காயாம்பூவையும், கருநெய்தல் மலரையும், பூத்திருக்கும் செங்கழுநீர் மலரையும் காணும் போதெல்லாம் எம்பெருமானின் திருமேனியை நினைவுபடுத்துவதாக இருக்கின்றதே என்கிறார்.

**“எரிமலர் சினைஇய கண்ணை பூவை**

**விரிமலர் புரையும் மேனியை மேனித்**

**திருஞெமிர்ந்து அமர்ந்த மார்பினை”[11]**

செந்தாமரை மலர் போன்ற சிவந்த கண்களை உடையாய், காயாம்பூவை ஒத்த திருமேனியைக் கொண்டாய் எனப் பரிபாடலில் ஆசிரியர் இப்பூக்களின் நிறத்தோடு திருமாலின் நிறத்தை ஒப்பிட்டுப் பாடியுள்ளார். மேலும்

**“பறவைப் பூவைப் பூவி னோயே”[12]**

**“நின்னில் தோன்றிய நிரை இதழ் தாமரை”[13]**

காயாம்பூ ஒத்த நீலநிறம் உடையவனே எனவும் தாமரை மலர் போன்ற கண்களை உடையவனே எனவும் புலவர் கடுவன் இளவெயினனார் பரிபாடலில் சுட்டியுள்ளார்.

மங்கையரின் வளையல்களையும், நெஞ்சத்தையும், அடக்கத்தையும், தம்முடையதாகக் கொண்டு கருங்கடல், பூவைப்பூ, காயாம்பூ, கருநெய்தல், நீலமேகம் இவற்றைப் போலிருக்கும் இவர் யார் என்றேன் நான் அட்டபுஜகரத்தான் என்று கூறியதைத் திருமங்கையாழ்வார் எடுத்துரைக்கின்றார்.

**காவியொப்பார், கடலேயுமொப்பார் (நா.தி.பி.பா. 1125)**

**மையார் கடலும் மணிவரையும் மாமுகிலும்**

**கொய்யார் குவளையும் காயாவும் போன்று இருண்ட**

**மெய்யானை மெய்யமலையானைச் சங்கேந்தும்**

**மையானை கைதொழா கையல்ல கண்டாமே (நா.தி.பி.பா. 2016)**

மைபோன்ற கடலையும், நீலமணி போன்ற மலையையும் காளமேகத்தையும் பார்த்தவுடனையே பறிக்கத் தூண்டும் நீலோற்பலத்தையும், காயாம் பூவையும் போன்ற கருத்த தேகம் கொண்டவனைத் திருமெய்மலையில் குடியிருப்பவனை, பஞ்சசன்யத்தை ஏந்தியுள்ளவனைக் கைகூப்பி வணங்காத கைகள் கைகளே அல்ல எனக் கூறுகிறார் திருமங்கையாழ்வார்.

**“சுனையெல்லாம் நீலம் மலர, சுனைசூழ்**

**சினையெல்லாம் செயலை மலர, காய்கனி**

**உறழ, நனைவேங்கை ஒள்இணர் மலர,**

**மாயோன் ஒத்தஇன் நிலைத்தே”[14]**

எனப் புலவர் இளம்பெருவழுதியார் பரிபாடலில் இப்பூக்களைஎல்லாம் திருமாலோடு ஒப்பிட்டுப் பாடியுள்ளார்.

**காயாமலர் நிறவா! கருமுகில் போலுருவா! (நா.தி.பி.பா. 69)**

**கருவுடை முகில் வண்ணன் காயாவண்ணன்**

**கருவிளை போல் வண்ணன் கமல வண்ணத் (நா.தி.பி.பா. 509)**

கார்மேகத்தைப் போன்றும், காயாம்பூ போன்றும் நிறமுள்ளவனே, காக்கணம் பூ போன்ற பளபளப்பை உடையவனே, தாமரை மலர் போன்ற ஒளியுடையவனே, உன்னை உச்சி முதல் பாதம் வரை தீர்க்கமாகப் பார்க்கும் படி எனக்கு அருள்செய்ய வேண்டும்.

**கருவிளை ஒண்மலர்கள் காயாமலர்கள்**

**உருவொளி காட்டுகின்றீர் எனக்கு உய்வழக்கு ஒன்று உரையீர்**

**(நா.தி.பி.பா. 589)**

அழகிய காக்கணம் பூக்களே, காயாம்பூக்களே நீங்கள் திருமாலின் மேனி வண்ணத்தை நினைவுபடுத்துகிறீர்கள். பிரிவுத் துயரால் வருந்தும் எமக்கு அதிலிருந்து மீளும் வழியைச் சொல்லுங்கள். திருமகள் விளையாடும் இடமான திடமான தோள்களை உடைய திருமாஞ்சோலை அழகர் என் இல்லத்தில் புகுந்து எனது அழகிய வளையல்களைக் கவர்ந்து கொண்டான் என ஆண்டாள் திருமாலை எண்ணி உருகுகின்ற நிலையினைப் பாடியுள்ளார்.

**கார்கோடல் பூக்கள் கார்க்கடல் வண்ணன் என்மேல் உம்மைப்**
**போர்கோலம் செய்து பேரா விடுத்தவன் எங்குற்றான்**
**ஆர்க்கோ இனிநாம் பூசலிடுவது அணி துழாய்த்**
**தார்க்கோடும் நெஞ்சந் தன்னைப் படைக்க வல்லேன் அந்தோ**
**(நா.தி.பி.பா. 597)**

கறுத்த காந்தள் மலர்களே, கறுத்த கடல் போன்ற கண்ணபிரான் என்மேல் போர்தொடுக்க உங்களை அலங்கரித்து அனுப்பினானோ, அவன் எங்கே இருக்கிறான், நலிவுற்ற நான் யாரிடம் சென்று முறையிடுவேன். அழகிய துளசி மாலையைப் பார்த்தால் போதும், என் மனமும் கட்டுப்பாடிழந்து அதன் பின் ஓடுகிறதே, நான் என் செய்வேன் என ஆண்டாள் பக்தியின் மிகுதியால் புலம்புகின்ற நிலையினை இப் பாசுரத்தில் அழகாகப் பதிவுசெய்துள்ளார்.

**பொன்னிசூழ் அரங்க மேய பூவைவண்ண (நா.தி.பி.பா. 870)**

**புனைக் கொள்கா யாமேனிப்**
**பூந்துழாய் முடியார்க்கே (நா.தி.பி.பா. 3746)**

நீலோற்பமலர்கள் என்னதவம் செய்தனவோ தெரியவில்லையே. அவை கூடத் திருமாலின் நிறத்தை ஒத்திருக்கின்றன. அந்தப் பூ அடைந்த புண்ணியத்தைக் கூட நான் அடையவில்லையே எனக் கூறி நம்மாழ்வார் வருந்தி உரைக்கின்றார்.

**கொண்டல் தான் மால் வரைதான் மாகடல்தான் கூரிருள்தான்**
**வண்டறாப் பூவைதான் மற்றுத்தான் — கண்டநாள்**

**காருருவம் காண்தோறும் நெஞ்சோடும் கண்ணார்**

**பேருரு என் றெம்மைப் பிரிந்து (நா.தி.பி.பா. 2633)**

மேகங்கள், பெரிய மலைகள், சமுத்திரம், காரிருள், பூவைப்பூ இவற்றைக் காணுகையில் என்னுள்ளம் இவை கண்ணனுடைய அழகான வடிவம் என்று நினைக்கிறது. மற்றுமுள்ள குவளை மலர், குயில், மயில் போன்ற கருநீல உருவங்களையெல்லாம் என்னெஞ்சம் இவை எம்பெருமானுடைய அழகிய திருமேனி நிறத்தினை ஒத்தவை என்கிறது. எனவே, இவைகளைக் கண்டாலே திருமாலைக் கண்டதற்குச் சமமாகும் என்று மொழிகிறார் நம்மாழ்வார்.

இப்பூக்கள் அனைத்தும் திருமாலிடம் நெருங்கிய தொடர்புடையவை. திருமாலுக்கு விருப்பமுடையவைகளும் கூட அதனால் தான் அவைகளுக்கும் அவர் அருள் செய்து தன் நிறத்தையும் கொடுத்துள்ளார். அடியவர்களாகிய எங்களுக்கு இந்த வாய்ப்பினை அவர் கொடுக்கவில்லை என மனம் வருந்துவதை இப்பாடல் வழி வெளிப்படுத்தியுள்ளார்.

**கண்களோடு ஒப்பிடுதல்**

செந்தாமரை போன்ற கண்களையுடைய எம்பெருமானே என நம்மாழ்வார் செந்தாமரை மலரைத் திருமாலின் கண்களுக்கு ஒப்பிடுகிறார்.

**கண்பூங் கமலம் கருஞ்சுட ராடி வெண் முத்தரும்பி**

**(நா.தி.பி.பா. 2486)**

**காவியும் நீலமும் வேலும் கயலும் பலபலவென்று**

**ஆவியின் தன்மை அளவல்ல பாரிப்பு அசுரரைச் செற்ற**

**(நா.தி.பி.பா. 2544)**

சிங்கம் போன்ற நடையினை உடைய என் தலைவனின் விழிகளிரண்டும் ஒன்றுக்கொன்று துணையான தாமரைப் பூப் போல் இருக்கும். மேலும், செங்கழுநீர்ப்பூ, கருநெய்தல்பூ, வேல், கயல்மீன் முதலிய கண்களுக்கு உவமையாக கூறும் எதையும் இவள் விழிகள் வென்றுவிடுகின்றன. இவைகள் என்னை

மிகவும் துன்புறுத்துகின்றன எனக் காதலனாகிய கண்ணனை நினைத்து நம்மாழ்வார் பாடுகின்றார். மலர்கள் என்றாலே அழகு, அதைவிடத் திருமாலின் விழிகள் அழகுடையவை எனக் கூறியுள்ளார்.

**மையணைந்த குவளைக்கு தம் கண்களென்றும்**
**மலர்க்குமுதம் வாயென்றும் (நா.தி.பி.பா. 1180)**

உழவர் மகளிர் களை எடுக்க வயலில் இறங்கி, நெய்தல் மலரையும், குவளை மலரையும் தங்களது விழிகளாகவும், சிவந்த அல்லி மலரைத் தங்களது வாயாகவும் கருதி களைபறிக்காமல் கரையேறும் இடமான காழிச்சீராம விண்ணகரத்தைச் சென்றடையுங்கள் என்கிறார் திருமங்கையாழ்வார்.

**தார்க்கொடி முல்லைகளும் தவளநகை காட்டுகின்ற**
**கார்க்கொள் பிடாக்கள் நின்று கழறிச் சிரிக்கத் தரியேன்**
**ஆர்க்கிடுகோ? தோழி! அவன் தார் செய்த பூசலையே**

**(நா.தி.பி.பா. 588)**

தோழிகளே! போர் செய்வதையே தொழிலாகக் கொண்ட யானைகள் ஒன்றோடு ஒன்று போர் செய்வதை மறந்து விளையாடும் திருமாலிருஞ்சோலை மலையிலுள்ள அழகான தாழ்வாரங்களில் பூத்த கொடி முல்லைகள் எனக்கு அழகரின் வெளுத்த புன்னகை பூக்கும் பல்வரிசையை நினைவுபடுத்துகின்றன. சினைக் கொண்ட பெருங்கொடி அரும்புகள் என்னிடமிருந்து நீ தப்பிக்கமுடியாது என்று சொல்லுவதைப் போல் மலர்ந்து சிரிக்கின்றன என ஆண்டாள் ஒவ்வொரு பொருளும் திருமாலை நினைவுபடுத்துவதாகப் புலம்புகிறாள். மேலும் அல்லி, குவளை, ஆம்பல், நெய்தல் போன்ற பல மலர்களையும் திருமாலோடு ஒப்பிட்டு ஆழ்வார்கள் பாடியுள்ளனர். இப்பாடல்களில் ஆழ்வார்கள் தம்மைத் தலைவியாகவும் திருமாலைத் தலைவனாகவும் எண்ணி, காதல் நிலையில் இயற்கையில் தோன்றும் மலர்களைத் திருமாலோடு ஒப்பிட்டுத் தாங்கள் திருமால் மீது கொண்டுள்ள பக்தியினை வெளிப்படுத்தியுள்ளனர்.

**கனிகள் புனைவில் பக்தி நெறி**

திருமாலுக்கு விருப்பமான பழங்கள் பற்றியும், அப்பழங்கள் பழுத்திருக்கக்கூடிய திருத்தலங்கள் பற்றியும் ஆழ்வார்கள் பாடியுள்ளனர். கனிகளைத் திருமாலுக்கு ஒப்பிட்டும் பாசுரங்கள் பாடியுள்ளனர்.

கண்ணனை அழிக்க அசுரர்கள் வந்த பொழுது அவர்களைச் சுழற்றி மரத்தில் அடித்து, அதிலுள்ள கனிகளை எல்லாம் உதிரச் செய்த நிகழ்வினை ஆழ்வார்கள் பாடியுள்ளனர்.

**இனியார் புகுவா ரெழுநரக வாசல்**
**முனியாது மூரித்தாள் கோமின் — கனிசாயக்**
**கன்றெறிந்த தோளான் கனைகழலே காண்பதற்கு**
**நன்கறிந்த நாவலஞ் சூழ்நாடு (நா.தி.பி.பா. 168)**

விளாங்கனிகள் உதிரும்படி வத்தாசுரனைச் சுழற்றி வீசி இரண்டு அசுரர்ளையும் அழித்த எம்பெருமான் திருவடியினைக் காண்பதற்கான ஒரே வழி அவன் விரும்பிக் குடியிருக்கும் திருக்கோவலூர் என்பதை நான் அறிந்து கொண்டேன். எனவே யமதூதர்களே! என்மேல் கோபம் கொள்ளாது நரக வாயில்களை நன்றாகச் சார்த்தித் தாள் போட்டுப் பூட்டுங்கள்; திருமாலை வணங்குவோர் சொர்க்கத்திற்குச் சென்று திருமாலின் திருப்பாதத்தை அடைவர். எனவே அவர்களுக்கு நரகம் என்பதே கிடையாது என்பதைத் தெளிவாகப் பொய்கையாழ்வார் எடுத்துரைக்கின்றார்.

**தாழ்ந்து வரங்கொண்டு தக்க வகைகளால்**
**வாழ்ந்து கழிவாரை வாழ்விக்கும் — தாழ்ந்த**
**விளங்கனிக்குக் கன்றெறிந்து வேற்றுருவாய் ஞாலம்**
**அளந்தடிக்கீழ்க் கொண்ட அவன் (நா.தி.பி.பா. 2204)**

**கன்றினை வாலோலை கட்டிக் கனிகள் உதிர எறிந்து**
**(நா.தி.பி.பா. 159)**

பழங்களின் கணத்தினால் கிளை தாழ்ந்து கிடந்த விளாமரத்தின் கனிகள் உதிரும்படி, கன்றாக வந்த அசுரனைச் சுற்றி வீசி இருவரையும் முடித்த வைகுண்ட வாசனை வணங்கி, திருவருளைப் பெற்று, தங்கள் சக்திக்கேற்ப பூஜித்து வாழ்க்கையைக் கட்டுப்பாடோடு நடத்தி, காலத்தைக் கழிப்பவரை அருள்புரிந்து வாழவைப்பார் என்பதனை அடியவர்களுக்கு உணர்த்துகின்றார்.

**தேனுகன் ஆவி செகுத்து பனங்கனி**

**தான் எறிந்திட்ட தடம் பெரும் தோளினால் (நா.தி.பி.பா. 216)**

தேனுகாசுரன் ஆவிபோகும்படி பனைமரத்தில் அடித்துப் பனம்பழத்தைத் தோழர்களுக்குக் கொடுத்தான். இந்திரனின் ஆணையால் கொட்டிய மழையிலிருந்து கோவர்த்தனகிரியைக் குடையாகப் பிடித்துப் பசுக்களைக் காத்தவன் திருமாலே. அவனை வணங்குபவரை எந்தச் சூழ்நிலையிலும் அவன் காக்கக்கூடியவன். எனவே தான் திருமாலைக் காக்கும் கடவுள் என்று கூறுகின்றனர் எனப் பெரியாழ்வார் கண்ணனின் கருணையினைச் சுட்டுகிறார்.

**வாசியாகி நேசமின்றி வந்தெதிர்ந்த தேனுகன்**

**நாசமாகி நாள் உலப்ப நன்கைசேர் பனங்கனிக்கு**

**வீசிமேல் நிமிர்ந்த தோளின் இல்லையாக்கினாய் கழற்கு**

**ஆசையாம் அவர்க்கலால் அமரராகல் ஆகுமே (நா.தி.பி.பா. 831)**

கோவேறு கழுதை வடிவில் பகை உணர்வுடன் வந்து எதிர்த்த தேனுகாசுரனின் ஆயுளை முடிக்க, பனைமரத்தின் மேல் சுழற்றி அடித்து அவனது தோள் வலிமையை அழித்து பனம்பழத்தோடு பனம்பழமாய் உதிரச் செய்தவன் கண்ணன். அவனது திருவடிகளிலே ஆசை வைத்தவர்களுக்கு அல்லாது மற்றவர்களுக்கு அமர வாழ்வு என்பது கிடைப்பது அரிது என்பதை இதன்மூலம் தெளிவுபடுத்துகின்றார் திருமழிசையாழ்வார். இதனையே பரிபாடலில்,

**“பறியா நீள்இரும் பனைமிசைப்**

**பலபதி னாயிரம் குலைதரை உதிர்வபோல்”[15]**

உயர்ந்த பனைமரத்தின் உச்சியிலுள்ள எண்ணற்ற காய்கள் சிதறி உருள்வதைப் போல அசுரர்களின் தலைகள் சிதறி ஓடின எனக் கீரந்தையார் திருமால் அசுரர்களை அழித்த நிகழ்வினைச் சுட்டியுள்ளார்.

**திருமாலோடு கனிகளை ஒப்பிடுதல்**

**பைம்பொழில் வாழ்குயில்காள்! மயில்காள்! ஒண் கருவிளைகள்**
**வம்பக் களங்கனிகாள்! வண்ணப் பூவை நறுமலர்காள்!**
**ஐம்பெரும் பாதகர்காள்! அணி மாலிருஞ்சோலை நின்ற**
**எம்பெருமானுடைய நிறம் உங்களுக்கு என் செய்வதே**

**(நா.தி.பி.பா. 590)**

குயில்களே, மயில்களே, களாப்பழங்களே, காக்கணம் பூக்களே, காயாம் மலர்களே நீங்கள் ஐவரும் பெரும் பாதகர்கள். நீங்கள் மட்டும் அந்தத் திருமாலின் நிறத்தைப் பெற்றுள்ளீர். உங்களைக் கண்டால் எனக்கு வருத்தமாகவும், பொறாமையாகவும் இருக்கின்றது. உங்களுக்குக் கிடைத்த அந்தப் பேறு எனக்குக் கிடைக்கவில்லை. நான் என்ன பாவம் செய்தேனோ என ஆண்டாள் வருந்துகிறாள்.

இயற்கையாக அமைந்த இவற்றின் நிறத்தைக் கூடத் திருமாலோடு ஒப்பிட்டு ஆண்டாள் பாடியதன் மூலம் அவர் எந்த அளவிற்குத் திருமால் மீது பக்தியும், அன்பும் கொண்டுள்ளார் என்பதை அறியமுடிகிறது.

**செந்தொண்டை வாய்வந்து காணீரே (நா.தி.பி.பா. 36)**

**தொண்டையாய்க் கெண்டைக் குலமிரண்டாய் (நா.தி.பி.பா. 2576)**

**செந்தாமரைத்தடங்கண் செங்கனிவாய் எம்பெருமான் (நா.தி.பி.பா.2909)**

திருமாலின் சிவந்த வாயினைக் கோவைக் கனிக்கு ஒப்பாகக் கூறுகின்றனர் ஆழ்வார்கள். கோவைக்கனியை ஒத்த வாயுடையவனே எனத் திருமாலை அழைக்கின்றனர். கனியில் கூடத் திருமாலைக் காணுகின்றனர்.

**பார்த்த கடுவன் சுனைநீர் நிழற்கண்டு**

**பேர்த்தோர் கடுவனெனப் போந்து — கார்த்த**

**களங்கனிக்குக் கைநீட்டும் வேங்கடமே மேனாள்**

**விளங்கனிக்குக் கன்றெறிந்தான் வெற்பு (நா.தி.பி.பா. 2349)**

திருவேங்கட மலைச் சுனையின் நீரிலே கவிந்து பார்த்த குரங்கு, தன் நிழலைக் கண்டு இன்னொரு குரங்கு நீரில் இருந்து களாப்பழத்தைப் பறிப்பதாக நினைத்து கரிய களாப்பழத்தைத் 'தா' எனக் கை நீட்டும். அந்த இடம் முன்னொரு நாளில் விளாமரத்துக் கனி உதிரும்படி, கன்றாக வந்த வத்ஸாசுரனை வீசி அடித்த முகுந்தன் குடியிருக்கும் மலையாகும். திருமால் வீற்றிருக்கின்ற திருத்தலம் இத்தகைய செழிப்புடையது. அங்கே சென்று இறைவனைச் சரணடையுங்கள் என்கின்றனர் ஆழ்வார்கள்.

**தேன் கலந்த தண்பலங்கனி நுகர்தரு திருவயிந்திரபுரமே**

**(நா.தி.பி.பா. 1152)**

**பைம்பொனொடு வெண் முத்தம் பல புன்னை காட்ட**

**பலங்கனிகள் தேன் காட்ட, படவரவேரல்குல்**

**அம்பனைய கண் மடவார் மகிழ்வெய்தும் நாங்கூர்**

**அரிமேய விண்ணகரம் வணங்கு மடநெஞ்சே (நா.தி.பி.பா. 1240)**

குவளையாபீடம் என்னும் மதமுள்ள யானையின் கொம்பை முறித்தவன், ஊழிக்காலத்தில் ஏழு உலகங்களையும் காத்தவன், வீற்றிருக்கின்ற எல்லா இடங்களிலும் புன்னைமரங்கள் பூத்துக் குலுங்குகின்றன. பலாக்கனிகள் தேன் சொரிய, பாம்பின் படம் போன்ற அல்குலும், அம்பு போன்ற கண்களுமுடைய நங்கையர் களிக்கும் பெருமையுடைய இத்திருத்தலத்தைச் சென்று வணங்குவாயாக எனது மடமையான நெஞ்சே என்கிறார்.

**பருத்தெழு பலவும்மாவும் பழம் விழுந்தொழுகும் நாங்கை**

**கருத்தனே! காவளந்தண்பாடியாய்! களைகண் நீயே (நா.தி.பி.பா. 1300)**

தன்னை நம்பி வந்த சுக்கிரீவனுக்காகப் போர்மரபையும் மீறி வாலியை அழித்தார். அச்செயல் குற்றம் என்று அறிந்தும் தன்னை நம்பி வந்தவர்களைக் காக்கவே இராமபிரான் இச்செயல்களைச் செய்தார். தன்னை நம்பி வந்தவரைக் காக்கக்கூடிய எம்பெருமான் மிகப்பெரிய பலாமரங்கள், மாமரங்களின் கனிகள் கீழே விழுந்து தேன் வழியும் வளமான திருக்காவளம்பாடியில் உறைந்துள்ளார். இறைவா நீயே எனக்குப் பாதுகாப்பு எனத் திருமங்கை ஆழ்வார் கூறுகின்றார். திருமால் இருக்கின்ற திருத்தலத்தின் வளமையினை ஆழ்வார் சுட்டியதைப் போலவே ஐங்குறுநூற்றுப் பாடலில்,

**"சாரல் பலவின் கொழுந்துணர் நறும்பழம்**
**இருங்கல் விடர்அளை வீழ்ந்தென, வெற்பில்**
**பெருந்தேன் இறாஅல் சிதறும் நாடன்"**[16]

எனத் தலைவனுடைய நாட்டின் வளமை சுட்டப்பட்டுள்ளது.

**மாங்கனி நுகர்ந்த மந்தி வந்து வண்டிரிய வாழைத்**
**தீங்கனி நுகரும் நாங்கூர்த் திருமணிக்கூடத்தானே (நா.தி.பி.பா. *1291*)**

தூங்காத கடுமையான சினம் கொண்ட வலிமையுள்ள குவளையாபீடத்தின் கொம்பைமுறித்தவன், குருந்தமரமாக வந்த அசுரனை அழித்தவன், கொக்காக வந்த பகாசுரன் வாயைக் கிழித்தவன், காளையாகவந்த அரிட்டாசுரனை அழித்தவன், இப்போது விரும்பி இருக்கின்ற திருத்தலத்திலே மாம்பழங்களை உண்ட பெண்குரங்கு வண்டுகள் சிதறி ஓடும்படி வாழைப்பழங்களைத் தின்னும் வளமையான திருத்தலமாகும்.

**ஊற்றிடை நின்ற வாழையின் கனிகள்**
**ஊழ்த்து வீழ்ந்தன உண்டு மண்டி**
**சேற்றிடைக் கயல்களுகள திகழ்வயல்சூழ்**
**திருவெள்ளியங்குடியதுவே (நா.தி.பி.பா. *1343*)**

பயிரிடப்பட்ட வாழை மரங்களிலிருந்து இற்று உதிர்ந்த கனிகளை, சேற்றிடை வாழும் கயல்மீன்கள் உண்டு விளையாடுகின்றன. அந்த அளவிற்கு அதிக விளைச்சலைத் தரக்கூடிய சிறப்புடைய திருவள்ளியங்குடி திருத்தலமாகும்.

**“கோழிலை வாழைக் கோள்மிகு பெருங்குலை**
**ஊழுறு தீம்கனி, உண்ணுநர்த் தடுத்த**
**சாரற் பலவின்சுளையொடு ஊழ்படு**
**பாறை நெடுஞ்சுனை விளைந்த தேறல்”**[17]

வளமான இலைகளைக் கொண்ட வாழைமரம் பெரிய குலைகளை ஈன்று முதிர்ந்த கனிகளைத் தந்தது. அருகே மலையில் இனிமையான சுவையோடு கூடிய பலாப் பழங்கள் உள்ள மரங்கள் இருந்தன, பலாமரங்களில் இருந்து அருகில் உள்ள நீண்ட சுனையில் தேன் வடிந்து கொண்டே இருக்கிறது. அத்தகைய ஊரினை உடைய தலைவன் என அகநானூற்றில் சுட்டப்பட்டுள்ளது. சங்க இலக்கியத்தில் தலைவனின் பெருமையை உணர்த்த அவனுடைய நாட்டின் வளமை சுட்டப்பட்டுள்ளதைப் போல ஆழ்வார் திருமாலின் பெருமையினை அவர் வீற்றிருக்கக் கூடிய திருத்தலத்தின் வழியே எடுத்துரைத்து அங்கு சென்று அவரது அருளைப் பெறுமாறும் கூறுகின்றார்.

**நாவல் பழம் கொண்டு வைத்தேன் (நா.தி.பி.பா. 150)**

**கொல்லையில் நின்றும் கொணர்ந்து விற்ற**
**அங்கொருத்திக்கு அவ்வளை கொடுத்து**
**நல்லன நாவல் பழங்கள் கொண்டு,**
**நானல்லேன் என்று சிரிக்கின்றானே (நா.தி.பி.பா. 211)**

திருமாலுக்கு மிகவும் பிடித்தது நாவல்பழம் என்கிறார் பெரியாழ்வார். அதற்காக தந்திரக்காரனாகிய கண்ணன் ஒருமுறை நான் இல்லாத நேரம் பார்த்து என் மகள் கை வளையலைக் கழற்றிக் கொண்டு போய் நாவல்பழம் விற்றுக் கொண்டிருந்த ஒருத்தியிடம் அந்த வளையலைக் கொடுத்து நாவல் பழங்கள்

வாங்கி இருக்கிறான். கேட்டால் நானில்லை எனச் சிரிக்கின்றான் எனக் கோபியர்கள் கூறுவதைக்கேட்டு கண்ணனின் குறும்புத்தனத்தை நினைத்து மகிழ்கின்றார் பெரியாழ்வார்.

**கரண்டமாடு பொய்கையுள் கரும்பனைப் பெரும்பழம்**
**புரண்டு வீழ வாளைபாய் குறுங்குடி நெடுந்தகாய் (நா.தி.பி.பா..813)**

நீர்க்காக்கைகள் இருக்கும் பொய்கையில் கரிய பெரிய பனம்பழங்கள் நீரிலே வீழ்ந்து புரள, வாளை மீன்கள் அப்பனம்பழத்தை நீர்க்காக்கைகள் என்றெண்ணிப் பாயும் திருக்குறுங்குடியிலே எழுந்தருளியுள்ள திருவிக்ரமனை வணங்க வேண்டும் என்கிறார் திருமழிசையாழ்வார்.

திருமால் வீற்றிருக்கக்கூடிய தலங்களிலே அனைத்து வளமும், செல்வமும் நிறைந்து காணப்படும். எனவே அத்துறைகளிலே சென்று இறைவனை வணங்கினால் நம்வாழ்வில் அனைத்து செல்வங்களையும், வளங்களையும் பெற்று வாழ முடியும் என்பதை ஆழ்வார்கள் இப்பாசுரங்கள் வழி உணர்த்துகின்றனர்.

**தொகுப்புரை**

திருமால் மீது அதிக அன்பும், பக்தியும், பற்றும் கொண்ட ஆழ்வார்கள் எந்த நிலையிலும், எந்தச் சூழ்நிலையிலும், எப்பொழுதும் திருமாலை மறவாது அவன் நினைவில் இருப்பவர்கள். பிரகலாதன் கூறியது போல இறைவன் தூணிலும் இருக்கிறார் துரும்பிலும் இருக்கின்றார் என்பதை ஆழ்வார்கள் தெளிவாகப் பதிவு செய்துள்ளனர். உலகைப் படைத்தவன் இறைவன். உலகிலுள்ள உயிரினங்கள் இயற்கை என அனைத்துமே அவனால் உருவாக்கப்பட்டவை. எனவேதான் ஆழ்வார்கள் தாங்கள் காண்கின்ற அனைத்திலுமே திருமாலைக் காண்கின்றனர்.

இறைவனால் படைக்கப்பட்ட இயற்கையை இறைவனாகவே காண்கின்றனர். இயற்கைகளுள் ஒன்றாகிய தாவரங்களிலும் இறைவனைக் காணமுடியும் என்பதைத் தம் பாசுரங்களில் வெளிப்படுத்தியுள்ளனர். தாவரங்கள், மரம், செடி, கொடி, மலர்கள், கனிகள் என அனைத்திலும் திருமாலைக் காண்கின்றனர். அவற்றின் நிறங்களைத் திருமாலோடும் ஒப்பிட்டும் காண்கின்றனர்.

திருமால் வீற்றிருக்கக்கூடிய அனைத்துத் திருத்தலங்களும் அந்த வைகுண்டத்தைப் போன்றதே. அத்தகைய திருத்தலங்களில் அமைந்துள்ள விலங்குகள், பறவைகள், மரம், செடி, கொடி, நீர்நிலை அனைத்தும் சிறப்புடையதே என்பதை ஆழ்வார்களின் பாசுரங்கள் நன்கு வெளிப்படுத்துகின்றன. எம்பெருமான் மீதுள்ள பற்றினை அவர்கள் வெளிப்படுத்தும்போது மாதவன் வீற்றிருக்கக்கூடிய திருத்தலங்களின் பெருமைகளை உணர்த்தவும், அத்திருத்தலத்தின் சிறப்பை வெளிப்படுத்தவும் அங்கு அமைந்திருக்கக்கூடிய வானளாவ ஓங்கி உயர்ந்து வளர்ந்துள்ள மரங்களை, சோலைகளை எல்லாம் குறிப்பிட்டு இதற்குக் காரணம் அங்குள்ள திருமாலே, எனவே அஃறிணை உயிரான தாவரத்திற்கே அவன் அருள்புரியும்போது, அத்தலத்திற்குச் சென்று அவனை வழிபடுவோரை அவர் எப்பொழுதும் கைவிடமாட்டார் என்கின்றனர் ஆழ்வார்கள். வேங்கை, நெல்லி, குரவம், பாக்கு, சுரபுன்னை, தென்னை, செண்பகம், வாழை போன்ற மரங்கள் பற்றிய செய்திகள் பாசுரங்களில் இடம் பெற்றுள்ளன.

மரம், செடி, கொடி என அனைத்திலும் இருக்கக்கூடியவர் திருமால். உயிர்கள் அனைத்தும் அவர் படைத்தது. அவர் எல்லாவுமாக விளங்குகின்றார். உயிர்ப் பாகுபாடு இல்லாதவர் என்பதை அனைவருக்கும் உணர்த்தவே பறவையை வாகனமாகவும், மலரை அமரும் இடமாகவும், பாம்பைப் படுக்கையாகவும், துளசியை மாலையாகவும் கொண்டுள்ளான் என்பதை ஆழ்வார்கள் பாசுரங்களில் தெளிவுபடுத்துகின்றனர்.

தாவரங்கள் வழி வெளிப்படுத்தும் போது மரமாக வந்த அசுரர்களைத் திருமால் அழித்த நிகழ்வினைச் சுட்டியுள்ளனர். திருமால் வீற்றிருக்கிற திருத்தலத்தில் உள்ள மரங்கள் ஓங்கி வானளாவ உயர்ந்து வளர்ந்துள்ளன. சோலைகள் நிறைந்த இயற்கை அழகையும் பெற்றுள்ளன. இத்தகைய வளமைக்கு காரணமாகிய திருமாலின் திருத்தலங்களுக்கு எல்லாம் சென்று இறைவனை வழிபடுங்கள் என்று ஆழ்வார்கள் வலியுறுத்துகின்றனர்.

திருமால் மரமாக வந்த அசுரர்களை அழித்ததையும், சாபத்தால் மரமாக நின்றவர்களுக்கு விமோசனம் அளித்த நிகழ்வுகளையும் எடுத்துரைத்து, அதன் மூலம் தன்னை வணங்கியவர்களுக்குத் துன்பம் வரும்போது திருமால் விரைந்து வந்து காப்பார் என்பதனைப் பாசுரங்கள் வாயிலாக எடுத்துரைத்துள்ளனர்.

திருவிண்ணகரம், திருவள்ளியங்குடி, திருநறையூர் போன்ற சிறப்புடைய திருத்தலங்களுக்கு எல்லாம் சென்று இறைவனை வழிபடுவோரை அவன் என்றும் காத்தருள்வான் எனப் பொருள் தேடி அலையும் ஒரு பாணனை, பரிசில் பெற்ற பாணன் வழிகூறி ஆற்றுப்படுத்துவதைப் போல திருமால் அருள்பெற்ற ஆழ்வார், அவனது அருள் கிடைக்காது தறிகெட்டு அலையும் மனித மனதை எம்பிரானின் திருத்தலப் பெருமைகளையெல்லாம் எடுத்துரைத்து அங்கே சென்று அவனது அருளைப் பெற்றுக்கொள்ளுங்கள் என ஆற்றுப்படுத்துகின்றார்.

திருமால் விரும்பி அணிகின்ற மாலை துளசி மாலை. துளசி பொதுவாக மருத்துவக்குணம் கொண்டது. அதிகக் குளிர்ச்சியுடையது. செடியாக இருந்தாலும் அதையும் விரும்பக் கூடியவன் இறைவன் என்பதை உணர்த்தவே திருமால் துளசி மாலை அணிந்துள்ளார். திருமால் விரும்பி அணிவதால் துளசிச் செடிக்கு திருமாலின் அருள் முழுமையாக உள்ளது. எனவே திருமாலின் அடியவர்களான ஆழ்வார்கள், அவன் அருள் கிட்டாத நிலையில், அவன் விரும்பி அணிந்து கொள்கின்ற அந்தத் துளசி மாலையை தாருங்கள், இல்லையேல் துளசி முளைத்த மண்ணையாவது தாருங்கள் அதன் மூலமாகவாவது திருமாலைக் கண்டுகொள்கிறோம் என்கின்றனர். அவர்கள் திருமால் மீது வைத்துள்ள அளவிலாத அன்பினை அவர்களது பாசுரங்கள் நன்கு வெளிப்படுத்துகின்றன. துளசியை வணங்கினாளல் திருமாலை வணங்கியதன் பலன் கிட்டும், எனவே மனிதர்கள் துளசியிடம் இருந்தும் கூட திருமாலின் அருளைப் பெற்றுக்கொள்ளுங்கள் என வலியுறுத்துகின்றனர்.

திருமால் வீற்றிருக்கக்கூடிய திருத்தலத்தில் சம்பாப் பயிர்களும், கரும்பு, பாக்கு, வாழை போன்ற அனைத்தும் பயிரிடப்பட்டு செழிப்புடன் விளங்கும். அங்கே எப்பொழுது பஞ்சம் இல்லை. வறட்சி இல்லை என்று கூறும் அளவிற்குத் தானிய

வகைகளும், நீர்நிலைகளும் செழிப்புற்று இருந்தன. அதற்குக் காரணம் எம்பெருமானே என்கின்றனார் ஆழ்வார்கள்.

இறைவழிபாட்டில் முதலிடம் பெறுவது மலர்கள். மலர்களைக் கொண்டு இறைவனின் திருநாமத்தைக் கூறி, அர்ச்சனை செய்தால் நாம் வேண்டிய வரத்தை இறைவன் நமக்கு அருள்வார் என்பது முன்னோர் வழக்கு. எனவே தான் எந்தச் சமயமாக இருந்தாலும் பூக்கள் முதலிடம் பெறுகின்றன.

பூக்களைக் கொண்டு இறைவனை வணங்கினால் அவன் அருள் முழுமையாகக் கிட்டும் என்பது நம்பிக்கை. அந்த வகையில் திருமாலுக்கு விருப்பமான மலராகத் தாமரை கருதப்படுகிறது. ஆழ்வார்களின் பாசுரங்களில் தாமரை பற்றிய செய்திகள் அதிகமாக இடம்பெற்றுள்ளன. ஆழ்வார்கள் திருமாலை, செந்தாமரைக் கண்ணா, தாமரையின் நிறத்தை உடையவனே எனவும் திருமாலின் கை, வாய், பாதம் போன்றவற்றோடு மலர்களை ஒப்பிட்டும் பாடியுள்ளனார். திருமகள் போற்றும் மலராகத் தாமரை உள்ளது. திருமகள் வீற்றிருக்கின்ற தாமரையைக் கொண்டு எம்பிரானை வழிபடுவோர், ஏழு பிறவிகளிலும் மன்னராகப் பிறந்து அரசாளும் நிலையைப் பெறுவர் எனப் பூதத்தாழ்வார் குறிப்பிட்டுள்ளார்.

மாலைப் பொழுதில் மலர்கள் மலர்ந்து, அதனை வண்டுகள் மொய்க்கின்ற இயல்பான நிகழ்வினை ஆழ்வார்கள், வண்டுகள் திருமாலின் புகழைப்பாடுவதாகவும் அதற்கு ஏற்றாற் போல வெண்சங்கிற்கு ஒப்பான மல்லிகைப் பூக்கள் தன் மொக்குகளை மலரச் செய்வதாகவும் பாடியுள்ளனர். உலக உயிர்கள் அனைத்தும் திருமாலை எண்ணியே இன்புறுகின்றன என இவ்வியற்கை நிகழ்வினை அழகாகப் பதிவுசெய்துள்ளனர்.

பூவைப்பூ, காயாம்பூ, கருநெய்தல்பூ, செங்கழுநீர்ப்பூ, காக்கணம் இவைகள் எல்லாம் திருமாலின் திருமேனியின் நிறத்தை ஒத்துள்ளன. ஆகையால் இவற்றை எல்லாம் காணும் போது திருமாலையே காண்பது போல உள்ளது. கருநீல வண்ணம் கொண்ட கார்மேகம், குயில், மயில், கருங்கடல் என இவற்றில் எல்லாம் திருமாலையே காண்கின்றனர் ஆழ்வார்கள். எங்கும் எதிலும் திருமாலையே

காண்கின்ற ஆழ்வார்களின் உண்மையான பக்தியினை அவர்களின் ஒவ்வொரு பாசுரத்திலும் அறியமுடிகிறது.

திருமாலுக்கு விருப்பமான பழங்கள் பற்றியும், அப்பழங்கள் இருக்கக்கூடிய திருத்தலங்கள் பற்றியும் ஆழ்வார்கள் பாடியுள்ளனர். கனிகளைத் திருமாலுக்கு ஒப்பிட்டும் பாசுரங்கள் அமைத்துள்ளனர். திருமால் வீற்றிருக்கக்கூடிய தலங்களிலே அனைத்து வளமும், செல்வமும் நிறைந்து காணப்படும். எனவே அத்துறைகளிலே சென்று இறைவனை வணங்கினால் நம்வாழ்வில் அனைத்துச் செல்வங்களையும், வளங்களையும் பெற்று வாழ முடியும் என்பதை ஆழ்வார்கள் பாசுரங்கள் வழி உணரமுடிகிறது.

## சான்றெண் விளக்கம்

1. அ.ச.பக்தி வேதாந்தஸ்வாமி (ஆ), இஸ்கான் மாத இதழ், கிருஷ்ண அமுதம், ஜனவரி 2020, ப.18
2. து. லலிதா, பெரியதிருமொழி, ப.49
3. ச. வே. சுப்பிரமணியன் (ப.ஆ), சங்க இலக்கியம், நற்றிணை, பா.257
4. ச. வே. சுப்பிரமணியன் (ப.ஆ), சங்க இலக்கியம், பரிபாடல் திரட்டு, பா.1.7 — 17
5. நச்சினார்க்கினியர் (உ.ஆ), சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், பா — 31
6. வீரமாமுனிவர், தேம்பாவணி, நாட்டுப்படலம், பா — 25
7. ச.வே. சுப்பிரமணியன் (ப.ஆ), பன்னிருதிருமுறை, திருஞானசம்பந்தர், திருக்கோவலூர், பா — 2
8. ச. வே. சுப்பிரமணியன், (ப.ஆ) சங்க இலக்கியம், கலித்தொகை, பா — 41
9. மேலது, நற்றிணை, பா.28
10. மேலது, ஐங்குறுநூறு, பா.190
11. மேலது, பரிபாடல், பா.1.6 — 13
12. மேலது, பா.3.73 — 76
13. மேலது, பா.4.57 — 65
14. மேலது, பா.15.30 — 45
15. மேலது, பா.2.36 — 51
16. மேலது, ஐங்குறுநூறு, பா.214
17. மேலது, அகநானூறு, பா.2

# இயல் — 5

## பிற இயற்கைப் பொருட்கள் புனைவில் பக்திநெறி

கடவுள் படைப்பில் அற்புதமானது இயற்கை. இயற்கை என்ற ஒரு சொல்லுக்குள் அனைத்து உலகமும் அடங்கியுள்ளது. உலகம் முழுமையும் இயற்கை மயமானது. உலகிலுள்ள ஒவ்வொரு உயிரினங்களின் வாழ்விலிருந்தும் இயற்கையைப் பிரித்து எடுத்தால் உயிரினங்கள் வாழ முடியாது. ஒவ்வொரு உயிரினமும் இயற்கையைச் சார்ந்துதான் வாழ்கின்றன. இயற்கையை ஐம்பூதங்களாக வகுத்துள்ளனர். இதில் எது இல்லாவிட்டாலும் மனிதனால் வாழ முடியாது. அதே போன்று எவையேனும் அதிகரித்தாலும் அதனை மனிதனால் தாங்கிக் கொள்ள முடியாது. எனவே தன்னை மீறிய சக்தியான ஐம்பூதங்களையும் மனிதன் கடவுளாக வணங்குகின்றான்.

இயற்கையைச் சார்ந்த மனிதனின் வாழ்வை இறை ஆற்றல் மீது திருப்புவதற்காகத் திருமாலின் தொண்டர்களான ஆழ்வார்கள் அந்த இயற்கையின் வழியில் திருமாலின் அருளையும், அன்பையும் மக்களுக்குப் புரிய வைத்தனர். இயற்கையைப் படைத்தவன் இறைவன். இயற்கை இறைவனுக்குள் அடங்கும். ஆனால் இறைவன் இயற்கைக்குள் அடங்கான் என்ற தத்துவத்தை அடிப்படையாகக் கொண்ட ஆழ்வார்கள் அத்தத்துவத்தை மனிதர்களுக்குப் புரிய வைத்தனர். ஐம்பூதங்களின் வழியாகவும் பிற இயற்கைப் பொருள்களாகிய சந்திரன், சூரியன், மழை, மலை போன்றவற்றின் வழியாகவும் ஆழ்வார்கள் திருமால் மீது கொண்ட பக்தியினைப் பாசுரங்களில் பதிவு செய்துள்ள பாங்கை ஆராய்ந்து விளக்கும் விதமாக இவ்வியல் அமைகிறது.

### இயற்கை

இயற்கை என்பது இயல்பான பொருட்தன்மை உடையது. மனித சக்தியாலன்றி உலகில் தானே தோன்றிய பொருட்கள் அனைத்தும் இயற்கை எனப்படும். ஒவ்வொரு பொருளுக்கும் ஓர் இயல்பு உண்டு. நீர்க்குத் தண்மையும், தீக்கு வெம்மையும், காற்றுக்கு வலிமையும், நிலத்திற்கு அகலமும், வானத்திற்கு எல்லையும் இயல்பாகும். இதனையே தொல்காப்பியரும்,

**“நிலம்நீர் தீவளி விசும்பொடு ஐந்துங்**

**கலந்த மயக்கம் உலகம்”**[1]

எனக் கூறியுள்ளார்.

**இயற்கைப் பொருள்கள்**

நிலம், நீர், காற்று, ஆகாயம், நெருப்பு இவற்றை ஐம்பூதங்கள் என்பர். இவற்றின் தொகுப்புகளில் உருவானதே இவ்வுலகம். இவற்றில் ஒன்று இல்லாவிட்டாலும் உலகம் முழுமை பெறாது. எல்லாவற்றிற்கும் மூலமாக விளங்குவது பஞ்சபூதங்களே. பஞ்சபூதங்களை முன்னோர்கள் வழிபட்டனர். பஞ்சபூதங்கள் ஒவ்வொன்றையும் ஒரு கடவுளாகக் கருதினர்.

நிலம் – பூமாதேவி

நீர் – வர்ணதேவன்

காற்று – வாயு பகவான்

நெருப்பு – அக்னிதேவன்

ஆகாயம் – இந்திரன்

எனத் தனித்தனியே வணங்கினர். அவ்வாறே இயற்கையின் படைப்பாகிய சூரியனையும், சந்திரனையும் வணங்கினர்.

உலகையே வாழவைக்கும் தெய்வமாக சூரியன் விளங்கினார். இந்திரனைத் தலைவனாகக்கொண்டு, சந்திரதேவன், வாயுதேவன், அக்னிதேவன், வர்ணதேவன் போன்ற நவக்கிரகங்களும் இந்த உலகினைக் காத்து வந்தனர். இவர்களையே தேவர்கள் என்பர். இத்தேவர்கள் அனைவருக்கும் மூலப்பொருளாக விளங்குபவன் திருமாலே என்கின்றனர் ஆழ்வார்கள்.

**பாசுரங்களில் இடம் பெற்றுள்ள இயற்கைப் பொருட்கள்**

ஐம்பூதங்கள், மலை, சந்திரன், சூரியன், மழை போன்றவற்றின் வழியாக ஆழ்வார்கள் திருமால் மீதுள்ள பற்றினை எடுத்துரைத்துள்ளனர்.

**ஐம்பூதங்கள்**

**நிலம் —** நிலத்தைப் பூமாதேவி என்பர். நிலத்தில் எந்தக் காரியம் செய்யத் தொடங்கினாலும் பூமாதேவியை வணங்கிய பின்புதான் செய்வது வழக்கம். வீடுகட்ட அஸ்திவாரம் தோண்டுதல், கிணறு வெட்டுதல், விவசாயம், உழுதல் போன்ற எந்தக் காரியம் செய்தாலும் நிலமகளுக்குச் செய்ய வேண்டிய சடங்குகளைச் செய்து பின்பு தான் அக்காரியத்தைச் செய்ய வேண்டும் என்பது நம் முன்னோர் வகுத்த சடங்கு முறையாகும். இச்சடங்குகளை முறையாகச் செய்யும் போது, அந்த வேலைகளில் தடங்கல் ஏதுமில்லாது விரைவாக முடியும் என்று நம்பினர். பூமி பூசை செய்யாது எந்த வேலையும் நடைபெறாது. இன்றைய காலகட்டத்திலும் அச்சடங்கு முறை பின்பற்றப்படுகிறது. பொறுமைக்கு உதாரணமாகப் பூமியைக் கூறுவர். திருவள்ளுவரும்,

**“அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை**
**இகழ்வார்ப் பொறுத்தல் தலை”**[2]

என நிலத்தின் பொருமையினைப் புகழ்ந்துள்ளார்.

“பண்டைய காலத்தில் பூமாதேவி என்று மண்ணைக் கடவுளாக வழிபட்டனர். சீதா பிராட்டியும் நிலமகள் என்னும் பெயர் பெற்றாள்.

**மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம் வைகலும்**

என்று திருஞான சம்பந்தர் தம் தேவாரப்பதிகத்தில் நல்ல முறையில் வாழும் வழியைக் கூறியுள்ளார். வள்ளுவரும் நிலத்தின் பொறுமையையும் பெருமையையும் விளக்குவதற்காக அதைப் பல குறட்பாக்களில் சுட்டியுள்ளார் என்பதை இரா.நாராயணன் குறிப்பிட்டுள்ளார்.”[3]

**நீர் —** நீருக்கு அதிபதி வர்ணதேவன் ஆவார். “நீர் இன்றி அமையாது உலகு” என்பது வள்ளுவர் வாக்கு. இப்பிரபஞ்சம் செழித்து வாழ நீர் இன்றியமையாத ஒன்றாகும். நீர் இல்லாவிட்டால் இவ்வையகம் இருக்காது.

உலகிற்கு வாழ்வாதாரமாக விளங்குவது நீர். நீர் இல்லாவிட்டாலும் உலகில் அழிவு ஏற்படும். நீர் அதிகமானாலும் அழிவு ஏற்படும். மழை வேண்டி பூசை செய்யும் பழக்கம் அக்காலம் முதல் இன்றுவரை கிராமங்களில் தொடர்ந்து காணப்படுகிறது. இயற்கை என்றாலே அங்கே நீர் தான் முதலிடம் வகிக்கின்றது. நீர் அதிகமாக உள்ள இடங்கள் பசுமையாக, இயற்கையாக விளங்குகின்றன. அதுவே இயற்கை அழகு எனப்படும். நீர் அதிகமாக இருந்தால் விவசாயம் தழைக்கும். உலகில் உள்ள அனைத்து உயிரினங்களும் இன்புற்று வாழும். ஒருவனைத் தவறு செய்யத் தூண்டுவது வறுமை. நீரின் மூலம் விவசாயம் செழித்தால் வறுமை வராது. தவறுகளும் நடக்காது. இதனால் ஒரு சிறந்த சமுதாயமே உருவாகும். எனவே, அனைத்திற்கும் நீரே ஆதாரமாக அமைந்துள்ளது.

மழை பெய்ய உலகம் வாழ்ந்து வருவதால், மழை உலகில் உயிர்களுக்கு அமிழ்தம் என்று உணரத்தக்கதாகும். உண்பவர்க்கு, தக்க உணவுப் பொருட்களை விளைவித்துத் தருகிறது. பருகுவதற்குத் தானும் ஒரு பொருளாகி நீராக இருக்கிறது. மழையின் சிறப்பினை இளங்கோவடிகள்,

**“மாமழை போற்றுதும் மாமழை போற்றுதும்”**[4]

என்று கூறியுள்ளார்.

மழை பொய்க்குமானால், கடல் சூழ்ந்த அகன்ற உலகில் பசி உயிர்களை வருத்தும். மழை குன்றிவிட்டால், உழவர் ஏர் கொண்டு உழமாட்டார். இக்கருத்தை வள்ளுவர்,

**“ஏரின் உழாஅர் உழவர் புயலென்னும்**
**வாரி வளங்குன்றிக் கால்”**[5]

என்று கூறியுள்ளார்.

வானிலிருந்து மழைத்துளி விழவில்லை என்றால், உலகில் ஓரறிவு உயிராகிய பசும்புல்லின் தலை காண முடியாது. மழை பெய்யாவிட்டால் இவ்வுலகத்தில் வானோர்க்கு நடக்கும் திருவிழாவும் நடைபெறாது. இதனை,

**“சிறப்பொடு பூசனை செல்லாது வானம்**

**வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு”**[6]

என்ற குறள் உணர்த்தும்.

**காற்று** — காற்றினை வாயு பகவான் என்பர். காற்று மெதுவாக வீசும் போது அது சுகத்தைத் தரும். அதே சமயம் அது வேகமாக வீசும்போது நம்மால் அதன் வேகத்தைத் தாங்கிக் கொள்ள இயலாது. காற்று ஒரு நொடிப் பொழுதிற்குள் அனைத்தையும் அழிக்கும் வல்லமை வாய்ந்தது. உயிரினங்கள் உயிர் வாழத் தேவையானது காற்று. காற்று பிராண சக்தியாகும். நீர் இன்றி உயிரினங்கள் சிலகாலம் உயிர் வாழ முடியும். ஆனால் காற்று இல்லாது ஒரு நிமிடம் கூட இருக்க முடியாது. உலகத்தையே இயக்கிக் கொண்டிருக்கும் மிகப் பெரிய சக்தி காற்று ஆகும்.

“திருக்குறளில் வளி என்னும் சொல் காற்றுக்கு ஆளப்பட்டிருக்கிறது. தாவரம் மனிதனுக்குத் தேவையான உயிர் வளியை வெளியிடுகிறது. மூக்கின் வழி சுவாசம் நடைபெறுகிறது. மனிதன் வெளியிடும் காற்று தூய்மையற்றதாக இருக்கும். காற்றுள்ள இடத்தில் வாழ்தல் நலம். காற்றுள்ளபோதே தூற்றிக்கொள் என்ற முதுமொழி காற்றின் சிறப்பை விளக்குகிறது. திருமால் காற்றின் வடிவாய் விளங்குகிறான் என்பதை,

**வானாகி மண்ணாய் மறிகடலாய் மாருதமாய்த்**

**தேனாகிப் பாலாந் திருமாலே”**[7]

என்று தண்டியலங்காரப் பாடல் விளக்குகிறது என்பதனை இரா.நாராயணன் சுட்டியுள்ளார்.

**ஆகாயம் —** ஆகாயம் பல அற்புதங்கள் நிறைந்தவை. காலைக் கதிரவன். இரவுச் சந்திரன், நட்சத்திரங்கள், மழைமேகங்கள், வானவில், இடிமுழக்கம், மின்னல் போன்ற பல விந்தையான நிகழ்வுகள் அங்கே தோன்றுகின்றன. காலைக் கதிரவன் உலகையே ஆட்சி செய்யக் கூடியவன். கதிரவன் ஒளியிலேயே அனைத்தும் இயங்கிக் கொண்டிருக்கிறது. உலகின் பசுமையை நிலைபெறச் செய்வது சூரிய ஒளியாகும். பகலிலே சுட்டெரிக்கும் சூரியன். இரவிலே குளிர்ச்சி பொருந்திய சந்திரன். சந்திரனின் அழகினைப் பாடாத புலவர்கள் இல்லை. இருள் சூழ்ந்த இரவுப் பொழுதில் தன் வெண்மையான ஒளியைப் பரப்புகின்றது. உலகிற்கு ஆதாரமாக விளங்கக்கூடிய நீரை அளிப்பது மழை மேகங்கள், வானிலுள்ள மேகங்கள் நீரை சேமித்து மழையாகப் பெய்கின்றன. இதன்மூலம் உலகம் செழிக்கின்றது. இதனையே வள்ளுவரும்,

**“விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்து**
**உள்நின்று உடற்றும் பசி”**[8]

**“விசும்பின் துளிவீழின் அல்லால்மற் றாங்கே**
**பசும்புல் தலைகாண்பு அரிது”**[9]

என வான்சிறப்பு என்ற அதிகாரத்தில் மழையின் பெருமையினைப் பாடியுள்ளார். இவை அனைத்தும் ஆகாயத்தின் விந்தையான நிகழ்வுகளாகும்.

“ஆகாயத்திற்கு பரம் என்ற பெயர் உண்டு பரம் என்பது மேலான பொருளைக் குறிக்கும். அம்பரம், சித்அம்பரம், சிதம்பரம் என்று வழங்கும். சிதம்பரத்தில் இறைவன் ஆகாய வடிவில் விளங்குகிறான். தில்லை நடராஜருக்கு வலதுபக்கம் ஆகாய வடிவத்தைத் திரையிட்டு வில்வ மாலைகளைச் சாற்றி உள்ளனர். இந்த இடத்தை சிதம்பர ரகசியம் என்று கூறுவர். மக்களுக்கு இவ்வெற்றிடத்தை தீப ஆராதனை செய்து காட்டி விளக்குவர். ஆகாயம் வெற்றிடம் ஆகும். வெற்றிடத்திற்கு எத்தனை சிறப்புகள். சூரிய சந்திரர் இருப்பிடம், விண்மீன்களின் கூடாரம், மேகங்கள் தங்குமிடம் தனி உலகமாக

இருந்து வானுலகம் என்ற பெயர் பெற்றுள்ளது என்ற செய்தியினை இரா.நாராயணன் பதிவுசெய்துள்ளார்.''[10]

**நெருப்பு** – நெருப்பை அக்னிதேவன் என்பர். எந்த பூசை காரியமாக இருந்தாலும் வேள்வி நடத்துவது வழக்கம். வேள்வி அக்னி தேவனை வணங்குவதாகும். இறைவனுக்குப் படைக்கும் புனிதப் பொருட்களை எல்லாம் அக்கினியில் இட்டு அதன் மூலம் அதனைத் தெய்வத்திற்குச் சமர்ப்பிக்கின்றோம். அக்னி இல்லாது எந்த வேள்வியும் நடைபெறாது. பூசை நேரங்களில் முன்னிலை வகிப்பது அக்னிதேவனே. நெருப்பை வளர்த்து ஒரு பொருளை உருவாக்கவும் முடியும், அதே, சமயம் அழிக்கவும் முடியும். இந்த ஐம்பூதங்களும் சமநிலையில் இருந்தால் தான் உலகம் செழிக்கும். எனவே, இதனைக் கட்டுக்குள் வைக்கும் பொருட்டு ஐம்பூதங்களை வணங்கும் பழக்கம் தோன்றியது. இப்பழக்கம் அக்காலத்தில் மட்டும் அல்ல இன்றும் கிராமப்புறங்களில் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருக்கின்றது.

''ஐம்பெரும் பூதங்களாக விளங்கும் இறைவன், திருவண்ணாமலையில் தீ வடிவாய் விளங்குகிறான். கார்த்திகைத் திங்கள் முழு நிலா நாளன்று தீப விழாவாகக் கொண்டாடப்படுகிறது. மலைமீது விளக்கு ஏற்றியபின் ஊர் மக்கள் தங்கள் இல்லங்களில் விளக்கு ஏற்றுவதை வழக்கமாகக் கொண்டுள்ளனர். நம் உடலில் தேவையான அளவு வெப்பம் இருந்து காத்து வருகின்றது. நாம் உள்ளே இழுக்கின்ற காற்று குளிர்ந்ததாகவும் வெளிவிடுகின்ற காற்று வெப்பமுள்ளதாகவும் உள்ளதை நாம் உணரமுடிகிறது. ஞாயிறு தீ வடிவமானது. ஞாயிற்றையும் கடவுளாக வழிபடுகிறோம். பொங்கலன்று கதிரவனை வழிடுவது தமிழரது வழக்கமாகும் என இரா.நாராயணன் குறிப்பிட்டுள்ளார்''[11]

இயற்கைச் சூழ்நிலைகள் மலைகள், மரங்கள், மலர்கள், பசுமையான காட்சிகள் போன்ற அனைத்தும் மனித மனதை மயக்க வல்லது. மனித மனம் எளிதில் பாதிப்படையக் கூடியது. சிலர் சிறிய விஷயங்களைக் கூட தாங்க இயலாது மனஅழுத்தம் கொள்கின்றனர். பாதிப்படைந்த மனித மனதிற்கு

அருமையான மருந்து இயற்கையே. ஒருவன் எவ்வளவு சோகமாகவும், வேதனையாகவும், அதிக மன அழுத்தத்திற்கு ஆளாகிக் குழப்பமான சூழ்நிலையில் இருந்தாலும் இயற்கையான பசுமை நிறம், மலர், காற்று, நிலவு, மழை மேகங்கள் போன்ற எதையாவது பார்த்தால் உடனே அவன் மனதில் மகிழ்ச்சி ஏற்படுகிறது. மனம் அமைதியாகி லேசாகி, பஞ்சு போல இயற்கையின் ஊடே சிறகடித்துப் பறக்கின்றது. அவர்களது எல்லாத் துன்பங்களையும் ஒரு நொடிப் பொழுதில் மறந்து விடுகின்றனர். எனவே தான் மனநலம் பாதிக்கப்பட்டவர்களைக் கூட மலைப் பிரதேசங்களுக்கு அழைத்துச் செல்லும்படிக் கூறுகின்றனர். அங்கே உள்ள மூலிகைக் காற்று உடல் நோயைத் தீர்க்க வல்லது. ஆகவே, மனித நோய்க்கு முதல் மருந்து இயற்கையே ஆகும். இயற்கையே மருந்தாகவும், வாழ்வாதாரமாகவும் விளங்குகிறது.

நிலம், நீர், காற்று, ஆகாயம், நெருப்பு இவை அனைத்தும் ஐம்பூதங்கள் எனப்படும். இவை ஐந்தும் சம நிலையில் இருந்தால்தான் இயற்கையான சூழ்நிலை நிலவும். இவற்றில் ஏதாவது ஒன்று அதிகரித்தாலும் அதனால் ஏற்படும் அழிவு பெரிய அளவில் இருக்கும். எனவே தான் பெரியோர்கள் இயற்கைக்கு மிஞ்சியது எதுவும் இல்லை என்பர். இவை ஐந்தும் இப்பிரபஞ்சத்தில் சக்தி. இவை ஐந்தையும் பஞ்சபூதங்கள் என்றும், அதனை வழிபட வேண்டும் என்றும் முன்னோர்கள் வணங்கியுள்ளனர். இவை அனைத்தையும் இயக்க கண்டிப்பாக, ஒரு மிகப் பெரிய சக்தி உண்டு. அதுவே இறை சக்தியாகும். அந்த இறை சக்தியைத் திருமால் என ஆழ்வார்கள் கூறுகின்றனர். திருமாலின் அடியவர்களான ஆழ்வார்கள் ஐம்பூதங்களையும் இயக்கும் சக்தி எம்பெருமானே என்ற உண்மையினைத் தம் பாசுரங்களில் பதிவு செய்துள்ளனர்.

**நாலாயிரத் திவ்விய பிரபந்தத்தில் இடம் பெற்றுள்ள இயற்கைப் பொருட்கள்**

நாலாயிரத் திவ்விய பிரபந்தத்தில் ஐம்பூதங்கள் பற்றியும் பிற இயற்கைப் பொருட்கள் பற்றியுமான செய்திகள் இடம் பெற்றுள்ளன. அவையாவன,

| ஐம்பூதங்கள் | பிற இயற்கைப் பொருட்கள் |
|---|---|
| நிலம் | சந்திரன் |
| நீர் | சூரியன் |
| நெருப்பு | மழை |
| காற்று | மலை |
| ஆகாயம் | நீர்நிலைகள் |
| | ஆறுகள் |

இவ்வியற்கைப் பொருட்கள் கீழ்க்கண்ட தலைப்புக்களின் கீழ் பகுத்துக் காணப்பட்டுள்ளன.

1. ஐம்பூதங்களின் தலைவன் திருமால்
2. திருமாலோடு இயற்கையை ஒப்பிடுதல்
3. புண்ணிய நதிகள்
4. மழை, மலை பற்றிய செய்திகள்

**ஐம்பூதங்களின் தலைவன் திருமால்**

திருமால் ஐம்பூதங்களாக விளங்குகின்றான். மனித உடல் அமைப்பும் ஐம்பூதங்களால் அமைந்தது. எனவே ஒவ்வொருவருக்குள்ளும் ஐம்பூதங்கள் நிறைந்திருக்கும். இவற்றில் ஏதாவது ஒன்றில் சம நிலையில் இல்லா விட்டால் உடல் உபாதைகள் தோன்றும். ஐம்பூதங்களாகிய இந்த உடலைக் கொண்டு அவனுக்காகச் செய்யும் யாகங்களும், தானமுமே தான், இவற்றிற்கெல்லாம் தலைவனாக விளங்கக்கூடிய திருமாலை அடையும் வழி எனப் பொய்கையாழ்வார் குறிப்பிடுகின்றார்.

**வையம் தகளியா வார்கடலே நெய்யாக**
**வெய்ய கதிரோன் விளக்காக – செய்ய**
**சுடராழி யானடிக்கே சூட்டினேன் சொல்மாலை**
**இடராழி நீங்குகவே என்று (நா.தி.பி.பா. 2082)**

பூமியை அகலாமகவும் அதைச் சுற்றியுள்ள கடலே நெய்யாகவும் வெப்ப கிரகங்களை வீசும் சூரியனே தீச் சுடராகவும் வைத்து அழகிய ஒளி வீசும் சுதர்சனத்தைத் தரித்திருக்கும் எம்பெருமானது திருப்பாதங்களில் விளக்காக ஏற்றினேன். இறைவா! உனக்காக நான் செய்யும் தொண்டில் தடையேதும் வராது என்னைக் காத்தருளுவாயாக எனப் பொய்கையாழ்வார் முதற்திருவத்தாதியின் முதல் பாடலில் இயற்கையை விளக்காக ஏற்றி எம்பெருமானுக்குச் சமர்ப்பித்திருக்கிறார். ‘‘பொய்கையாழ்வாருக்கு இவ்வுலகமே பெருமானைக் காட்டி நிற்கிறது. காலையில் கடற்கரையில் கதிரவன் எழுச்சியைக் கண்டு கவிஞர்கள் பலர் பாடியிருக்கலாம். இவ்வாழ்வாருக்கு அக்காட்சி திருவடி உணர்வைத் தூண்டுகிறது. புறவிருள் போக்கும் கதிரவன் ஆழ்வாருக்கு அகவிருள் போக்கும் ஞான — சூரியனாக இருந்து இறைவனைக் காட்டி நிற்கிறது. திருக்கோவில் தரிசனம் செய்யும் அடியவர்கள் திருவிளக்கை ஏற்றி இறைவனுக்கு மலர் மாலை சூட்டி வழிபடுவர். பரம்பொருளை அதன் எல்லையற்ற நிலையில் தரிசிக்கும் ஆழ்வார், இவ்வுலகம் விளக்காக அமையச் சொன்மாலை சூட்டி வழிபடுகிறார். இவ் உலகம் ‘‘விளக்கு’’ என்னும் போது நிலம் — அகல், கடல் — நெய், கதிரவன் — ஒளி என்ற உவமை வாசகம் முக்கியமானதன்று. அதனினும் ஆழ்ந்த உணர்வையே இப்பாடல் வெளிப்படுத்துகிறது. இவ்வுலகனைத்தும் இறைவனையே காட்டி நிற்கிறது’’[12] என ப.அருணாசலம் பதிவு செய்துள்ளார். ‘‘இதனையே,

**மாசில் வீணையும் மாலை மதியமும்**
**வீசுதென்றலும் வீங்கிள வேனிலும்**
**மூசு வண்டறைப் பொய்கையும் போன்றதே**
**ஈசன் எந்தை இணையடி நீழலே**’’[13]

என்று திருநாவுக்கரசரும் இனியதோர் இயற்கைக் காட்சியினை இறைவனின் இயல்புகளாகக் கூறுகின்றார்.

“மாடங்களில் விளக்கேற்றி வைப்பது அக்கால வழக்கம். அவ்வாறு வைக்கப்பட்ட மாடங்களில் எரியும் திரிவிளக்கிலிருந்து புகை எழும்பி மாடத்தின் மேல்பகுதியில் படிந்து காணப்படும். அந்த மாடத்தைப் பார்க்கிறார். அதே சமயம் வானத்தில் எழுகின்ற மேகங்கள் கருக்கொள்கின்றன. அம் மேகத்தின் அடியில் சுடரோன் ஒளிவிடுகிறான். அது மாடத்தில் ஏற்றிவைத்த விளக்குபோல் இருக்கிறது. இதைத் தான் கம்பர், பூமியாகிய தகழியிலே கடல் நீராகி எண்ணெயிடையே மேருமலையைத் திரியாக்கி ஒளிவிடும் கதிரவனைச் சுடராக்குகிறார். அப்படிச் சுடர்விடும் போது வானத்தில் எழுகின்ற கருமேகங்கள் புகைமண்டலம் போல இருப்பதால் விளக்கிலிருந்து எழும் கரும்புகைபோல அழகாக அவை விளங்குகின்றன என கம்பர் இக்காட்சியை,

**பையணைப் பஃறலைப் பாந்த ளேந்திய**
**மொய்ந்நிலத் தகளியின் முழங்கு நீர்நெயின்**
**வெய்யவன் விளக்கமா மேருப் பொற்றிரி**
**மையெடுத் தொத்தது மழைத்து வானமே**

என்ற சொல்லோவியத்தின் மூலமாகப் பதிவுசெய்துள்ள பாங்கினை முத்து எத்திராசன் எடுத்துக்காட்டியுள்ளார்.”[14] இப்பாடல்களின் மூலம் பக்தி இலக்கியத்தில் இயற்கையை இறைவனோடு ஒப்பிட்டும், மற்ற இலக்கியங்களில் மனித வாழ்வோடு ஒப்பிட்டும் பாடியுள்ள பாங்கினையும் அறியமுடிகிறது.

**இறையும் நிலனும் இருவிசும்பும் காற்றும்**
**அறைபுனலும் செந்தீயும் ஆவான் (நா.தி.பி.பா. 2110)**

நாராயணனாகவும், பூமி, ஆகாயம், காற்று, நீர், நெருப்பு ஆகிய பஞ்ச பூதங்களாக இருக்கின்ற விஷ்ணுவாகவும், அதே சமயம் கஜேந்திரன் என்ற யானையின் துன்பத்தைப் போக்கியவனாகவும் எல்லா இடங்களிலும் நீக்கமற நிறைந்திருக்கும் எம்பெருமானைக்கண்டு வணங்கி தெளிவடைவாயாக நெஞ்சமே என்கிறார்.

**வானாகித் தீயாய் மறிகடலாய் மாருதமாய்**
**தேனாகிப் பாலாம் திருமாலே (நா.தி.பி.பா. 2173)**

ஆகாயமாய், நெருப்பாய், சமுத்திரமாய், காற்றாய், தேனாய், பாலாய், சுவையாய் எல்லாவுமாக இருக்கின்ற பெருமானே எனப் பொய்கையாழ்வார் பாடுகின்றார். இதனையே,

**"சுவைமை, இசைமை, தோற்றம், நாற்றம், ஊறு,**
**அவையும் நீயே, அடுப்போர் அண்ணால்!**
**அவை அவை கொள்ளும் கருவியும் நீயே,**
**முந்து யாம்கூறிய ஐந்த னுள்ளும்,**
**ஒன்றினில் போற்றிய விசும்பும் நீயே,**
**இரண்டின் உணரும் வளியும் நீயே,**
**மூன்றின் உணரும் தீயும் நீயே,**
**நான்கின் உணரும் நீரும் நீயே,**
**ஐந்துடன் முற்றிய நிலனும் நீயே,**
**அதனால், நின்மருங்கின் — மூஏழ் உலகமும்,**
**மூலமும், அறனும், முதன்மையின் இகந்த**
**காலமும், விசும்பும், காற்றொடு கனலும்"**[15]

என் நல்லெழுநியாரும் குறிப்பிட்டுள்ளார்.

**உண்ணா துறங்கா துணர்வுறும் எத்தனை யோகியர்க்கும்**
**எண்ணாய் மிளிரும் இயல்பின வாம் எரிநீர் வளிவான்**
**மண்ணா கியஎம் பெருமான் தனதுவை குந்தம் அன்னாள்**
**கண்ணாய் அருவினை யேன் உயிராயின காவிகளே**

**(நா.தி.பி.பா. 2543)**

நீர், நெருப்பு, காற்று, ஆகாயம், நிலம் என்ற ஜம்பூதங்களின் வடிவமாக இருக்கின்ற பரமாத்மாவின் செங்கழுநீர் போன்ற அழகிய விழிகளில் அடியேனது உயிர் இருக்கின்றது. உண்ணாது உறங்காது தியானத்தில் இருக்கின்றவர் கூட,

தனது தியானத்தை மறந்து திருமாலோடு ஒன்றவைக்கக்கூடிய தன்மையுடையது அவனது கண்கள் என்கிறார் நம்மாழ்வார்.

**பாரும் நீர் எரி காற்றினோடு ஆகாசமும் இவை ஆயினான்**
**(நா.தி.பி.பா. 1024)**

**அம்பரம் அனல் கால் நிலம் சலமாகி நின்ற அமரர் கோன்**
**(நா.தி.பி.பா. 1025)**

**திங்களப்பு வானெரிகாலாகி திசை முகனார் (நா.தி.பி.பா. 1064)**

**கார்மன்னு நீள் விசும்பும் கடலும் சுடரும்**
**நிலனும் மலையும் தன்உந்தித் (நா.தி.பி.பா. 1129)**

**நீர் வானம் மண் எரிகாலாய் நின்ற நெடுமால் (நா.தி.பி.பா. 1200)**

சந்திரன், நீர், ஆகாயம், தீ, காற்று, ஆகியவற்றைத் தனது சாரீரமாகக் கொண்ட பஞ்சபூதங்களின் தலைவனான திருமால், தனது துளசிமாலையை அவனை நாள்தோறும் போற்றுகின்ற அடியவனான எனக்குக் கொடுத்து அருள்புரியவில்லையே, என்னைத் தகுதியற்றவனாகக் கருதிவிட்டான் போலும் எனத் திருமங்கையாழ்வார் திருமாலின் அருள் கிடைக்காது புலம்புவதன் முலம் அவன் அருளைப்பெறுவது எளிதல்ல என்பதை உணரமுடிகிறது.

**வானுலவு தீவளி மாகடல் மாபொருப்பு**
**தானுலவு வெங்கதிரும் தண்மதியும் — மேல்நிலவு**
**கொண்டல் பெயரும் திசையெட்டும் சூழ்ச்சியும்**
**அண்டம் திருமால் அகைப்பு (நா.தி.பி.பா. 2418)**

ஆகாயமும், நெருப்பும், காற்றும், கடலும், பெரியமலைகளும், சுட்டெரிக்கும் சூரியனும், குளிர்ச்சியான சந்திரனும், வானில் உலாவும் மேகங்களும், எட்டுத்திசைகளும், கடல்களும், உயிர்களுமாகிய எல்லாவற்றோடும் சேர்ந்த அண்டம் எம்பெருமானின் கருணையினால் உருவானது. எனவே நற்கதி பெற வேண்டும் என்றால் எம்பிரானை வழிபடவேண்டும்.

**திடவிசும் பெரிநீர் திங்களும் சுடரும் செழுநிலத்து உயிர்களும்**

**(நா.தி.பி.பா. 1270)**

**குன்றமும் வானும் மண்ணும் குளிர் புனல் திங்களோடு**

**நின்ற வெஞ்சுடரும் அல்லா (நா.தி.பி.பா. 1294)**

எனத் திருமால் ஐம்பூதங்களாக மட்டும் இல்லாது பெரிய மலைகளும், சஞ்சரிக்கும் சூரியனும், குளிர்ச்சி பொருந்திய சந்திரனும் வானில் உலாவரும் மேகங்களும், எட்டுத் திசைகளும், கடல்களும், நட்சத்திரங்களும் பூலோகத்து உயிர்களும் மற்றும் பலவகைப்பட்ட பொருட்களுமாகவும் விளங்கக்கூடியவன் திருமாலே, அவன் தான் உலகம் என்கின்றனர் ஆழ்வார்கள். இதனையே பரிபாடலில்,

**"நின் வெம்மையும் விளக்கமும் ஞாயிற்று உள**
**நின் தண்மையும் சாயலும் திங்கள் உள**
**நின் சுரத்தலும் வண்மையும் மாரி உள**
**நின் புரத்தலும் நோன்மையும் ஞாலத்து உள**
**நின் நாற்றமும் ஒண்மையும் பூவை உள**
**நின் தோற்றமும் அகலமும் நீரின் உள**
**நின் உருவமும் ஒலியும் ஆகாயத்து உள**
**நின் வருதலும் ஒடுக்கமும் மருந்தின் உள"**[16]

இவை இங்கும், அங்கும், உங்கும் ஆகிய எல்லா இடங்களிலும் காவலாக உன்னிடம் இருந்து பிரிந்து, உன்னிடத்தே பொருந்தி நிற்கின்றன என ஆழ்வார்களின் கூற்றிற்குச் சான்றாக கடுவன் இளவெயினனாரின் இப்பாடல் விளங்குகிறது.

மனிதனாகப் படைக்கப்பட்ட நமது உடல் அமைப்பும் ஐம்பூதங்களின் வடிவில் அமைந்தது. எனவே ஐம்பூதங்களின் தலைவனை எம்பெருமான் நமது

உடலினுள்ளே இருக்கின்றார். உள்ளிருந்து நம்மை ஆட்டுவதும், ஆட்டுவிப்பதும் அவனே தான் என்பதனை,

**செவி வாய் கண் மூக்கு டலென் றைம்புலனும் செந்தீ**
**புவிகால் நீர் விண் பூதம் ஐந்தும் — அவியாத (நா.தி.பி.பா. 2093)**

எனப் பாடுவார் பொய்கையாழ்வார்.

**புகழ்வாய் பழிப்பாய் நீ பூந்துழா யானை**
**இகழ்வாய் கருதுவாய் நெஞ்சே — திகழ்நீர்க்**
**கடலும் மலையும் இருவிசும்பும் காற்றும்**
**உடலும் உயிரும் ஏற்றான் (நா.தி.பி.பா. 2154)**

நெஞ்சமே நீ புகழ்ந்தாலும், இகழ்ந்தாலும், பழித்தாலும், கடல்களும், மலைகளும், விரிந்த ஆகாயமும், வீசும் காற்றும், எல்லா சீரங்களுக்கும் அவற்றின் உயிராக இருப்பவனும் திருத்துழாய் அணிந்த எம்பெருமான் என்பதைப் புரிந்துகொண்டு அவனையே நினைக்கவேண்டும் என மனித மனங்களுக்கு உணர்த்துகிறார் பொய்கையாழ்வார்.

**அவன் கண்டாய் நன் னெஞ்சே ஆரருளும் கேடும்**
**அவன் கண்டாய் ஐம்புலனாய் நின்றான் — அவன் கண்டாய்**
**காற்றுத்தீ நீர்வான் கருவரைமண் காரோதச்**
**சீற்றத்தீ யாவானும் சென்று (நா.தி.பி.பா. 2205)**

பரந்தாமனது பரிபூரணமான அருளால் கிடைக்கக்கூடிய முக்திக்கும், மாயையால் உண்டாகும் கெடுதல்களுக்கும் அவனே காரணகர்த்தா என்பதை அறிந்துகொள். உடலின் ஐம்புலன்களாக நின்று ஆட்டிவைப்பவனும், அடக்கிவைப்பவனும் அவனே. காற்று, நீர், நெருப்பு, தீ, ஆகாயம், கருமையான மலைகள் எல்லாம் அவனே. கறுத்த சமுத்திரத்தை சீற்றம் கொள்ள வைப்பவனும் அவனே என்பதை உணர்ந்து கொள்ளவேண்டும். நாம் நிற்பதும், நடப்பதும்,

சிந்திப்பதும் எல்லாம் அவனே. நமக்குள் இருக்கும் பரமாத்மாவை நாம் உணரவேண்டும் என்பதை ஆழ்வார்கள் தம் பாசுரங்களில் சுட்டியுள்ளனர்.

**இயற்கையைத் திருமாலோடு ஒப்பிடுதல்**

இறைவன் படைத்த இயற்கை அழகை, வண்ணத்தினை இயற்கை நிகழ்வினை, அந்த இறைவனோடே ஒப்பிட்டு ஆழ்வார்கள் பாடல்கள் புனைந்துள்ளனர்.

**கடலோடு ஒப்பிடுதல்**

**முதலாவார் மூவரே அம்மூவ ருள்ளும்**
**முதலாவான் மூரிநீர் வண்ணன் — முதலாய**
**நல்லான் அருளல்லால் நாமநீர் வையகத்து**
**பல்லார் அருளும் பழுது (நா.தி.பி.பா. 2096)**

உலகில் பற்பல தெய்வங்கள் வணங்கப்பட்டாலும் முத்தொழிலுக்கும் காரணமானவர்கள் பிரம்மா, விஷ்ணு, சிவன் மூவருமே. அவர்களுள் சிறந்தவர் காக்கும் தொழிலைச்செய்யும் திருமாலே. அந்தக் கருங்கடல் நீலவண்ணன் கருணையினால் அல்லாது இந்தக் கடல் சூழ்ந்த உலகத்தை வேறு எந்தத் தெய்வத்தால் காக்கமுடியும் என்கின்றனர் ஆழ்வார்கள்.

**ஓதுவதும் ஓர்ப்பனவும் பேராழி கொண்டான் (நா.தி.பி.பா. 2147)**

கடலின் நிறத்தைக் கொண்டவன் திருமால் என்கின்றார். பேயாழ்வார்,

**அடி வண்ணம் தாமரை அன்றுலகம் தாயோன்**
**படி வண்ணம் பார்க்கடல் நீர்வண்ணம் — முடி வண்ணம்**
**ஓராழி வெய்யோன் ஒளியும் அஃதன்றே**
**ஆராழி கொண்டாற் கழகு (நா.தி.பி.பா. 2286)**

உலகத்தை அளந்த பரந்தாமனின் திருவடிகளின் நிறம் தாமரை போல் உள்ளது. திருமேனியின் நிறமோ பூமியைச் சூழ்ந்திருக்கின்ற கடல் நீரின் நிறத்தை

ஒத்துள்ளது. திருமுடியின் நிறமோ ஒற்றைச் சக்கரத்தேரில் வலம் வரும் சூரியனை ஒத்துள்ளது. அவனது ஒளியும் அந்தப் பகலவனின் பிரகாசத்தை ஒத்திருக்கிறது. இத்தகைய அழகுபொருந்திய எம்பெருமானின் திருவடியைச் சரணடைந்து அவனது அருளைப் பெறவேண்டும் எனப் பேயாழ்வார் எடுத்துரைக்கின்றார்.

**கண்ணும் கமலம் கமலமே கைத்தலமும்**
**மண்ணளந்த பாதமும் மற்றவையே – எண்ணில்**
**கருமா முகில் வண்ணன் கார்க்கடல் நீர் வண்ணன்**
**திருமா மணி வண்ணன் தேசு. (நா.தி.பி.பா. *2290*)**

கரிய பெருத்த கருமேகத்தையும் கருங்கடலின் நிறத்தையும் கொண்டவன் திருமால். சூரியனின் நிறத்தை ஒத்த முடியையும், அழகிய நீல நிற இரத்தினம் போன்ற பிரகாசமான விழியையும், தாமரை போன்ற பாதத்தையும் கொண்டுள்ளார். இவனுடைய ஒளிக்கு, தாமரையை விட்டால் வேறு எதையும் ஒப்புமையாகக் கூறமுடியாது. இயற்கையைப் படைத்த இறைவன், அந்த இயற்கை தனக்குள்ளேயும் உள்ளது. இயற்கையும் நானே, இறை சக்தியும் நானே என்பதை உணர்த்த எம்பிரான் இயற்கை நிறங்களைப் பெற்று இயற்கையாகவே தோற்றமளிக்கின்றார். இத்தகைய இறைவனைக்கண்டு வணங்கி அவன் அருள்பெற்று இன்பமான வாழ்வை அமைத்துக்கொள்ள வேண்டும் என்பதைப் பேயாழ்வார் மக்களுக்கு எடுத்துரைக்கின்றார்.

**நீரோடு ஒப்பிடுதல்**

**காரொடொத்த மேனி நங்கள் கண்ண! விண்ணின் நாதனே!**
**நீரிடத்த அராவணைக் கிடத்தி என்பர், அன்றியும்**
**ஓரிடத்தை அல்லை எல்லை இல்லை என்பராதலால்**
**சேர்விடத்தை நாயினேன் தெரிந்திறைஞ்சு மாசொலே**

**(நா.தி.பி.பா. *798*)**

கரிய மேகத்தைப் போன்ற திருமேனியை உடையவனே, நீர் ஓரிடத்தில் இருப்பதில்லை. அது எல்லா இடங்களிலும் ஓடிக்கொண்டிருக்கும். அதுபோல நீயும் ஓரிடத்தில் இல்லாது எல்லா இடங்களிலும் பல திருத்தலங்களில் சென்று இருக்கின்றாய். இந்த நாய் போன்ற அடியேன் உன்னை எவ்விடத்தில் தரிசிப்பது என்று தெரியாது சுற்றித் திரிகின்றேன். எனக்கு அருள் செய்யக் கூடதா என்று திருமழிசையாழ்வார் புலம்புகின்ற நிலை சுட்டப்பட்டுள்ளது.

**மழையோடு ஒப்பிடுதல்**

**ஆழிமழைக் கண்ணா! ஒன்று நீகை கரவேல்**
**ஆழியுள் புக்கு, முகந்து கொடு ஆர்த்தேறி**
**ஊழி முதல்வன் உருவம் போல் மெய்கறுத்து**
**பாழியந் தோளுடைய பத்மநாபன் கையில்**
**ஆழிபோல் மின்னி, வலம்புரிபோல் நின்றதிர்ந்து**
**தாழாதே சார்ங்கம் உதைத்த சரமழைபோல்**
**வாழ உலகினில் செய்திடாய் நாங்களும்**
**மார்கழி நீராட மகிழ்ந்தேலோ ரெம்பாவாய் (நா.தி.பி.பா. — 477)**

மழைக்கு அதிபதியான வருணதேவா, நீ கருத்த பெரிய சமுத்திரத்தின் அடிவரை சென்று நீரை முகந்து கொண்டு சென்று ஆகாயத்தில் பரவி, ஊழிக்காலத்தில் அழியாமல் இருக்கின்ற திருமாலின் கரிய மேனியைப்போல் கறுத்து, வலிமையுள்ள தோள்களையுடைய பத்மநாபனின் வலக்கரத்தில் திகழும் சக்கரத்தைப்போல் மின்னலை உண்டாக்கி, இடக் கையிலுள்ள வலம்புரிச்சங்கின் ஒலிபோல இடி இடித்து, சங்கு, சக்கரத்துக்குச் சிறிதும் தாழாத சார்ங்கம் என்ற வில்லிலிருந்து இராமாவதாரத்தில் அம்பு மழை பொழிந்தது போல் தாமதமின்றி மழை கொட்ட வேண்டும் என ஆண்டாள் பாடியுள்ளார். இதில் இயற்கையாக மழை பெய்யும் நிகழ்வினைத் திருமாலோடு ஒப்பிட்டுக் காட்டியுள்ளார். இதன்மூலம் ஆழ்வார்கள் காண்கின்ற எல்லாம் திருமாலே, அவன் மூலமே அனைத்து நிகழ்வுகளும் நடைபெறுகின்றன என்ற உண்மையினை விளங்க வைக்கின்றனர்.

“நோன்பின் தோற்றமே நீராடலோடு தொடங்குகிறது. அந்நீராட்டத்திற்குத் தேவையான நீரைப் பகவான் தந்தருள வேண்டும் என்று கூற வந்த ஆண்டாள், அந்த மழையையே பகவானாக வருணித்துள்ள நயம் போற்றத்தக்கது. முன்பு கோவர்த்தன கிரியை எடுத்து மழையிலிருந்து காத்தவனான பகவானிடமே மழை வேண்டுகிறாள். இதன் மூலம் கொடுப்பதும், காப்பதுமான குணங்களை உடையவன் என்பதை அழகாகக் கூறியுள்ளார் ஆண்டாள் என தேவிரா குறிப்பிட்டுள்ளார்.”[17]

**“நீ கடலுள் செல்**
**நீரை உறிஞ்சு**
**எரிமலையின் சப்தமாய்**
**குரலிட்டு மேலெழும்பு**
**உன்னுடைய நிறத்தை**
**ஊழிக்காலத்திலும்**
**பொலிவுடன் திகழும் — அந்த**
**உத்தமனின் திருமேனியிடம்**
**வேண்டிப் பெற்றுக் கொள்!**
**வலம்புரிச் சங்கினைப் போல்**
**நீ முழங்கியதிர்ந்து வா!**
**அவன் சாரங்கத்திலிருந்து புறப்பட்ட**
**அம்புமழையைப் போல**
**இந்த பூமி வாழப்**
**புதுராகம் பாடி**
**நீயும் வா!**
**மார்கழி நீராடி**
**மாயவனின் புகழ்பாடி**
**பாவை நோன்பின் பயனை — நாங்கள்**

**எதிர் நோக்கி நிற்கிறோம்**

**காலந்தாழ்த்தாமல்**

**மழையே நீ பொழிவாய்"[18]**

என இப்பாடலை புதுக்கவிதை அமைப்பில் ஆசிரியர் இளங்கோ தொகுத்துள்ளார்.

**சூரியன், சந்திரனுடன் ஒப்பிடுதல்**

**செங்கண் சிறுச்சிறிதே எம்மேல் விழியாவோ**

**திங்களும் ஆதித் தியனும் எழுந்தாற்போல் (நா.தி.பி.பா. 495)**

அழகிய இந்த உலகத்தையே ஆண்டவர்கள், நான் அரசன் என்ற நிலையிலிருந்து மாறி உன்னுடைய மஞ்சனத்திற்கு அருகில் திரளாக நிற்கின்றனர். நாங்களோ உன்குணங்களுக்கு அடிமையாகி உன்னருகில் வந்திருக்கின்றோம். கொலுசில் உள்ள சிறு மணியைப் போல சிறிதே மலர்ந்துள்ள தாமரைப் பூ மாதிரி சிவந்த உன் விழிகள் எங்களை ஒரு முறையாவது பார்க்காதா, சந்திரனைப் போல் குளிர்ச்சியும், சூரியனைப் போல் பிரகாசமும் ஒரு சேரத் தோன்றியது போல விளங்குகிறது. எம்பொருமானுடைய கண்கள் இரண்டையும் கொண்டு எங்களுக்குக் காட்சி தந்தால் இந்த மானிடப்பிறவி நன்மை அடையும். எங்களது துன்பங்கள் எல்லாம் நீங்கி இப்பிறவிப்பயனை அடைந்துவிடுவோம் என்கிறார் ஆண்டாள்.

சுதர்சனத்தைக் கையில் ஏந்தி அன்பே வடிவமாக விளங்கும் எம்பெருமான், அடியவர்களுக்கு அரசனைப் போலவும், தேவர்களைப் போலவும், தாய் போலவும் இருந்து குளிர்ந்த சந்திரனைப் போல பல நன்மைகள் செய்யக் கூடியவன். பக்தர்களுக்கு எவ்வளவு கொடுத்தாலும் போதாது என்று எண்ணி, தன்னையே கொடுக்கக் கூடியவன் அந்தப் பரந்தாமன். அவனுடைய அருளுக்கு ஈடு இணையே இல்லை என்கின்றனர் ஆழ்வார்கள். (நா.தி.பி.பா. 2465)

**செக்கர்மா முகிலுடுத்து, மிக்க செஞ்சுடர்ப்**

**பரிதிசூடி அஞ்சுடர் மதியம் பூண்டு**

**பல சுடர் புனைந்து பவளச் செவ்வாய்**

**திகழ்பசுஞ் சோதி மரகதக் குன்றம்**
**கடலோன் கைமிசைக் கண்வளர் வதுபோல்**
**பீதக ஆடை முடிபூண் முதலா**
**மேதகு பல்கலன் அணிந்து சோதி**
**வாயவும் கண்ணவும் சிவப்ப மீதிட்டுப்**
**பச்சைமேனி மிகப் பகைப்ப**
**நச்சுவினைக் கவர்தலை அரவின் அமளியேறி (நா.தி.பி.பா. 2578)**

அலை கடலிலே பல தலைகள் கொண்ட ஆதிசேடன் மீது நீ படுத்திருக்கின்ற இந்தக் கோலம் பச்சை நிறம் கொண்ட மரகத மலையொன்று சமுத்திர ராஜன் கைமீது கண்வளர்வது போலிருக்கிறது. பவளமாய்க் கொண்ட அந்த மரகத மலை சிவந்த மேகத்தை அரையில் உடுத்து அதனால் எம்பெருமான் சிவப்பாகத் தெரியும் சூரியனைப் போல் சிவப்பு பீதாம்பரத்தை அணிந்து கொண்டிருக்கிறார். திருமுடியிலே கதிரவனையே சூடிக் கொண்டிருப்பது போல் காட்சியளிக்கிறது. சுதர்சனம், பாஞ்சசன்னியம், நாந்தகம், கௌமோதகி, சார்ங்கம் முதலான ஒளி வீசும் பஞ்சாயுதங்களையும் குளிர்ச்சியான சந்திரனைப் போல் தரித்துக் கொண்டிருக்கின்றாய். நீ அணிந்துள்ள எல்லா ஆபரணங்களும் பலவகையான நட்சத்திரங்களைப் போல காட்சி அளிக்கின்றன. உன்னுடைய இந்த அழகிய கோலத்தை சிவன், பிரம்மன், இந்திரன் முதலானோர் கண்டு வணங்குகின்றனர். இந்த அரிய காட்சியினைப் பக்தனாகிய எங்களுக்கும் அருள வேண்டும் எனத் திருமாலின் அழகிய உருவத்தைப் பல இயற்கைப் பொருட்களோடு ஒப்பிட்டுப் பாடியுள்ளார் நம்மாழ்வார். ‘‘இதனையே சுந்தரரும் தேவாரத்தில்,

**பொன்னார் மேனியனே புலித்தோலை அரைக்கசைத்து**
**மின்னார் செஞ்சடைமேல் மிளிர் கொன்றை அணிந்தவனே**
**மன்னே மாமணியே மழபாடியுள் மாணிக்கமே**

என்று இறைவனின் தோற்றம் இயற்கைப் பொருளோடு உவமையாகக் கூறப்பட்டுள்ளதை கு.தட்சணாமூர்த்தி குறிப்பிடுவர்.”[19] இதன் மூலம் பக்தி இலக்கியக் காலத்தில் இறைவனின் புகழ் பரப்பத் துணைநின்றது இயற்கையே என்பதும் பக்தி இலக்கியங்களில் ஆழ்வார்களும் நாயன்மார்களும் இறைவனின் பெருமைகளை வெளிப்படுத்த இயற்கையைத் துணையாய்க் கொண்டுள்ளனர் என்பதும் புலனாகிறது.

**மேகங்களுடன் ஒப்பிடுதல்**

**கருமா முகில் வண்ணன் (நா.தி.பி.பா. 290)**

**கொண்டல்தான் மால்வரைதான் மாகடல்தான் கூரிருள்தான்**
**வண்டறாப் பூவைதான் மற்றுத்தான் — கண்டநாள்**
**காருருவம் காண்தோறும் நெஞ்சோடும் கண்ணனார்**
**பேருரு என் றெம்மைப் பிரிந்து (நா.தி.பி.பா. 2633)**

மேகங்கள், பெரிய மலைகள், பெரியசமுத்திரம், காரிருள், பூவைப்பூ இவற்றைக் காண்கையில் என் உள்ளம் இவை கண்ணனுடைய அழகான வடிவம் என்று நினைக்கிறது. குவளை மலர், குயில், மயில் போன்ற கருநீல உருவங்களையெல்லாம் என் நெஞ்சம் இவை எம்பெருமானுடைய அழகிய திருமேனியின் நிறம் என எண்ணி அவை பின்னே செல்கிறது. என் உள்ளம் என்னை விட்டு நீங்கி எதையும் பொருட்படுத்தாமல் எம்பெருமானின் பின்னே திரிகிறது. அவன் மட்டும் இல்லாது, அவன் நிறத்தைக் கொண்ட அனைத்தும் என்னைத் துன்பப்படுத்துகின்றன. செவ்வரியோடிய விழிகளையுடைய திருமால் எப்போதும் என்னை நீங்காது இருக்கின்றார். என் நெஞ்சமே நீ கண்டதை நினைத்து கொடிய நரகத்தில் சேராது அனுதினமும் அவனை நினைத்து அவன் பாதத்தைச் சரணடை என நம்மாழ்வார் தனது மனதிற்கும், மற்றவர்களுக்கும் எடுத்துரைக்கின்றார்.

“மின்னல்களுடன் மழைக்காற்று மாறி மாறி இடைவிடாது வீசுகின்றது. கருக் கொண்ட கறுத்த மேகங்கள், அக்கருப்பத்தின் முதிர்ச்சியாற் பெருமூச்சு

விட்டாற் போல இருந்தது என்கின்றார். அப்படிக் கருகொண்ட மேகங்கள் திருமாலின் திரு மேனியைப் போல கறுத்துக் காணப்பட்டன என்கிறார் கம்பர் பெருமான்

**கண்ணன் மெய் வடிவெனக்**

**கருகிக் கார் விசும்பு**

என்று முல்லைநிலக் கடவுளைத் தப்பாமற் காட்டுகிறார் என முத்து எத்திராசன் குறிப்பிட்டுள்ளார்.''[20] இதனையே,

**நனந்தலை யுலகம் வளைஇ நேமியொடு**

**நலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை**

**நீரசெல நிமிர்ந்த மாஅல் போலப்**

**பாடிமிழ் பனிக்கடல் பருகி வலனேர்பு**

**கோடுகொண் டெழுந்த கொடுஞ்செல வெழிலி**

**பெரும்பெயல் பொழிந்த சிறுபுன் மாலை**

என நப்பூதனார் கார்மேகத்திற்கு உவமையாக ஈரடியால் நிலவுலகையும், வானுலகையும் அளந்த நெடுமாலின் தோற்றத்தைப் பாடுவதை முத்துலக்குமி பதிவுசெய்துள்ளார்.''[21] இதன்மூலம் திருமாலின் அடியவர்களுக்கு கார்மேகங்கள் திருமாலாகவே தோன்றுகின்றன என்பது புலனாகிறது.

**மலையோடு ஒப்பிடுதல்**

மலை போன்ற கம்பீரமான மார்பு கொண்ட எம்பெருமானை,

**திருமால் உருஒக்கும் மேரு அம்மேருவில் செஞ்சுடரோன்**

**திருமால் திருக்கைத் திருச்சக் கரம் ஒக்கும் அன்னகண்டும்**

**திருமால் உருவோ டவன்சின்ன மேபிதற் றாநிற்பதோர்**

**திருமால் தலைக்கொண்ட நங்கட்குளங் கேவரும் தீவினையே**

**(நா.தி.பி.பா. 2565)**

எனப் பாடுவார் நம்மாழ்வார். மகா மேருமலை திருமால் போல கம்பீரமாக இருக்கும். அந்த மேரு மலையின் அருகே உதயமாகும் சிவந்த நிறத்தை உடைய ஆதவன் எம்பெருமான் கையிலுள்ள சுதர்சனத்தைப் போல காட்சியளிக்கிறது. இவ்வாறு என் தலைவனின் நினைவைத் தூண்டும் இப்போலிகளைக் கண்டே நான் ஆறுதல் கொள்கின்றேன். அவனது உண்மையான உருவத்தைக் எப்போது காண்பேனோ என்று நம்மாழ்வார் புலம்புகின்றார்.

**நீர்நிலைகள் பற்றிய குறிப்புகள்**

நாலாயிரத் திவ்விய பிரபந்தத்தில் நீர் நிலைகள் பற்றிய குறிப்புகள் இடம் பெற்றுள்ளன. திருமால் வீற்றிருக்கின்ற திருத்தலங்கள் பல நீர் நிலைகள் நிறைந்தவையாகவும், நதிகளைக் கொண்டதாகவும் செழிப்புடன் விளங்குகின்றன. காவிரி, கங்கை, பொன்னி போன்ற நதிகள் பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன. இவைகள் புண்ணிய நதிகளாகக் கருதப்படுகின்றன.

**புனித நதிகள்**

திருமால் வீற்றிருக்கின்ற திருத்தலங்கள் புண்ணிய நதிகளால் சூழப்பட்டுள்ளன. இந்நதிகளில் நீராடி, திருமாலை வணங்கினால் நம் பாவங்கள் நீங்கி இறைவன் திருவடியைச் சேரும் பேறு கிட்டும் என்கின்றனர் ஆழ்வார்கள்.

**காவிரி**

“காவிரியாறு என்றும் வற்றாத நீர்ப்பெருக்கு உடையது. மழைத்துளிகளையே உண்டு உயிர் வாழும் வானம்பாடிப் புள் வருந்துமாறு வானம் பொய்த்து வற்கடம் நேர்ந்தாலும் காவிரி தன்வளம் சுரத்தலில் தவறாது. குடகு மழையில் தோன்றும் காவிரியாறு எங்கும் பொன்னைக் கொழிக்கும். காவிரி நீரில் பொன்னணுக்கள் கலந்திருப்பதாகக் கூறுவர். அதனால் பொன்னி என்ற பெயரும் காவிரிக்கு உண்டு.”[22] இத்தகைய காவிரி திருமால் திருத்தலங்கள் தோறும் சென்று இயற்கை வளங்களைப் பெருக்குகிறது.

**எண் திசைக் கணங்களும் இறைஞ்சியாடு தீர்த்த நீர்**
**வண்டிரைத்த சோலைவேலி மன்னு சீர் அரங்கமே**

**(நா.தி.பி.பா. 801)**

**பொன்னிசூழ் அரங்க மேய பூவை வண்ண (நா.தி.பி.பா. 870)**

எட்டுத்திசைக் காவலர்களும் வணங்கி நீராடுகின்ற புனித நீருடைய காவிரி பாய்கின்ற அழகிய திருவரங்கத்திலே காயாம்பூ மேனியையுடைய மாயோன் சயனித்திருக்கின்றான். திருமாலே! கேள் எனது ஆத்மாவாகிய பாவச் சேற்றுக்குள் உன்னைக்குறித்த பக்தி என்ற விதை விழுந்து முளைத்தது. உனது திருப்பாதக் கமலம் என்கிற அழகிய சுடர் மிக்க மலரிலே நிலையாக வந்து படிந்து செழித்து வளர்ந்துவிட்டது. இனி அதை ஒன்றும் செய்ய இயலாது. எனவே நீ என்னை விட்டுப் போகநினைத்தாலும் அது முடியாது. ஆகவே என்னை ஆட்கொள்வதைத் தவிர உனக்கு வேறு வழி இல்லை எனத் திருமாலிடம் கெஞ்சிய ஆழ்வார் பக்தியின் மிகுதியால் மிரட்டுகின்றார்.

**வற்றா வருபுனல் சூழ் பேரான் (நா.தி.பி.பா. 991)**

**புலம்புசிறை வண்டொலிப்ப பூகம் தொக்க**
**பொழில்கள் தொறும் குயில் கூவ, மயில்களால**
**அலம்பு திரைப் புனல்புடை சூழ்ந்து அழகார் செல்வத்து**
**அணியழுந்தூர் நின்றுகந்த அமரர் கோவே.**

**(நா.தி.பி.பா. 1621)**

வண்டுகள் ரீங்காரம் செய்யும் பாக்குமரத் தோட்டங்களில் குயில்கள் கூவ அதற்கேற்றபடி மயில்கள் ஆட, பெரிய அலைகளைக் கொண்ட காவிரி நதி நீரால் சூழப்பட்ட அழகு மிகுந்த செல்வ வளம் கொண்ட திருவழுந்தூரில் மகிழ்ச்சியோடு நின்றருளும் தேவர்களது தலைவனைக் கண்டு வணங்க வேண்டும் என்கின்றார் திருமழிசை ஆழ்வார்.

**பொழில் சூழ் வருபுனற் காவிரித் தென்னரங்கன்**

**(நா.தி.பி.பா. 212)**

வண்டுகள் தேனை உண்டு மகிழ்ந்திருக்கும் சோலைகளால் சூழப்பட்ட நீர்ப் பெருக்கையுடைய காவிரி சுற்றிவரும் திருவரங்கத்தில் எம்பெருமான் பள்ளிகொண்டுள்ளான். அங்கே சென்று பரந்தாமனை வணங்கி அவனருளைப் பெற்றுக்கொள்ளுங்கள் என மானிடப்பிறவிக்கு வழிகாட்டுகின்றார்.

**தோதவத்தித் தூய்மறையோர் துறை படியத் துளும்பி எங்கும்**
**போதில் வைத்த தேன் சொரியும் புனலரங்கம் (நா.தி.பி.பா. 402)**

**சந்தனங்கள் தடவரையாய் ஈர்த்துக் கொண்டு**
**தெழிப்புடைய காவிரிவந்தடி தொழும் சீர் அரங்கமே**

**(நா.தி.பி.பா. 408)**

சந்தனம், அகில் போன்ற மரக்கட்டைகளை இழுத்துக் கொண்டு வரும் நீர்ப்பெருக்கை உடைய காவிரி நதி சுற்றிவரும் திருவரங்கத்திலுள்ள அந்தணர்கள் காவிரியில் நீராட மூழ்கும் போது நீர் ததும்பி நாலாபுறமும் தெறிக்க, கரையிலுள்ள செடிகளில் பூக்கள் அசைந்து அவற்றின் தேன் காவிரி நீரில் கலக்கும் செழிப்புமிக்க இடத்தில் திருமால் இருக்கின்றான் என்கிறார் பெரியாழ்வார்.

**கங்கை**

‘‘கங்கை நீரில் நோய்க்கிருமிகளைவிட்டால் அவை உயிர் வாழ்வதில்லை இறந்து போகின்றன. இந்த சக்தி கங்கை நீருக்கு இருப்பது விஞ்ஞானபூர்வமாக நிரூபிக்கப்பட்டுள்ளது. கங்கை நதி இமயமலைச் சாரலில் உற்பத்தியாகிறது. இமயமலையில் ஏராளமான மருத்துவ மூலிகைகள் இருக்கின்றன. இமயமலைப் பாறைகளில் உள்ள உப்புக்கள் மருத்துவ குணம் கொண்டவை. இவற்றை எல்லாம் சேர்த்து வடித்துவரும் கங்கை மருத்துவக் குணம் கொண்டதாக விளங்குகிறது. உடல் நோய்களை ஆற்று நீர் போக்குகிறது. அக்காரணத்தாலே கங்கை ஆற்றின் கரையில் மிகுதியாக கோயில்கள் தோன்றின என

இரா.இலட்சாராமன் குறிப்பிட்டுள்ளார்.''[23] இத்தகைய புனித நீரான கங்கை, திருமால் திருத்தலங்கள் தோறும் சென்று பாய்கின்றது.

**விசும்பில் வெண்துகில் கொடியென விரிந்து**

**வலந்தரு மணிநீர்க் கங்கையின் கரைமேல் வதரியாச் சிரமத்துள்ளானே.**

**(நா.தி.பி.பா. 980)**

ஆகாயத்தின் வெண்மையான கொடியாடையென விரிந்து மிடுக்கான வேகமுடையதாய் ஸ்படிகமணி போல் தெளிவான நீர்நிறைந்த கங்கைக் கரையில் உள்ள திருவதரியாச்சிரம் என்ற திருத்தலத்தில் இறைவன் வீற்றிருக்கின்றான். அவனைச் சென்று தரிசித்தால் அந்தத் தெளிவான நீர் போல, நம் மனதும் தெளிவடையும், திருமாலின் உண்மையான அருளையும் பெற முடியும் எனத் திருமங்கையாழ்வார் குறிப்பிடுகின்றார்.

**கங்கை கங்கை என்ற வாசகத்தாலே கடுவினை களைந்திடுகிற்கும்**

**கங்கையின் கரைமேல் கைதொழ நின்ற கண்ட மென்னும் கடிநகரே**

**(நா.தி.பி.பா. 391)**

**சதுமுகன் கையிற் சதுப்புயன் தாளிற் சங்கரன் சடையினில் தங்கிக்**

**கதிர்முக மணி கொண்டிழிபுனல் கங்கை (நா.தி.பி.பா. 393)**

**இமவந்தம் தொடங்கி இருங்கடல் அளவும்**

**இருகரை உலகு இரைத்து ஆட**

**கமையுடைப் பெருமைக் கங்கையின்**

**கரைமேல் கண்டமென்னும் கடிநகரே (நா.தி.பி.பா. 394)**

பிரம்மனின் கையிலிருந்தும், திருமாலின் பாதங்களில் இருந்தும் சிவனின் ஜடாமுடியிலும் அடுத்து அடுத்து தங்கி இரத்தினங்களை அடித்துக் கொண்டு வருகின்ற கங்கை இமயம் முதல் குமரி வரையிலுள்ள மக்கள் நீரை இறைத்து நீராட, செய்ய அவர்களது பாவங்களையெல்லாம் தாங்கும் பெருமை பெற்றவள் கங்கை. அதோடு மட்டும் இல்லாது கங்கை கங்கை என்று சொல்லி எந்த

நதியில் நீராடினாலும் கொடிய பாவங்களை ஒழிக்கும் வல்லமை பெற்றவள் கங்கை. அத்தகைய கங்கையில் நீராடி அங்கு வீற்றிருக்கின்ற எம்பிரானை வணங்கினால் நமக்குப் பிறவிப் பயன் கிடைக்கும் என்கின்றார் பெரியாழ்வார்.

**பொன்னி**

**பரந்து பொன்னிரந்து நுந்தி வந்தலைக்கும் வார் புனல்**

**(நா.தி.பி.பா. 802)**

கோதண்டத்தை வளைத்து அம்பு எய்து இராவணனின் பத்துத் தலைகளையும் மண்ணில் உதிரச்செய்த ஸ்ரீமன்நாராயணன் விரும்பி உறைகின்ற இடம் பொன்னி நதி வளம்கொழிக்கும் திருவரங்கமாகும்.

**மடலெடுத்த நெடுந்தெங்கின் பழங்கள் வீழ**
**மாங்கனிகள் திரட்டுருட்டா வருநீர்ப் பொன்னி**
**திடலெடுத்த மலர் சுமந்து அங்கு இழியும் நாங்கூர்த்**
**திருத்தொற்றியம் பலத்து என் செங்கண்மாலே**

**(நா.தி.பி.பா. 1280)**

நிறையப் பாளைகளுடன் உயர்ந்திருக்கும் தென்னை மரங்களிலிருந்து மட்டையுள்ள தேங்காய்கள் மாமரங்களில் விழ, அதனால் உதிர்ந்த மாம்பழங்களை உருட்டிக்கொண்டும், மலர்களைச் சுமந்துகொண்டும் பெருகி வரும் பொன்னி நதி, மேட்டு நிலங்களிலிருந்து வாய்க்காலாகப் பிரியும் திருநாங்கூர் திருத்தெற்றியம்பலத்தில் எனது செந்தாமரைக்கண்ணன் வீற்றிருக்கின்றான். பொன்னி நதியில் நீராடி அவனை வணங்கினால் எல்லா வளங்களையும் தந்தருள்வார் எனத் திருமங்கையாழ்வார் எடுத்துரைக்கின்றார்.

**நிலம் பரந்து வரும் கலுழிப் பெண்ணையீர்த்த**
**நெடுவேய்கள் படுமுத்த முந்தவுந்தி**
**புலம்பரந்து பொன் விளைக்கும் பொய்கை வேலிப்**
**பூங்கோவலூர் தொழுதும் போது நெஞ்சே (நா.தி.பி.பா. 2057)**

வேண்டி நிற்போர் மனநிறைவு கொள்ளும் அளவு கொடுக்கும் நீண்ட திருக்கரங்களைக் கொண்ட தேவர்களின் தலைவன். அழகிய சிறகுகளையுடைய கருடனை வாகனமாகக் கொண்டவன். அவன் விரும்பி இருக்கின்ற திருத்தலம், அவன் புகழைப் பாடிக்கொண்டு, பூமி எங்கும் பரந்து பெருகிவருவதால் கலங்கிய தென்பெண்ணை நதி நீண்ட மூங்கில்களை வேரோடு பறித்துச் செல்ல அவை உதிர்க்கும் முத்துக்கள் எல்லாம் கழனிகளில் சேர்த்து, பொன்னை விளைவிக்கக்கூடிய பொய்கைகளை வேலியாகக்கொண்ட திருக்கோவலூருக்குச் சென்று வணங்குவோம் எனத் திருமங்கையாழ்வார் பாடியுள்ளார்.

**நீர் நிலைகள்**

திருமால் வீற்றிருக்கின்ற திருத்தலங்களிலே பெரிய அருவிகளும், சுனைகளும், தடாகங்களும் ஊற்றுகளும் அமைந்துள்ளன. திருப்பாற்கடலில் பள்ளி கொண்டிருக்கின்ற எம்பிரான், அவர் இருக்கிற திருத்தலங்களில் கடல் போன்ற நதியினையும் நீர் ஊற்றுக்களையும் கொண்டு எப்பொழுதும் குளிர்ச்சியுடனே வீற்றிருக்கின்றார்.

**தேன்பொருந்து பூம்பொழில் தழைக் கொழும்**
**செழுந்தடங் குடந்தை (நா.தி.பி.பா. 811)**

திருமலையிலே கனத்த பனிப் பொழிவால், உயர்ந்து வளர்ந்த மூங்கில்கள் பனிக்கட்டிகளின் பாரம் தாளாமல் தரையில் வளையும். சூரியக்கதிர்கள் வீசுகையில் பனிஉருகி மூங்கில் உலர்ந்து விண்ணை முட்டும்படி உயர்ந்து நிற்கும், அத்தகைய திருவேங்கடமலையிலே நீ நின்ற கோலத்தில் காட்சியளிக்கின்றாய், இத்தகைய இயற்கை எழில் மிகுந்த, வண்டுகள் தேன் அருந்தி வாழும் தழைத்த தோட்டங்களையும், நீர் நிரம்பிய தடாகங்களையும் கொண்ட திருக்குடத்தையில் சயனித்திருக்கின்றான் திருமால் எனத் திருமங்கையாழ்வார் பாடியுள்ளார்.

**கோலச் செந்நெற்கள் கவரிவீசும்**
**கூடுபுனல் திருப் பேரெயிற்கே (நா.தி.பி.பா. 3480)**

நீலமேக நிறத்தவனான எம்பெருமான் என்முன்னே நிற்கின்றான். அணைக்கலாம் என்று ஓடினால் கைக்கு அகப்படமாட்டேன் என்கின்றான். அப்படி ஓடிச்சென்றவன் இருக்கின்ற இடம், நாளும் நான்கு வேதங்களைப் போற்றும் அந்தணர்களும், செழிப்பான செந்நெற் பயிர்கள் கவரி வீசும், ஆற்று நீர், ஊற்று நீர், மழை நீர் மூன்றும் கூடும் திருப்பேரையாகும். அங்கே காலம் தாழ்த்தாமல் சென்று அங்குள்ள இறைவனை வணங்க வேண்டும் என்கின்றார் நம்மாழ்வார்.

**தேனார் பூஞ்சோலைத் திருவேங்கடமலை மேல்**
**கானாறாய்ப் பாயும் கருத்துடையே னாவேனே**

**(நா.தி.பி.பா. *683*)**

இரவிலே ஆகாயத்தை ஆளும் பூரண சந்திரனைப் போல வெண்கொற்றக் குடைக்குக் கீழ் மக்களுக்கெல்லாம் மன்னனாகப் புகழ்பெற்ற அரசையாளும் ராஜபோக வாழ்வை நான் கேட்கவில்லை, தேன் நிறைந்த பூக்களைக் கொண்ட சோலைகளையுடைய திருவேங்கட மலை மீது ஒரு காட்டாறாய்ப் பாயும் பேறு கிடைத்தால் அதுவே என் பாக்கியம் எனக் குலசேகர ஆழ்வார் குறிப்பிட்டுள்ளார். ‘‘திருவேங்கடச் சுனையில் மீனாய்ப் பிறக்கும் விதியுடையேன் ஆவேனே; வேங்கடத்துச் செண்பகமாய் நிற்கும் திருவுடையேனாவேனே; படியாய்க் கிடந்துன் பவளவாய்க் காண்பேனே... என்றெல்லாம் இறைவட்டத்தில் கொண்ட ஆர்வம் கொழுந்து விட்டெரிய இறுதியில் எம்பெருமான் பொன்மலை மேல் ஏதேனுமாவேனே என்று முடிக்கிறார்’’[24] என ப.அருணாசலம் குறிப்பிடுகிறார்.

**மேகங்கள்**

மலைமேகமானது எப்பொழுதும் கருமையான நிறத்துடனே தோற்றமளிக்கும். எப்பொழுதும் திருமாலின் நினைவாக இருக்கும் ஆழ்வார்கள். அம்மழை மேகத்தின் தோற்றத்தையும் நிறத்தையும் காணும் போது திருமாலைப் போன்றே தோன்றுகிறது. திருமாலின் நிறத்தைக் கொண்டுள்ளதால் இவை திருமாலே நெருங்கிய தொடர்புடையவை எனக் கூறுகின்றனர். எனவே மேகங்களைத் திருமாலிடம் தூது அனுப்புவதாகவும் பாடல்கள் புனைந்துள்ளனர்.

**பின் துரக்கும் காற்றிழந்த சூல் கொண்டல் பேர்ந்தும் போய்**

**வன் திரைக்கண் வந்தணைந்த வாய்மைத்தே (நா.தி.பி.பா. 2647)**

கடலின் நீரை அள்ளிக் கொண்டு ஆகாயத்தில் பரவி, சூல் கொண்ட மேகத்தைக் காற்று ஓரிடத்தில் நிற்க விடாமல் அடித்துத் துரத்துகிறது. கடைசியில் காற்று நின்றபின் கார்மேகம் மழையாகக் கடலில் சேர்ந்து விடுகிறது. அதனைப் போலவே இராமபிரானும் பல அவதாரங்களை எடுத்து, பல இடங்களில் சென்று இருந்தாலும் இறுதியில் திருப்பாற்கடலில் வந்து பள்ளி கொண்டுள்ளார். அதுபோல் நம் மனதில் பல எண்ணங்கள் தோன்றினாலும், இறுதியில் எம்பெருமானையே மனதில் கொள்ளவேண்டும் என்கிறார் நம்மாழ்வார்.

**விண்ணீல மேலாப்பு விரித்தாற் போல மேகங்காள்**

**தெண்ணீர்பாய் வேங்கடத் தென் திருமாலும் போந்தானே**

**(நா.தி.பி.பா. 577)**

ஆகாயம் முழுவதும் நீலநிற ஆடைகட்டி விரித்துக் கட்டியது போல் உள்ள மேகங்களே, சிறந்த முத்துக்களையும், பொன்னையும் பொழிகின்ற கார்மேகங்களே திருமால் உங்களோடு வந்தானா, இல்லை ஏதாவது சொல்லி அனுப்பினானா என ஆண்டாள் மேகங்களிடம் வினவுகின்றார்.

**சலங்கொண்டு கிளர்ந்தெழுந்த தண்முகில்காள்! மாவலியை**

**நிலங் கொண்டான் வேங்கடத்தே நிரந்தேறிப் பொழிவீர்காள்!**

**உலங்குண்ட விளங்கனி போல் உள்மெலியப் புகுந்து**

**என்னை நலங்கொண்ட நாரணர்க்கு என் நடலைநோய் செப்புமினே**

**(நா.தி.பி.பா. 582)**

நீர் நிலைகளிலுள்ள நீரை எல்லாம் கிரகித்துக் கொண்டு கறுத்த பெரிய யானை போல விளங்குகின்ற குளிர்ந்த மேகங்களே உலங்கு (பழ ஈக்கள்) பழங்களை உறிஞ்சி மெலிவுறச் செய்யும். அது போல எம்பெருமான் என்னுள் உள்ள மகிழ்ச்சி எல்லாம் அபகரித்துக் கொண்டான். அவனிடம் போய் நான்

கொண்ட பிரிவுத் துயரினை விளக்கிக் கூறுங்களேன் என ஆண்டாள் புலம்புகின்றாள்.

**வான் கொண்ட கிளர்ந்தெழுந்த மாமுகில்காள்! வேங்கடத்துத்**

**தேன் கொண்ட மலர் சிதறத் திரண்டேறிப் பொழிவீர்கள்''**

**(நா.தி.பி.பா.** 581)

திருவேங்கட மலையிலே ஆகாயத்தை விழுங்கிக் கொண்டு ஓங்கிக் கிளம்புகின்ற, தேன் நிறைந்துள்ள பூக்கள் சிதறும்படி திரள் திரளாக மழையைப் பொழிகின்ற கார்மேகங்களே, எம்பெருமான் என்னிடமிருந்த கைவளைகளைக் கவர்ந்து கொண்டான், அதைத் திருப்பித்தரமாட்டேன் என்கிறான். அதனைத் திருப்பித்தரும்படி அவரிடம் சொல்லுங்கள் என மேகத்தைத் தூது அனுப்புகிறார் ஆண்டாள்.

**கார்காலத் தெழுகின்ற கார்முகில் காள்! வேங்கடத்துப்**

**போர்காலத் தெழுந்தருளிப் பொருதவனார் பேர் சொல்லி**

**நீர்காலத் தெருக்கின் பழ இலைபோல் வீழ்வேனை**

**வார்காலத் தொருநாள் தம் வாசகந்தந் தருளாரே**

**(நா.தி.பி.பா. 584)**

மழைக்காலத்தில் திருமலையில் எழுகின்ற கார்மேகங்களே, யுத்தக்களத்தில் எழுந்தருளிப் போர் செய்து வெற்றிபெற்ற எம்பெருமாளுடைய திருநாமங்களைப் பாடி உயிர் தரித்திருக்கின்றேன். மழைக் காலத்தில் எருக்கின் பழுத்த இலைகள் விழுவது போல் நலிந்து விழும் எனக்கு, பின்வரும் நாட்களில் ஒரு நாளாவது என்னுடன் ஒருவார்த்தையாவது அருள் செய்து பேசும்படிக் கூறுங்களேன் என மேகத்தைத் தூது அனுப்புகிறார்.

**மதயானை போலெழுந்த மாமுகில்காள் (நா.தி.பி.பா. 585)**

திருமலையை இருப்பிடமாகக் கொண்டு வாழ்கின்ற மதயானை போல எழுந்த பெரிய மேகங்களே, எனக்காக எம்பெருமானிடம் தூதாகச் சென்று என்

நிலையினை எடுத்துரையுங்கள் என ஆண்டாள் இயற்கையின் மிகப் பெரிய அம்சமான மழை மேகங்ளை எம்பெருமானிடம் தூதாக அனுப்புகிறார். இவ்வாறு மேகங்களை எல்லாம் தூது அனுப்புவதாக **மேகம் விடு தூது** என்ற தலைப்பில் பத்துப் பாசுரங்களையும் பாடியுள்ளார். இயற்கையை பரந்தாமனிடம் தூது அனுப்புவதாகப் பாடி, தனது பக்தியினை வெளிப்படுத்துவதோடு மட்டுமல்லாது, மற்றவர்களுக்கும் எடுத்துரைத்து திருமாலின் அருளைப் பெற்றுக்கொள்ளுமாறு அறிவுறுத்துகின்றார்.

**மழை**

திருமால் குடி கொண்டுள்ள திருவழுந்தூரில் மழை வேண்டி வேள்வி நடத்த அவசியமில்லாதபடி மேகம் மழையைப் பொழிந்து கொண்டிருக்கிறது. எனவே இயற்கை எழில் கொஞ்சும் அழகுமிக்க இடமாக விளங்குகிறது இத்தலம். இதற்கு அங்குள்ள எம்பெருமானே காரணம் எனக் கூறுகின்றனர் ஆழ்வார்கள்.

**மலை ஏந்திக் கன்மாரி தன்னை (நா.தி.பி.பா. 3510)**

**ஆநிரை பாடிஅங் கேஒருங்க அப்பன்**
**தீமழை காத்துக்குன் றம்எடுத் தானே (நா.தி.பி.பா. 3495)**

ஆலங்கட்டி மழை பொழிந்து தீமை செய்யத்திட்டமிட்ட இந்திரனின் செயலை முறியடித்து, திருமால் அம்மழையில் இருந்து கோவர்த்தன கிரியைப் பெயர்த்து எடுத்து, குடையாகப்பிடித்து மக்களைக் காத்த நாராயணனைக் கண்டு வணங்கவேண்டும் என்கிறார்.

**இந்திரனுக்கென்று ஆயர்கள் எடுத்த எழில் விழவில் பழ நடைசெய்**
**மந்திரவிதியில் பூசனை பெறாது மழை பொழிந்திடத் தளர்ந்து ஆயர்**
**எந்தம் மோடு இன ஆ நிரை தளராமல் எம்பெருமான்! அருளென்ன**
**அந்தமில் வரையால் மழை தடுத்தானைத் திருவல்லிக்கேணிக் கண்டேனே**
**(நா.தி.பி.பா. 1071)**

ஆயர்பாடி மக்கள் இந்திரனுக்காக விழா எடுப்பர். ஒரு முறை கண்ணனுடைய சொற்படி இந்திரனை வணங்காது கோவர்த்தனகிரி மலையை வணங்கினர். இதனால் கோபம் கொண்ட இந்திரன், கல்மழை பெய்து மக்களை அழிக்க எண்ணினான். அப்போது கண்ணன் கோவர்த்தன மலையினைப் பெயர்த்து குடையாகப் பிடித்து மக்களையும், விலங்கினங்களையும் பாதுகாத்தார். திருமால் எந்தச் சூழ்நிலையிலும் தம் பக்தர்களைப் பாதுகாக்கக் கூடியவர் என்ற உண்மையினை இதன் வாயிலாக ஆழ்வார்கள் உணர்த்துகின்றனர்.

**மலை**

ஓங்கி உயர்ந்த மலைச் சிகரங்களை உடைய திருவேங்கட மலையில் எம்பெருமான் வீற்றிருக்கிறான். பாசுரங்களில் மந்திரமலை, கோவர்த்தனகிரி போன்ற மலைகள் பற்றிய செய்திகளும் இடம் பெற்றுள்ளன.

திருமால் விரும்பி உறைகின்ற மலைகளிலே மிக உன்னதமான மலை திருவேங்கடமலை. இம்மலையில் சென்று திருமாலை வணங்கியவர்களுக்கு *108* திருத்தலங்களுக்கும் சென்ற பேறு கிட்டும் என்கின்றனர் ஆழ்வார்கள். குலசேகரஆழ்வார் இதனையே,

**தேனார் பூஞ்சோலைத் திருவேங்கடச் சுனையில்**
**மீனாய்ப் பிறக்கும் விதியுடையே னாவேனே (நா.தி.பி.பா. 678)**

**பண்பகரும் வண்டினங்கள் பண்பாடும் வேங்கடத்துச்**
**செண்பகமாய் நிற்கும் திருவுடையேனாவேனே (நா.தி.பி.பா. 680)**

**தேனார் பூஞ்சோலைத் திருவேங்கடமலை மேல்**
**கானாறாய்ப் பாயும் கருத்துடையே னாவேனே (நா.தி.பி.பா. 683)**

**வெறியார் தண்சோலைத் திருவேங்கட மலைமேல்**
**நெறியாய்க் கிடக்கும் நிலையுடையே னாவேனே (நா.தி.பி.பா. 684)**

திருவேங்கடமலை மீது மீனாக, மலராக, காட்டாறாக, பாதையாகப் பிறக்க விரும்புவதாகப் பாடியுள்ளார்.

“திருமால் திருவேங்கட மாமலையிலே திருவேங்கடனாக எழுந்தருளியுள்ளான். அவன் விரும்பி வாழ்கின்ற திருவேங்கட மாமலையை மட்டுமே தொழுதால் போதும், நம் தீவினைகள் யாவும் தீர்ந்து போகும். பெறவேண்டிய பேற்றினைப் பெறவில்லையே என்னும் துயரம் நீங்கும் படி நாம் பரமபதமாகிய பெரும் பேற்றினைப் பெறுவோம். மேலும் நாம் செய்ய ணேடிய பகவத் – பாகவத் தொண்டுகளுக்குத் தடையாக உள்ளவையும் போகும்.

மலை – உலகிலேயே உயர்ந்ததான இடம்; மாமலை – எப்படிப்பட்ட மலை? மாமலை. எம்பெருமான் உவந்து வாழ்வதால் சிறப்பும், ஏழுமலைகளையுடையதால் மிகப் பெரிதும் ஆகிய மாமலை. ஏழுமலைகள்,

1. அஞ்சனாத்ரி
2. கருடாத்ரி
3. வேங்கடாத்ரி
4. நாராயணாத்ரி
5. சேஷாத்ரி
6. விருஷபாத்ரி
7. விருஷாத்ரி

எத்தகைய மாமலை, வேங்கடமாமலை என்று பொருள் கொள்ளவேண்டும். இம்மலை வருவோர் பாவங்களைத் தீர்த்துவிடும் மாமலை வேங்கட மாமலை என்ற சிறப்புடையது. திருவாகிய திருமகளுக்கும் திருவான திருமால் வாழும் மலை. எனவே திருவேங்கட மாமலையானது என்கிறார் ஏ.பரந்தாமன்.”[25]

**அரங்கனே! தரங்கநீர் கலங்க அன்று குன்று சூழ்**
**மரங்கள்தேய, மாநிலம் குலுங்க மாசுணம் கலாய்**
**நெருங்க நீ கடைந்தபோது நின்றசூரர் என் செய்தார்**
**குரங்கை ஆளுகந்த எந்தை, கூறுதேற வேறிதே (நா.தி.பி.பா. 772)**

மந்திரமலையினை மத்தாகக் கொண்டு, வாசுகி என்னும் பாம்பைக் கயிறாகவும் கொண்டு தேவர்களுக்காகத் திருமால் பாற்கடலைக் கடைந்த செய்தியினை ஆழ்வார்கள் எடுத்துரைக்கின்றனர்.

கண்ணன் ஆயர்குல மக்களிடம் நம் கோவர்த்தனனை வணங்க வேண்டும். ஏன் என்றால் அது தான் நமக்கு அனைத்து வளங்களையும் கொடுக்கிறது. நமது பசுக்களுக்கு நல்ல மேய்ச்சலைக் கொடுக்கிறது. எனவே அதனைத் தான் போற்ற வேண்டும் என்கிறார். இதன் மூலம் கிருஷ்ணன் தனக்கு நன்மை செய்பவர்களைப் போற்ற வேண்டும் என்பதை உணர்த்துகின்றார் என்பதை ஆழ்வார்கள் சுட்டுகின்றனர்.

**வழுவொன் றுமில்லாச் செய்கை வானவர்கோன்**
**வலிப்பட்டு முனிந்து விடுக்கப்பட்ட**
**மழைவந் தெழுநாள் பெய்துமாத் தடுப்ப**
**மதுசூதன் எடுத்து மறித்த மலை**
**இழவு தரியாததோ ரீற்றுப்பிடி இளஞ்சியம்**
**தொடர்ந்து முடுகு தலும்**
**குழவி யிடைக்காலிட் டெதிர்ந்துபொரும்**
**கோவர்த்தன மென்னும் கொற்றக் குடையே**

**(நா.தி.பி.பா. 265)**

இந்திரனின் ஆணைக்கு உட்பட்டு அவனால் ஏவப்பட்ட மேகங்கள் திரண்டு வந்து கோகுலத்தில் ஏழு நாட்கள் இடைவிடாமல் மழையைப் பொழிந்தது. பசுக்களை நனைய வைக்க, கோபாலன் அனைவரையும் காக்க, அடி மண்ணோடு மலையைக் கிளப்பி எடுத்துத் தலைகீழாகப் பிடித்து மக்களைக் காத்த நிகழ்வினைப் பெரியாழ்வார் சுட்டியுள்ளார்.

**அடங்கச்சென்று இலங்கையை ஈடழித்த**
**அனுமன் புகழ்பாடித் தம்குட்டன்களைக்**
**குடங்கை கொண்டு மந்திகள் கண் வளர்த்தும்**

**கோவர்த்தனம் என்னும் கொற்றக் குடையே**

**(நா.தி.பி.பா. 270)**

அனுமன் புகழைத் தாலாட்டாகப் பாடிப் பெண்குரங்குகள் தம் குட்டிகளை உள்ளங்கையில் தாங்கி தூங்க வைக்கும் கோவர்த்தன மலையை அக் குட்டிகளின் உறக்கம் கலையாமல் தாங்கிப் பிடித்தவன் எம்பெருமான்.

**குரவிற் கொடி முல்லைகள் நின்றுறங்கும்**
**கோவர்த்தனம் மென்னுங் கொற்றக் குடைமேல்**

**(நா.தி.பி.பா. 247)**

கருடனை வாகனமாகக் கொண்ட மாதவன், கோவர்த்தனகிரிமேல் படர்ந்திருக்கும் கொடி முல்லைகள் அலுங்காதபடி தூக்கிக் குடையாகப் பிடித்திருக்கிறான் என்கின்றார் பெரியாழ்வார். திருமாலின் இந்நிகழ்வினைப் போற்றி, பத்துப் பாசுரங்களை அமைத்துள்ளார் பெரியாழ்வார்.

**தொகுப்புரை**

ஐம்பூதங்களான நிலம், நீர், காற்று, ஆகாயம், நெருப்பு என இவை ஒவ்வொன்றும் மிகப் பெரிய சக்தியாகும். ஐம்பூதங்கள் தான் உயிரினங்கள் நிலைத்து வாழ்வதற்குத் தேவையான அனைத்துச் சூழ்நிலைகளையும் உருவாக்குகின்றன. ஐம்பூதங்கள் சமநிலையில் இருந்தால் மட்டுமே இவ்வுலக இயக்கம் சீராக அமையும். இவற்றில் ஒன்று அதிகரித்தாலும், குறைந்தாலும் பெரிய பேரிடரை உருவாக்கும். உலக இயக்கத்தின் மிகப்பெரிய சக்தியான பஞ்சபூதங்களை மனிதன் வணங்கினான். நிலத்தை பூமாதேவியாக, நீரை வருணதேவனாக, காற்றை வாயுதேவனாக, ஆகாயத்தை இந்திரதேவனாக, நெருப்பை அக்னிதேவனாக வணங்கினர். பஞ்சபூதங்கள் அனைத்தும் சிறந்து விளங்கும் இடம் இயற்கை அழகுமிக்க வளமான இடமாகக் காட்சியளிக்கிறது.

நல்ல நிலம், அதிக அளவு நீர், தூய்மையான காற்று, போதுமான அளவு மழை, சீரான வெப்பநிலை இவை அனைத்தும் சீராக விளங்கக்கூடிய இடத்தில் மனித வாழ்வு சிறப்படைகிறது. அங்கே பசி, பட்டினி, திருட்டு என எந்தத் தீய

பழக்கங்களும் இல்லாத சிறந்த சமுதாயமாக விளங்குகிறது. இயற்கையே மனிதனுக்குச் சிறந்த உணவாகவும், மருந்தாகவும் விளங்குகிறது. இயற்கையை ஆளுகின்ற பஞ்சபூதங்களுக்கு எல்லாம் சக்தியைக் கொடுக்கக்கூடிய மிகப் பெரிய சக்தியே இறைசக்தியாகும். அவனே திருமால் என்கின்றனர் ஆழ்வார்கள். பஞ்சபூதங்களின் வடிவில் இருந்து அவற்றை இயக்குபவன் திருமாலே.

உயிரினங்கள் அனைத்தும் இந்த பஞ்சபூதங்களின் அடிப்படையில் அமைந்தவை. பஞ்சபூதங்களுக்கெல்லாம் தலைவனான திருமாலே ஒவ்வொரு உயிரினுள்ளும் இருந்து அவற்றை எல்லாம் இயக்கிக்கொண்டிருக்கிறான். எனவே திருமால் படைத்த உயிர்கள் அனைத்திலும் அவனையே காண்கின்றனர் ஆழ்வார்கள். ஒவ்வொரு உயிரினுள்ளும் திருமால் வீற்றிருக்கின்றார் என்பதை ஆழ்வார்களின் பாசுரங்கள் உணர்த்துகின்றன. ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் பஞ்சபூதங்களின் வடிவமாக இருக்கும் திருமாலை மனிதன் உணர்ந்து வழிபட்டால், மனிதவாழ்வு செம்மை அடையும், எல்லா வளங்களையும் பெற்று வாழ முடியும் என்ற கருத்தை ஆழ்வார்கள் எடுத்துரைக்கின்றனர்.

பஞ்ச பூதங்களுக்கெல்லாம் தலைவனான திருமால் அவற்றின் வடிவமாக இருந்து மக்களை ஆட்டுவதும், ஆட்டுவிப்பதுமாகிய வினையாற்றுகிறான் என்கின்றனர். இயற்கையைப் படைத்தவன் இறைவன். எனவே அவனது படைப்பில் அவனையே காண்கின்றனர் ஆழ்வார்கள். உலகளந்த பரந்தாமனின் திருவடிகளின் நிறம் செந்தாமரை போல் உள்ளது. திருமேனியின் நிறமோ பூமியைச் சூழ்ந்திருக்கின்ற கடல் நீரின் நிறத்தை ஒத்துள்ளது. திருமுடியின் நிறமோ ஒற்றைச் சக்கரத்தேரில் வலம் வரும் சூரியனை ஒத்துள்ளது. அவனது ஒளியும் பகலவனின் பிரகாசத்தை ஒத்துள்ளது. இத்தகைய அழகு பொருந்திய எம்பெருமானின் திருவடியைச் சரணடைந்து அவனது அருளைப் பெறவேண்டும் என்கின்றனர் ஆழ்வார்கள். திருமாலை அழைக்கும் போது கூட கார் முகில் வண்ணா, கருங்கடல் நிறத்தவா, கார்மேக வண்ணா என்கின்றனர். இயற்கையைப் படைத்தவன் இறைவன். அந்த இயற்கை தனக்குள்ளேயும் உள்ளது. இறைசக்தியும் நானே, இயற்கையும் நானே என்பதை உணர்த்தவே எம்பிரான் இயற்கை நிறங்களைப் பெற்று இயற்கையாகவே தோற்றமளிக்கின்றார். இத்தகைய

இறைவனைக் கண்டு வணங்கி அவன் அருள் பெற்று இன்பமான வாழ்வை மக்கள் அமைத்துக்கொள்ள வேண்டும் என்பதை ஆழ்வார்கள் எடுத்துரைக்கின்றனர்.

அன்பே வடிவமாக விளங்கக்கூடிய எம்பெருமான் அடியவர்களுக்கு அரசனைப் பேலவும், தேவர்களைப் போலவும், தாய் போலவும் இருந்து பல நன்மைகளைச் செய்யக்கூடியவர். தன் அடியவர்களுக்குத் தன்னையே கொடுக்கக்கூடிய அந்தப் பரந்தாமன் அலை கடலிலே பல தலைகள்கொண்ட ஆதிசேடன் மீது படுத்திருக்கின்ற கோலம் பச்சை நிறம் கொண்ட மரகத மலையொன்று சமுத்திர ராஜன் கை மீது கண்வளர்வது போலிருக்கிறது. பவளவாய் கொண்ட அந்த மரகத மலை சிவந்த மேகத்தை அரையில் உடுத்து அதனால் எம்பெருமான் சிவப்பாகத் தெரியும் சூரியனைப் போல சிவப்பு பீதாம்பரத்தை அணிந்துள்ளார். திருமுடியிலே கதிரவனையே சூடிக் கொண்டிருப்பது போல் காட்சியளிக்கிறது. சுதர்சனம், பாஞ்சசன்னியம், நாந்தகம், கௌமோதகி, சார்ங்கம் முதலான ஒளி வீசும் பஞ்சாயுதங்களையும் குளிர்ச்சியான சந்திரனைப் போல் தரித்துக் கொண்டிருக்கின்றாய். நீ அணிந்துள்ள எல்லா ஆபரணங்களும் பலவகையான நட்சத்திரங்களைப் போல காட்சி அளிக்கின்றன. உன்னுடைய இந்த அழகிய கோலத்தை சிவன், பிரம்மன், இந்திரன் முதலானோர் கண்டு வணங்குகின்றனர். இந்த அரிய காட்சியினை பக்தனாகிய எங்களுக்கும் அருள வேண்டும் எனத் திருமாலின் அழகிய உருவத்தை, பல இயற்கைப் பொருட்களோடு ஒப்புமைப்படுத்தி ஆழ்வார்கள் தம் பாசுரங்களில் பதிவுசெய்துள்ளனர்.

திருமாலே கேள், எனது ஆத்மாவாகிய பாவச் சேற்றுக்குள் உன்னைக் குறித்த பக்தி என்ற விதை விழுந்து முளைத்தது. உனது திருப்பாதக் கமலம் என்கிற அழகிய சுடர் மிக்க மலரிலே நிலையாக வந்து படிந்து செழித்து வளர்ந்துவிட்டது. இனி அதை ஒன்றும் செய்ய இயலாது. எனவே நீ என்னை விட்டுப் போகநினைத்தாலும் அது முடியாது. ஆகவே என்னை ஆட்கொள்வதைத்தவிர உனக்கு வேறு வழி இல்லை எனத் திருமாலிடம் கெஞ்சிய ஆழ்வார் பக்தியின் மிகுதியால் மிரட்டுவதையும் பாசுரங்களில் காணமுடிகிறது.

இரவிலே ஆகாயத்தை ஆளும் பூரண சந்திரனைப் போல வெண்கொற்றக் குடைக்குக் கீழ் மக்களுக்கெல்லாம் மன்னனாகப் புகழ்பெற்ற அரசையாளும் ராஜபோக வாழ்வை நான் கேட்கவில்லை, தேன் நிறைந்த பூக்களைக் கொண்ட சோலைகளையுடைய திருவேங்கட மலை மீது ஒரு காட்டாறாய்ப் பாயும் பேறு கிடைத்தால் அதுவே என் பாக்கியம் எனக் குலசேகர ஆழ்வார் குறிப்பிட்டுள்ளதன் வழி ஆழ்வார்களின் உண்மையான தொண்டு நெறியினை அறியமுடிகிறது.

மலைமேகமானது எப்பொழுதும் கருமையான நிறத்துடனே தோற்றமளிக்கும். எப்பொழுதும் திருமாலின் நினைவாக இருக்கும் ஆழ்வார்கள், அம்மழை மேகத்தின் தோற்றத்தையும், நிறத்தையும் காணும் போது திருமாலைப் போன்றே தோன்றுகிறது. திருமாலின் நிறத்தைக் கொண்டுள்ளதால் இவை திருமாலே நெருங்கிய தொடர்புடையவை என்கின்றனர். சமுத்திரத்தின் நீரை அள்ளிக் கொண்டு ஆகாயத்தில் பரவி, சூல் கொண்ட மேகத்தைக் காற்று ஓரிடத்தில் நிற்க விடாமல் அடித்துத் துரத்துகிறது. கடைசியில் காற்று நின்றபின் கார்மேகம் மழையாகக் கடலில் சேர்த்து விடுகிறது. அதனைப் போலவே இராமபிரானும் பல அவதாரங்களை எடுத்து, பல இடங்களில் சென்று இருந்தாலும் இறுதியில் திருப்பாற்கடலில் வந்து பள்ளி கொண்டுள்ளார். அதுபோல் நம் மனதில் பல எண்ணங்கள் தோன்றினாலும், இறுதியில் எம்பெருமானையே மனதில் கொள்ளவேண்டும் என்கின்றனர் ஆழ்வார்கள். இயற்கையை பரந்தாமனிடம் தூது அனுப்புவதாகப் பாடி, தங்களது பக்தியினை வெளிப்படுத்துவதோடு மட்டுமல்லாது, மற்றவர்களுக்கும் எடுத்துரைத்து திருமாலின் அருளைப் பெற்றுக்கொள்ளுமாறு அறிவுறுத்துகின்றன.

## சான்றெண் விளக்கம்

1. இரா. இளங்குமரனார் (உ.ஆ), தொல்காப்பியம், மரபியல், நூ.90

2. பே.சு. கோவிந்தராசன் (உ.ஆ), திருக்குறள், குறள்.151

3. இரா. நாராயணன், திருக்குறளில் உயிரினங்கள், ப.18

4. ந.மு.வேங்கடசாமி நாட்டார் (உ.ஆ), சிலப்பதிகாரம், மங்கலவாழ்த்து, பா.1

5. பே.சு. கோவிந்தராசன் (உ.ஆ), திருக்குறள், குறள்.14

6. மேலது, குறள்.18

7. இரா. நாராயணன், திருக்குறளில் உயிரினங்கள், ப.32

8. பே.சு. கோவிந்தராசன் (உ.ஆ), திருக்குறள், குறள்.13

9. பே.சு. கோவிந்தராசன் (உ.ஆ), திருக்குறள், குறள்.16

10. இரா. நாராயணன், திருக்குறளில் உயிரினங்கள், ப.37

11. மேலது, ப.24

12. ப.அருணாசலம், பக்தி இலக்கியம், ப.286

13. ச.வே.சுப்பிமணியன் (ப.ஆ), பன்னிருதிருமுறை, திருநாவுக்கரசர் தேவாரம், பா – 5090

14. முத்துளத்திராசன், கம்பர் காட்டும் கார்காலம், ப.21

15. ச. வே. சுப்பிரமணியன் (ப.ஆ), சங்க இலக்கியம், பரிபாடல்.13.14 – 25

16. மேலது – (25 – 35)

17. இரா. இராசேந்திரன், திருப்பாவை நயவுரை, ப – 33

18. இளங்கோ, திருப்பாவையில் புதுக்கவிதை, ப – 12

19. கு. தட்சணாமூர்த்தி, இயற்கைப் பாடல் வாணிதாசன் – தங்கப்பா – ஓர் ஆய்வு, ப – 31

20. முத்துளத்திராசன், கம்பர் காட்டும் கார்காலம், ப – 38

21. வே. முத்துலக்குமி, இலக்கிய இயற்கை, ப – 45

22. மேலது, ப – 45

23. இரா. இலட்சாராமன், இயற்கைக்காட்சியும் இறைமைக்காட்சியும், ப — 38

24. ப.அருணாசலம், பக்தி இலக்கியம், ப — 313

25. ஏ.பரந்தாமன், ஆழ்வார்களும் திருவேங்கடவனும், ப — 109

# முடிவுரை

மனிதன் இயற்கையோடு இயற்கையாக வாழ விரும்பியவன். கால மாற்றத்தினாலும், அறிவியல் வளர்ச்சியினாலும் மனிதன் இன்றைய சூழ்நிலையில் வாழப் பழகிக்கொண்டான். இயற்கை இது தான் என வரையறுத்துக் கூறமுடியாத அளவிற்கு இயற்கை பரந்து விரிந்து கிடக்கிறது. மனித வரலாற்றிற்கு ஆதாரமாகவும், கலை, மொழி, இனம், பண்பாடு என அனைத்திற்கும் ஆதாரமாகவும் விளங்குவது இயற்கை. தொல்காப்பியர், இயற்கை பொருள்களுக்குள் அடங்குவனவற்றை முதல், கரு, உரி எனப் பகுத்துள்ளார்.

சங்க இலக்கியங்களில் மக்களின் வாழ்வு, பண்பாடு, இனம், அங்குள்ள இயற்கைச் சூழ்நிலைகள் என அனைத்தும் பதிவுசெய்யப்பட்டுள்ளன. சங்கப் புலவர்கள் நிலங்களை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐந்து வகையாகப் பிரித்து ஒவ்வொன்றிற்கும் எனத் தனித்தனியே உள்ள இயற்கைச் சூழ்நிலையைச் சுட்டியுள்ளனர்.

சங்க காலப் புலவர்கள் உணர்ச்சிகளையும் உண்மைகளையும் தெளிவுறுத்துங்கால் இயற்கைக் காட்சிகளை வன்மைமிக்க கருவியாகப் பயன்படுத்தியுள்ளனர். இயற்கைக் காட்சிகளைப் பாடுதலில் எவ்வகைத் தயக்கமும் அப்புவலர்களிடையே காணப்படவில்லை. பாடலில் உட்கருக்களோடு மிக நெருங்கிக் கலந்த நிலையில் இயற்கை வருணனை வருகின்ற இடங்கள் மிகப்பல உள்ளன. அத்தகைய இடங்களில் இயற்கை வேறு வாழ்வின் கூறு வேறு என்று பிரித்துணர முடியாத அளவுக்குப் பின்னிப்பிணைப்புண்டு கிடக்கின்றது. வாழ்வின் கூறுகளுடன் ஒப்ப வைத்து நோக்குவதோடு, தனி நிலையிலிருந்து காணுதற்குரிய முறையிலும் எழில் நிறைந்தனவாய்ச் சங்க இலக்கியத்தில் இனிய இயற்கைக் காட்சிகள் இடம் பெறுகின்றன. சங்க இலக்கியம் பயில்வார் அவற்றுள் வரும் இயற்கைக் காட்சிகளைப் உணர்ந்து மகிழ்கின்றனர்.

சங்க இலக்கியங்களில் வரும் பாட்டுடைத் தலைமக்களின் நாட்டு வளத்தினைச் சுட்டவும், உவமைக்காகவும் இயற்கையைப் புலவர்கள் அழகாகப் புனைந்துள்ளனர்.

நீதி நூல்களில் முதன்மையாகக் கருதப்படும் திருக்குறளில் பெரிதும் இயற்கைச் செய்திகள் பதிவு செய்யப்பட்டுள்ளன. மழையின் சிறப்பினை உணர்த்துவதற்காகத் திருவள்ளுவர் வான்சிறப்பு என்ற அதிகாரத்தைப் படைத்துள்ளார். மலர்கள், விலங்குகள், பறவைகள் போன்ற இயற்கை நிகழ்வுகளை உவமைகளாகப் பயன்படுத்தியுள்ளார். தான் சொல்கின்ற கருத்துக்கு ஆதாரமாக இயற்கையைப் பயன்படுத்தியுள்ளார்.

காப்பியங்கள், பக்திஇலக்கியங்கள், சிற்றிலக்கியங்கள் முதல் இருபதாம் நூற்றாண்டு இலக்கியங்கள் வரை அனைத்து இலக்கியங்களிலும் இயற்கை பற்றிய செய்திகள் புனையப்பட்டுள்ளன.

நம்மாழ்வாரிடம் இருந்து ஆழ்வார்கள் அருளிச் செய்த பாசுரங்களைப் பெற்று நாலாயிரத் திவ்வியப் பரபந்தமாகத் தொகுத்தவர் நாதமுனிகள். ஆழ்வார்கள் கி.பி 7 முதல் கி.பி 9 வரையிலான காலகட்டத்தில் வாழ்ந்தவர்கள் ஆவர். ஆழ்வார்கள் திருமாலின் ஒவ்வொரு பொருளின் அம்சமாகத் தோன்றியவர்கள் என்பதும், திருமாலின் முழு அருளையும் பெற்றவர்கள் ஆழ்வார்கள் என்பதும் மரபு சார்ந்த நம்பிக்கையாகும்.

இயற்கையின் வழியே இறைவனை வழிபட்ட ஆழ்வார்கள் இயற்கையின் படைப்பாகிய பறவைகளின் வழியாகத் தம் பக்தியினை வெளிப்படுத்தியுள்ளனர். அவர்களின் பாசுரங்களில் கருடன், கொக்கு, அன்னம், கிளி, மயில், வண்டு, நாரை, அன்றில், குருகு, கோழி, புறா, காக்கை, செம்போத்து, நாகணவாய், கரிச்சன், குயில் போன்ற பறவைகள் மூலமாகத் தம் பக்தியினை வெளிப்படுத்தியுள்ளனர்.

இரு சிறகுகள் கொண்ட பறவைகள் விசும்பில் பறப்பது போல ஞானம், ஒழுக்கம் என்னும் பண்புகள் இறைவனை அடையும் வழி என்கின்றனர். எனவே, பறவைகளின் இரு சிறகுகளை ஞானத்திற்கான வழியாகக் கொள்கின்றனர். ஆழ்வார்களைப் பறவைகளின் அம்சமாகக் குறிப்பிடுவது வைணவ வழக்காக உள்ளது.

ஆழ்வார்கள் பறவைகள் புனைவில் தம் பக்தியினைப் புலப்படுத்தும் நிலையில் அகப்பொருள் மரபினைப் பின்பற்றியுள்ளனர். திருமாலிடம் இசைபாடப் பறவையை அழைத்தல், திருமாலுக்குக் கைங்கரியம் செய்யப் பறவையை அழைத்தல், திருமால் புகழ்பாடுதல், திருமால் திருத்தலப் பெருமையினை பறவைகள் வழி விளக்குதல், திருமால் மீது ஆழ்வார்கள் கொண்ட பிரிவுத்துயரத்தைப் பறவைகள் வழிப் பாடுதல், பறவையைத் திருமாலிடம் தூது அனுப்புதல் போன்ற பொருண்மைகளின் அடிப்படையில் ஆழ்வார்கள் பாசுரங்கள் அமைத்துள்ளதை அறியமுடிகிறது.

திருமாலிடம் பக்திகொண்ட ஆழ்வார்களுக்கு வண்டின் இரைச்சல் கூட இசையாகக் கேட்பதை அவர்களின் பாசுரங்கள் வழி அறியமுடிகிறது. இறைவனை வழிபடுவதில் பலவகைகளைக் கையாண்டுள்ளனர் ஆழ்வார்கள். இசையின் மூலம் இறைவனை அடைதல், பாடலின் மூலம் இறைவனை அடைதல், இறைவனுக்குத் தொண்டுகள் புரிவதன் வழி அவன் அருளைப் பெறுதல் எனப் பலவழிகளில் திருமாலின் அருளைப் பெற்ற ஆழ்வார்கள் அதனைப் பறவைகளின் மூலமாகவும் செய்விப்பதை அவர்களின் பாசுரங்களில் காணமுடிகிறது.

இறைவனுக்குத் தொண்டு புரிய உயர்திணை, அஃறிணை என்ற பாகுபாடு தேவையில்லை. உண்மையான அன்புடன் செய்யும் தொண்டினைத் திருமால் ஏற்றுக்கொள்வார் என்பதனை, பறவைகளை இறைவனுக்குத் தொண்டு புரிய அழைப்பதன் மூலம் நிறுவியுள்ளனர்.

திருமால் வீற்றிருக்கின்ற திருத்தலங்களின் சிறப்பினைப் பறவைகளின் வழியாக எடுத்துரைத்துள்ளனர். ஆழ்வார்கள் திருமால் மீது கொண்டுள்ள பக்தியினைப் பறவையைத் தூதாக அனுப்புவதன் மூலம் அறியமுடிகிறது. இறைவன் பறவைகளின் வேண்டுதலைக் கூட ஏற்றுக் கொள்வார் என்பதை உணர்த்தவே பறவையைத் திருமாலிடம் தூதாக அனுப்பியுள்ளனர். ஆழ்வார்கள் நினைக்கின்ற, காண்கின்ற அனைத்திலும் திருமாலையே எண்ணிக் கொண்டிருக்கின்ற நிலையினை அவர்கள் திருமாலின் நிறத்தோடு பறவைகளின் நிறத்தை ஒப்பிடுவதன் மூலம் உணரமுடிகிறது.

திருமாலிடத்தில் உயிர்கள் அனைத்தும் ஒன்றே, இறைவனிடத்தில் மனிதர்கள், பறவைகள், விலங்குகள், உயர்ந்தவர், தாழ்ந்தவர், சாதி, மதம் என எந்தப் பாகுபாடும் அவனிடம் இல்லை. உண்மையான அன்புடன் அவனைத் தொழுவோரை என்றும் காக்கக் கூடியவன் எம்பெருமானே. இவ்வுண்மையை மனிதர்களுக்கு உணர வைப்பதற்காகத்தான் திருமால் விலங்குகளாகவே அவதரித்துள்ளார். உலகையே ஆளக்கூடியவனாக இருந்தாலும் மீனாகவும் ஆமையாகவும் வராகமாகவும் நரசிம்மமாகவும் அவதரித்தாயே உன்னுடைய கருணையை நான் எங்ஙனம் போற்றுவேன் எனத் திருமங்கையாழ்வார் குறிப்பிட்டுள்ளதன் வழி இதனை உணரமுடிகிறது.

திருமால் விலங்குகள் மீது அன்புடையவர் என்பதை ஆழ்வார்கள் தம் பாசுரங்களில் பதிவுசெய்துள்ளனர். திருமால் உலக உயிர்கள் அனைத்தையும் காக்கக்கூடியவர், தன்னை வணங்கியவருக்குத் துன்பம் நேரும் போது விரைந்து அவர்களைக் காக்கக் கூடியவர் என்பதை, கஜேந்திரன் என்ற யானையின் மூலமும், மழையிலிருந்து பசுக்களைக் காத்த நிகழ்வின் மூலமும் எடுத்துரைத்து, அடியவர்கள் திருமால் அருள் பெற அவனை வணங்கவேண்டும் என வலியுறுத்தியுள்ளனர்.

எம்பெருமான் விலங்குகளிடம் அன்புடையவன், எனினும் அவற்றால் மக்களுக்கும், பிற உயிர்களுக்கும் துன்பம் நேரும் போது அவற்றை அழிக்கவும் கூடியவன் என்று ஆழ்வார்களின் பாசுரங்களில் சுட்டப்பட்டுள்ளது. திருமால் இருக்கின்ற திருத்தலத்திலுள்ள விலங்குகள் அன்புடையவைகளாக விளங்குகின்றன. தனது விலங்குக் குணத்திலிருந்து மாறி அன்பும், பக்தியும் மிக்கவையாக விளங்குகின்றன. அவற்றின் இருப்பிடமும் அழகும் அமைதியும் நிறைந்தவையாக இருக்கின்றன. அத்தகைய திருத்தலங்களுக்குச் சென்று மாதவனை வணங்கினால் நமது வாழ்வு மேன்மை அடையும், அவன் அருள் முழுமையாகக் கிடைக்கும் என்பதனைப் பாசுரங்கள் வழி அறியமுடிகிறது.

திருமால் மீது அதிக அன்பும், பக்தியும், பற்றும் கொண்ட ஆழ்வார்கள் எந்த நிலையிலும், எந்தச் சூழ்நிலையிலும், எப்பொழுதும் திருமாலை மறவாதது

அவன் நினைவில் இருப்பவர்கள். பிரகலாதன் கூறியது போல இறைவன் தூணிலும் இருக்கிறார் துரும்பிலும் இருக்கின்றார் என்பதை ஆழ்வார்கள் தெளிவாகப் பதிவு செய்துள்ளனர். உலகைப் படைத்தவன் இறைவன். உலகிலுள்ள உயிரினங்கள் இயற்கை என அனைத்துமே அவனால் உருவாக்கப்பட்டவை. எனவேதான் ஆழ்வார்கள் தாங்கள் காண்கின்ற அனைத்திலுமே திருமாலைக் காண்கின்றனர். இறைவனால் படைக்கப்பட்ட இயற்கையை இறைவனாகவே காண்கின்றனர். அவ்வகையில் தாவரங்களிலும் இறைவனைக் காணமுடியும் என்பதைப் பாசுரங்களில் வெளிப்படுத்தியுள்ளனர். தாவரங்கள், மரம், செடி, கொடி, மலர்கள், கனிகள் என அனைத்திலும் திருமாலைக் காண்கின்றனர்.

திருமால் வீற்றிருக்கக்கூடிய அனைத்துத் திருத்தலங்களும் அந்த வைகுண்டத்தைப் போன்றதே. அத்தகைய திருத்தலங்களில் அமைந்துள்ள விலங்குகள், பறவைகள், மரம், செடி, கொடி, நீர்நிலை அனைத்தும் சிறப்புடையதே என்பதை ஆழ்வார்களின் பாசுரங்கள் நன்கு வெளிப்படுத்துகின்றன. எம்பெருமான் மீதுள்ள பற்றினை அவர்கள் வெளிப்படுத்தும்போது மாதவன் வீற்றிருக்கக்கூடிய திருத்தலங்களின் பெருமைகளை உணர்த்தவும், அத்திருத்தலத்தின் சிறப்பை வெளிப்படுத்தவும் அங்கு அமைந்திருக்கக்கூடிய வானளாவ ஓங்கி உயர்ந்து வளர்ந்துள்ள மரங்களை, சோலைகளை எல்லாம் குறிப்பிட்டு இதற்குக் காரணம் அங்குள்ள திருமாலே, எனவே அஃறிணை உயிரான தாவரத்திற்கே அவன் அருள்புரியும்போது, அத்தலத்திற்குச் சென்று அவனை வழிபடுவோரை அவர் எப்பொழுதும் கைவிடமாட்டார் என்கின்றனர் ஆழ்வார்கள். வேங்கை, நெல்லி, குரவம், பாக்கு, சுரபுன்னை, தென்னை, செண்பகம், வாழை போன்ற மரங்கள் பற்றிய செய்திகள் பாசுரங்களில் இடம் பெற்றுள்ளன.

திருமால் விரும்பி அணிவதால் துளசிச் செடிக்கு, திருமாலின் அருள் முழுமையாக உள்ளது. எனவே திருமாலின் அடியவர்களான ஆழ்வார்கள், அவன் அருள் கிட்டாத நிலையில், அவன் விரும்பி அணிந்து கொள்கின்ற அந்தத் துளசி மாலையாவது தாருங்கள், இல்லையேல் துளசி முளைத்த மண்ணையாவது தாருங்கள் அதன் மூலமாகவாவது திருமாலைக்

கண்டுகொள்கிறோம் என்கின்றனர். அவர்கள் திருமால் வைத்துள்ள அளவிலாத அன்பினை அவர்களது பாசுரங்கள் நன்கு வெளிப்படுத்துகின்றன. துளசியை வணங்கினாளல் திருமாலை வணங்கியதன் பலன் கிட்டும், எனவே மனிதர்கள் துளசியிடம் இருந்தும் கூட திருமாலின் அருளைப் பெற்றுக்கொள்ளுங்கள் என வலியுறுத்துகின்றனர்.

சமய வழிபாட்டில் ஒவ்வொரு பூக்களும் ஒவ்வொரு இறைவனுக்கு உகந்ததாகக் கருதப்படும். அப்பூக்களைக் கொண்டு இறைவனை வணங்கினால் அவன் அருள் முழுமையாகக் கிட்டும் என்பது நம்பிக்கை. அந்த வகையில் திருமாலுக்கு விருப்பமான மலராகத் தாமரை கருதப்படுகிறது. ஆழ்வார்களின் பாசுரங்களில் தாமரை பற்றிய செய்திகள் அதிகமாக இடம்பெற்றுள்ளன. ஆழ்வார்கள் திருமாலை செந்தாமரைக் கண்ணா, தாமரையின் நிறத்தை உடையவனே எனவும் திருமாலின் கை, வாய், பாதம் போன்றவற்ரோடு ஒப்பிட்டும் பாடியுள்ளனார். திருமகள் போற்றும் மலராகத் தாமரை உள்ளது. திருமகள் வீற்றிருக்கின்ற தாமரையைக் கொண்டு எம்பிரானை வழிபடுவோர்க்கு ஏழு பிறவிகளிலும் மன்னராகப் பிறந்து அரசாளும் நிலைகிட்டும் எனப் பூதத்தாழ்வார் குறிப்பிட்டுள்ளார்.

ஐம்பூதங்களான நிலம், நீர், காற்று, ஆகாயம், நெருப்பு என இவை ஒவ்வொன்றும் மிகப் பெரிய சக்திகளாகும். ஐம்பூதங்கள் தான் உயிரினங்கள் நிலைத்து வாழ்வதற்குத் தேவையான அனைத்து சூழ்நிலையினையும் உருவாக்குகின்றன. ஐம்பூதங்கள் சமநிலையில் இருந்தால் மட்டுமே இவ்வுலக இயக்கம் சீராக அமையும். இவற்றில் ஒன்று அதிகரித்தாலும், குறைந்தாலும் பெரிய பேரிடரை உருவாக்கும். உலக இயக்கத்தின் மிகப்பெரிய சக்தியான பஞ்சபூதங்களை மனிதன் வணங்கினான். நிலத்தை பூமாதேவியாக, நீரை வருணதேவனாக, காற்றை வாயுதேவனாக, ஆகாயத்தை இந்திரதேவனாக, நெருப்பை அக்னிதேவனாக வணங்கினர். பஞ்சபூதங்கள் அனைத்தும் சிறந்து விளங்கும் இடம் இயற்கை அழகுமிக்க வளமான இடமாகக் காட்சியளிக்கின்றன. இயற்கையை ஆளுகின்ற பஞ்சபூதங்களுக்கு எல்லாம் சக்தியை கொடுக்கக்கூடிய மிகப் பெரிய சக்தியே இறை சக்தியாகும். அவனே திருமால் என்கின்றனர்

ஆழ்வார்கள். பஞ்சபூதங்களின் வடிவில் இருந்து அவற்றை இயக்குபவன் திருமாலே.

உயிரினங்கள் அனைத்தும் இந்த பஞ்சபூதங்களின் அடிப்படையில் அமைந்தவை. பஞ்சபூதங்களுக்கெல்லாம் தலைவனான திருமாலே ஒவ்வொரு உயிரினுள்ளும் இருந்து அவற்றை எல்லாம் இயக்கிக்கொண்டிருக்கிறான். எனவே திருமால் படைத்த உயிர்கள் அனைத்திலும் அவனையே காண்கின்றனர் ஆழ்வார்கள். ஒவ்வொரு உயிரினுள்ளும் திருமால் வீற்றிருக்கின்றார் என்பதை ஆழ்வார்களின் பாசுரங்கள் உணர்த்துகின்றன. ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் பஞ்சபூதங்களின் வடிவமாக இருக்கும் திருமாலை மனிதன் உணர்ந்து வழிபட்டால், மனிதவாழ்வு செம்மை அடையும், எல்லா வளங்களையும் பெற்று வாழ முடியும் என்ற கருத்தை ஆழ்வார்கள் எடுத்துரைக்கின்றனர்.

பஞ்சபூதங்களுக் கெல்லாம் தலைவனான திருமாலுக்கு, பொய்கை ஆழ்வார், 'வையம் தகளியா' என இயற்கையையே விளக்காக ஏற்றிப் பாசுரத்தைத் தொடங்கியுள்ளார். பஞ்சபூதங்களின் வடிவமாக இருந்து மக்களை ஆட்டுவதும், ஆட்டுவிப்பதும் திருமாலே என்கின்றனர். இயற்கையைப் படைத்தவன் இறைவன். எனவே அவனது படைப்பில் அவனையே காண்கின்றனர் ஆழ்வார்கள். உலகளந்த பரந்தாமனின் திருவடிகளின் நிறம் செந்தாமரை போல் உள்ளது. திருமேனியின் நிறமோ பூமியைச் சூழ்ந்திருக்கின்ற கடல் நீரின் நிறத்தை ஒத்துள்ளது. திருமுடியின் நிறமே ஒற்றைச் சக்கரத்தேரில் வலம் வரும் சூரியனை ஒத்துள்ளது. அவனது ஒளியும் பகவலனின் பிரகாசத்தை ஒத்துள்ளது. இத்தகைய அழகு பொருந்திய எம்பெருமானின் திருவடியைச் சரணடைந்து அவனது அருளைப் பெறவேண்டும் என்கின்றனர் ஆழ்வார்கள்.

இறைசக்தியும் நானே, இயற்கையும் நானே என்பதை உணர்த்தவே எம்பிரான் இயற்கை நிறங்களைப் பெற்று இயற்கையாகவே தோற்றமளிக்கின்றார். இத்தகைய இறைவனைக் கண்டு வணங்கி அவன் அருள் பெற்று இன்பமான வாழ்வை மக்கள் அமைத்துக்கொள்ளவேண்டும் என்பதை ஆழ்வார்கள் எடுத்துரைக்கின்றன.

திருமாலே கேள், எனது ஆத்மாவாகிய பாவச் சேற்றுக்குள் உன்னைக் குறித்த பக்தி என்ற விதை விழுந்து முளைத்தது. உனது திருப்பாதக் கமலம் என்கிற அழகிய சுடர் மிக்க மலரிலே நிலையாக வந்து படிந்து செழித்து வளர்ந்துவிட்டது. இனி அதை ஒன்றும் செய்ய இயலாது. எனவே நீ என்னை விட்டுப் போக நினைத்தாலும் அது முடியாது. ஆகவே என்னை ஆட்கொள்வதைத் தவிர உனக்கு வேறு வழி இல்லை எனத் திருமாலிடம் கெஞ்சிய ஆழ்வார் பக்தியின் மிகுதியால் மிரட்டுவதையும் பாசுரங்களில் காணமுடிகிறது.

இரவிலே ஆகாயத்தை ஆளும் பூரண சந்திரனைப் போல வெண்கொற்றக் குடைக்குக் கீழ் மக்களுக்கெல்லாம் மன்னனாகப் புகழ்பெற்ற அரசையாளும் ராஜபோக வாழ்வை நான் கேட்கவில்லை, தேன் நிறைந்த பூக்களைக் கொண்ட சோலைகளையுடைய திருவேங்கட மலை மீது ஒரு காட்டாறாய்ப் பாயும் பேறு கிடைத்தால் அதுவே என் பாக்கியம் எனக் குலசேகர ஆழ்வார் குறிப்பிட்டுள்ளதன் வழி ஆழ்வார்களின் உண்மையான தொண்டு நெறியினை அறியமுடிகிறது.

ஆழ்வார்களின் முக்கிய நோக்கமே மீண்டும் பிறவாமல் திருமாலின் திருவடியைச் சென்று சேரவேண்டும் என்பதாகும். அடியார்களையும் அவ்வழியிலேயே ஆற்றுப்படுத்துகின்றனர். இறைவன் மீது முழுமையான அன்பும், பக்தியும் கொண்டவர்களைத் திருமால் தேடிவந்து ஆட்கொள்வார் என்பதற்கு முதலாழ்வார்களே சான்றாக விளங்குகின்றனர்.

இறைவன் மீது உண்மையான அன்பு கொண்டு வழிபட்டால் பரம்பொருளை அறியலாம் என்பதை ஆழ்வார்களின் பாசுரங்கள் உணர்த்துகின்றன. அதற்கு ஆழ்வார்களே சான்று. திருமாலின் மீது தாங்கள் கொண்டுள்ள அன்பினை, பக்தியினைப் பல வழிகளில் பாசுரங்களில் ஆழ்வார்கள் பதிவு செய்துள்ளனர். இயற்கையோடு இயற்கையாக வாழ்ந்த மனிதர்களுக்கு அந்த இயற்கையின் மூலமாகவே திருமாலின் பெருமையினை உணர்த்தியுள்ளனர் ஆழ்வார்கள்.

இயற்கையைப் படைத்தவன் இறைவன். இயற்கை இறைவனுக்குள் அடங்கும். ஆனால், இறைவன் இயற்கைக்குள் அடங்கான். இந்த உலகத்தைத் தோற்றி வைத்தவனே திருமால்தான். உலகிலுள்ள அனைத்தும் அவனால் ஆக்கப்பட்டவை. அனைத்தும் அவனது கட்டளையால் செயல்பட்டுக் கொண்டிருக்கிறன.

மனிதன், விலங்கு, பறவை, செடி, கொடி, புல், மரம் என எதிலும் பாகுபாடு இல்லாதவன். அனைத்தையும் ஒன்றாகவே கருதக் கூடியவன். அன்பு ஒன்றை மட்டுமே நேசிக்கக் கூடியவன் என்பதை ஆழ்வார்கள் வலியுறுத்தியுள்ளனர்.

தான் படைத்த இந்த உலகிலுள்ள அனைத்து உயிர்களும் தனக்குச் சமம் என்பதை உணர்த்தவே எம்பெருமான் பாம்பைப் படுக்கையாகவும், கருடனை வாகனமாகவும், துளசியை மாலையாகவும், தாமரை மலரை இருக்கையாகவும் கொண்டுள்ளார் என்கின்றனர் ஆழ்வார்கள். மாதவனால் படைக்கப்பட்ட இயற்கையைக் கண்டு வியக்கின்றனர்.

ஆழ்வார்கள் எப்பொழுதும் திருமாலையே நினைத்துக் கொண்டிருப்பவர்கள் என்பதை நாலாயிரத் திவ்விய பிரபந்தத்தின் மூலம் உணரமுடியும். நாம் சாதாரணமாகக் காணுகின்ற ஒவ்வொரு பொருளையும் ஆழ்வார்கள் திருமாலாகவே காணுகின்றனர். தான்மட்டும் திருமாலின் பெருமையினை அறிந்தால் போதாது அனைவரும் அறிந்து கொள்ள வேண்டும் என்பதையும் தான்மட்டும் அவன் அருளைப் பெற்றால் போதாது அதனை மற்றவர்களுக்கும் போதித்து, அனைவரும் அவன் அருள் பெறவேண்டும் என்பதையும் நோக்கமாகக் கொண்டு தான் இப்பாசுரங்களை ஆழ்வார்கள் படைத்துள்ளனர்.

ஊழ்வினையால் சிக்குண்டு தவித்துக் கொண்டிருக்கும் மானிடப்பிறவியை நல்வழிப்படுத்தி வீடுபேற்றை அடைய வைக்கும் வழியே பிரபந்தமாகும்.

இறைபக்தி மூலமே மனிதனின் வாழ்வை நெறிப்படுத்த முடியும். மனிதமனத்தைப் பக்குவப்படுத்தி நல்ல சமுதாயத்தை உருவாக்கும் நல்ல கருத்துக்கள் நாலாயிரத் திவ்விய பிரபந்தத்தில் நிறைந்துள்ளன. திருமால் மீது

அன்பையும் பக்தியையும் ஏற்படுத்த வைப்பதே பிரபந்தம். அதன் வழி மக்கள் வாழ்வை இறை பக்தியோடு நல்வழிப்படுத்தி அனைவரும் வளமோடு திருமால் அருள் பெற்று வாழ வேண்டும் என்பதே ஆழ்வார்கள் காட்டும் பக்தி நெறியாகும்.

**மேலாய்வுக் களங்கள்**

1. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் அகப்பொருள் மரபு
2. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் தூது இலக்கியமரபு
3. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் ஆழ்வார்களின் பக்தி நெறி
4. நாலாயிரத்தில் இடம்பெற்றுள்ள அவதாரச் சிறப்பும், பண்பாட்டுப்பதிவுகளும்

# துணைநூற்பட்டியல்

## முதன்மை நூல்கள்


ராமசுப்பிரமணியசர்மா (உ.ஆ) **ஸ்ரீநாலாயிர திவ்யப் பிரபந்தம்,**
பொன்னம்மாள்.ஆர் (உ.ஆ) கங்கை புத்தகநிலையம்,
ஸ்ரீதரன்.என். (ப.ஆ) 23, தினதயாளு தெரு,
தியாகராய நகர், சென்னை – 600017.


## துணை நூல்கள்


அருணாசலக்கவுண்டர். கு **தமிழ்ப் பண்பாட்டில் வைணவம்,**
டிசம்பர் – 1982 (பி.வி.இ)

அருணாசலம். ப **பக்தி இலக்கியம்,**
பாரி புத்தகப் பண்ணை,
88/184, பிராட்வே,
சென்னை – 108, ம.ப.2014

இளங்குமரனார். இரா (உ.வி), **தொல்காப்பியம் பொருளதிகாரம்,**
கோ. இளவழவன்(பதிப்பாளர்)
தமிழ்மண் பதிப்பகம்,
2, சிங்காரவேலர் தெரு,
தியாகராயர் நகர்,
சென்னை – 600017.

இளங்குமரனார். இரா (உ.வி), **ஐம்பெருங்காப்பியங்கள், வளையாபதி,**
குண்டலகேசி,
இளங்கனி பதிப்பகம்
எண்: 7/2 செம்படத்தெரு,
சைதாப்பேட்டை மேற்கு,
சென்னை – 600015.

| | |
|---|---|
| இராசேந்திரன். இரா (உ.ஆ) | **திருப்பவை நயவுரை,**<br>நந்தினி பதிப்பகம்<br>38/16, வெல்கம் காலனி,<br>அண்ணாநகர் மேற்கு,<br>சென்னை – 600101. |
| இலட்சாராமன். இரா | **இயற்கைக் காட்சியும் இறைமைக் காட்சியும்,**<br>பேரா. பொன். சௌரிராசனார்,<br>நூலகம், மலைஎண் – 8,<br>திருநகர்விரிவு<br>கிழக்கு பாண்டி சாலை – 605602 |
| இராமநாதன். பி.ஆர் | **இருபதாம் நூற்றாண்டு தமிழ்ப் பெயரகராதி,**<br>1909ஆம் ஆண்டு. (பி.வி.இ) |
| இளங்கோ. ஜெ | **திருப்பாவையில் புதுக்கவிதை,**<br>என்னெஸ் பப்ளிகேஷன்ஸ்<br>உடுமலைப் பேட்டை – 642128. |
| இராஜகோபாலன். இரா | **நாலாயிரத் திவ்யப் பரபந்தத்தில் சரணாகதிநெறி,** (பி.வி.இ) |
| இராமமூர்த்தி. முத்து | **நந்திக்கலம்பகம்,**<br>கௌரா பதிப்பகம்,<br>4A/186, V.R.பிள்ளைத்தெரு,<br>திருவல்லிக்கேணி, சென்னை – 5 |
| குருசாமி. சோ | **இலக்கியங்களில் இயற்கை,**<br>அறிவுப்பதிப்பகம், |

16(142)ஜானி ஜான்கான் சாலை,
ராயப்பேட்டை, சென்னை – 600014.

கோபாலகிருஷ்ணமாச்சாரியார். வை.மு. (உ.ஆ) **கம்பராமாயணம்**
வெளியீடு உமாபதிப்பகம்,
சென்னை,
இரண்டாம் பதிப்பு – 2011

கோவிந்தராசன். பே.சு (உ.ஆ) **திருக்குறள்,**
ஆதிபகவன் பதிப்பகம்,
நாச்சியார் இல்லம்,
சூடாமணிச்சாலை,
தருமபுரி – 636701.

சங்கீதா. வெ **சங்க இலக்கியச்சாரல்,**
பதிப்பகம்: ஷான்லாக்ஸ்
பப்ளிகேஷன்ஸ்,
61.டி.பி.கே மெயின்ரோடு,
வசந்த நகர், மதுரை – 3.

சாமி. பி.எல் **சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம்,**
திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை – 1.

சண்முகசுப்பிரமண்யன். மா **நாஞ்சுடர்.** (பி.வி.இ)

சீனிவாசன். ம.பெ **திவ்வியப் பரபந்த இலக்கிய வகைகள்,**
மெய்யப்பன் தமிழாய்வக வெளியீடு

எண்:43, 53, புதுத்தெரு,
சிதம்பரம் – 608001,
முதல்பதிப்பு – டிசம்பர் 2001.

சுப்பிரமணியன். ச.வே (ப.ஆ) **பன்னிருதிருமுறை,**
மணிவாசகர் பதிப்பகம்,
31, சிங்கர் தெரு, பாரிமுனை,
சென்னை – 600108,
மூன்றாம் பதிப்பு, செப்டம்பர் – 2010.

சுந்தரமூர்த்தி. கு (உ.ஆ) **தண்டியலங்காரம்,**
உமாபதிப்பகம்,
18 (பழையஎண்171),
பவளக்காரத்தெரு,
மண்ணடி, சென்னை – 600001.
முதல்பதிப்பு – 2004,

சுப்புரெட்டியார். ந **வைணவமும் தமிழும்,**
திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
154, டி.டி.கே.சாலை
சென்னை – 600018

சுப்பிரமணியன். ச.வே. (ப.ஆ) **சங்க இலக்கியம்**
எட்டுத்தொகை (மூலமும்
தெளிவுரையும்),
மணிவாசகர் பதிப்பகம்,
31, சிங்கர் தெரு, பாரிமுனை,
சென்னை – 600108,

| | |
|---|---|
| தட்சணாமூர்த்தி. கு | **இயற்கைப் பாடல் வாணிதாசன் — தங்கப்பா ஓர் ஆய்வு,**<br>குழலி பதிப்பகம்,<br>21, வாணிதாசன் வீதி,<br>குயவர்பாளையம், புதுச்சேரி — 605013. |
| நாராயணன். இரா | **திருக்குறளில் உயிரினங்கள்,**<br>பூங்கொடி பதிப்பகம்,<br>14, சித்திரைக்குளம் மேற்கு தெரு,<br>மயிலாப்பூர் சென்னை — 600004. |
| நச்சினார்க்கினியர் (உ.ஆ), | **ஐம்பெருங்காப்பியங்கள்,**<br>**சீவகசிந்தாமணி,**<br>இளங்கணி பதிப்பகம்<br>எண்ஹ 7/2 செம்படத்தெரு,<br>சைதாப்பேட்டை மேற்கு,<br>சென்னை — 600015. |
| பரிமளம்சுந்தர், | **உருமாறிய மரபுகள்,**<br>காரோன் — நீரோன் பதிப்பகம்,<br>சுந்தரபவளம்,<br>2, ஜவஹர்சாலை, மதுரை — 2 |
| பவானந்தம் பிள்ளை. சு (ப.ஆ) | **தற்காலத் தமிழ்ச் சொல்லகராதி,**<br>வெளிவந்த ஆண்டு — 1925<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ். |
| பரந்தாமன். ஏ | **ஆழ்வார்களும் திருவேங்கடவனும்.**<br>எண். 5/11, திருவள்ளுவர் தெரு,<br>மேத்தா நகர், சேலையூர் அஞ்சல்,<br>தாம்பரம் — 600073. |

புலியூர்க்கேசிகன் (உ.ஆ) **பழமொழி நானூறு,**
ஜெயபாலன் பதிப்பகம்,
27, அனெக்ஸ், 7, அன்னை
இந்திராநகர்,
திருநின்றவூர், சென்னை – 602024.
முதல்பதிப்பு – 2013,

புலியூர்க்கேசிகன் (உ.ஆ) **திரிகூடராசப்பக் கவிராயர்**
**பாடியருளிய**
**திருக்குற்றாலக் குறவஞ்சி,**
சந்தோஷ் பப்ளிகேஷன்ஸ்,
எண்: 12/28, சௌந்தரராஜன் தெரு,
தி.நகர். சென்னை – 17.

புலியூர்கேசிகன் (உ.ஆ) **முக்கூடற்பள்ளு,**
ஸ்ரீ இராஜலட்சுமி பப்ளிகேஷன்,
க.எண் 10/913, இளங்கோதெரு,
முகப்பேர்கிழக்கு, சென்னை – 600037.
முதல்பதிப்பு – 2013,

மணவாளன். கே.ர. **ஆண்டாள்,**
**இந்திய இலக்கியச் சிற்பிகள்,**
சாகித்திய அகாதெமி,
இரவீந்தர பவன் – 35, பெரோஸ்ஷ
சாலை,
புதுதில்லி – 1100001.

மாருதிதாசன் (ப.ஆ) **நர்மதாவின் தமிழ் அகராதி,**
நர்மதாபதிப்பகம்,
16/7 ராஜபாதர் தெரு, பாண்டிபஜார்,

தியாகராஜா நகர்,
சென்னை — 6000017.

முத்துலக்குமி. வே **இலக்கிய இயற்கை,**
அனுராதா பதிப்பகம்,
22/18, சம்புகேசுவரர்நகர்,
திருவானைக் கோவில்,
திருச்சிராப்பள்ளி — 620005.

முத்துஎத்திராசன் **கம்பர் காட்டும் கார்காலம்,**
சேகர் பதிப்பகம்,
66, பெரியான் தெரு.
எம்.ஜீ.ஆர் நகர், சென்னை — 600078.

ரத்னம். க **தமிழ்ச் செவ்வியல் இலக்கியத்தில் பறவைகள்,**
746, அண்ணா சாலை,
சென்னை — 2.

ராமகிருஷ்ணன். எஸ் (ப.ஆ) **க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி,**
2/17வது கிழக்குத்தெரு,
காமராஜர் நகர்,
திருவான்மியூர்,
சென்னை — 6000041,
முதல் பதிப்பு — 1992.

லலிதா. து. **பெரிய திருமொழி ஒரு பார்வை,**
வீர ஒவு பதிப்பகம்,
2,அவினாசிலிங்கம்
ஆசிரியர்குடியிருப்பு,
கோயம்புத்தூர் — 641043.

வரதராசன். மு. **பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை,**
பாரிநிலையம்,
90, பிராட்வே, சென்னை – 600108

வீரமாமுனிவர் **தேம்பாவணி**
வீரமாமுனிவர்,
சாரதா பதிப்பகம்,
சாந்தி அபார்ட்மெண்ட்,
2ஸ்ரீ கிருஷ்ணாபுரம்,
இராயப்பேட்டை,
சென்னை – 6000014.

வேங்கடராமன். சு **தமிழ் வளர்த்த வைணவம்,**
மீனா பதிப்பகம்,
7/553, வாஞ்கிநாதன் தெரு,
என்.ஜி. ஓ காலனி, நாகமலை,
மதுரை – 625019.

வேங்கடசாமி நாட்டார். ந.மு. (உ.ஆ) **ஐம்பெருங்காப்பியங்கள், சிலப்பதிகாரம்,**
இளங்கணி பதிப்பகம்
எண்ஹ 7/2 செம்படத்தெரு,
சைதாப்பேட்டை மேற்கு,
சென்னை – 600015.

வேலுப்பிள்ளை. ஆ. **தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும்,**
குமரன் புத்தக இல்லம்,
கொழும்பு

## பின்னிணைப்புகள்

## I.பன்னிரு ஆழ்வார்கள்

| **ஆழ்வார்கள்** | **மாதம் கிழமை, நட்சத்திரம்** | **பிறப்பின் அம்சம்** |
|---|---|---|
| பொய்கையாழ்வார் | ஐப்பசி மாதம்<br>செவ்வாய்க்கிழமை<br>திருவோண நட்சத்திரம் | பாஞ்சசந்நியம்<br>(திருச்சங்கு) |
| பூதத்தாழ்வார் | ஐப்பசி மாதம்<br>அவிட்டம் நட்சத்திரம் | கௌமோதசி<br>(கதை) |
| பேயாழ்வார் | ஐப்பசிமாதம்<br>வியாழக்கிழமை<br>சதய நட்சத்திரம் | நாந்தகம் (வாள்) |
| திருமழிசையாழ்வார் | தைமாதம்,<br>திங்கட்கிழமை<br>மகம் நட்சத்திரம் | சுதர்சனம்<br>(திருவாழி) |
| நம்மாழ்வார் | வைகாசி மாதம்<br>வெள்ளிக்கிழமை<br>விசாக நட்சத்திரம் | சேனைமுதல்வர் |

| | | |
|---|---|---|
| மதுரகவியாழ்வார் | சித்திரை மாதம்<br>சித்திரை நட்சத்திரம்<br>வெள்ளிக்கிழமை | குமுதரென்னும் கணநாதர் |
| குலசேகராழ்வார் | மாசிமாதம்<br>வெள்ளிக்கிழமை<br>புனர்பூச நட்சத்திரம் | ஸ்ரீகௌஸ்து |
| பெரியாழ்வார் | ஆனிமாதம்<br>சுவாதி நட்சத்திரம் | கருடன் அம்சம் |
| ஆண்டாள் | ஆடி மாதம்<br>திங்கட்கிழமை<br>பூர நட்சத்திரம் | பூமிபிராட்டி |
| திருப்பாண்ஆழ்வார் | கார்த்திகை மாதம்<br>ரோகிணி நட்சத்திரம் | ஸ்ரீவத்ஸம் |
| தொண்டரடிப் பொடியாழ்வார் | ஆடிமாதம்<br>திங்கட்கிழமை<br>கேட்டை நட்சத்திரம் | வைஜெயந்தி என்னும் வனமாலை |
| திருமங்கையாழ்வார் | கார்த்திகைமாதம்<br>திங்கட்கிழமை<br>கார்த்திகை நட்சத்திரம் | சாரங்கம் (வில்) |

# II. 108 வைணவத் திருத்தலங்கள்

திவ்ய தேசங்கள் என்பது 108 வைணவத் திருத்தலங்களைக் குறிக்கும். பன்னிரு ஆழ்வார்கள் பாடிய நாலாயிரத் திவ்விய பிரபந்தத்தில் இடம் பெற்ற சிறப்புமிக்க வைணவத் திருத்தலங்கள் திவ்ய தேசம் எனவும், திவ்ய தேசங்களைப் பற்றிய பாடல்கள் மங்களாசாசனம் எனவும் அழைக்கப்படுகின்றன. ஆழ்வார்களால் மங்களாசாசனம் பெற்ற திருத்தலங்கள் 108 ஆகும். அவையே 108 தேசங்கள் எனப்படுகின்றன. இவற்றில் 105 தலங்கள் இந்தியாவிலும், ஒன்று நேபாளிலும் உள்ளன. இவற்றைத் தவிர மற்ற 2 தலங்கள் வானுலகிலும் உள்ளன. 108 தலங்களுக்கும் தம் வாழ்நாளில் சென்று அத்தலத்திற்குரிய பாடல்களைப் பாடுதல் ஒரு வைணவ சமய வழிபாடாக உள்ளது.

### திவ்ய தேச வகைப்பாடு

திவ்ய தேசங்கள் அக்காலத்தில் இருந்த நாட்டுப்பிரிவுகளின் அடிப்படையில் வகைப்படுத்தப்படுகின்றன.

- சோழநாட்டுத் திருப்பதிகள் — 40
- நடுநாட்டுத் திருப்பதிகள் — 2
- தொண்டைநாட்டுத் திருப்பதிகள் — 22
- வடநாட்டுத் திருப்பதிகள் — 11
- மலைநாட்டுத் திருப்பதிகள் — 13
- பாண்டியநாட்டுத் திருப்பதிகள் — 18
- நில உலகில் காணமுடியாத திருப்பதிகள் — 2

### 108 வைணவத் திருத்தலங்கள்

- 84 திருத்தலங்கள் தமிழ்நாட்டிலும்,
- 11 திருத்தலங்கள் கேரளாவிலும்,
- 2 திருத்தலங்கள் ஆந்திராவிலும்,
- 4 திருத்தலங்கள் உத்திரப் பிரதேசத்திலும்,
- 3 திருத்தலங்கள் உத்திராகண்டத்திலும்,
- 1 திருத்தலம் குஜராத்திலும்,
- 1 திருத்தலம் நேபாளத்திலும்,
- 2 திருத்தலங்கள் வானுலகத்திலும் உள்ளன.

| எண் | தலக்குறிப்புகள் | பெருமாள் — தாயார் | பாசுரங்கள் | அமைவிடம் |
|---|---|---|---|---|
| 1 | திருவரங்கம் | அரங்கநாதர் அரங்நாயகி | 247 | தமிழகம் — திருச்சி |
| 2 | திருக்கோழி | அழகிய மணவாளன் — வாசலட்சுமி | 002 | தமிழகம் — திருச்சி |
| 3 | உத்தமர் கோயில் | புருஷோத்தமன் — பூர்ணவல்லி | 001 | தமிழகம் — திருச்சி |
| 4 | திருவெள்ளறை | புண்டரீகாட்சன் — பங்கயச்செல்வி | 024 | தமிழகம் — திருச்சி |
| 5 | அன்பில் சுந்தர்ராஜப்பெருமாள் | வடிவழகியநம்பி — அழகியவல்லி | 001 | தமிழகம் — திருச்சி |
| 6 | கோயிலடி | அப்பக்குடத்தான் — இந்திராதேவி | 330 | தமிழகம் — திருச்சி |
| 7 | திருக்கண்டியூர் ஹர சாபவிமோசன பெருமாள் கோயில் | ஹரசாபவிமோசனர் — கமலவல்லி | 001 | தமிழகம் — தஞ்சை |
| 8 | திருக்கூடலூர் | ஜகத்ரட்சகன் — பத்மாசானவல்லி | 010 | தமிழகம் — குடந்தை |
| 9 | கபிஸ்தம் | கஜேந்திரவரதர் — ரமாமணிவல்லி | 001 | தமிழகம் — குடந்தை |
| 10 | புள்ளபூதங்குடி | வல்வில் ராமன் — பொற்றாமறையாள் | 010 | தமிழகம் — குடந்தை |
| 11 | ஆதனூர் ஆண்டளக்கும் ஐயன் கோயில் | ஆண்டளக்குமய்யன் — ஸ்ரீரங்கநாயகி | 001 | தமிழகம் — குடந்தை |
| 12 | கும்பகோணம் சாரங்பாணி சுவாமி கோயில் | சாரங்கபாணி, ஆராவமுதன் — கோமளவல்லி | 051 | தமிழகம் — குடந்தை |
| 13 | ஒப்பிலியப்பன் | ஒப்பிலியப்பன் — பூமிதேவி | 047 | தமிழகம் — குடந்தை |
| 14 | நாச்சியார்கோயில் | நறையூர்நம்பி — நம்பிக்கை நாச்சியார் | 110 | தமிழகம் — குடந்தை |
| 15 | திருச்சேறை சாரநாதப் பெருமாள் | சாரநாதன் — சாரநாயகி | 013 | தமிழகம் — குடந்தை |

| | | | | |
|---|---|---|---|---|
| 16 | நாதன் கோயில் | ஜகந்நாதர் — செண்பகவல்லி | 010 | தமிழகம் — குடந்தை |
| 17 | திருவெள்ளியங்குடி | கோலவில்லி ராமர் — மரகதவல்லி | 010 | தமிழகம் — குடந்தை |
| 18 | திருக்கண்ணமங்கை | பக்தவத்சலன் — அபிஷேகவல்லி | 014 | தமிழகம் — குடந்தை |
| 19 | திருக்கண்ணபுரம் | சௌரிராஜன் — கண்ணபுரநாயகி | 128 | தமிழகம் — சீர்காழி |
| 20 | திருக்கண்ணங்குடி | லோகநாதன் — லோகநாயகி | 010 | தமிழகம் — சீர்காழி |
| 21 | நாகப்பட்டினம் | சௌந்தர்யராஜன் — சௌந்தர்யவல்லி | 010 | தமிழகம் — நாகப்பட்டினம் |
| 22 | திருத்தஞ்சை மாமணிக்கோயில் | நீலமேகம் — செங்கமலவல்லி | 005 | தமிழகம் — தஞ்சை |
| 23 | தேரழுந்தூர் ஆமருவியப்பன் கோயில் | ஆமருவியப்பன் — செங்கமலவல்லி | 045 | தமிழகம் — குத்தாலம் |
| 24 | திருச்சிறுபுலியூர் தலசயனப் பெருமாள் கோயில் | அருள்மாகடல் — திருமாமகள் | 010 | தமிழகம் — சீர்காழி |
| 25 | தலைச்சங்காடு | நாண்மிதியப்பெருமாள் — தலைச்சங்கநாச்சியார் | 002 | தமிழகம் — சீர்காழி |
| 26 | திருஇந்தளூர், மாயவரம் | பரிமளரங்கநாதர் — புண்டரீகவல்லி | 011 | தமிழகம் — மாயவரம் |
| 27 | திருக்காழிச்சீராம விண்ணகரம், சீர்காழி | தாடாளன் — லோகநாயகி | 010 | தமிழகம் — சீர்காழி |
| 28 | திருக்காவளம்பாடி | கோபலக்ருஷணன் செங்கமலநாச்சியார் | 010 | தமிழகம் — சீர்காழி |
| 29 | அரிமேய விண்ணகரம் | குடமாடுகூத்தர் — அம்ருதகடவல்லி | 010 | தமிழகம் — சீர்காழி |
| 30 | வண்புருடோத்தமம் | புருஷேத்தமர் — புருஷேத்தமாநாயகி | 010 | தமிழகம் — சீர்காழி |
| 31 | செம்பொன் செய்கோயில் | செம்பொன்னரங்கர் — சுவேதபுஷ்பவல்லி | 010 | தமிழகம் — சீர்காழி |

| | | | | |
|---|---|---|---|---|
| 32 | திருமணிமாடக் கோயில் | சாச்வததீபநாராயண — புண்டரீகவல்லி | 012 | தமிழகம் — சீர்காழி |
| 33 | வைகுந்த விண்ணகரம் | வைகுண்டநாதர் — வைகுண்டவல்லி | 010 | தமிழகம் — சீர்காழி |
| 34 | திருச்தெற்றியம்பலம் | செங்கண்மால் — செங்கமலவல்லி | 010 | தமிழகம் — சீர்காழி |
| 35 | திருமணிக்கூடம் | மணிக்கூடநாயகன் — திருமகள் நாச்சியார் | 010 | தமிழகம் — சீர்காழி |
| 36 | திருப்பார்த்தன்பள்ளி | தாமரைநாயகி — தாமரையாள் கேள்வன் | 010 | தமிழகம் — சீர்காழி |
| 37 | திருவாழி — திருநகரிகோயில்கள் | வயலாளி மணவாளன் — அம்ருதகடவல்லி | 042 | தமிழகம் — சீர்காழி |
| 38 | திருத்தேவனார்த் தொகை | தேவநாயகர் — சமுத்ரதனயா | 010 | தமிழகம் — சீர்காழி |
| 39 | திருவெள்ளக்குளம் | சீநிவாசன் — பத்மாவதி | 010 | தமிழகம் — சீர்காழி |
| 40 | திருச்சித்ரகூடம், சிதம்பரம் | கோவிந்தராஜர் — புண்டரீகவல்லி | 032 | தமிழகம் — சீர்காழி |
| 41 | திருவந்திபுரம் | தேவநாதன் — ஹேமாப்ஜவல்லி | 010 | தமிழகம் — கடலூர் |
| 42 | திருக்கோவலூர் | திரிவிக்ரமன் — பூங்கோவல் நாச்சியார் | 021 | தமிழகம் — கடலூர் |
| 43 | திருக்கச்சி | வரதராஜன் — பெருந்தேவி | 007 | தமிழகம் — காஞ்சி |
| 44 | அட்டபுயக்கரம் | ஆதிகேசவன் — அலர்மேல்மங்கை | 012 | தமிழகம் — காஞ்சி |
| 45 | திருத்தண்கா | தீபப்பிரகாசர் — மரகதவல்லி | 002 | தமிழகம் — காஞ்சி |
| 46 | திருவேளுக்கை அழகியசிங்க பெருமாள் கோயில் | முகுந்தநாயகன் — வேளுக்கைவல்லி | 004 | தமிழகம் — காஞ்சி |
| 47 | திருநீரகம் | ஜகதீசப்பெருமாள் — நிரமங்கைவல்லி | 001 | தமிழகம் — காஞ்சி |

| | | | | |
|---|---|---|---|---|
| 48 | திருப்பாடகம் | பாண்டவதூதர் — ருக்மணி, சத்யபாமா | 006 | தமிழகம் — காஞ்சி |
| 49 | நிலாத்திங்கள் | நிலாத்திங்கள்துண்டத்தான் — நேரொருவரில்லாவல்லி | 001 | தமிழகம் — காஞ்சி |
| 50 | திருஊரகம் | உலகளந்தபெருமாள் — அம்ருதவல்லி | 006 | தமிழகம் — காஞ்சி |
| 51 | திருவெக்கா | யதோத்தகாரி — கோமளவல்லி | 015 | தமிழகம் — காஞ்சி |
| 52 | திருக்காரகம் | கருணாகரர் — பத்மாமணி | 001 | தமிழகம் — காஞ்சி |
| 53 | திருக்கார்வானம் | கள்வர்பெருமாள் — கமலவல்லி | 001 | தமிழகம் — காஞ்சி |
| 54 | திருக்கள்வனூர் | ஆதிவராஹர் — அஞ்சிலைவல்லி | 001 | தமிழகம் — காஞ்சி |
| 55 | திருப்பவள வண்ணம் | பவளவண்ணப்பெருமாள் — பவளவல்லிநாச்சியார் | 001 | தமிழகம் — காஞ்சி |
| 56 | திருப்பரமேச்சுரவிண்ணகரம் | பரமபதநாதன் — வைகுந்தவல்லி | 010 | தமிழகம் — காஞ்சி |
| 57 | திருப்புட்குழி | விஜயராகவன் — மரகதவல்லி | 002 | தமிழகம் — காஞ்சி |
| 58 | திருநின்றவூர் | பத்தவத்சலம் — சுதாவல்லி | 002 | தமிழகம் — சென்னை |
| 59 | திருவள்ளூர் வீரராகவப்பெருமாள் கோயில் | வைத்ய வீரராகவர் — கனகவல்லி | 012 | தமிழகம் — சென்னை |
| 60 | திருவல்லிக்கேணி | பார்த்தசாரதி — ருக்மணி | 012 | தமிழகம் — சென்னை |
| 61 | திருநீர்மலை | நீரிவண்ணபெருமாள் — அணிமாமலரிமங | 020 | தமிழகம் — சென்னை |
| 62 | திருவிடவெந்தை | நித்யகல்யாணர் — கோமளவல்லி | 013 | தமிழகம் — சென்னை |
| 63 | திருக்கடல்மல்லை | ஸ்தல சயனப்பெருமாள் — நிலமங்கை நாச்சியார் | 027 | தமிழகம் — சென்னை |

| | | | | |
|---|---|---|---|---|
| 64 | திருக்கடிகை | யோகநரசிம்மர் — அம்ருதவல்லி | 004 | தமிழகம் — சென்னை |
| 65 | திருவயோத்தி | கோதண்டராமர் — சீதாபிராட்டி | 013 | உத்தரப் பிரதேசம் |
| 66 | நைமிசாரண்யம் | தேவராஜன் — ஹரிலட்சுமி | 010 | உத்தரப் பிரதேசம் |
| 67 | திருப்பிரிதி | பரமபுருஷன் — பரிமளவல்லி | 010 | உத்தராகண்டம் |
| 68 | தேவப்ரயாகை | நீரமேகம் — புண்டரீகவல்லி | 011 | உத்தராகண்டம் |
| 69 | பத்ரிகாச்ரமம் | பத்ரீநாராயணனன் — அரவிந்தவல்லி | 022 | உத்தராகண்டம் |
| 70 | முக்திநாதர் | ஸ்ரீமூர்த்தி — ஸ்ரீதேவி | 012 | நேபாளம் |
| 71 | வடமதுரை | கோவர்த்தனகிரிதாரி — சத்யபாமா | 050 | உத்தரப் பிரதேசம் |
| 72 | ஆயர்பாடி | கரிகிருஷ்ணப் பெருமாள் — ருக்மணி,சத்யபாமா | 022 | உத்தரப் பிரதேசம் |
| 73 | திருத்துவாரகை | கல்யாணநாராயணன் — கல்யாணநாராயணன் | 013 | குஜராத் |
| 74 | அகோபிலம் | லட்சுமிநரசிம்மர் — செஞ்சுலட்சுமி | 010 | ஆந்திரம் |
| 75 | திருவேங்கடம் | திருவேங்கடமுடையான் — அலர்மேல்மங்கை | 202 | ஆந்திரம் |
| 76 | திருநாவாய் | நாராயணன் — மலர்மங்கைநாச்சியார் | 013 | கேரளம் — திருச்சூர் |
| 77 | திருவிததுவக் கோடு | உய்யவந்த பெருமாள் — வித்துவக்கோட்டுவல்லி | 010 | கேரளம் — திருச்சூர் |
| 78 | திருக்காட்கரை | காட்கரையப்பன் — வாத்ஸல்யவல்லி | 011 | கேரளம் — கோட்டயம் |
| 79 | திருமூழிக்களம் | திருமூழிக்களத்தான் — மதுரவேணி | 014 | கேரளம் — கோட்டயம் |
| 80 | திருவல்லவாழ் | கோலப்பிரான் — | 022 | கேரளம் — கோட்டயம் |

| | | | | |
|---|---|---|---|---|
| | | செல்வத்திருக்கொழுந்து | | |
| 81 | திருக்கடித்தானம் | அற்புதநாராயணன் — கற்பகவல்லி நாச்சியார் | 011 | கேரளம் — கோட்டயம் |
| 82 | திருச்செங்குன் றூர் | இமையவரப்பன் — செங்கமவல்லி | 011 | கேரளம் — கோட்டயம் |
| 83 | திருப்புலியூர் | மாயப்பிரான் — பொற்கொடி நாச்சியார் | 012 | கேரளம் — கோட்டயம் |
| 84 | திருவாறன்விளை | திருக்குறளப்பன் — பத்மாசனி | 011 | கேரளம் — கோட்டயம் |
| 85 | திருவண்வண்டூர் | பாம்பணையப்பன் — கமலவல்லி | 011 | கேரளம் — கோட்டயம் |
| 86 | திருவனந்தபுரம் பத்மநாபசாமி கோயில் | அனந்தபத்மநாபன் — ஸ்ரீஹரிலட்சுமி | 011 | கேரளம் — திருவனந்தபுரம் |
| 87 | திவட்டாறு | ஆதிகேசவன் — மரகதவல்லி | 011 | தமிழகம் — கன்னியாகுமாரி |
| 88 | திருவண்பரிசாரம் | கமலவல்லி — திருக்குறளப்பன் | 001 | தமிழகம் — கன்னியாகுமாரி |
| 89 | திருக்குறுங்குடி | வைஷ்ணவ நம்பி — குறுங்குடிவல்லி | 040 | தமிழகம் — நெல்லை |
| 90 | வானமாமலை | தோத்தாத்ரி நாதர் — சிரீவரமங்கை | 011 | தமிழகம் — நெல்லை |
| 91 | ஸ்ரீவைகுண்டம் நவதிருப்பதி | கள்ளப்பிரான் — வைகுந்தவல்லி | 002 | தமிழகம் — நெல்லை |
| 92 | திருவரகுணமங்கை நவதிருப்பதி | விஜயாசனர் — வரகுணவல்லி | 001 | தமிழகம் — நெல்லை |
| 93 | திருப்புளியங்குடி நவதிருப்பதி | காய்ச்சினவேந்தன் — மலர்மகள் | 012 | தமிழகம் — நெல்லை |
| 94 | திருத்துலைவில்லிமங் கலம் நவதிருப்பதி | அரவிந்தலோசநர் — விசாலக்ருஷ்ணரி | 011 | தமிழகம் — நெல்லை |
| 95 | திருக்குளந்தை நவதிருப்பதி | மாயகூத்தர் — குளந்ததைவல்லி | 001 | தமிழகம் — நெல்லை |

| | | | | |
|---|---|---|---|---|
| 96 | திருக்கோளூர் நவதிருப்பதி | வைத்தமாநிதி — கோளூர்வல்லி | 012 | தமிழகம் — நெல்லை |
| 97 | திருப்பேரை நவதிருப்பதி | மகரநெடுங்குழைக்காதர் — குழைக்காதுவல்லி | 011 | தமிழகம் — நெல்லை |
| 98 | ஆழ்வார்திருநகரி ஆதிநாதன் கோயில் திருக்குருகூர் நவதிருப்பதி | ஆதிநாதர் — ஆதிநாதவல்லி | 011 | தமிழகம் — நெல்லை |
| 99 | ஸ்ரீவில்லிபுத்தூர் | வடபத்ரசாயி — ஆண்டாள் | 002 | தமிழகம் — மதுரை |
| 100 | திருத்தண்கால் | தண்காலப்பன் — அன்னநாயகி | 005 | தமிழகம் — மதுரை |
| 101 | கூடல் ஆழகர் கோயில் | கூடலழகர் — மதுரவல்லி | 002 | தமிழகம் — மதுரை |
| 102 | திருமாலிருஞ்சோலை | அழகர் — சுந்தரவல்லி | 128 | தமிழகம் — மதுரை |
| 103 | திருமோகூர் | காளமேகம் — மோகனவல்லி | 012 | தமிழகம் — மதுரை |
| 104 | திருக்கோஷ்டியூர் | சௌமியநாராயணன் — மகாலெட்சுமி | 039 | தமிழகம் — திருகோஷ்டியூர் |
| 105 | திருப்புல்லாணி | கல்யாணஜகந்நாதர் — கல்யாணவல்லி | 021 | தமிழகம் — இராமநாதபுரம் |
| 106 | திருமெய்யம் | சத்யகிரிநாதன் — உஜ்ஜீவன நாச்சியார் | 009 | தமிழகம் — புதுக்கோட்டை |
| 107 | திருப்பாற்கடல் | பிரசன்ன வெங்கடேச பெருமாள் — கடலமகள் நாச்சியார் | 051 | வானுலகம் |
| 108 | பரமபதம் | பரமபதநாதர் — பெரியபிராட்டியார் | 036 | வானுலகம் |

# III. ஆழ்வார் பாசுரங்களில் இயற்கைப் பதிவுகள்

## 1. பொய்கையாழ்வார் அருளிச்செய்த முதல் திருவந்தாதி

| பறவை | சோலை | மரம் | செடி, கொடி | பூ | கனி | மலை | மழை | நீர் நிலைகள் | விலங்குகள் | ஐம்பூதம் பற்றிய செய்திகள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 2098 (கருடன்)<br><br>2102 (கருடன்)<br><br>2103 (கருடன்)<br><br>2135 (கொக்கு) | | 2099 (மருதமரம்)<br><br>2103 (மூங்கில்)<br><br>2108 (மரா,குருந்தம்)<br><br>2135(குருந்தம்)<br><br>2143 (மருதம் குருந்தம்) | 2107 (துளசி) | 2148 (தாமரை) | 2134 (விளாங்கனி) | | | | 2099(யானை)<br><br>2102(ஆதிசேடன்)<br><br>2108(யானை)<br><br>2111(பசு)<br><br>2128(முதலை)<br><br>2159(யானை) (முதலை)<br><br>2178(யானை) | 2082(ஐம்பூதம்)<br><br>2093(ஐம்பூதம்)<br><br>2110(ஐம்பூதம்)<br><br>2142(ஐம்பூதம்)<br><br>2154(ஐம்பூதம்)<br><br>2173(ஐம்பூதம்) |

## 2. பூதத்தாழ்வார் அருளிச்செய்த இரண்டாம் திருவந்தாதி

| பறவை | சோலை | மரம் | செடி, கொடி | பூ | கனி | மலை | மழை | நீர் நிலை | விலங்குகள் | ஐம்பூதங்கள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | 2204 (விளா)<br>2206(மூங்கில்)<br><br>2229(மூங்கில்)<br><br>2256(மூங்கில்) | | 2193<br>(தாமரை)<br><br>2250<br>(தாமரை)<br><br>2257<br>(மல்லிகை) | 2204<br>(கனி) | 2230<br>(மலை) | | 2254<br>(சுனை)<br><br>2259<br>(கங்கை) | 2194<br>(முதலை, யானை)<br><br>2250<br>(குதிரை)<br><br>2253<br>(குரங்கு)<br><br>2254<br>(யானை) | 2205(ஐம்பூதம்) |

# 3. பேயாழ்வார் அருளிச்செய்த மூன்றாம் திருவந்தாதி

| பறவை | சோலை | மரம் | செடி,<br>கொடி | பூ | கனி | மலை | மழை | நீர்நிலை | விலங்குகள் | ஐம்பூதங்கள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 2289<br>(வண்டு)<br><br>2304<br>(வண்டு)<br><br>2316<br>(வண்டு)<br><br>2336<br>(வண்டு)<br><br>2363<br>(வண்டு) | | 2313<br>(குருந்தமரம்)<br><br>2329<br>மருதமரம்<br><br>2332<br>மருதமரம்<br><br>2352(விளா)<br><br>2356(வேங்கை)<br><br>2370(மூங்கில்) | | 2378<br>(தாமரை<br>காயாம்பூ) | 2349<br>(களாப்ப<br>ழம்) | | | 2290,2292,22<br>93<br>(கடல்)<br><br>2331<br>(அருவி)<br><br>2349<br>(சுனை) | 2323<br>பசு,குதிரை<br><br>2324(யானை)<br><br>2326(யானை)<br><br>2327(ஆமை)<br><br>2429<br>குதிரை,பசு<br><br>2332(பசு)<br><br>2339(குரங்கு)<br><br>2341(பசு)<br><br>2348(குரங்கு)<br>2352(யானை)<br><br>2354(குதிரை) | 2290(ஆகாயம்) |

## 4. திருமழிசையாழ்வார் அருளிச்செய்த நான்முகன் திருவந்தாதி

| பறவை | சோலை | மரம் | செடி, கொடி | பூ | கனி | மலை | மழை | நீர் நிலை | விலங்குகள் | ஐம்பூதங்கள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 2443 (வண்டு) | | | 2443 துளசி | | | 2423 (மலை) | 2420 (மழை) | | 2414 (பாம்பு, யானை)<br><br>2420 (பாம்பு யானை)<br><br>2428 (யாளி, சிங்கம், குரங்கு) | 2418 (நீர்,நிலம், நெருப்பு)<br><br>83 சந்திரன் |

## 5. நம்மாழ்வார் அருளிச்செய்த திருவிருத்தம்

| **பறவை** | **சோலை** | **மரம்** | **செடி, கொடி** | **பூ** | **கனி** | **மலை** | **மழை** | **நீர் நிலை** | **விலங்குகள்** | **ஐம்பூதங்கள்** |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 2501 கருடன்<br>2505 பறவை<br>2507 அன்னம்,குருகு<br>2532 வண்டு | | 2545 கென்றை மரம்<br><br>2560 பனைமரம் | 2530 துளசி | 2486 தாமரை, செங்கழுநீர்<br>2515 நீலோற்பல மலர்<br>2536 முல்லை | | 2526 மேரு மலை | | 2505 காவிரி<br><br>2519 பொய்கை | 2491 கயல்,சேல்<br>2488 கெண்டை<br>2501பசு<br>2525 புழு,பல்லி<br>2544 கெண்டைமீன் | 2543 நீர்,நிலம், ஐம்பூதம் |

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 2560<br>அன்றில்<br><br>**<u>திருவாசிரியம்</u>**<br><br>**<u>பெரிய திருவந்தாதி</u>** | | 2638<br>விளா | | 2544<br>செங்கழு நீர்,<br>கருநெய்தல்<br><br>2582<br>கோவை<br><br>2585<br>காயாம்பூ<br>2633<br>பூவைப்பூ<br>குவளை<br>2657<br>பூவை,காயம்பூ,<br>கருநெய்தல்<br>செங்கழு | | | 2634<br>மழை | | 2462<br>கருங்குரங்கு<br><br>2583<br>ஆடு,கோழி<br><br>2607<br>நாய்<br><br>2638<br>பசு | 2584<br>ஐம்பூதம் |

# 6. திருமங்கையாழ்வார் அருளிய சிறிய திருமடல்

| பறவை | சோலை | மரம் | செடி, கொடி | பூ | கனி | மலை | மழை | நீர் நிலை | விலங்குகள் | ஐம்பூதங்கள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | | | 2695<br>முதலை | |
| (2681)<br>கிளி | | | | | | | | | | |
| **பெரியதிருமடல்** | | | | | | | | | | |
| 2725<br>மயில்,<br>வண்டு | 2725<br>நந்த<br>வனம் | | | 2730<br>நீலப்பூக்கள் | 2756<br>கோவ்<br>வைப்பழ<br>ம்<br>. | | | | 2756<br>(கொண்டை) | |
| 2730<br>அன்னம் | | 2738<br>பனை | | | | | | | 2787<br>கயல்மீன் | |
| 2738<br>அன்றில்.. | | 2757<br>பனை | | | | | | | | |
| 2757<br>அன்றில்.. | | | | | | | | | | |
| **பெரியதிருமொழி** | | | | | | | | | | |
| 966<br>வண்டு | | 960<br>வேங்கை | 963<br>குருகத்தி | 966<br>அசோகமலர் | | 960<br>இமயம் | 967<br>மலை<br>மேகம் | 978<br>கங்கை<br>980<br>கங்கை<br>987<br>ஆற்றுநீர்,<br>ஊற்றுநீர்,<br>மழைநீர்,<br>கருங்கடல் | 959<br>யானை,<br>சிங்கம்<br>குரங்கு | |
| 967<br>வண்டு | 964<br>பூங்கா<br>வனம் | 964<br>வேங்கை | 964<br>மிளகு | 496<br>தாமரை | | 962<br>மலை | | | 960<br>யானை | |
| 991<br>தாராநீர் | | 978<br>கற்பகமரம் | | | | 971<br>கோவர்த்தனம் | | | 961<br>பன்றி | |
| 1011 | | 1016 | | | | 980<br>மேருமலை | | | 962 | |

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| பருந்து<br><br>*1062*<br>வண்டு<br><br>*1074*<br>மயில்,குயில்<br><br>*1111*<br>அன்றில்<br><br>*1149*<br>வண்டு<br><br>*1158*<br>மயில்<br><br>*1179*<br>கொக்கு<br>*1186*<br>வண்டு<br><br>*1191*<br>அன்னம்<br><br>*1198*<br>வண்டு<br><br>*1199*<br>வண்டு<br><br>*1214*<br>அன்னம் | *1062*<br>வயல்<br><br>*1076*<br>வயல்<br><br>*1166*<br>வயல்<br><br>*1179*<br>வயல் | நெல்லிமரம்<br><br>*1018*<br>குருந்தமரம்<br><br>*1048*<br>அகில்மரம்<br><br>*1052*<br>அரசமரம்,<br>அசோகமரம்<br><br>*1141*<br>குரவமரம்<br><br>*1144*<br>பாக்கு<br>சுரபுன்னை<br><br>*1150*<br>சென்பகமரம்<br><br>*1152*<br>வேங்கை,<br>கோங்கு,<br>செண்பகம்,<br><br>*1156*<br>பாக்கு<br><br>*1185*<br>பாரிஜாதம்<br>பாக்கு | *1094*<br>ஆலிலை<br>தர்ப்பை<br><br>*1138*<br>நெற்பயிர்<br><br>*1149*<br>குருக்கத்தி<br><br>*1150*<br>குருகத்தி<br>முல்லை<br><br>*1151*<br>கரும்பு<br><br>*1156*<br>வெற்றிலை<br><br>*1190*<br>நெற்பயிர்<br><br>*1203*<br>துளசி | *1062*<br>நெய்தல்<br>மலர்<br><br>*1074*<br>அல்லி<br><br>*1105*<br>தாமரை<br>செங்கழு<br><br>*1123*<br>பூவைப்பூ<br>காயாம்பூ<br>கருநெய்தல்<br><br>*1141*<br>கோங்க<br>சுரபுன்னை<br><br>*1180*<br>குவளை<br>அல்லி<br><br>*1186*<br>செங்கழுநீர்<br>பூ<br><br>*1207*<br>கருத்த | *1152*<br>பாலா<br>கனி | *1071*<br>கோவர்தனம்<br><br>*1091*<br>கோவர்தனம் | *10741*<br>மழை | *991*<br>காவிரி<br><br>*1140*<br>பொய்கை<br><br>*1158*<br>நீர்நிலை | யானை<br><br>*967*<br>பாம்பு,யானை<br><br>*971*<br>வாளைமீன்<br><br>*988*<br>மான்,யானை,<br>குதிரை<br><br>*996*<br>கயல்<br><br>*1008*<br>சிங்கம்,<br>யானை<br><br>*1011*<br>நாய்<br><br>*1013*<br>யானை,புலி<br><br>*1076*<br>யானை,<br>முதலை<br><br>*1132*<br>யானை,<br>பாம்பு<br><br>*1143*<br>யானை<br>முதலை | *1024*<br>ஐம்பூதம்<br><br>*10225*<br>ஐம்பூதம்<br>*1064*<br>ஐம்பூதம்<br>*1129*<br>ஐம்பூதம் |

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1215<br>நாகணவாய்<br>பறவை<br>1218<br>தேனீக்கள்<br><br>1219<br>புறா<br><br>1222<br>குயில்,மயில்<br><br>1226<br>அன்னம்<br><br>1230<br>வண்டு,மயில்<br><br>1279<br>வண்டு<br>1291<br>வண்டு,கொக்கு<br><br>1346<br>அன்னம்<br><br>1352<br>நாரை<br><br>1360<br>நாரை<br><br>1373<br>வண்டு | 1191<br>வயல் | பலா<br><br>1191<br>புன்னை,<br>சரபுன்னை<br><br>1216<br>மூங்கில்<br><br>1218<br>மராமரம்<br><br>1222<br>விளாமரம்<br>குருந்தமரம்<br><br>1228<br>சுரபுள்ளை<br>செண்பகம்<br><br>1230<br>தென்னை<br>வாழை<br>பாக்கு<br><br>1234<br>பாக்கு,<br>தென்னை<br><br>1240<br>புரபுன்னை<br><br>1258<br>பலா,மா,<br>வாழை,<br>செண்பகம் | 1228<br>மல்லிகை<br>செடி<br><br>1230<br>சம்பாபயிர்<br>வெற்றிலை<br>1234<br>கரும்பு<br>சம்பா<br><br>1258<br>குருக்கத்தி<br><br>1279<br>நெற்பயிர்<br><br>1346<br>கரும்பு<br>நெற்பயிர்<br><br>1490<br>மஞ்சள்செடி | குவளை மலர்<br><br>1216<br>நீலோற்பல<br>மலர்<br><br>1226<br>தாமரை<br>செங்கழுநீர்<br><br>1232<br>செந்தாமரை<br><br>1235<br>தாமரை<br>செங்கழுநீர்<br><br>1241<br>புன்னைமலர்<br>பாக்குபாளை<br>செண்பக<br>மலர்<br><br>1279<br>கருநெய்தல்<br>பூ<br><br>1346<br>தாமரை | 1240<br>பலா | | | 1186<br>கழனி நீர்<br>நிலை<br>1190<br>நீர்நிலை<br><br>1280<br>பொன்னி<br>நதி<br><br>1298<br>தடாகம்<br><br>1350<br>பொய்கை | 1144<br>யானை<br>குதிரை<br><br>1152<br>குரங்கு<br><br>1156<br>மீன்கள்<br><br>1158<br>மீன்கள்<br><br>1166<br>மீன்கள்<br><br>1179<br>மீன்கள்<br><br>1190<br>மீன்கள்<br><br>1194<br>நண்டு<br><br>1203<br>யானை<br><br>1223<br>எருமை<br><br>1232<br>சேல்,கயல்<br>வாளை<br>1243 | 1200<br>ஐம்பூதம்<br><br>1270<br>ஐம்பூதம்<br><br>1294<br>ஐம்பூதம் |

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| *1376*<br>குயில்<br><br>*1493*<br>அன்னம்<br><br>*1494*<br>பறவை<br><br>*1587* —<br>அன்னம்<br><br>*1589*<br>குருகு<br><br>*1591*<br>பறவை<br><br>*1720*<br>நாரை<br><br>*1798*<br>கொக்கு<br><br>*1800*<br>நாரை<br><br>*1805*<br>தாரா,நாரை | | பாக்கு<br><br>*1266*<br>வாழை,மா<br><br>*1278*<br>பாக்கு<br><br>*1280*<br>மாமரம்,<br>தென்னை<br><br>*1338*<br>பாக்கு,மா,<br>தென்னை,<br>வாழை<br><br>*1350*<br>தென்னை<br><br>*1530*<br>வாழைமரம்<br><br>*1535*<br>பாக்குமரம்<br><br>*1587*<br>மாமரம்<br><br>*1621*<br>பாக்குமரம்<br><br>*1753*<br>பாக்கு<br>மாமரம் | *1597*<br>நெற்பயிர்<br><br>*1722*<br>நெல்<br><br>*1753*<br>குருக்கத்தி<br><br>*2017*<br>துளசி | *1493*<br>கருநெய்தல்<br>தாமரை<br><br>*1597*<br>கருநெய்தல்<br>பூ<br>அல்லி<br><br>*1673*<br>தாழப்பூ<br><br>*1722*<br>முல்லை,<br>கருநெய்தல்,<br>செங்கழுநீர்<br><br>*1750*<br>மல்லி,<br>முல்லை,<br>செண்பகம்<br><br>*1749*<br>கருநெய்தல் | *1291*<br>வாழை<br>பழம்<br><br>*1300*<br>பலா,மா<br>*1343*<br>வாழை<br><br>*1845*<br>மாம்<br>பழம்<br>பலா<br>பழம்<br>வாழை<br>பழம் | *2031*<br>கோவர்தன<br>மலை | *1823*<br>மேகம் | *1360*<br>கழனி<br><br>*1621*<br>காவிரிநீர்<br><br>2045<br>நீர்நிலை | சேல்,கயல்<br>வாளை<br>*1266*<br>குரங்கு<br>*1278*<br>நண்டு<br>*1288*<br>யானை<br><br>*1291*<br>குரங்கு<br>யானை<br><br>*1343*<br>கயல்<br>*1350*<br>மீன்<br>*1352*<br>ஆரல் மீன்<br>*1360*<br>கயல் மீன்<br>*1362*<br>கொண்டை<br>மீன்<br>*1365*<br>ஆண்மான்,<br>பெண்மான்<br>*1482*<br>மலங்கு,<br>வரால்,வாளை<br>*1490*<br>ஆமை<br>*1494*<br>நத்தை<br>*1543*<br>கரடி,முசு,<br>குரங்கு | |

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1942 — 1946<br>செம்போத்து<br>இளம்காகமே<br>குயில்<br>பல்லிக்குட்டி<br>பச்சைக்கிளி<br>1962<br>அன்றில்<br>2045<br>அன்றில்<br><br>2068<br>புறா<br><br>2077<br>வண்டு | | குரவமரம்<br>பலாமரம்<br><br>1962<br>பனைமரம்<br><br>2028<br>வேம்பு | | ஆம்பல்<br>நெய்தல்<br>தாமரை<br>செங்கதிர்<br><br>2016<br>காயாம்பூ<br><br><br>2045<br>கருநெய்தல் | | | | 2057<br>பெண்ண<br>நதி | 1589<br>வானை,<br>ஆரல்<br>1591<br>கயல்<br>1710<br>முயல்,பசு<br>கயல்<br>1720<br>ஆரல்,கயல்<br><br>1798<br>வெள்ளிரால்<br><br>2031<br>பசு | |

# 7. பெரியாழ்வார் திருமொழி

| பறவை | சோலை | மரம் | செடி, கொடி | பூ | கனி | மலை | மழை | நீர் நிலை | விலங்குகள் | ஐம்பூதங்கள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | 22 — செந்நெல் பயிர் | 45 மாதுளம்பூ | 36 — 14 கொவ்வைக்கனி | 93 மலை | | | | |
| | | | 50 துளசி | 50 தாமரை | | | | | 69 நாகம் | |
| | | | | 69 காயாம்பூ | 150 நாவற்பழம் | | | | 126 முதலை யானை | |
| 133 வண்டு | | | | | | | | | | |
| | | 159 விளாமரம் | | 98 செந்தாமரை | 159 விளாங்கனி | | | 138 பொய்கை | | |
| 162 — 171 காக்கைப்பத்து | | | | 116 பாரிஜாதம் | | | | | | |
| | | 214 குருந்தமரம் | | | 211 நாவல்பழம் | | | | 215 நாகம் | |
| 283 வண்டு | | | | 138 அல்லி | | 257 கோவர்த்தனம் | | 212 நீர்நிலை | | |
| | | 216 பனைமரம் | 228 நெற்பயிர் | | 216 பனம்பழம் | | | | 220 முதலை, யானை | |
| 354 வண்டு | | | | 182 — 191 பூக்கள்பெயர் | | | | | | |
| 407 வண்டு | 405 சோலை | 315 மருதமரம் | 240 கள்ளிச் செடி | 255 முல்லைப் பூ வேங்கம்பூ | | 274 கோவர்த்தனம் | | 297 பொய்கை | 228 பசு | |
| 409 வண்டு | 406 சோலை | 351 புன்னை செருந்தி வேங்கை கோங்கு | | 262 செங்காந்தல் | | 275 மேருமலை | | 354 நீருற்று | 239 யானை | |
| 410 மயில் | | | 368 வயல் | 283 செந்தாமரை | | 353 — 5 மலை | | 355 அருவி | 270 குரங்கு | 365 ஐம்பூதம் |
| | | 359 கற்பகவிருச்சம் | | | | | | | 272 குரங்கு | |
| 420 அன்னம் | | 406 | | 297 தாமரை | | 469 மேருமலை | | 358 ஆறு, | | |

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | குரவம்,<br>கோங்கு<br><br>410<br>சந்தனமரம் | <br><br><br><br>419<br>நெற்கதிர் | <br>319<br>அல்லி<br>407 — 6<br>தாழப்பூ<br>409<br>மல்லிகை<br><br>410<br>கருங்குவளை | | | | சுணை<br><br>363<br>கழனி<br>364<br>நீர்வளம்<br>391,393<br>கங்கை<br><br>401<br>கங்கை<br><br>402<br>காவிரி<br><br>408<br>காவிரி<br><br>420<br>காவிரி | 283<br>மான்<br><br>342<br>யானை<br><br><br>457<br>சேல் | |

## 8. ஆண்டாள் அருளிய திருப்பாவை

| **பறவை** | **சோலை** | **மரம்** | **செடி, கொடி** | **பூ** | **கனி** | **மலை** | **மழை** | **நீர் நிலை** | **விலங்குகள்** | **ஐம்பூதங்கள்** |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| *476*<br>வண்டு | | | *476*<br>நெல் | *476*<br>குவரை மலர் | | | *477*<br>மழை | | *476*<br>மீன்கள்<br>பசு | *495*<br>சந்திரன் |
| *479*<br>கருடன் | | | | *487*<br>செங்கழு நீர் பூ<br>ஆம்பல் | | | | | *484*<br>பசு | |
| *480*<br>கரிச்சான் | | | | | | | | | *485*<br>எருமை | |
| *486*<br>பறவை | | | *491*<br>குருக்கத்தி | | | | | | *494*<br>பசு | |
| *491 — 18*<br>கோழி | | | | | | | | | *496*<br>சிங்கம் | |
| | | | | | | | | | *501*<br>பசு | |
| **நாச்சியார் திருமொழி** | | | | *506 — 3*<br>ஊமத்தை<br>முருங்கபூ | | | | | *513*<br>யானை | |
| | | | | *509 — 6* | | | *571* | | | |

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 545<br>குயில்<br><br>547<br>வண்டு<br><br>549<br>குயில்,<br>அன்னம்<br><br>552 — 555<br>குயில்<br><br>590<br>மயில்,<br>குயில்<br><br>594<br>கரிச்சான் | 590<br>சோலை | 526<br>குருந்த<br>மரம்<br><br>545<br>குருக்கத்தி,<br>கோங்கு<br>செருந்து,<br>புன்னை<br><br>595<br>கோங்கு<br><br>596<br>சந்தனம்<br>காரகிற்.... | | காயம்பூ<br>காக்கனம்<br><br>546<br>செண்பகம்<br><br>588<br>முல்லை<br><br>589<br>காக்கணம்<br>காயாம்<br><br>597<br>கருத்த<br>காந்தல்<br>மலர்<br><br>622<br>கருவிளைப்<br>பூ,காயாம்,<br>தாமரை | 590<br>களாப்<br>பழம் | | மலை<br>மேகம்<br><br>578 —<br>585<br>மேகவிடு<br>தூது | 591<br>சுனை | 528<br>கயல்,வாளை<br><br>549 — 5<br>கெண்டை | |

# 9. குலசேகராழ்வார் அருளிய பெருமாள் திருமொழி

| பறவை | சோலை | மரம் | செடி, கொடி | பூ | கனி | மலை | மழை | நீர் நிலை | விலங்குகள் | ஐம்பூதங்கள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 722<br>வண்டு | 652<br>சோலை<br><br>654<br>சோலை<br><br>688<br>சோலை | 700<br>மருதமரம் | 654<br>வயல் | 680<br>செண்பக மலர் | | 650<br>கோவர்த்தனம் | | 678<br>சுனை<br><br>683<br>காட்டாறு | 659<br>பசு<br><br>733<br>யானை | |

# 4. திருமழிசையாழ்வார் அருளிய திருச்சந்த விருத்தம்

| பறவை | சோலை | மரம் | செடி, கொடி | பூ | கனி | மலை | மழை | நீர் நிலை | விலங்குகள் | ஐம்பூதங்கள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 770<br>அன்னம்<br>கொக்கு<br><br>795<br>வண்டு<br><br>813<br>நீர்காகம் | | 788<br>விளாமரம்<br>குருந்தமரம்<br><br>809<br>மருதமரம்<br><br>811<br>மூங்கில் | 773<br>துளசி<br><br>781<br>துளசி<br><br>810 — 50<br>செந்நெல்<br>வயல்<br><br>844 — 93<br>துளசி<br><br>866 — 115<br>விசச்செடி | 760<br>கொன்றை<br>மலர்<br><br>870 — 119<br>காயாம்பூ | 813<br>பனம்<br>பழம்<br><br>811<br>பனம்<br>பழம் | 772<br>மந்திர<br>மலை | | 761<br>கடல்<br><br>801<br>காவிரி<br><br>811<br>தடாகம்<br><br>870 — 119<br>காவிரி | 786<br>மீன்,ஆமை<br><br>789<br>யானை,நாகம்<br><br>791<br>முதலை,பசு<br><br>809<br>யானை<br><br>813<br>வாளை<br><br>831<br>கோடுவேறு | |

# 10.தொண்டரடிப் பொடியாழ்வார் அருளிய திருமலை

| பறவை | சோலை | மரம் | செடி, கொடி | பூ | கனி | மலை | மழை | நீர் நிலை | விலங்குகள் | ஐம்பூதங்கள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 877<br>காக்கை,<br>கழுகு<br><br>885<br>மயில்,<br>குயில்,<br>வண்டு | | | | 891<br>தாமரை | 889<br>கோவைகனி | | 907<br>கல்மழை | 894<br>கங்கை,<br>காவிரி | 899<br>யானை,<br>முதலை | |

# 11.திருப்பாணாழ்வார் அருளிச் செய்த அமலனாதிபிரான்

| பறவை | சோலை | மரம் | செடி, கொடி | பூ | கனி | மலை | மழை | நீர் நிலை | விலங்குகள் | ஐம்பூதங்கள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 930<br>வண்டு,<br>மயில் | | | | | | | | | 929<br>குரங்கு | |

# 12.நம்மாழ்வார் அருளிச்செய்த திருவாய்மொழி

| பறவை | சோலை | மரம் | செடி, கொடி | பூ | கனி | மலை | மழை | நீர் நிலை | விலங்குகள் | ஐம்பூதங்கள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 2824<br>நாரை<br>கருடன் | 3056<br>சோலை | 2840<br>மாமரம் | | | 2909<br>கோவை<br>ப்<br>பழம் | | | 3037<br>சுனை<br>நீர் | 2913<br>சிங்கம் | 3218<br>ஐம்பூதம் |
| | | | 3134<br>வல்லிக்<br>கொடி | | | 3042<br>கோவர்<br>தனம் | | | | |
| | | 3126<br>பனை<br>மரம் | | | | | | | | |
| 2825<br>குயில் | | | | | | | | | 2991<br>யானை | |
| | | | | | 3114<br>பழங்கள் | | | 3044<br>தடாகம் | | |
| | | | 3226<br>சம்பாநெல் | | | | | | | |
| 2826<br>அன்னம் | 3304<br>மாந்தோப்பு | | | | | | | | | |
| | | 3262<br>மருத<br>மரம் | | | | | | | 3007<br>மான் | |
| | | | 3227<br>செந்நெல் | | | | | | | |
| 2828<br>சிறுகுருகு | | | | | | | | | | |
| | | | 3231<br>செந்நெல்,<br>கரும்பு | | | | | | 3321<br>மான் | |
| 2829<br>வண்டு | | | | | | | | | | |
| | | 3321<br>பாக்கு<br>மரம் | | 3262<br>நீலோத்<br>பல | | | | | | |
| | | | | | | | | 3328<br>தடாகம் | | |
| 2831<br>நாகணவாய் | | | 3322<br>குருக்கத்<br>தி | | | | | | | |
| | | 3322<br>புன்னை,<br>மகிழமரம் | | 3299<br>தாமரை | | | | | | |
| 2867<br>வண்டு | 3326<br>தோட்டம் | | | | | | | | | |
| | | | 3328<br>கரும்பு,<br>செந்நெல் | | | | | | | |
| 2868<br>கருடன் | | | | 3321<br>மல்லிகை<br>க | | | | | | |
| | | 3324<br>பாக்கு | | | | | | | | |
| 2901 | | | | | | | | | | |

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| நாரை<br><br>2902<br>அன்றில்<br><br>3011<br>மயில்<br><br>3262<br>கொக்கு<br><br>3343<br>குருகு<br><br>3344 — 3346<br>பூங்குயில்,<br>கிளி,<br>நாகணவாய்<br>அன்னம்<br><br>3428 — 3429<br>பெருநானா,<br>அன்னம்<br><br>3581<br>கிளி,<br>நாகணவாய்<br>குயில்,<br>மயில் | 3476 — 2<br>தோட்டம் | தென்னை<br>வாழை<br><br>3434<br>குருந்த<br>மரம்<br>விளாமரம்<br><br>3479<br>மருதமரம்<br>விளாமரம்<br><br>3599<br>வாழை<br>கழுகு,<br>தென்னை<br><br>3657<br>கழுகு,<br>வாழை,<br>தென்னை | 3343<br>செந்நெல்<br><br>3392<br>கரும்பு,<br>செந்நெல்<br><br>3423<br>முல்லை<br>செடி<br><br>3579<br>வல்லிக்<br>கொடி<br><br>3657<br>வெற்றிலை<br>ல | 3746<br>காயம்பூ<br><br>3770<br>முல்லை<br>கருமுகை<br>க<br>மல்லி | | 3510<br>கோவர்த<br>ன<br>மலை | 3495<br>ஆலங்க<br>ட்டி<br>மழை<br><br>3510<br>கல்<br>மாரி | 3392<br>நீர்நிலை<br><br>3480<br>ஆற்றுநீர்<br>ஊற்றுநீர்<br>மழைநீர் | 3343<br>வாளைமீன்<br><br>3464<br>கயல்மீன்<br><br>3597<br>கயல்மீன்<br><br>3659<br>முதலை | 3494<br>ஐம்பூதம்<br><br>3509<br>ஐம்பூதம்<br><br>3816<br>ஐம்பூதம்<br><br>3858<br>ஐம்பூதம் |

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 3720 — 3726<br>கோழி,கிளி,<br>நாகவாய்,<br>குயில்,<br>வண்டு,<br>நாரை<br><br>3739,40,44<br>நாரை,<br>குருகு,<br>வண்டு<br><br>3746<br>வண்டு<br>3747<br>இளங்குருகு<br><br>3748<br>அன்னம் | | 3795<br>குந்த,<br>செருந்தி,<br>பன்னை | | | | | | | | |

# நாலாயிரத் திவ்விய பிரபந்த
# இயற்கைப் புனைவில் பக்திநெறி

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


**ஆய்வாளர்**

**க.காளீஸ்வரி**
பதிவு எண் : 1264

**நெறியாளர்**

**முனைவர் சு.இராசாராம்**






**தமிழ்த்துறை**

அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசியத் தரநிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்று மதிப்பீட்டில் 'A+' (CGPA-3.64) தகுதி பெற்றது மற்றும்
மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தரப் பல்கலைக்கழகத் தகுதி மற்றும்
தன்னாட்சித் தகுதி பெற்றது)

காரைக்குடி - 630 003

தமிழ்நாடு, இந்தியா


**மார்ச்சு - 2021**

# முடிவுரை

மனிதன் இயற்கையோடு இயற்கையாக வாழ விரும்பியவன். கால மாற்றத்தினாலும், அறிவியல் வளர்ச்சியினாலும் மனிதன் இன்றைய சூழ்நிலையில் வாழப் பழகிக்கொண்டான். இயற்கை இது தான் என வரையறுத்துக் கூறமுடியாத அளவிற்கு இயற்கை பரந்து விரிந்து கிடக்கிறது. மனித வரலாற்றிற்கு ஆதாரமாகவும், கலை, மொழி, இனம், பண்பாடு என அனைத்திற்கும் ஆதாரமாகவும் விளங்குவது இயற்கை. தொல்காப்பியர், இயற்கை பொருள்களுக்குள் அடங்குவனவற்றை முதல், கரு, உரி எனப் பகுத்துள்ளார்.

சங்க இலக்கியங்களில் மக்களின் வாழ்வு, பண்பாடு, இனம், அங்குள்ள இயற்கைச் சூழ்நிலைகள் என அனைத்தும் பதிவுசெய்யப்பட்டுள்ளன. சங்கப் புலவர்கள் நிலங்களை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐந்து வகையாகப் பிரித்து ஒவ்வொன்றிற்கும் எனத் தனித்தனியே உள்ள இயற்கைச் சூழ்நிலையைச் சுட்டியுள்ளனர்.

சங்க காலப் புலவர்கள் உணர்ச்சிகளையும் உண்மைகளையும் தெளிவுறுத்துங்கால் இயற்கைக் காட்சிகளை வன்மைமிக்க கருவியாகப் பயன்படுத்தியுள்ளனர். இயற்கைக் காட்சிகளைப் பாடுதலில் எவ்வகைத் தயக்கமும் அப்புவலர்களிடையே காணப்படவில்லை. பாடலில் உட்கருக்களோடு மிக நெருங்கிக் கலந்த நிலையில் இயற்கை வருணனை வருகின்ற இடங்கள் மிகப்பல உள்ளன. அத்தகைய இடங்களில் இயற்கை வேறு வாழ்வின் கூறு வேறு என்று பிரித்துணர முடியாத அளவுக்குப் பின்னிப்பிணைப்புண்டு கிடக்கின்றது. வாழ்வின் கூறுகளுடன் ஒப்ப வைத்து நோக்குவதோடு, தனி நிலையிலிருந்து காணுதற்குரிய முறையிலும் எழில் நிறைந்தனவாய்ச் சங்க இலக்கியத்தில் இனிய இயற்கைக் காட்சிகள் இடம் பெறுகின்றன. சங்க இலக்கியம் பயில்வார் அவற்றுள் வரும் இயற்கைக் காட்சிகளைப் உணர்ந்து மகிழ்கின்றனர்.

சங்க இலக்கியங்களில் வரும் பாட்டுடைத் தலைமக்களின் நாட்டு வளத்தினைச் சுட்டவும், உவமைக்காகவும் இயற்கையைப் புலவர்கள் அழகாகப் புனைந்துள்ளனர்.

நீதி நூல்களில் முதன்மையாகக் கருதப்படும் திருக்குறளில் பெரிதும் இயற்கைச் செய்திகள் பதிவு செய்யப்பட்டுள்ளன. மழையின் சிறப்பினை உணர்த்துவதற்காகத் திருவள்ளுவர் வான்சிறப்பு என்ற அதிகாரத்தைப் படைத்துள்ளார். மலர்கள், விலங்குகள், பறவைகள் போன்ற இயற்கை நிகழ்வுகளை உவமைகளாகப் பயன்படுத்தியுள்ளார். தான் சொல்கின்ற கருத்துக்கு ஆதாரமாக இயற்கையைப் பயன்படுத்தியுள்ளார்.

காப்பியங்கள், பக்திஇலக்கியங்கள், சிற்றிலக்கியங்கள் முதல் இருபதாம் நூற்றாண்டு இலக்கியங்கள் வரை அனைத்து இலக்கியங்களிலும் இயற்கை பற்றிய செய்திகள் புனையப்பட்டுள்ளன.

நம்மாழ்வாரிடம் இருந்து ஆழ்வார்கள் அருளிச் செய்த பாசுரங்களைப் பெற்று நாலாயிரத் திவ்வியப் பரபந்தமாகத் தொகுத்தவர் நாதமுனிகள். ஆழ்வார்கள் கி.பி 7 முதல் கி.பி 9 வரையிலான காலகட்டத்தில் வாழ்ந்தவர்கள் ஆவர். ஆழ்வார்கள் திருமாலின் ஒவ்வொரு பொருளின் அம்சமாகத் தோன்றியவர்கள் என்பதும், திருமாலின் முழு அருளையும் பெற்றவர்கள் ஆழ்வார்கள் என்பதும் மரபு சார்ந்த நம்பிக்கையாகும்.

இயற்கையின் வழியே இறைவனை வழிபட்ட ஆழ்வார்கள் இயற்கையின் படைப்பாகிய பறவைகளின் வழியாகத் தம் பக்தியினை வெளிப்படுத்தியுள்ளனர். அவர்களின் பாசுரங்களில் கருடன், கொக்கு, அன்னம், கிளி, மயில், வண்டு, நாரை, அன்றில், குருகு, கோழி, புறா, காக்கை, செம்போத்து, நாகணவாய், கரிச்சன், குயில் போன்ற பறவைகள் மூலமாகத் தம் பக்தியினை வெளிப்படுத்தியுள்ளனர்.

இரு சிறகுகள் கொண்ட பறவைகள் விசும்பில் பறப்பது போல ஞானம், ஒழுக்கம் என்னும் பண்புகள் இறைவனை அடையும் வழி என்கின்றனர். எனவே, பறவைகளின் இரு சிறகுகளை ஞானத்திற்கான வழியாகக் கொள்கின்றனர். ஆழ்வார்களைப் பறவைகளின் அம்சமாகக் குறிப்பிடுவது வைணவ வழக்காக உள்ளது.

ஆழ்வார்கள் பறவைகள் புனைவில் தம் பக்தியினைப் புலப்படுத்தும் நிலையில் அகப்பொருள் மரபினைப் பின்பற்றியுள்ளனர். திருமாலிடம் இசைபாடப் பறவையை அழைத்தல், திருமாலுக்குக் கைங்கரியம் செய்யப் பறவையை அழைத்தல், திருமால் புகழ்பாடுதல், திருமால் திருத்தலப் பெருமையினை பறவைகள் வழி விளக்குதல், திருமால் மீது ஆழ்வார்கள் கொண்ட பிரிவுத்துயரத்தைப் பறவைகள் வழிப் பாடுதல், பறவையைத் திருமாலிடம் தூது அனுப்புதல் போன்ற பொருண்மைகளின் அடிப்படையில் ஆழ்வார்கள் பாசுரங்கள் அமைத்துள்ளதை அறியமுடிகிறது.

திருமாலிடம் பக்திகொண்ட ஆழ்வார்களுக்கு வண்டின் இரைச்சல் கூட இசையாகக் கேட்பதை அவர்களின் பாசுரங்கள் வழி அறியமுடிகிறது. இறைவனை வழிபடுவதில் பலவகைகளைக் கையாண்டுள்ளனர் ஆழ்வார்கள். இசையின் மூலம் இறைவனை அடைதல், பாடலின் மூலம் இறைவனை அடைதல், இறைவனுக்குத் தொண்டுகள் புரிவதன் வழி அவன் அருளைப் பெறுதல் எனப் பலவழிகளில் திருமாலின் அருளைப் பெற்ற ஆழ்வார்கள் அதனைப் பறவைகளின் மூலமாகவும் செய்விப்பதை அவர்களின் பாசுரங்களில் காணமுடிகிறது.

இறைவனுக்குத் தொண்டு புரிய உயர்திணை, அஃறிணை என்ற பாகுபாடு தேவையில்லை. உண்மையான அன்புடன் செய்யும் தொண்டினைத் திருமால் ஏற்றுக்கொள்வார் என்பதனை, பறவைகளை இறைவனுக்குத் தொண்டு புரிய அழைப்பதன் மூலம் நிறுவியுள்ளனர்.

திருமால் வீற்றிருக்கின்ற திருத்தலங்களின் சிறப்பினைப் பறவைகளின் வழியாக எடுத்துரைத்துள்ளனர். ஆழ்வார்கள் திருமால் மீது கொண்டுள்ள பக்தியினைப் பறவையைத் தூதாக அனுப்புவதன் மூலம் அறியமுடிகிறது. இறைவன் பறவைகளின் வேண்டுதலைக் கூட ஏற்றுக் கொள்வார் என்பதை உணர்த்தவே பறவையைத் திருமாலிடம் தூதாக அனுப்பியுள்ளனர். ஆழ்வார்கள் நினைக்கின்ற, காண்கின்ற அனைத்திலும் திருமாலையே எண்ணிக் கொண்டிருக்கின்ற நிலையினை அவர்கள் திருமாலின் நிறத்தோடு பறவைகளின் நிறத்தை ஒப்பிடுவதன் மூலம் உணரமுடிகிறது.

திருமாலிடத்தில் உயிர்கள் அனைத்தும் ஒன்றே, இறைவனிடத்தில் மனிதர்கள், பறவைகள், விலங்குகள், உயர்ந்தவர், தாழ்ந்தவர், சாதி, மதம் என எந்தப் பாகுபாடும் அவனிடம் இல்லை. உண்மையான அன்புடன் அவனைத் தொழுவோரை என்றும் காக்கக் கூடியவன் எம்பெருமானே. இவ்வுண்மையை மனிதர்களுக்கு உணர வைப்பதற்காகத்தான் திருமால் விலங்குகளாகவே அவதரித்துள்ளார். உலகையே ஆளக்கூடியவனாக இருந்தாலும் மீனாகவும் ஆமையாகவும் வராகமாகவும் நரசிம்மமாகவும் அவதரித்தாயே உன்னுடைய கருணையை நான் எங்ஙனம் போற்றுவேன் எனத் திருமங்கையாழ்வார் குறிப்பிட்டுள்ளதன் வழி இதனை உணரமுடிகிறது.

திருமால் விலங்குகள் மீது அன்புடையவர் என்பதை ஆழ்வார்கள் தம் பாசுரங்களில் பதிவுசெய்துள்ளனர். திருமால் உலக உயிர்கள் அனைத்தையும் காக்கக்கூடியவர், தன்னை வணங்கியவருக்குத் துன்பம் நேரும் போது விரைந்து அவர்களைக் காக்கக் கூடியவர் என்பதை, கஜேந்திரன் என்ற யானையின் மூலமும், மழையிலிருந்து பசுக்களைக் காத்த நிகழ்வின் மூலமும் எடுத்துரைத்து, அடியவர்கள் திருமால் அருள் பெற அவனை வணங்கவேண்டும் என வலியுறுத்தியுள்ளனர்.

எம்பெருமான் விலங்குகளிடம் அன்புடையவன், எனினும் அவற்றால் மக்களுக்கும், பிற உயிர்களுக்கும் துன்பம் நேரும் போது அவற்றை அழிக்கவும் கூடியவன் என்று ஆழ்வார்களின் பாசுரங்களில் சுட்டப்பட்டுள்ளது. திருமால் இருக்கின்ற திருத்தலத்திலுள்ள விலங்குகள் அன்புடையவைகளாக விளங்குகின்றன. தனது விலங்குக் குணத்திலிருந்து மாறி அன்பும், பக்தியும் மிக்கவையாக விளங்குகின்றன. அவற்றின் இருப்பிடமும் அழகும் அமைதியும் நிறைந்தவையாக இருக்கின்றன. அத்தகைய திருத்தலங்களுக்குச் சென்று மாதவனை வணங்கினால் நமது வாழ்வு மேன்மை அடையும், அவன் அருள் முழுமையாகக் கிடைக்கும் என்பதனைப் பாசுரங்கள் வழி அறியமுடிகிறது.

திருமால் மீது அதிக அன்பும், பக்தியும், பற்றும் கொண்ட ஆழ்வார்கள் எந்த நிலையிலும், எந்தச் சூழ்நிலையிலும், எப்பொழுதும் திருமாலை மறவாதது

அவன் நினைவில் இருப்பவர்கள். பிரகலாதன் கூறியது போல இறைவன் தூணிலும் இருக்கிறார் துரும்பிலும் இருக்கின்றார் என்பதை ஆழ்வார்கள் தெளிவாகப் பதிவு செய்துள்ளனர். உலகைப் படைத்தவன் இறைவன். உலகிலுள்ள உயிரினங்கள் இயற்கை என அனைத்துமே அவனால் உருவாக்கப்பட்டவை. எனவேதான் ஆழ்வார்கள் தாங்கள் காண்கின்ற அனைத்திலுமே திருமாலைக் காண்கின்றனர். இறைவனால் படைக்கப்பட்ட இயற்கையை இறைவனாகவே காண்கின்றனர். அவ்வகையில் தாவரங்களிலும் இறைவனைக் காணமுடியும் என்பதைப் பாசுரங்களில் வெளிப்படுத்தியுள்ளனர். தாவரங்கள், மரம், செடி, கொடி, மலர்கள், கனிகள் என அனைத்திலும் திருமாலைக் காண்கின்றனர்.

திருமால் வீற்றிருக்கக்கூடிய அனைத்துத் திருத்தலங்களும் அந்த வைகுண்டத்தைப் போன்றதே. அத்தகைய திருத்தலங்களில் அமைந்துள்ள விலங்குகள், பறவைகள், மரம், செடி, கொடி, நீர்நிலை அனைத்தும் சிறப்புடையதே என்பதை ஆழ்வார்களின் பாசுரங்கள் நன்கு வெளிப்படுத்துகின்றன. எம்பெருமான் மீதுள்ள பற்றினை அவர்கள் வெளிப்படுத்தும்போது மாதவன் வீற்றிருக்கக்கூடிய திருத்தலங்களின் பெருமைகளை உணர்த்தவும், அத்திருத்தலத்தின் சிறப்பை வெளிப்படுத்தவும் அங்கு அமைந்திருக்கக்கூடிய வானளாவ ஓங்கி உயர்ந்து வளர்ந்துள்ள மரங்களை, சோலைகளை எல்லாம் குறிப்பிட்டு இதற்குக் காரணம் அங்குள்ள திருமாலே, எனவே அஃறிணை உயிரான தாவரத்திற்கே அவன் அருள்புரியும்போது, அத்தலத்திற்குச் சென்று அவனை வழிபடுவோரை அவர் எப்பொழுதும் கைவிடமாட்டார் என்கின்றனர் ஆழ்வார்கள். வேங்கை, நெல்லி, குரவம், பாக்கு, சுரபுன்னை, தென்னை, செண்பகம், வாழை போன்ற மரங்கள் பற்றிய செய்திகள் பாசுரங்களில் இடம் பெற்றுள்ளன.

திருமால் விரும்பி அணிவதால் துளசிச் செடிக்கு, திருமாலின் அருள் முழுமையாக உள்ளது. எனவே திருமாலின் அடியவர்களான ஆழ்வார்கள், அவன் அருள் கிட்டாத நிலையில், அவன் விரும்பி அணிந்து கொள்கின்ற அந்தத் துளசி மாலையாவது தாருங்கள், இல்லையேல் துளசி முளைத்த மண்ணையாவது தாருங்கள் அதன் மூலமாகவாவது திருமாலைக்

கண்டுகொள்கிறோம் என்கின்றனர். அவர்கள் திருமால் வைத்துள்ள அளவிலாத அன்பினை அவர்களது பாசுரங்கள் நன்கு வெளிப்படுத்துகின்றன. துளசியை வணங்கினாளல் திருமாலை வணங்கியதன் பலன் கிட்டும், எனவே மனிதர்கள் துளசியிடம் இருந்தும் கூட திருமாலின் அருளைப் பெற்றுக்கொள்ளுங்கள் என வலியுறுத்துகின்றனர்.

சமய வழிபாட்டில் ஒவ்வொரு பூக்களும் ஒவ்வொரு இறைவனுக்கு உகந்ததாகக் கருதப்படும். அப்பூக்களைக் கொண்டு இறைவனை வணங்கினால் அவன் அருள் முழுமையாகக் கிட்டும் என்பது நம்பிக்கை. அந்த வகையில் திருமாலுக்கு விருப்பமான மலராகத் தாமரை கருதப்படுகிறது. ஆழ்வார்களின் பாசுரங்களில் தாமரை பற்றிய செய்திகள் அதிகமாக இடம்பெற்றுள்ளன. ஆழ்வார்கள் திருமாலை செந்தாமரைக் கண்ணா, தாமரையின் நிறத்தை உடையவனே எனவும் திருமாலின் கை, வாய், பாதம் போன்றவற்றோடு ஒப்பிட்டும் பாடியுள்ளனார். திருமகள் போற்றும் மலராகத் தாமரை உள்ளது. திருமகள் வீற்றிருக்கின்ற தாமரையைக் கொண்டு எம்பிரானை வழிபடுவோர்க்கு ஏழு பிறவிகளிலும் மன்னராகப் பிறந்து அரசாளும் நிலைகிட்டும் எனப் பூதத்தாழ்வார் குறிப்பிட்டுள்ளார்.

ஐம்பூதங்களான நிலம், நீர், காற்று, ஆகாயம், நெருப்பு என இவை ஒவ்வொன்றும் மிகப் பெரிய சக்திகளாகும். ஐம்பூதங்கள் தான் உயிரினங்கள் நிலைத்து வாழ்வதற்குத் தேவையான அனைத்து சூழ்நிலையினையும் உருவாக்குகின்றன. ஐம்பூதங்கள் சமநிலையில் இருந்தால் மட்டுமே இவ்வுலக இயக்கம் சீராக அமையும். இவற்றில் ஒன்று அதிகரித்தாலும், குறைந்தாலும் பெரிய பேரிடரை உருவாக்கும். உலக இயக்கத்தின் மிகப்பெரிய சக்தியான பஞ்சபூதங்களை மனிதன் வணங்கினான். நிலத்தை பூமாதேவியாக, நீரை வருணதேவனாக, காற்றை வாயுதேவனாக, ஆகாயத்தை இந்திரதேவனாக, நெருப்பை அக்னிதேவனாக வணங்கினர். பஞ்சபூதங்கள் அனைத்தும் சிறந்து விளங்கும் இடம் இயற்கை அழகுமிக்க வளமான இடமாகக் காட்சியளிக்கின்றன. இயற்கையை ஆளுகின்ற பஞ்சபூதங்களுக்கு எல்லாம் சக்தியை கொடுக்கக்கூடிய மிகப் பெரிய சக்தியே இறை சக்தியாகும். அவனே திருமால் என்கின்றனர்

ஆழ்வார்கள். பஞ்சபூதங்களின் வடிவில் இருந்து அவற்றை இயக்குபவன் திருமாலே.

உயிரினங்கள் அனைத்தும் இந்த பஞ்சபூதங்களின் அடிப்படையில் அமைந்தவை. பஞ்சபூதங்களுக்கெல்லாம் தலைவனான திருமாலே ஒவ்வொரு உயிரினுள்ளும் இருந்து அவற்றை எல்லாம் இயக்கிக்கொண்டிருக்கிறான். எனவே திருமால் படைத்த உயிர்கள் அனைத்திலும் அவனையே காண்கின்றனர் ஆழ்வார்கள். ஒவ்வொரு உயிரினுள்ளும் திருமால் வீற்றிருக்கின்றார் என்பதை ஆழ்வார்களின் பாசுரங்கள் உணர்த்துகின்றன. ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் பஞ்சபூதங்களின் வடிவமாக இருக்கும் திருமாலை மனிதன் உணர்ந்து வழிபட்டால், மனிதவாழ்வு செம்மை அடையும், எல்லா வளங்களையும் பெற்று வாழ முடியும் என்ற கருத்தை ஆழ்வார்கள் எடுத்துரைக்கின்றனர்.

பஞ்சபூதங்களுக் கெல்லாம் தலைவனான திருமாலுக்கு, பொய்கை ஆழ்வார், 'வையம் தகளியா' என இயற்கையையே விளக்காக ஏற்றிப் பாசுரத்தைத் தொடங்கியுள்ளார். பஞ்சபூதங்களின் வடிவமாக இருந்து மக்களை ஆட்டுவதும், ஆட்டுவிப்பதும் திருமாலே என்கின்றனர். இயற்கையைப் படைத்தவன் இறைவன். எனவே அவனது படைப்பில் அவனையே காண்கின்றனர் ஆழ்வார்கள். உலகளந்த பரந்தாமனின் திருவடிகளின் நிறம் செந்தாமரை போல் உள்ளது. திருமேனியின் நிறமோ பூமியைச் சூழ்ந்திருக்கின்ற கடல் நீரின் நிறத்தை ஒத்துள்ளது. திருமுடியின் நிறமே ஒற்றைச் சக்கரத்தேரில் வலம் வரும் சூரியனை ஒத்துள்ளது. அவனது ஒளியும் பகவலனின் பிரகாசத்தை ஒத்துள்ளது. இத்தகைய அழகு பொருந்திய எம்பெருமானின் திருவடியைச் சரணடைந்து அவனது அருளைப் பெறவேண்டும் என்கின்றனர் ஆழ்வார்கள்.

இறைசக்தியும் நானே, இயற்கையும் நானே என்பதை உணர்த்தவே எம்பிரான் இயற்கை நிறங்களைப் பெற்று இயற்கையாகவே தோற்றமளிக்கின்றார். இத்தகைய இறைவனைக் கண்டு வணங்கி அவன் அருள் பெற்று இன்பமான வாழ்வை மக்கள் அமைத்துக்கொள்ளவேண்டும் என்பதை ஆழ்வார்கள் எடுத்துரைக்கின்றன.

திருமாலே கேள், எனது ஆத்மாவாகிய பாவச் சேற்றுக்குள் உன்னைக் குறித்த பக்தி என்ற விதை விழுந்து முளைத்தது. உனது திருப்பாதக் கமலம் என்கிற அழகிய சுடர் மிக்க மலரிலே நிலையாக வந்து படிந்து செழித்து வளர்ந்துவிட்டது. இனி அதை ஒன்றும் செய்ய இயலாது. எனவே நீ என்னை விட்டுப் போக நினைத்தாலும் அது முடியாது. ஆகவே என்னை ஆட்கொள்வதைத் தவிர உனக்கு வேறு வழி இல்லை எனத் திருமாலிடம் கெஞ்சிய ஆழ்வார் பக்தியின் மிகுதியால் மிரட்டுவதையும் பாசுரங்களில் காணமுடிகிறது.

இரவிலே ஆகாயத்தை ஆளும் பூரண சந்திரனைப் போல வெண்கொற்றக் குடைக்குக் கீழ் மக்களுக்கெல்லாம் மன்னனாகப் புகழ்பெற்ற அரசையாளும் ராஜபோக வாழ்வை நான் கேட்கவில்லை, தேன் நிறைந்த பூக்களைக் கொண்ட சோலைகளையுடைய திருவேங்கட மலை மீது ஒரு காட்டாறாய்ப் பாயும் பேறு கிடைத்தால் அதுவே என் பாக்கியம் எனக் குலசேகர ஆழ்வார் குறிப்பிட்டுள்ளதன் வழி ஆழ்வார்களின் உண்மையான தொண்டு நெறியினை அறியமுடிகிறது.

ஆழ்வார்களின் முக்கிய நோக்கமே மீண்டும் பிறவாமல் திருமாலின் திருவடியைச் சென்று சேரவேண்டும் என்பதாகும். அடியார்களையும் அவ்வழியிலேயே ஆற்றுப்படுத்துகின்றனர். இறைவன் மீது முழுமையான அன்பும், பக்தியும் கொண்டவர்களைத் திருமால் தேடிவந்து ஆட்கொள்வார் என்பதற்கு முதலாழ்வார்களே சான்றாக விளங்குகின்றனர்.

இறைவன் மீது உண்மையான அன்பு கொண்டு வழிபட்டால் பரம்பொருளை அறியலாம் என்பதை ஆழ்வார்களின் பாசுரங்கள் உணர்த்துகின்றன. அதற்கு ஆழ்வார்களே சான்று. திருமாலின் மீது தாங்கள் கொண்டுள்ள அன்பினை, பக்தியினைப் பல வழிகளில் பாசுரங்களில் ஆழ்வார்கள் பதிவு செய்துள்ளனர். இயற்கையோடு இயற்கையாக வாழ்ந்த மனிதர்களுக்கு அந்த இயற்கையின் மூலமாகவே திருமாலின் பெருமையினை உணர்த்தியுள்ளனர் ஆழ்வார்கள்.

இயற்கையைப் படைத்தவன் இறைவன். இயற்கை இறைவனுக்குள் அடங்கும். ஆனால், இறைவன் இயற்கைக்குள் அடங்கான். இந்த உலகத்தைத் தோற்றி வைத்தவனே திருமால்தான். உலகிலுள்ள அனைத்தும் அவனால் ஆக்கப்பட்டவை. அனைத்தும் அவனது கட்டளையால் செயல்பட்டுக் கொண்டிருக்கிறன.

மனிதன், விலங்கு, பறவை, செடி, கொடி, புல், மரம் என எதிலும் பாகுபாடு இல்லாதவன். அனைத்தையும் ஒன்றாகவே கருதக் கூடியவன். அன்பு ஒன்றை மட்டுமே நேசிக்கக் கூடியவன் என்பதை ஆழ்வார்கள் வலியுறுத்தியுள்ளனர்.

தான் படைத்த இந்த உலகிலுள்ள அனைத்து உயிர்களும் தனக்குச் சமம் என்பதை உணர்த்தவே எம்பெருமான் பாம்பைப் படுக்கையாகவும், கருடனை வாகனமாகவும், துளசியை மாலையாகவும், தாமரை மலரை இருக்கையாகவும் கொண்டுள்ளார் என்கின்றனர் ஆழ்வார்கள். மாதவனால் படைக்கப்பட்ட இயற்கையைக் கண்டு வியக்கின்றனர்.

ஆழ்வார்கள் எப்பொழுதும் திருமாலையே நினைத்துக் கொண்டிருப்பவர்கள் என்பதை நாலாயிரத் திவ்விய பிரபந்தத்தின் மூலம் உணரமுடியும். நாம் சாதாரணமாகக் காணுகின்ற ஒவ்வொரு பொருளையும் ஆழ்வார்கள் திருமாலாகவே காணுகின்றனர். தான்மட்டும் திருமாலின் பெருமையினை அறிந்தால் போதாது அனைவரும் அறிந்து கொள்ள வேண்டும் என்பதையும் தான்மட்டும் அவன் அருளைப் பெற்றால் போதாது அதனை மற்றவர்களுக்கும் போதித்து, அனைவரும் அவன் அருள் பெறவேண்டும் என்பதையும் நோக்கமாகக் கொண்டு தான் இப்பாசுரங்களை ஆழ்வார்கள் படைத்துள்ளனர்.

ஊழ்வினையால் சிக்குண்டு தவித்துக் கொண்டிருக்கும் மானிடப்பிறவியை நல்வழிப்படுத்தி வீடுபேற்றை அடைய வைக்கும் வழியே பிரபந்தமாகும்.

இறைபக்தி மூலமே மனிதனின் வாழ்வை நெறிப்படுத்த முடியும். மனிதமனத்தைப் பக்குவப்படுத்தி நல்ல சமுதாயத்தை உருவாக்கும் நல்ல கருத்துக்கள் நாலாயிரத் திவ்விய பிரபந்தத்தில் நிறைந்துள்ளன. திருமால் மீது

அன்பையும் பக்தியையும் ஏற்படுத்த வைப்பதே பிரபந்தம். அதன் வழி மக்கள் வாழ்வை இறை பக்தியோடு நல்வழிப்படுத்தி அனைவரும் வளமோடு திருமால் அருள் பெற்று வாழ வேண்டும் என்பதே ஆழ்வார்கள் காட்டும் பக்தி நெறியாகும்.

**மேலாய்வுக் களங்கள்**

1. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் அகப்பொருள் மரபு
2. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் தூது இலக்கியமரபு
3. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் ஆழ்வார்களின் பக்தி நெறி
4. நாலாயிரத்தில் இடம்பெற்றுள்ள அவதாரச் சிறப்பும், பண்பாட்டுப்பதிவுகளும்